கொள்ளையிடலாமா? — 23 நியாயப்பிரமாணத்தைக்குறித்துப் பெருமைபாராட்டுகிற நீ நியாயப்பிரமாணத்தை மீறி நடந்து, பராபரனைக் கனஈனம்பண்ணலாமா?—24 பராபரனுடைய நாமம் மற்றத் தேசத்தாருக்குள்ளே உங்களாலே தூஷணிக்கப்படுகின்றதென்று எழுதியிருக்கிறபடி (செய்கிறாயே).

25 நீ வேதப்பிரமாணத்தின்படி செய்தால் விருத்தசேதனம் மெய்யாய் உனக்குப் பிரயோசனமாய் இருக்கும்; நீ வேதப்பிரமாணத்தை மீறி நடந்தாயாகில், உன் விருத்தசேதனம் விருத்தசேதனம் இல்லாமையாயிற்று. — 26 மேலும் விருத்தசேதனம் இல்லாதவன் வேதப்பிரமாணத்துக்கு ஏற்ற நீதிகளைக் கைக்கொண்டால், அவனுடைய விருத்தசேதனம் இல்லாமை விருத்தசேதனமே என்று எண்ணப்படும் அல்லவோ?—27 அல்லாமலும் விருத்தசேதனம் இல்லாமல் சுபாவப்படிக்கே இருந்து வேதப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறவன் எழுத்தின்படியான விருத்தசேதனத்தினாலே யூதனாய் வேதப்பிரமாணத்தை மீறுகிற உன்னைக் குற்றப்படுத்துவான் அல்லவோ?—28 ஆதலால் புறம்பாக யூதனானவன் யூதனல்ல; புறம்பாகச் சரீரத்தில் உண்டான விருத்தசேதனம் விருத்தசேதனமல்ல.—29 உள்ளத்திலே யூதனானவனே யூதன்; எழுத்தின்படி அல்ல ஆவியின்படி இருதயத்தில் உண்டான விருத்தசேதனமே விருத்தசேதனம்; இப்படிப்பட்டவனுடைய புகழ்ச்சி மனிதரால் அல்ல, பராபரனாலே உண்டாயிருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

இப்படியானால் யூதருடைய மேன்மை என்ன? அல்லது விருத்தசேதனத்தினாலே பிரயோசனம் என்ன என்று கேட்டால்,—2 அது எவ்விதத்திலும் மிகுதியாயிருக்கின்றது; பராபரனுடைய வாக்கியங்கள் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டபடியினாலே, அவர்களுக்குப் பிரதானமாய் மேன்மை உண்டாயிருக்கின்றது.—3 சிலர் விசுவாசியாமற்போனபடியால், அவர்களுடைய அவிசுவாசம் பராபரனுடைய உண்மையை அவமாக்கும் அல்லவோ என்று கேட்டால், அப்படியாக்கமாட்டாது.—4 தேவரீர் அப்படிக் கடிந்துபேசும்பொழுது நீதிபரராகவும், நியாயந்தீர்க்கும்பொழுது புனிதராகவும் இருப்பீரென்று எழுதியிருக்கிறபடி, மனிதர் யாவரும் பொய்யராயிருந்தாலும் பராபரனே சத்தியமுடையவர் என்போமாக.

5 பின்னும் நான் மனிதப்பிரகாரமாகப் பேசுகிறேன்; நமது அநீதி பராபரனுடைய நீதியை விளங்கப்பண்ணினால், நாம் என்ன சொல்லலாம்? பராபரன் கோபாக்கினையைச் செலுத்துகிறது அநியாயமல்லவோ என்றால்,— 6 அப்படிச் சொல்லவே கூடாது; அப்படியானால் உலகத்தாருக்குப் பராபரன் எப்படி நியாயத்தீர்ப்புச் செய்வார்?—7 ஆகிலும் பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டாகத்தக்கதாக அவருடைய சத்தியம் என் பொய்யினாலே அதிக மேன்மை அடைந்ததுண்டானால், நான் பாவியென்று தீர்க்கப்படுவது என்னவென்று (நீ சொல்ல),—8 நன்மை வரும்படிக்குத் தீமைசெய்யக்கடவோமென்றும் சொல்லலாம் அல்லவோ? நாங்களே அப்படிச் செய்கிறவர்களென்று நிந்திக்கப்படுகிறோம், நாங்களே அப்படிப் போதிக்கிறவர்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள்; அப்படிப் போதிக்கிறவர்கள் ஆக்கினைக்கு உள்ளாக்கப்படுகிறது நியாயந்தான்.

9 அப்படியானால், (கிரேக்கருக்கு) மேன்மையாய் இருக்கிறோமோ என்று கேட்டால், அப்படி ஒருக்காலும் இருக்கமாட்டோம்; யூதர்கள் கிரேக்கர் யாவரும் பாவத்திற்குக் கீழானவர்கள் என்று முன் திருஷ்டாந்தப்படுத்தினோமே. —10 அந்தப்படியும் எழுதியிருக்கிறதாவது: நீதிமான் ஒருவனும் இல்லை.—11 மெய்யுணர்வுள்ளவன் இல்லை; பராபரனைத் தேடுகிறவன் இல்லை.—12 எல்லாரும் வழிதப்பி ஏகமாய்க் கெட்டுப்போகிறார்கள். — 13 நன்மைசெய்கிறவன் ஒருவனும் இல்லை; அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட சமாதியாய் இருக்கின்றது; தங்கள் நாவுகளால் வஞ்சனை செய்கிறார்கள்; பாம்புகளின் விஷம் அவர்களுடைய உதடுகளின்கீழ் இருக்கின்றது.—14 அவர்களுடைய வாய் சபிப்பினாலும், உபாதிக்கிற பேச்சினாலும் நிறைந்திருக்கின்றது.—15 அவர்களுடைய கால்கள் இரத்தஞ்சிந்துகிறதற்குத் தீவிரமாய் இருக்கின்றன.—16 அழிவும் இடுக்கணும் அவர்களுடைய வழிகளில் இருக்கின்றன.—17 சமாதான மார்க்கத்தை அவர்கள் அறியார்கள்.—18 அவர்கள் கண்களுக்குமுன்பாகத் தெய்வபயம் இல்லை என்பதே.

19 மேலும் வாய்கள் யாவும் அடைக்கப்படும்படிக்கும், உலகத்தார் எல்லோரும் பராபரனுடைய ஆக்கினைக்கு ஏதுவானவர்கள் ஆகும்படிக்கும், நியாயப்பிரமாணம் சொல்லுகிற யாவும் நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டிருக்கிறவர்களுக்கே சொல்லப்பட்டிருக்கின்றன என்று அறிந்திருக்கிறோம்.—20 இப்படியிருக்க, நியாயப்பிரமாணத்தினாலே பாவத்தை அறிகிற அறிவு வருகிறபடியால், ஒரு மனிதனும் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அவருக்குமுன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை.

21 இப்பொழுது நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியை இல்லாமல், பராபரனுக்குமுன்பாக நீதிமானாகும் வகை வெளிப்பட்டிருக்கின்றது; அதைக்குறித்து நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்களும் சாட்சியிடுகின்றன. — 22 இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே பராபரன் வரப்பண்ணுகிற நீதி அதுவே; விசுவாசிக்

கிற எவர்களுக்குள்ளும் எவர்கள்மேலும் அது வரும்.—23 வித்தியாசமே இல்லை; எல்லாரும் பாவம்செய்து, பராபரனுடைய மகிமை அற்ற வர்களாய் இருந்து,—24 கைமாறில்லாமல் அவ ருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவி லுள்ள மீட்பைக்கொண்டு நீதிமான்கள் ஆக்கப் படுகிறார்கள்.—25 பராபரன் தாம் பொறுமையா யிருந்த முற்காலத்தில் நடந்த பாவங்களை மன் னித்துவிட்டதைக்குறித்துத் தம்முடைய நீதி யைக்காண்பிக்கும்பொருட்டாக, இயேசுக்கிறிஸ் துவினுடைய இரத்தத்தில் விசுவாசமாய் இருக் கிறதினாலே வரும் கிருபைக்கு மூலாதாரமாக அவரையே ஏற்படுத்திவைத்தார்.—26 இயேசு வினிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவனை நீதி மானுக்குகிறதில் அவர் நீதியுள்ளவராய் இருக் கும்படிக்கு, இக்காலத்திலே தமது நீதியைக் காண்பிக்கும்பொருட்டாகவே (அப்படிச் செய் தார்).

27 ஆனபடியினாலே மேன்மைபாராட்டல் எங்கே? அது நீக்கப்பட்டதே; எந்தப் பிரமா ணத்தினாலே என்றால், கிரியைகளைக் குறிக்கிற பிரமாணத்தினாலே அல்ல, விசுவாசத்தைக் குறிக் கிற பிரமாணத்தினாலே அப்படி ஆயிற்று.—28 ஆதலால் மனிதர்கள் நியாயப்பிரமாணத் திற்கு ஏற்ற கிரியைகளினாலே அல்ல, விசுவாசத் தினாலே நீதிமான்கள் ஆக்கப்படுகிறார்கள் என்று தீர்க்கிறோம்.—29 அன்றியும் பராபரன் யூதருக்கு மாத்திரம் தேவனாயிருக்கிறாரோ? மற்றத் தேசத் தாருக்கும் தேவனாயிருக்கிறார் அல்லவோ? மெய் யாய் அவர் மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக் கிறார்.—30 தேவன் ஒருவரே; ஆகையால் அவர் விருத்தசேதனம் உள்ளவர்களையும் விருத்தசேத னம் இல்லாதவர்களையும் விசுவாசத்தினாலே நீதி மான்களாக்கச் சித்தமாய் இருக்கிறார்.—31 இப் படியானால் விசுவாசம் எனகிறதினாலே நாம் நியாயப்பிரமாணத்தை அழித்துப்போடுகிறோமா? அப்படி அல்லவே, நியாயப்பிரமாணத்தை (அதி னாலே) நிலையாகவே நிறுத்துகிறோம்.

## ச. அதிகாரம்.

*அன்றியும் நம்முடைய தகப்பனுகிய ஆபிரகாம் சரீர (கருமங்களினாலே) என்ன்த்தைப் பெற்றுக் கொண்டான்.*

2 ஆபிரகாம் கிரியைகளினாலே நீதிமானுக்கப் பட்டானுகில், அவன் (தன்னை) மேன்மையாகப் பாராட்டலாம்; ஆகிலும் பராபரனுக்குமுன்பாக அப்படி ஒன்றுமில்லை.—3 வேதவாக்கியம் எப் படிச் சொல்லுகிறதென்றால், ஆபிரகாம் பரா பரனை விசுவாசித்தான்; அதுவே அவனுக்கு நீதி யென்று எண்ணப்பட்டதென்று சொல்லுகின் றது.—4 அன்றியும் கிரியைகளை உடையவனுக்கு வருகிற கூலி கிருபையென்று எண்ணப்படா மல், கடனென்று எண்ணப்படும்.—5 கிரியை களை உடையவனுயிராமல் துன்மார்க்கனை நீதிமா னுக்குகிறவர்மேல் விசுவாசமாயிருந்தால், அவ னுடைய விசுவாசமே அவனுக்கு நீதியென்று எண்ணப்படும்.

6 அந்தப்படி தாவீதும் கிரியைகள் இல்லா மல், பராபரனாலே நீதிமான் என்று எண்ணப் படுகிற மனிதனுடைய பாக்கியத்தைக் காண் பிக்க,—7 எவர்களுடைய அக்கிரமங்கள் மன் னிக்கப்பட்டனவோ எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்டனவோ அவர்களே பாக்கியவான் கள் என்றும்,—8 எவனுடைய பாவத்தைப் பரா பரன் எண்ணாமல் இருக்கிறாரோ, அவனே பாக் கியவான் என்றும் சொல்லியிருக்கிறான்.

9 இந்தப் பாக்கியம் விருத்தசேதனம் உள்ள வனுக்குமாத்திரமா, அன்றி, விருத்தசேதனம் இல் லாதவனுக்கும் வருமோ? (இருவருக்குமே வரும்;) அது எப்படியென்றால், நாங்கள் நிச்ச யித்தபடி விசுவாசமே ஆபிரகாமுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

10 எப்பொழுது அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்டது? அவன் விருத்தசேதனம் உள் ளவனாய் இருந்தபொழுதோ விருத்தசேதனம் இல்லாதவனாய் இருந்தபொழுதோ (என்றால்) விருத்தசேதனம் உள்ளவனாயிருந்தபொழுது அல் ல, விருத்தசேதனம் இல்லாதவனாயிருந்தபொழு தே அப்படி எண்ணப்பட்டது.—11 மேலும் விருத்தசேதனம் இல்லாத காலத்திலே அவன் விசுவாசத்தினாலே அடைந்த நீதிக்கு முத்திரை யாக விருத்தசேதன அடையாளத்தைப் பெற் றான்; விருத்தசேதனம் இல்லாமல் விசுவாசமுள் ளவர்களும் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட் டாக, அப்படிப்பட்ட விசுவாசிகளுக்கு அவன் தகப்பனாய் இருக்கும்படிக்கும்,—12 'விருத்த சேதனத்தை உடையவர்களாய்மாத்திரம் அல்ல, நம்முடைய முன்னோராகிய ஆபிரகாம் விருத்த சேதனம் இல்லாத காலத்திலே நடந்த விசுவாச மார்க்கத்தில் நடக்கிறவர்களாயும் இருக்கிறவர் கள் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக, அப் படிப்பட்ட விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும் தகப்பனாயிருக்கும்படிக்கும் (அந்த அடையாளத் தைப் பெற்றான்).

13 அன்றியும், உலகத்தைச் சுதந்தரிப்பான் என்கிற வாக்குத்தத்தம் ஆபிரகாமுக்கும் அவனு டைய சந்ததிக்கும் நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியினால் அல்ல, விசுவாசத்தினால் வருகிற நீதியினாலே கிடைத்தது.—14 ஆதலால் நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியை உடை யவர்கள் சுதந்தரரானால், விசுவாசம் வீணாய்ப் போம்; வாக்குத்தத்தமும் அபத்தமாய்ப்போம்.—15 மேலும், நியாயப்பிரமாணம் கோபாக்கினை யை நடப்பிக்கின்றது; நியாயப்பிரமாணம் இல்

லாவிட்டால், அக்கிரமமும் தோன்றுதே. —
16 ஆதலால் அந்த வாக்குத்தத்தம் சந்ததியார்
எல்லாருக்கும் நிச்சயமாய் இருக்கும்பொருட்
டாக, (அந்தச் சுதந்தரம்) கிருபையினால் உண்
டாகும்படிக்கு, அது விசுவாசத்தினாலே வருகின்
றது; நியாயப்பிரமாணத்தை உடையவர்களாகிய
சந்ததியாருக்குமாத்திரம் அல்ல, அநேக தேசத்
தாருக்கு உன்னைத் தகப்பனென்று ஏற்படுத்தி
னேன் என்று எழுதியிருக்கிறபடி, நம்மெல்லா
ருக்கும் தகப்பனாகிய ஆபிரகாமைப்போல, விசு
வாசத்தை உடையவர்களான சந்ததியாருக்கும்
அது நிச்சயமாயிருக்கும். — 17 மரித்தோரை
உயிர்ப்பித்து, இல்லாதவைகளை இருக்கிறவைக
ளைப்போல அழைக்கிறவராகிய பராபரனை அவன்
விசுவாசித்துக்கொண்டு அவராலே (அப்படிப்
பட்ட தகப்பனானான்).

18 உன் சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று
சொல்லப்பட்டபடியே, அவன், தான் அநேக
தேசத்தாருக்குத் தகப்பனாவதை நம்புதற்கு ஏது
வில்லாமலிருந்தும், நம்பிக்கையோடே அதை
விசுவாசித்தான். — 19 அவன் விசுவாசத்திலே
பலஈனமாயிருக்கவில்லை; அவன் ஏறக்குறைய
நூறுவயதானபடியால், தன் சரீரம் செத்துப்போ
னதையும் சாராள் கருப்பம் உண்டாகாமலிருந்த
தையும் எண்ணாமல் இருந்தான்.—20 பராபர
னுடைய வாக்குத்தத்தத்தைக்குறித்து அவன் அ
விசுவாசமாய்ச் சந்தேகப்படாமல்,—21 பராபரன்
வாக்குத்தத்தம்பண்ணினதை நிறைவேற்றவும்
வல்லமையுள்ளவராய் இருக்கிறார் என்று உறுதி
யாய் நினைத்து, பராபரனைப் புகழ்ந்து, பலத்த
விசுவாசமுள்ளவனானான். — 22 ஆகையால் அ
துவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்
டது.

23 அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்
டதென்பது அவனுக்காகமாத்திரம் அல்ல, நமக்
காகவும் எழுதியிருக்கின்றது. — 24 நம்முடைய
அக்கிரமங்களின் நிமித்தம் மரணத்திற்கு ஒப்புக்
கொடுக்கப்பட்டும் நம்மை நீதிமான்களாக்கு
தற்கு, — 25 எழுப்பப்பட்டும் இருக்கிற நம்மு
டைய கர்த்தராகிய இயேசுவை மரித்தோரிலி
ருந்து உயிரோடெழுப்பினவரை விசுவாசித்துக்
கொண்டால், நமக்கும் அது அப்படியே எண்
ணப்படும்.

## ரு. அதிகாரம்.

இவ்விதமாய் நாம் விசுவாசத்தினாலே நீதிமான்
களாக்கப்பட்டபடியால், நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு நாம் பரா
பரனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம்.—
2 மேலும் நாம் நிற்கின்ற கிருபைக்குள் பிரவே
சிக்குதலையும் நாம் அவரைக்கொண்டு விசுவா
சத்தினாலே பெற்றும், பராபரனுடைய மகிமை
யை அடைவோம் என்று நம்பி மேன்மைபா
ராட்டியும் இருக்கிறோம்.

3 அதுவுமல்லாமல் உபத்திரவம் பொறுமை
யையும், பொறுமை நிச்சயத்தையும், நிச்சயம்
நம்பிக்கையையும் உண்டாக்குகின்றன என்று
நாங்கள் அறிந்திருந்து,—4 உபத்திரவங்களிலே
யும் மேன்மைபாராட்டுகிறோம்.—5 மேலும் நமக்
குக் கொடுக்கப்பட்ட பரிசுத்தஆவியினாலே பரா
பரனுடைய அன்பு நம்முடைய இருதயங்களில்
ஊற்றப்பட்டிருக்கிறபடியால் அந்த நம்பிக்கை
நம்மை வெட்கப்படுத்தாது.

6 அன்றியும் நாம் பெலனற்றவர்களாய் இருக்
கையில், கிறிஸ்து தகுதியான காலத்திலே அக்
கிரமக்காரருக்காக மரித்தார். — 7 நீதிமானுக்காக
மற்றொருவன் மரிக்கிறது அருமையாயிருக்கும்;
நல்லவனுக்காக ஒருவேளை மற்றொருவன் மரிக்
கத் துணிவான். — 8 கிறிஸ்துவோ நாம் பாவி
களாயிருக்கையிலே நமக்காக மரித்ததினாலே,
பராபரன் நமதுமேல் வைத்த அன்பை விளங்
கப்பண்ணினார்.—9 இப்படி நாம் அவருடைய
இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க
(வரும் கோபாக்கினையில் நின்று அவராலே மிக
வும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே). —
10 நாம் பராபரனுக்குப் பகைஞராயிருக்கையில்,
அவர் குமாரனுடைய மரணத்தினாலே அவருட
னே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்
கப்பட்டபின் நாம் அவருடைய சீவனாலே மிக
வும் அதிசமாய் இரட்சிக்கப்படுவோமே.

11 அதுவுமல்லாமல் இப்பொழுது ஒப்புர
வாக்குதலை நமக்குக் கிடைக்கப்பண்ணின நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துமூலமாய்
நாம் பராபரனைக்குறித்து மேன்மைபாராட்டுகி
றோம்.

12 என்னத்தினாலென்றால், ஒரே மனிதனா
லே பாவமும், பாவத்தினாலே மரணமும் உலகத்
திலே பிரவேசித்தபின்பு எல்லா மனிதரும் பாவி
களானபடியினாலே, மரணம் எல்லா மனிதருக்
கும் வந்ததுபோல, (கிறிஸ்துவினாலே எல்லாருக்
கும் ஒப்புரவாக்குதல் உண்டாயிற்று).—13 நியா
யப்பிரமாணம் வருதற்குமுன்னே பாவம் உலகத்
தில் இருந்தது; நியாயப்பிரமாணம் இல்லாதிருந்
தால், பாவம் எண்ணிக்கைப்படமாட்டாது.—
14 அப்படியிருந்தும், மரணமானது ஆதாம்முதல்
மோசேவரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கு ஒப்
பாய்ப் பாவம்செய்யாதவர்களையும் ஆண்டுகொண்
டது; அந்த ஆதாம், பின்பு வந்தவருக்கு அடை
யாளமானவன். — 15 ஆனாலும் கிருபையுள்ள
ஈவின் சங்கதி விழுதலின் சங்கதியைப்போல
இருக்கிறதில்லை; ஒரே மனிதன் விழுந்ததினா
லே அநேகர் மரித்திருக்க, மிகவும் அதிகமாய்ப்
பராபரனுடைய கிருபையும் இயேசுக்கிறிஸ்து
என்னும் ஒரே மனிதனுடைய கிருபையினால்

வருகிற ஈவும் அநேகர்மேலே பெருகியிருக்கின்
றன.—16 மேலும் அந்த ஈவு பாவம்செய்த ஒரு
வனால் உண்டான நியாயத்தீர்ப்பைப்போல இ
ருக்கவில்லை; அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தின்
நிமித்தம் ஆக்கினைக்கு ஏதுவாயிருந்தது; கிருபை
யுள்ள ஈவானது அநேக பாவங்களை நீக்கி நீதி
யாக்குதற்கு ஏதுவாயிருக்கின்றது.—17 அல்லா
மலும் ஒரே மனிதன் விழுந்தபின்பு அந்த ஒரே
மனிதனாலே மரணம் ஆண்டுகொண்டிருக்கக்
கிருபையாகிய பரிபூரணத்தையும் நீதியாகிய
ஈவின் பரிபூரணத்தையும் பெறுகிறவர்கள், இயே
சுக்கிறிஸ்து என்னும் ஒரே மனிதனாலே மிகவும்
அதிகமாய்ச் சீவனை அடைந்து ஆளுவார்கள்.—
18 ஆகையால் ஒரே மனிதனுடைய தப்பிதத்தி
னாலே எல்லா மனிதருக்கும் ஆக்கினைக்கு ஏது
வான தீர்ப்பு உண்டானதுபோல, ஒரே மனித
னுடைய நீதியினாலும் எல்லா மனிதருக்கும் சீவ
னாகிய நீதிக்கு ஏதுவான தீர்ப்பு உண்டாயிற்று.-
19 அன்றியும் ஒரே மனிதன் கீழ்ப்படியாமலி
ருந்ததினாலே அநேகர் பாவிகளாக்கப்பட்டார்
கள்; அதுபோல ஒரே மனிதன் கீழ்ப்படிந்ததினா
லே அநேகர் நீதிமான்களாக்கப்பட்டு வருவார்
கள்.

20 மேலும் நியாயப்பிரமாணம் தோன்றினதி
னாலே தப்பிதம் பெருகிற்று; அப்படிப் பாவம்
பெருகியிருந்தும் கிருபை அதிகமாய்ப் பெரு
கிற்று. ஆதலால் பாவம் மரணத்துக்கு ஏதுவாக
(மனிதனை) ஆண்டுகொண்டதுபோல,-21 நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே
கிருபையானது, நித்தியசீவனுக்கு ஏதுவான நீதி
யினாலே ஆண்டுகொண்டது.

## ௬. அதிகாரம்.

ஆகையால் நாம் என்ன சொல்லலாம்? கிரு
பை பெருகும்படிக்கு, பாவத்திலே நிலைநிற்கக்
கடவோம் என்று சொல்லலாமா?

2 அப்படிக் கூடாதே; பாவத்திற்கு மரித்த
நாம் இனி அதிலே எப்படிப் பிழைப்போம்?—
3 கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம்
பெற்ற நாம் அனைவரும் அவருடைய மரணத்
திற்கு உள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறி
யாமலிருக்கிறீர்களா?—4 மேலும் பிதாவின் மகி
மையினாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்
பப்பட்டதுபோல, நாமும் புதிதான சீவனுள்ள
வர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு மரணத்திற்
குள்ளான ஞானஸ்நானத்தினாலே அவருடனே
கூட அடக்கம்பண்ணப்பட்டோம்.— 5 ஆத
லால் அவருடைய மரணத்திற்கு ஒப்பாக நாம்
அவருடனே நாட்டப்பட்டவர்களாயிருக்க அ
வர் உயிரோடு எழுந்திருக்குதலுக்கு ஒப்பாகவும்
அப்படியே இருப்போம்.—6 மேலும் நமக்குத்
தெரிந்திருக்கிறபடி நாம் இனிப் பாவத்திற்கு
ஊழியம் செய்யாதபடிக்கு, பாவமாகிய சரீ
ரம் அழிந்துபோகும்பொருட்டாக நம்முடைய
பழைய மனிதத்தத்துவம் அவரோடேகூடச் சிலு
வையில் அறையப்பட்டது.—7 ஆகையால் மரித்
தவன் பாவத்திற்கு விலக்கப்பட்டானே.—8 மே
லும் கிறிஸ்துவுடனேகூட நாம் மரித்திருக்க,—
9 மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து இனி
மரிப்பதில்லையென்றும் மரணம் இனி அவரை
ஆண்டுகொள்ளாதென்றும் நாம் அறிந்தபடியால்,
அவருடனேகூடப் பிழைத்தும் இருக்கலாம்
என்று நம்புகிறோம். — 10 அன்றியும் அவர் பா
வத்திற்காக ஒரேதரம் மரித்தார்; பின்பு அவர்
பிழைத்திருக்கிறது பராபரனுக்காக இருக்கிறது.-
11 அதுபோல நீங்களும் உங்களைப் பாவத்திற்கு
மரித்தவர்கள் என்றும், நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரனுக்குப்
பிழைத்திருக்கிறவர்கள் என்றும் எண்ணிக்கொள்
வீர்களாக.

12 ஆகையால் சாவுக்கினமான உங்கள் சரீரத்
தின் இச்சைகளுக்கு நீங்கள் கீழ்ப்படியத்தக்க
தாக, பாவம் அதிலே ஆளாதிருப்பதாக. —
13 அன்றியும் நீங்கள் நியாயப்பிரமாணத்தின்
கீழ் அல்ல, கிருபையின்கீழ் இருக்கிறபடியால்,
பாவம் உங்களைப் பலபந்தப்படுத்தமாட்டாது.—
14 ஆதலால் நீங்கள் உங்கள் அவயவங்களை அநீ
திக்குரிய ஆயுதங்களாகப் பாவத்திற்கு ஒப்புக்
கொடாமல், உங்களை மரித்தோரிலிருந்து பிழைக்
கிறவர்கள் என்று பராபரனுக்கு ஒப்புக்கொடுத்து,
உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களா
கப் பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக.

15 இதினாலே பொருளென்ன ஆயிற்று?
நாம் நியாயப்பிரமாணத்தின்கீழ் இராமல் கிருபை
யின்கீழ் இருக்கிறபடியினாலே, பாவம்செய்யலா
மென்ற பொருளா? அப்படி அல்லவே. —
16 மரணத்திற்கு ஏதுவான பாவத்துக்கானாலும்
நீதிக்கு ஏதுவான கீழ்ப்படிதலுக்கானாலும், எதற்
குக் கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக
ஒப்புக்கொடுக்கிறீர்களோ அதற்கே கீழ்ப்படிகிற
அடிமைகளாய் இருக்கிறீர்கள் என்று அறியாமலி
ருக்கிறீர்களா? — 17 முன்னே நீங்கள் பாவத்
திற்கு அடிமைகளாயிருந்தீர்கள்; இப்பொழுது
உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேசத்தின்
பிரமாணத்திற்கு நீங்கள் மனச்சந்தோஷமாய்க்
கீழ்ப்படிந்திருக்கிறபடியினாலே பராபரனுக்குத்
தோத்திரம். — 18 இப்படி நீங்கள் பாவத்திலி
ருந்து விடுதலையாக்கப்பட்டபின்பு, நீதிக்கு அடி
மைகளானீர்கள்.—19 உங்கள் சரீரத்தின் பலஈ
னத்தின்நிமித்தம் மனிதர் பிரகாரமாகச் சொல்லு
கிறேன்; அக்கிரமத்தை நடப்பிக்கும்படி (முன்
னே) நீங்கள் உங்கள் அவயவங்களை அசுத்தத்
திற்கும் அக்கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்
கொடுத்ததுபோல, இப்பொழுது பரிசுத்தமான

தை நடப்பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு அடிமைகளாக ஒப்புக்கொடுப்பீர்களாக.—20 பாவத்திற்கு நீங்கள் அடிமைகளாய் இருந்தகாலத்திலே நீதிக்கு நீங்கினவர்களாய் இருந்தீர்கள்.—21 இப்பொழுது நீங்கள் வெட்கப்படுகிற காரியங்களினாலே அக்காலத்திலே உங்களுக்கு என்ன பிரயோசனம் உண்டாயிற்று? மரணமே அவைகளின் முடிவாயிருக்கின்றது.—22 இப்பொழுது நீங்கள் பாவத்தில்நின்று விடுதலையாக்கப்பட்டுப் பராபரனுக்கு அடிமைகளான பின்பு, பரிசுத்தமாகுதல் உங்களுக்குப் பிரயோசனமாயிற்று; நித்தியசீவனே அதின் கடைசிப் பலனாயிருக்கின்றது.—23 பாவத்தினால் வருகிற சம்பளம் மரணம்; பராபரனுடைய கிருபையுள்ள ஈவோ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினால் உண்டான நித்திய சீவனே.

## ௭. அதிகாரம்.

நியாயப்பிரமாணத்தை அறிந்திருக்கிறவர்களுடனே பேசுகிறேன்; சகோதரரே, ஒரு மனிதன் உயிரோடிருக்குமளவும்மாத்திரம் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகின்றது என்று அறியீர்களா?–2 அதெப்படியென்றால் புருஷனைக்கொண்ட ஸ்திரீ தன் புருஷனுடைய சீவகாலமளவும் நியாயப்பிரமாணத்தின்படியே அவனோடே சேர்க்கப்பட்டிருக்கிறாள்; புருஷன் மரித்தபின்பு அவள் தன் புருஷனுடைய பிரமாணத்திற்கு நீக்கப்படுகிறாள்.—3 மேலும் புருஷன் உயிரோடிருக்கையில் அவள் வேறொரு புருஷனை விவாகம்பண்ணினால், விபசாரியென்று அழைக்கப்படுவாள்; புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப் பிரமாணத்தில்நின்று விடுதலையாகி, வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும் விபசாரியல்ல.

4 அப்படிப்போல என் சகோதரரே, நாம் பராபரனுக்குக் கனியைக் கொடுக்கும்படிக்கு, மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர்கள் ஆவதற்கு, நீங்களும் அவருடைய சரீரத்தினாலே நியாயப்பிரமாணத்தில் நின்று நீங்க மரித்தவர்களானீர்கள்.—5 நாம் சரீரத்தின்படி நடந்த காலத்திலே நியாயப்பிரமாணத்திலே தோன்றிய பாவமான இச்சைகள், நாம் மரணத்திற்கு ஏதுவான கனிகளைக் கொடுக்கத்தக்கதாக, நம்முடைய அவயவங்களிலே பலஞ்செய்திருந்தன.–6 இப்பொழுது நாம் மரித்தவர்களாயிருக்க, நாம் பழமையான எழுத்தின்படியல்ல, புதுமையான ஆவியின்படி ஊழியம் செய்யத்தக்கதாக, நம்மைக் கட்டியிருந்த நியாயப்பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம்.

7 இதனாலே பொருள் என்ன ஆயிற்று? நியாயப்பிரமாணம் பாவமாயிருக்கின்றதென்பதோ? அப்படி அல்லவே; மேலும் இச்சியாதிருப்பாயாக என்று நியாயப்பிரமாணம் சொல்லாதிருந்தால், இச்சிப்பைப் பாவமென்று நான் அறியாமல் இருப்பேன். ஆதலால் பாவம் இன்னதென்று நியாயப்பிரமாணத்தினாலே அறிந்தேன்.–8 இப்படி நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், பாவம் செத்ததாயிருக்கும்; ஆதலால் பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று, சகலவித இச்சைகளையும் என்னில் நடப்பித்தது.—9 இப்படியிருக்க, முன்னே நியாயப்பிரமாணம் இல்லாதபொழுது நான் சீவனுள்ளவனாயிருந்தேன்; கட்டளை வந்தபொழுது பாவம் திரும்ப உயிர்கொண்டது; நான் மரித்தேன்.—10 இப்படிப் பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று என்னை வஞ்சித்து, அதினாலே என்னைக் கொலைசெய்ததினாலே,—11 சீவனுக்காகக் கொடுக்கப்பட்ட கட்டளையை எனக்கு மரணத்தைக் கொடுக்கிறதென்று கண்டேன்.—12 ஆகையால் நியாயப்பிரமாணமே பரிசுத்தமாயிருக்கின்றது, கட்டளையும் பரிசுத்தமாயும் நீதியாயும் நன்மையாயும் இருக்கின்றது.

13 இப்படியானால் நன்மையானது என் மரணத்திற்கு ஏதுவாயிற்று என்று கேட்டால், அப்படி ஆகவே இல்லை; பாவமே எனக்கு அப்படி ஆயிற்று; பாவம் கட்டளையினாலே மிகவும் பெரிதான பாவியாகும்படிக்கு, அதுவே நலமானதினாலே எனக்கு மரணம் உண்டாக்குகிறதாகத் தோன்றிற்று.–14 மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நியாயப்பிரமாணம் ஆவிக்குரியதாய் இருக்கின்றது; (மனிதனாகிய) நானோ பாவத்துக்குக் கீழாக விற்கப்பட்டு,–15 மாம்சத்துக்கு உரியவனாய் இருக்கிறேன்; எப்படியெனில் நான் நடப்பிக்கிறதற்கு என் மனது சம்மதிக்கிறதில்லை. நான் விரும்புகிறதைச் செய்யாமல், பகைக்கிறதையே செய்கிறேன்.–16 இப்படி என் மனது விரும்பாததை நான் செய்திருக்க, நியாயப்பிரமாணம் நல்லதென்று ஒத்துக்கொள்ளுகிறேன்.—17 ஆதலால் நானல்ல, எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படி நடப்பிக்கின்றது.—18 அது எப்படியென்றால் நான் அறிந்திருக்கிறபடி மாம்சதேகியாகிய எனக்குள்ளே நன்மை வாசமாயிருக்கிறதில்லை; நன்மை செய்வதற்கான விருப்பம் என்னுடனே இருக்கின்றது; அப்படிச் செய்கிறதை என்னிடத்தில் காணேன்.—19 ஆதலால் எனக்கு விருப்பமான நன்மையை நான் செய்யாமல், எனக்கு விருப்பமில்லாத தீமையை நடப்பிக்கிறேன்.—20 அந்தப்படி எனக்கு விருப்பம் இல்லாததை நான் செய்கிறவனாயிருக்க நானல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கின்றது.—21 ஆனபடியினாலே நன்மைசெய்ய விரும்புகிற என்னிடத்திலே தீமைசெய்யப்பண்ணுகிற பிரமாணத்தைக் காண்கிறேன்.—22 என் உள்ளத்

தோடே பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்
மேல் பிரியமாயிருக்கிறேன். — 23 என் அவய
வங்களிலே என் மனதின் பிரமாணத்துக்கு எதி
ராய்ப் போராடுகிற வேறு பிரமாணத்தைக் காண்
கிறேன்; அது என் அவயவங்களில் உண்டாயி
ருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை அடி
மையாக்கிக்கொள்ளுகிறது. — 24 ஐயோ, நான்
நிர்ப்பாக்கியமுள்ள மனிதன்; இந்த மரணத்திற்கு
ஏதுவான சரீரத்தில் நின்று யார் என்னை விடுத
லையாக்குவார். — 25 நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவினாலே (என்னை விடுதலையாக்
குகிற) பராபரனையே தோத்திரம்செய்கிறேன்;
ஆதலால் நானே என் மனதினாலே பராபரனு
டைய நியாயப்பிரமாணத்துக்கும், மாம்சத்தினா
லே பாவப்பிரமாணத்துக்கும் ஊழியம் செய்
கிறேன்.

## ௮. அதிகாரம்.

ஆனபடியினாலே மாம்சத்தின்படி அல்ல, ஆவி
யின்படியே நடந்து, கிறிஸ்து இயேசுவுக்கு
உட்பட்டிருக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பு
வராது. — 2 கிறிஸ்து இயேசுவினாலே சீவனைக்
கொடுக்கிற ஆவியின் பிரமாணம் என்னைப் பா
வம் மரணம் என்றிவைகளின் பிரமாணத்தில்
நின்று விடுதலையாக்கிற்றே. — 3 அது எப்படி
யெனில் மாம்சத்தினாலே பலஈனமாயிருந்த நியா
யப்பிரமாணம் செய்யக்கூடாததைப் பராபரன்
செய்ய, தம்முடைய குமாரனைப் பாவ மாம்சத்
தின் சாயலாகவும் பாவத்தைப் போக்கும் பலியா
கவும் அனுப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கி
னைக்குள்ளாகத் தீர்த்தார். — 4 மாம்சத்துக்கு ஏற்
றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிற நம்மா
லே நியாயப்பிரமாணத்தின் நீதி நிறைவேறும்
படிக்கே அப்படி ஆயிற்று.—5 இப்படியிருக்க,
மாம்சத்துக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் மாம்சத்
துக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்; ஆவிக்கு
ஏற்றபடி நடக்கிறவர்கள் ஆவிக்கு ஏற்றவைகளைச்
சிந்திக்கிறார்கள்.—6 மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை
மரணத்துக்கு ஏதுவானது, ஆவிக்கு ஏற்ற சிந்தை
சீவனுக்கும் சமாதானத்துக்கும் ஏதுவானது. —
7 எப்படியென்றால், மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை
பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்
படியாமலும் கீழ்ப்படியத் திராணியில்லாமலும்
இருக்கிறபடியால், அது பராபரனுக்கு விரோத
மான பகையாயிருக்கின்றது.—8 ஆனதால் மாம்
சத்திற்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் பராபரனுக்
குப் பிரியமாய் இருக்கமாட்டார்கள்.

9 பராபரனுடைய ஆவி உங்களில் வாசமாயி
ருக்கிறபடியால் நீங்கள் மாம்சத்திற்கு ஏற்றபடி
அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்களாய் இ
ருக்கிறீர்கள்; கிறிஸ்துவினுடைய ஆவியை உடை
யவன் அல்லாதவன் அவருடையவன் அல்ல.—
10 மேலும் கிறிஸ்து உங்களில் இருந்தபடியால்
பாவத்தின் நிமித்தம் சரீரம் அழிந்துபோனாலும்
ஆவியானது நீதியின் நிமித்தம் சீவனாயிருக்கின்
றது.—11 அன்றியும் இயேசுவை மரித்தோரில்
நின்று எழுப்பினவருடைய ஆவி உங்களில் வாச
மாயிருக்கிறபடியால், கிறிஸ்துவை மரித்தோரிலி
ருந்து எழுப்பினவர் உங்களில் வாசமாயிருக்கிற
தம்முடைய ஆவியினாலே மரணத்துக்குரிய உங்
கள் சரீரங்களை உயிரோடிருக்கச்செய்வார்.

12 ஆகையால் சகோதரரே, மாம்சத்துக்கு
ஏற்றபடி சீவனம்பண்ணத்தக்கதாக, நாம் மாம்
சத்துக்குக் கடனாளிகளாய் இருக்கிறதில்லை. —
13 மாம்சத்துக்கு ஏற்றபடி சீவனம்பண்ணினால்
சாவீர்கள்; ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை
அழித்துப்போட்டால் பிழைப்பீர்கள்.—14 மே
லும் எவர்கள் பராபரனுடைய ஆவியினாலே நடத்
தப்படுகிறார்களோ அவர்கள் பராபரனுடைய புத்
திரராய் இருக்கிறார்கள். — 15 அந்தப்படி நீங்க
ளும் பின்னும் பயப்படுகிறதற்கு அடிமையின்
ஆவியை அடையாமல், அப்பா பிதாவே என்று
கூப்பிடப்பண்ணுகிற புத்திரசுவிகாரத்தின் ஆ
வியையே அடைந்திருக்கிறீர்கள்.–16 நாம் பரா
பரனுடைய புத்திரராய் இருக்கிறதைக்குறித்து
ஆவியானவர் தாமே நம்முடைய ஆவியுடனே
கூடச் சாட்சிகொடுக்கிறார். — 17 மேலும் நாம்
புத்திரராயிருக்க, சுதந்தரராயும் இருக்கிறோம்;
கிறிஸ்துவுடனேகூட நாம் மகிமைப்படும்படிக்கு
அவரோடேகூடப் பாடுபட்டால், அவரோடே
கூடச் சுதந்தரராய்ப் பராபரனுடைய சுதந்தரரா
கவே இருப்போம்.

18 ஆதலால் இக்காலத்துப் பாடுகள் இனி
நம்மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பி
டப் பாத்திரமானவைகள் அல்ல என்று எண்
ணுகிறேன்.–19 மேலும் தற்செயலாலே அல்ல,
சிருட்டிகளும் அழிவுக்கு ஏற்ற அடிமைத்தனத்
தில் நின்று விடுதலையாக்கப்பட்டு,—20 பராப
ரனுடைய புத்திரர் மகிமையாய் அடையும் இரட்
சிப்புக்கு வரும்படிக்கான நம்பிக்கையோடே
கீழ்ப்படுத்தினவராலே வீணுக்குக் கீழ்ப்பட்டி
ருக்கிறபடியால்,—21 சிருட்டிகளும் பராபரனு
டைய புத்திரர் வெளிப்படுகிறதற்கு மிகுந்த ஆ
சையோடே காத்துக்கொண்டிருக்கின்றன. —
22 ஆனபடியால் நமக்குத் தெரிந்திருக்கிறபடி
சகல சிருட்டிகளும்கூட இதுவரைக்கும் தவித்து
வேதனைப்படுகின்றன.—23 அவைகள்மாத்திரம்
அல்ல, ஆவியின் முதற்பலன்களைப் பெற்ற நா
மும்கூட நம்முடைய சரீரம் மீட்கப்படுதலாகிய
புத்திரசுவிகாரம் வருவதற்குக் காத்திருந்து, —
24 நமக்குள்ளே தவிக்கிறோம்; (அதன்மே
லுள்ள) நம்பிக்கையாய் நாம் இரட்சிக்கப்படுகி
றோம்; காணப்படுகிற பொருளை நம்புகிறது நம்
பிக்கையல்ல; ஒருவன் தான் காண்கிறதை நம்

பவேண்டியது என்ன?—25 நாம் காணாததை
நம்புகிறபடியால் அதை வருவதற்குப் பொறுமை
யோடே காத்திருக்கிறோம்.

26 அல்லாமலும் நாம் தகுதியாய்ச் செபம்
பண்ணவேண்டியது இன்னதென்று அறியாம
லிருக்கிறபடியால், (தேவ) ஆவியானவர் தாமே
சொல்லக்கூடாத பெருமூச்சுகளாலே நமக்காக
வேண்டுதல்பண்ணி, நம்முடைய பலஈனங்க
ளில் (நமக்கு) உதவிசெய்கிறார்.—27 ஆவியா
னவர் பராபரனுடைய சித்தத்தின்படியே பரி
சுத்தவான்களுக்காக வேண்டுதல்பண்ணுகிறபடி
யால் இருதயங்களை ஆராய்ந்துபார்க்கிறவர் ஆவி
யின் சிந்தை இன்னதென்று அறிந்துகொள்
ளுகிறார்.

28 அன்றியும் அவருடைய முன்யோசனை
யின்படி அழைக்கப்பட்டவர்களாய்ப் பராபர
னில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்
மையாகும்படிக்கு ஏதுவாயிருக்கின்றது என்று
அறிந்திருக்கிறோம்.—29 அது எப்படியெனில்,
பராபரன், தம்முடைய குமாரன் அநேக சகோ
தரருக்குள்ளே முதற்பேறானவராய் இருக்கும்
படிக்கு, தாம் எவர்களை முன்னறிந்தாரோ அவர்
களையும் அவருடைய சாயலுக்கு ஒப்பாயிருப்ப
தற்கு முன்குறித்தார்.–30 அல்லாமலும் எவர்களை
முன்குறித்தாரோ, அவர்களை அழைத்தும் இருக்
கிறார்; எவர்களை அழைத்தாரோ, அவர்களை நீதி
மான்களாக்கியும் இருக்கிறார்; எவர்களை நீதிமான்
களாக்கினாரோ அவர்களை மகிமைப்படுத்தியும்
இருக்கிறார்.

31 இவைகளைக்குறித்து நாம் என்ன சொல்
லவேண்டும்? பராபரன் நம்முடைய பங்கிலி
ருக்க நமக்கு விரோதமாயிருப்பவன் எவன்? —
32 அவர் தம்முடைய சொந்தக் குமாரனென்றும்
பாராமல் நம்மெல்லாருக்காகவும் அவரையே ஒப்
புக்கொடுத்திருக்க, அவரோடேகூட மற்ற யா
வையும் நமக்கு அநுக்கிரகம்பண்ணாமல் இருப்
பாரா?—33 பராபரனால் தெரிந்துகொள்ளப்பட்
டவர்கள்மேல் யார் குற்றம்சாற்றலாம்? பராபர
னே (அவர்களை) நீதிமான்களாக்குகிறவர். —
34 யார் (அவர்களை) ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
கலாம்? கிறிஸ்துவே (அவர்களுக்காக) மரித்தார்;
மேலும் எழுந்தவராயும் இருக்கிறார்; அதுவுமல்
லாமல் அவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலி
ருந்து நமக்காக வேண்டுதல் செய்கிறார். —
35 உமதுநிமித்தம் நாம் எந்நேரமும் கொலை
செய்யப்படுகிறோம் என்றும் அடிக்கப்படும் ஆடு
களைப்போல எண்ணப்படுகிறோம் என்றும் எழு
தியிருக்கிறபடியே இருந்தும், — 36 நம்மைக்
கிறிஸ்துவின் அன்பைவிட்டுப் பிரிப்பவன் யா
வன்? உபத்திரவமோ, வியாகுலமோ, துன்பப்
படுதலோ, பசியோ, நிருவாணமோ, நாசமோச
மோ, கட்கமோ,–37 இவையெல்லாவற்றையும்
நாம் நம்மில் அன்புகூருகிறவராலே அதிகமாய்ச்
செயங்கொள்ளுகிறோம். — 38 மரணமானாலும்
சீவனானாலும், தேவதூதர்களானாலும் அதிகாரிக
ளானாலும் வல்லமைகளானாலும், நிகழ்காரியங்க
ளானாலும் வருங்காரியங்களானாலும்,—39 உயர்
வானாலும் தாழ்வானாலும், வேறொரு சிருஷ்டி
யானாலும் நம்மை நம்முடைய கர்த்தராகிய
கிறிஸ்து இயேசுவினால் விளங்கிய பராபரனு
டைய அன்பைவிட்டுப் பிரிக்கமாட்டாதென்று
நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

## ௯. அதிகாரம்.

சரீரசம்பந்தமான என் வம்சத்தாராகிய என் இ
னத்தாருக்காக நானே கிறிஸ்துவினால் சபிக்கப்
பட்டவனாகவேண்டும் என்று இருந்து,–2 அவர்
களைக்குறித்து மிகுந்த துக்கமும் இடைவிடாத
மனநோவும் உள்ளவனாயிருக்கிறேன்.—3 இயே
சுக்கிறிஸ்துவின்மேலே (ஆணைப்படிக்கு இப்
படி) மெய்யாய்ச் சொல்லுகிறேன்; பரிசுத்த
ஆவியின்மேலே ஆணைப்படிக்குப் பொய்சொல்
லாமல் இருக்கிறேன்; என் மனதுகூடச் சாட்சி
யாய் இருக்கின்றது. — 4 அவர்கள் இஸ்ரவேல்
சந்ததியாராய் இருக்கிறார்களே, புத்திரசுவிகார
மும் மகிமையும் உடம்படிக்கைகளும் வேதப்பிர
மாணமிடுதலும் தேவ ஆராதனையும் வாக்குத்தத்
தங்களும் அவர்களுடையவைகளே.—5 பிதாக்
கள் அவர்களுடையவர்களாய் இருக்கிறார்களே;
மேலும் சரீரத்தின்படிக்குக் கிறிஸ்து அவர்களில்
உண்டானாரே; அவர் என்றென்றைக்கும் தோத்
திரிக்கப்பட்ட சர்வத்திற்கும் மேலான தேவனா
னவர்.—ஆமன்.

6 பராபரனுடைய வசனம் அவமாய்ப்போ
யிற்று என்று சொல்லக்கூடாது; என்னத்தினா
லென்றால் இஸ்ரவேல் வம்சத்தார் எல்லாரும்
இஸ்ரவேலர் அல்லவே.–7 அன்றியும் அவர்கள்
ஆபிரகாமின் சந்ததியானாலும் எல்லாரும் புத்திர
ரும் அல்லவே; ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி
உண்டாகுமென்று சொல்லியிருக்கின்றதே.—
8 இதன்பொருள் என்னவென்றால், சரீரமுறை
மையின்படி புத்திரரானவர்கள் பராபரனுடைய
புத்திரர் அல்ல, வாக்குத்தத்தத்தினாலே குறிக்கப்
பட்ட புத்திரரே (அப்படிப்பட்ட) சந்ததி என்று
எண்ணப்படுகிறார்கள்.—9 அந்த வாக்குத்தத்த
மான வார்த்தைகளாவன: இக்காலத்திலே வரு
வேன்; அப்பொழுது சாராள் ஒரு குமாரனைப்
பெறுவாள் என்பவைகளே.—10 இவைமாத்திர
மல்ல, நம்முடைய முன்னோராகிய ஈசாக்கென்
னும் ஒருவனாலே கருப்பவதியான இரேபேக்கா
ளும், அதற்குச் சாட்சி; எப்படியென்றால், —
11 அவளுடைய பிள்ளைகள் பிறவாமலும் நன்
மைதீமை ஒன்றும் செய்யாமலும் இருந்த காலத்
திலே மூத்தவன் இளையவனுக்கு ஊழியம்செய்

வான் என்று அவளுடனே சொல்லப்பட்டது.— 12 அப்படிப்போல, யாக்கோபின்மேல் அன்பாயிருந்து ஏசாவைப் பகைக்கிறேன் என்றும் எழுதியிருக்கின்றது. — 13 பராபரனுடைய சித்தம் தெரிந்துகொண்டபடியே இருந்து, கிரியைகளினாலே அல்ல, அழைக்கிறவராலே ஆகும்படிக்கு அப்படிச் சொல்லியிருக்கின்றது.

14 ஆகையால் நாம் என்னசொல்லலாம்? பராபரனிடத்திலே அநீதி உண்டென்று சொல்லலாமா? அப்படி ஒருக்காலும் சொல்லக்கூடாது; மோசேயுடனே அவர் சொன்னதாவது:- 15 எவன்மேல் தயையாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் தயையாயிருப்பேன்; எவன்மேல் இரக்கமாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ, அவன்மேல் இரக்கமாயிருப்பேன் என்றாரே. — 16 ஆகையால் மனிதர் விரும்புகிறதினாலும் ஓடுகிறதினாலும் அல்ல, பராபரனுடைய தயையினாலே ஆயிருக்கின்றது. — 17 பின்னும் வேதத்திலே பார்வோனுடனே அவர் சொன்னதாவது: உன்னிடத்தில் என்னுடைய வல்லமையைக் காண்பிக்கும்பொருட்டாகவும், என்னுடைய நாமம் பூமியில் எங்கும் பிரஸ்தாபமாகும்பொருட்டாகவும் உன்னை நிலைநிற்கப்பண்ணினேன் என்றார்.—18 ஆதலால் அவர் தமது இஷ்டத்தின்படி ஒருவனுக்குத் தயையாயிருக்கிறார்; தமது இஷ்டத்தின்படி மற்றொருவனைக் கடினப்படுத்துகிறார்.

19 இப்படியானால் ஏன் அவர் குற்றம்பிடிக்கிறார்? அவருடைய சித்தத்திற்கு யாவன் எதிர் நிற்பானென்று என்னுடனே சொல்வாய். — 20 ஆ மனிதனே, பராபரனுக்கு எதிராய்த் தர்க்கிக்கிற நீ யாவன்? உருவாக்கப்பட்ட வஸ்து உருவாக்கினவனை நோக்கி, நீ ஏன் என்னை இப்படி உண்டாக்கினாயென்று சொல்லுமா? — 21 அல்லது மிதியிட்ட களிமண்ணினாலே குயவன் ஒரு பாத்திரத்தைக் கனமான காரியத்திற்கும், மற்றொன்றைக் கனஈனமான காரியத்திற்கும் பண்ணும்படி, மண்ணின்மேல் அதிகாரமுள்ளவன் அல்லவா?-22 ஆனதால் பராபரன் தமது கோபத்தைக் காண்பிக்கவும் தமது வல்லமையைத் தெரியப்படுத்தவும் சித்தமாய், அழிவுக்குத் தகுதியான கோபாக்கினைப் பாத்திரங்கள் மேலே மிகவும் நீடிய சாந்தத்தோடே பொறுமை வைத்துக்கொண்டதும் அல்லாமல்,-23 தாம் மகிமைக்காக எத்தனமாக்கின தயாபாத்திரங்கள் மேலே தம்முடைய மகிமையின் ஐசுவரியத்தைத் தெரியப்படுத்தச் சித்தமாய், அப்படிப் பொறுத்துக்கொண்டால் (நீ எப்படித் தர்க்கிக்கலாம்)? — 24 அப்படிப்பட்டவர்கள் ஆகும்படி அவர் யூதரில்மாத்திரம் அல்ல, புறத்தேசத்தாரிலுமிருந்து நம்மை அழைத்தார்.

25 அந்தப்படி ஓசேயாவின் புத்தகத்திலே அவர் சொல்லுகிறதாவது: எனக்குச் சனங்கள் அல்லாதவர்களை என்னுடைய சனங்கள் என்றும் சிநேகிக்கப்படாதிருந்தவளைச் சிநேகிக்கப்பட்டவள் என்றும் அழைப்பேன்.—26 நீங்கள் என்னுடைய சனங்கள் அல்லவென்று தங்களுக்குச் சொல்லப்பட்ட இடத்திலே, அவர்கள் சீவனுள்ள பராபரனுடைய பிள்ளைகள் என்று அழைக்கப்படுவார்கள் என்கிறார். — 27 அல்லாமலும் ஏசாயா என்பவன் இஸ்ரவேலரைக்குறித்துக் கூப்பிடுகிறதாவது: இஸ்ரவேல் சந்ததியார் சமுத்திரத்தின் மணலைப்போலப் பெருக்கமாயிருந்தும் மீதியான சிலர்மாத்திரம் இரட்சிக்கப்படுவார்கள்.—28 நீதியோடே சீக்கிரமாய்க் கர்த்தர் காரியத்தைத் தீர்த்து நிறைவேற்றுவார்; சீக்கிரமாகவே அவர் காரியத்தைப் பூமியிலே தீர்த்துப்போடுவார் என்றான். — 29 அல்லாமலும் அதற்குமுன்னே ஏசாயா சொன்னது: சேனைகளையுடைய பராபரன் நமக்குள்ளே ஒரு சந்ததியை மீதியாக வையாதிருந்தாரானால் நாம் சோதோமைப்போலாகிக் கொமோறாவுக்கு ஒத்திருப்போம் என்றான்.

30 இவைகளின் பொருள் என்ன ஆயிற்று என்று கேட்டால், நீதியைத் தேடாமலிருந்த புறத்தேசத்தார் விசுவாசத்தினாலே வருகிற நீதியையே பெற்றுக்கொண்டார்கள்.—31 நியாயப்பிரமாணத்தினாலே நீதியைத் தேடின இஸ்ரவேலரோ விசுவாசத்தினால் அல்ல,— 32 நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அதைத் தேடினபடியால், நியாயப்பிரமாணத்தினாலே நீதியை அடையவில்லை. — 33 இதோ, விழுதற்கான கல்லையும், இலச்சை அடைவதற்கான கல்மலையையும் சீயோனிலே வைக்கிறேன்; அதினிடத்தில் விசுவாசமாயிருப்பவன் எவனோ, அவன் வெட்கப்படுவதில்லை என்று எழுதியிருக்கிறதின்படி அவர்கள் விழுதற்கான அக்கல்லின்மேல் விழுந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்படவேண்டும் என்று நான் என் இருதயத்தோடே மிகவும் விரும்பி, பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன். — 2 அவர்கள் பராபரனைக் குறித்து வைராக்கியமாயிருக்கிறார்கள் என்று நானும் அவர்களுக்குச் சாட்சிசொல்லுகிறேன்.— 3 அந்த வைராக்கியம் அறிவுக்கு ஏற்றதல்ல; எப்படியென்றால், பராபரனால் வருகிற நீதியை அவர்கள் அறியாமல் தங்கள் சுயநீதியை நிலைநிறுத்தத் தேடுகிறபடியால், அவரால் வருகிற நீதிக்குக் கீழ்ப்படியாதிருக்கிறார்கள். — 4 விசுவாசிக்கிற எவனுக்கும் நீதி உண்டாகும்படியாகக் கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிறாரே.

5 மேலும் மோசே நியாயப்பிரமாணத்தினால்
வருகிற நீதியைக்குறித்து இவைகளைச் செய்கிற
மனிதன் இவைகளால் பிழைப்பான் என்று எழு
தினார்.—6 விசுவாசத்தினால் வருகிற நீதிப்பிரமா
ணமோ சொல்லுகிறதாவது: கிறிஸ்துவை இறங்
கிவரப்பண்ணும்படிக்கு வானத்துக்கு ஏறிப்போ
பவன் யாவன்? — 7 கிறிஸ்துவை மரித்தோரிலி
ருந்து ஏறிவரப்பண்ணும்படிக்குப் பாதாளத்தில்
இறங்கிப் போபவன் யாவன் என்று உன் இருத
யத்திலே நினையாதிருப்பாயாக என்பதும் அல்லா
மல், — 8 அது பின்னும் சொல்லுகிறதாவது:
இந்தச் சங்கதி உனக்குச் சமீபமாய் உன் வாயி
லும் உன் இருதயத்திலும் இருக்கின்றது என்று
சொல்லுகின்றது; அந்தச் சங்கதி நாங்கள் பிரச
ங்கிக்கிற விசுவாசத்தின் சங்கதிதான்.—9 என்
னவென்றால் நீதிமான்களாக்கப்படுவதற்கு இரு
தயத்தோடே விசுவாசிக்கவும், இரட்சிக்கப்படுவ
தற்கு வாயினாலே அறிக்கையிடவும் வேண்டுவ
தால்,—10 நீ உன் வாயினாலே கர்த்தராகிய இ
யேசுவை அறிக்கையிட்டு, பராபரன் அவரை
மரித்தோரிலிருந்து எழும்பப்பண்ணினார் என்று
உன் இருதயத்தோடே விசுவாசித்தால், இரட்சி
க்கப்படுவாய்.—11 அந்தப்படி அவரை விசுவா
சிக்கிறவன் எவனோ அவன் வெட்கப்படுவதில்
லை என்று வேதமும் சொல்லுகின்றது.

12 அன்றியும் எல்லாருக்கும் கர்த்தரானவர்
தம்மைத் தொழுதுகொள்ளுகிற யாவருக்காகவும்
ஐசுவரியமுள்ளவராய் இருக்கிறபடியால் யூதருக்
கும் கிரேக்கருக்கும் வித்தியாசமே இல்லை.—
13 ஆதலால் கர்த்தருடைய நாமத்தைத் தொழு
துகொள்பவன் எவனோ, அவன் இரட்சிக்கப்படு
வான்.

14 அவரை விசுவாசியாதவர்கள் எப்படி அவ
ரைத் தொழுதுகொள்ளுவார்கள்? அவரைக்குறித்
துக் கேள்விப்படாதவர்கள் எப்படி அவரை விசு
வாசிப்பார்கள்? மேலும் பிரசங்கிக்கிறவன் இல்
லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவார்கள்?—
15 மேலும், ஆ சமாதானத்தைக் கூறி நற்காரியங்
களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய பா
தங்கள் மிகவும் அழகானவைகள் என்று எழுதியி
ருக்கிறபடி சிலர் அனுப்பப்படாவிட்டால், எப்ப
டிப் பிரசங்கம்பண்ணுவார்கள்?—16 ஆனாலும்
இந்தச் சுவிசேஷத்திற்கு எல்லாரும் கீழ்ப்படிய
இல்லை; அதைக்குறித்து ஏசாயா சொன்னதாவது:
கர்த்தாவே, நாங்கள் பிரசங்கம்பண்ணுகிறதை
யாவன் விசுவாசித்தான் என்றான்.-17 ஆதலால்
விசுவாசம் கேள்வியினாலே வரும், கேள்வி பரா
பரனுடைய வசனத்தினாலே வருகின்றது.—
18 இப்படியிருக்க நான் விசாரிக்கிறதென்ன
வென்றால், அவர்கள் கேள்விப்படவில்லையா? அ
வைகளின் தொனி பூமி எங்கும் சென்றது; அவை
களின் வசனங்கள் பூச்சக்கரக் கடைசிவரைக்கும்
புறப்பட்டன என்பதின்படி, அவர்கள் மெய்
யாய்க் கேள்விப்பட்டார்களே. — 19 பின்னும்
நான் விசாரிக்கிறது என்னவெனில், இஸ்ரவேலர்
அறியவில்லையோ? (அறியாமல் இருக்கமாட்டார்
கள்; என்னத்தினாலென்றால்) முதலாவது மோ
சே சொன்னது: எனக்குச் சனங்கள் அல்லாத
வர்களைக்கொண்டு நான் உங்களுக்குப் பொறா
மை உண்டாக்குவேன்; புத்தியீனமுள்ள சனங்
களாலே உங்களுக்குக் கோபமூட்டுவேன் என்
றான்.—20 அல்லாமலும் ஏசாயா தயிரியமாய்ச்
சொன்னது: என்னைத் தேடாதவர்களாலே கண்
டு அறியப்பட்டேன்; என்னை விசாரித்துக் கேளா
தவர்களுக்கு வெளியரங்கமானேன் என்றான்.—
21 இஸ்ரவேலரைக்குறித்துச் சொல்லியிருக்கிற
தாவது: கீழ்ப்படியாதவர்களுமாய் விரோதம் பே
சுகிறவர்களுமாய் இருக்கிற சனங்களிடத்திற்கு
முழுநாளும் என் கைகளை நீட்டினேன் என்பதே.

## ௰௧. அதிகாரம்.

இப்படியிருக்கப் பராபரன் தம்முடைய சனங்க
ளைத் தள்ளிவிட்டாரா என்று கேட்டால், அப்படி
அவர் செய்யவே இல்லை.—2 நானும் ஆபிரகா
மின் சந்ததியாயும், பென்யமீன் கோத்திரத்தானு
யும் இருக்கிற இஸ்ரவேலனாயிருக்கிறேனே; பரா
பரன் தாம் முன் அறிந்துகொண்ட தம்முடைய
சனங்களைத் தள்ளவே இல்லை; எலியாவைக்கு
றித்து வேதம் சொல்லுகிறதை அறியீர்களா?—
3 அவன் பராபரனை நோக்கி, கர்த்தாவே, உம்மு
டைய தீர்க்கதரிசிகளை அவர்கள் கொலைசெய்து,
உம்முடைய பீடங்களை இடித்துப்போட்டார்
கள். — 4 நான்மாத்திரம் மீதியாயிருக்கிறேன்,
என் பிராணனையும் வாங்கத் தேடுகிறார்கள் என்று
இஸ்ரவேலரைக்குறித்து முறையிட்டபொழுது,
அவனுக்கு உண்டான தேவ உத்தரவு என்ன
வென்றால், பாகாலுக்கு முன்பாக முழங்காற்படி
யிடாத ஏழாயிரம்பேரை எனக்காக மீதியாய்
வைத்தேன் என்பதே.—5 அந்தப்படி இக்காலத்
திலேயும் கிருபையால் தெரிந்துகொள்ளப்பட்ட
மீதி உண்டாயிருக்கின்றது.—6 அது கிருபையி
னால் உண்டாயிருக்கிறபடியால், அது கிரியைக
ளினாலே ஆகவில்லை; அப்படி அல்லவென்றால்
கிருபையானது கிருபையாயிராது. அன்றியும் அது
கிரியைகளினால் உண்டாயிருந்தால், அது கிரு
பையினால் இராது; அல்லவென்றால், கிரியையா
னது கிரியையல்ல.

7 இதினாலே என்ன தோன்றுகிறதெனில்,
இஸ்ரவேலர் தேடுகிறதை அடையாமல் இருக்
கிறார்கள்; தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ அ
தை அடைந்தார்கள்; மற்றவர்கள் இன்றைத்தி
னம்வரைக்கும் கடினமான இருதயமுள்ளவர்க
ளாய் இருக்கிறார்கள்.—8 பராபரன் கன நித்தி
ரையுள்ள ஆவியையும், காணாதிருக்கிற கண்களை

யும், கேளாதிருக்கிற காதுகளையும் அவர்களுக்குக்
கொடுத்தாரென்று எழுதியிருக்கிற பிரகாரமாக
அப்படி இருக்கிறார்கள்.—9 தாவீதும் சொல்லு
கிறதாவது: அவர்களுடைய உணவிடம் அவர்க
ளுக்குக் கண்ணியாயும் வலையாயும் விழுதற்கான
கல்லாயும் பதில்பெறுதற்கு ஏதுவாயும் இருக்கக்
கடவது.—10 காணாதபடிக்கு அவர்களுடைய
கண்கள் அந்தகாரப்படக்கடவது; அவர்களு
டைய முதுகு எப்பொழுதும் குனியும்படி செய்
யுமென்று சொல்லியிருக்கிறான்.

11 இப்படியிருக்க அழிந்துபோகும்படிக்கா
இடறினார்கள் என்று கேட்டால், அப்படியல்ல,
அவர்களுக்குள்ளே எரிச்சலை எழுப்புகிறதற்காக
அவர்கள் விழுந்ததினாலே புறத்தேசத்தாருக்கு
இரட்சிப்புக் கிடைத்தது.—12 அவர்கள் விழுந்
தது உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்கள் குறை
வானது புறத்தேசத்தாருக்கு ஐசுவரியமுமானதா
யிருக்க, அவர்கள் நிறைவானால் மிகவும் அதிக
மாய் அப்படியாகும் அல்லவோ?—13 புறத்தே
சத்தாருக்காக நான் அப்போஸ்தலனாயிருக்கிறதி
னாலே புறத்தேசத்தாராகிய உங்களுடனே பே
சுகிறேன்.—14 அவர்களைத் தள்ளிவிடுதல் உல
கத்தை ஒப்புரவாக்குதலாயிருக்க, அவர்களை அங்
கிகரித்துக்கொள்ளுதல் மரித்தோரிலிருந்து ஜீவன்
உண்டானதுபோல இருக்கும் அல்லவோ?—
15 ஆதலால் நான் எப்படியும் என் இனத்தாரை
ஏவி, அவர்களில் சிலரை இரட்சிக்கவேண்டு
மென்று என் ஊழியத்தை மேன்மைபாராட்டுகி
றேன்.

16 மேலும் முதல் விளைச்சல் பரிசுத்தமாயி
ருக்க, அம்பாரமும் அப்படியே இருக்கின்றது;
வேரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் அப்படி
யே இருக்கின்றன.—17 சில கிளைகள் ஒடித்துத்
தள்ளப்பட்டதுமல்லாமல் காட்டு ஒலிவமரமாகிய
நீ அவைகளுடைய இடத்திலே ஒட்டவைக்கப்
பட்டு ஒலிவமரத்தின் வேருக்கும் சாரத்திற்கும்
உடன்பங்காளியாயிருக்க,—18 நீ அந்தக் கிளைக
ளுக்கு எதிராய்ப் பெருமைபாராட்டாதிருப்பா
யாக; பாராட்டுவாயானால் நீ வேரைச் சுமக்காமல்,
வேரே உன்னைச் சுமக்கிறதென்று நினைத்துக்
கொள்.–19 நான் ஒட்டவைக்கப்படுவதற்கு அந்
தக் கிளைகள் ஒடித்துப்போடப்பட்டன என்று
நீ சொல்லுகிறாய்.—20 நல்லது அவிசுவாசத்தி
னாலே அவைகள் ஒடித்துத் தள்ளப்பட்டன; நீ
விசுவாசத்தினாலே நிற்கிறாய்; இறுமாப்பைக் கா
ண்பியாதிருப்பாயாக.—21 சுபாவத்தின்படி கி
ளைகளானவைகளைப் பராபரன் தப்பவிடாதிருக்க,
உன்னையும் தப்பவிடாதபடிக்குப் பயந்திருப்பாயாக.

22 மேலும் பராபரனுடைய தயவையும் கண்
டிப்பையும் பார்த்துக்கொள்; விழுந்தவர்களிடத்
திலே கண்டிப்பையும் உன்னிடத்திலே தயவை
யுமே பார்; அந்தத் தயவிலே நிலைத்திருப்பாயாக;
இல்லாவிட்டால் நீயும் வெட்டுண்டுபோவாய்.–
23 அன்றியும் அவர்களும் அவிசுவாசத்தினாலே
நிலைத்திராவிட்டால் ஒட்டவைக்கப்படுவார்கள்;
அவர்களை மறுபடியும் ஒட்டவைக்கிறதற்குப் பரா
பரன் வல்லவராயிருக்கிறாரே.—24 அன்றியும்
நீ சுபாவத்தின்படி காட்டு ஒலிவாகிய மரத்திலி
ருந்து வெட்டப்பட்டு உன் சுபாவத்திற்கு விரோ
தமாய் நல்ல ஒலிவமரத்திலே ஒட்டவைக்கப்பட்
டிருக்க, மிகவும் அதிகமாய்ச் சுபாவக்கிளைகளா
கிய அவர்கள் தங்கள் சுய ஒலிவமரத்திலே ஒட்
டவைக்கப்படுவார்கள் அல்லவா?

25 ஆதலால் சகோதரரே, நீங்கள் உங்கள்
சுய புத்தியிலே சாயாதபடிக்கு, ஒரு இரகசி
யத்தை நீங்கள் அறியவேண்டுமென்று இருக்கி
றேன்; என்னவெனில், புறத்தேசத்தார் நிறை
வாய்ப் பிரவேசிக்குமளவும், இஸ்ரவேலரில் ஒரு
பங்குக்குக் கடினமான மனது உண்டாயிருக்
கும். — 26 பின்பு மீட்பர் சீயோனுக்கு வந்து,
அக்கிரமத்தை யாக்கோபிலிருந்து நீக்குவார்
என்றும்,—27 நான் அவர்களுடைய பாவங்களை
நீக்கும்பொழுது இதுவே நான் அவர்களுடனே
பண்ணும் உடம்படிக்கையென்றும் எழுதியிருக்
கிறபடியே, இஸ்ரவேலர் எல்லாரும்இரட்சிக்கப்
படுவார்கள்.—28 சுவிசேஷத்தைக்குறித்து அவர்
கள் உங்கள் நிமித்தம் பகைஞராயிருக்கிறார்கள்.—
29 தெரிந்துகொள்ளுதலைக்குறித்துப் பராபரன்
கிருபைகொடுத்தலும் அழைத்தலும் மாறாதவைக
ளானபடியால், அவர்கள் பிதாக்களின் நிமித்தம்
அன்புகூரப்பட்டவர்களாய் இருக்கிறார்கள். —
30 ஆதலால் நீங்கள் முற்காலத்திலே பராபர
னுக்குக் கீழ்ப்படியாதிருந்து இப்பொழுது அவர்
களுடைய அவிசுவாசத்தினாலே இரக்கம்பெற்றி
ருக்கிறதுபோல, அவர்களும் இப்பொழுது கீழ்ப்
படியாமலிருந்து, (பின்பு) உங்களுக்குண்டான
இரக்கத்தினாலே (ஏவப்பட்டு) இரக்கம் பெறு
வார்கள்.—31 எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்
தக்கதாகப் பராபரன் எல்லாரையும் அவிசுவாசத்
திற்குள்ளே அடைத்துப்போட்டபடியால் அப்
படியேயாம்.

32 ஆ பராபரனுடைய ஞானம் அறிவு என்
பவைகளின் சம்பூரணம் மிகுந்த ஆழமுள்ளதாயி
ருக்கின்றது.–33 அவருடைய நியாயத்தீர்ப்புகள்
அளவறுக்கப்படாதவைகள்; அவருடைய நெறி
கள் ஆராய்ந்துபார்க்கப்படாதவைகளாய் இருக்
கின்றன; கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன்
எவன்? — 34 அல்லது அவருக்கு உசாவுதுணை
யாய் இருந்தவன் எவன்? — 35 அல்லது தனக்
குப் பதில்கொடுக்கும்படிக்கு அவருக்கு முந்தி
ஒன்றைக் கொடுத்தவன் எவன்?—36 சகலமும்
அவராலும் அவர்மூலமாயும் அவருக்காகவும் இ
ருக்கின்றன, அவருக்கே என்றென்றைக்கும்
புகழ்ச்சி உண்டாகக்கடவது.—ஆமென்.

## ௰௨. அதிகாரம்.

அப்படியிருக்கச் சகோதரரே, நீங்கள் புத்தி
யுள்ள ஆராதனைசெய்ய, உங்கள் சரீரங்களைச் சீவ
னுமாய், பரிசுத்தமுமாய், பராபரனுக்குப் பிரியமு
மாயிருக்கிற பலியாக நிறுத்தவேண்டும் என்று
பராபரனுடைய இரக்கங்களின் நிமித்தம் உங்க
ளுக்குப் புத்திசொல்லுகிறேன்.—2 மேலும் நீங்
கள் இவ்வுலகத்திற்கு ஒப்பாய் நடவாமல், பரா
பரனுடைய நன்மையும் பிரியமும் நிறைவுமான
சித்தம் இன்னதென்று நீங்கள் பகுத்து அறியத்
தக்கதாக, உங்கள் மனதைப் புதிதாக்குதலினா
லே மறுரூபமாய் நடந்துகொள்ளுங்கள்.

3 அல்லாமலும் எனக்குக் கொடுத்திருக்கிற
கிருபையினாலே நான் இன்னும் சொல்லுகிறதா
வது : உங்களில் எவனானாலும் தன்னைக்குறித்து
நினைக்கவேண்டியதற்கு மேலாக நினையாமல்,
அவனவனுக்குப் பராபரன் பங்கிட்ட விசுவாசம்
எவ்வளவோ, அவ்வளவின்படி புத்தியாய் நடக்
கத்தக்கதாகத் (தன்னைக்குறித்து நினைக்கவேண்
டும்). — 4 அது எப்படியெனில் ஒரே சரீரத்
திலே நாம் அநேக அவயவங்களை உடையவர்க
ளாயிருக்க, அவயவங்கள் யாவும் ஒரே தொழில்
இல்லாதவைகளாய் இருக்கிறதுபோல,–5 அநே
கராகிய நாமும் கிறிஸ்துவுக்குள்ளே ஒரே சரீரமா
யிருக்க, ஒருவருக்கொருவர் அவயவங்களாய்,—
6 நமக்குக் கொடுக்கப்பட்ட கிருபையின்படியே
பலவித வரங்கள் உள்ளவர்களாயிருக்கிறோம்;
அந்தப்படி தீர்க்கதரிசனம் சொல்லுகிற வரத்தை
உடையவன் விசுவாச அளவுக்கு ஏற்றதாக அப்
படிச் செய்யக்கடவன். — 7 உதவிசெய்கிற
வரத்தை உடையவன் உதவிசெய்கிறதிலே சாக்
கிரதையாய் இருக்கக்கடவன்; போதிக்கிறவன்
போதிக்கிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கட
வன்.—8 புத்திசொல்லுகிறவன் புத்திசொல்லு
கிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கடவன்; தரு
மங்களைக் கொடுக்கவேண்டுபவன் கபடம் இல்
லாமையாய் அப்படிச் செய்யக்கடவன். முத
லாளியானவன் சாக்கிரதையுடனே இருக்கக்கட
வன்; இரக்கம்செய்கிறவன் உச்சாகத்துடனே
அப்படிச் செய்யக்கடவன்.

9 உங்கள் அன்பு மாயமற்றதாய் இருப்பதாக;
பொல்லாங்கானதை அருவருத்து, நன்மையில்
ஒட்டிக்கொண்டிருப்பீர்களாக. — 10 சகோதர
சிநேகத்திலே ஒருவருக்கொருவர் மிகவும் பட்ச
மாயிருங்கள்; கனம்பண்ணுகிறதில் ஒருவருக்
கொருவர் முந்திக்கொள்ளுங்கள். — 11 அலுவ
லில் நீங்கள் அசதியாயிருக்கக்கூடாது; உங்கள்
ஆவியிலே தீபவளர்ச்சியைப்போல இருந்து, கர்த்
தருக்கு ஊழியம்செய்யுங்கள். — 12 நம்பிக்கை
யிலே சந்தோஷமாய் இருப்பீர்களாக; உபத்
திரவகாலத்திலே பொறுமையாயிருங்கள். —
13 செபத்தில் உறுதியாய்த் தரித்திருங்கள்; வரு
த்தப்படுகிற பரிசுத்தவான்களுக்கு உதவிசெய்யுங்
கள்; அந்நியருக்கு உபசாரம்செய்கிறதை நாடுங்
கள். — 14 உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை
ஆசீர்வதியுங்கள்; ஆசீர்வாதமே அன்றிச் சாபமி
டாதிருப்பீர்களாக. — 15 சந்தோஷப்படுகிறவர்
களுடனே சந்தோஷப்படுங்கள்; அழுகிறவர்களு
டனே அழுங்கள்.—16 ஒருவருக்கொருவர் ஐக்
கமான சிந்தையுள்ளவர்களாய் இருப்பீர்களாக;
மேன்மையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மை
யானவர்களுக்கு இணங்குங்கள்.

17 உங்கள் சுயபுத்தியில் சாயாதிருப்பீர்க
ளாக; யாவனுக்கும் தீமைக்குத் தீமைசெய்யாதி
ருங்கள்; எந்த மனிதருக்கும்முன்பாக யோக்கிய
மானவைகளை நடப்பியுங்கள்.—18 எல்லா மனி
தரோடும் சமாதானமாய் இருக்கக்கூடுமானால்,
உங்களால் ஆனமட்டும் அப்படியே செய்யுங்
கள். — 19 பிரியமானவர்களே, பழிவாங்குதல்
எனக்கு ஏற்றது, நானே பதில்செய்வேனென்று
சர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிறபடி
யால், நீங்கள்தாமே பழிவாங்காமல் (அவரு
டைய) கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்.—
20 ஆதலால் உன் சத்துருவுக்குப் பசி உண்டா
யிருக்கும்பொழுது அவனுக்குப் போசனம்கொ
டு; அவனுக்குத் தாகம் உண்டாய் இருக்கும்பொ
ழுது அவன் தாகத்தைத் தீர்ப்பாயாக. நீ இப்ப
டிச் செய்தால் அவனுடைய தலையின்மேல் நெ
ருப்புள்ள கரிகளைக் குவிப்பாய். — 21 தீமையினா
லே நீ செயிக்கப்படாமல், தீமையை நன்மையி
னாலே செயிப்பாயாக.

## ௰௩. அதிகாரம்.

அதிகாரம் உள்ளவர்கள் பராபரனாலே அன்றி
இருக்கமாட்டார்கள்; ஆதலால் எந்த மனிதனும்
அதிகாரம் உடையவர்களுக்குக் கீழ்ப்படியக்கட
வன்; உண்டாயிருக்கிற அதிகாரிகள் பராபரனா
லே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.–2 ஆனதால் அ
திகாரம் உள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறவன்
பராபரனுடைய நியமத்துக்கு எதிர்த்து நிற்கிறான்;
அப்படி எதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத்
தாமே ஆக்கினை வரப்பண்ணுகிறார்கள்.—3 மே
லும், துரைகளானவர்கள் நற்கிரியைகளுக்கு அ
ல்ல துர்க்கிரியைகளுக்குப் பயங்கொடுக்கிறவர்க
ளாய் இருக்கிறார்கள்; ஆகையால் நீ அதிகாரத்
துக்காகப் பயமில்லாதிருக்கவேண்டும் என்றிருந்
தால், நன்மை செய்வாயாக, அதினால் உனக்குப்
புகழ்ச்சி உண்டாம்.—4 உனக்கு நன்மை உண்
டாகும்பொருட்டு அவன் பராபரனுடைய ஊழி
யக்காரனாயிருக்கிறான்; நீ தீமைசெய்தால் பயம்
கொள்வாயாக; கட்கத்தை அவன் வீணாய்ப் பிடிக்
கவில்லை; பொல்லாங்கைச் செய்கிறவன்மேல்

கோபாக்கினை வரப்பண்ணும்படி அவன் நீதியைச் செலுத்துகிற தேவ ஊழியக்காரனாயும் இருக்கிறானே. — 5 ஆகையால் நீங்கள் (அவர்களுக்குக்) கீழ்ப்படியவேண்டியதாயிருக்கின்றது; கோபாக்கினையின் நிமித்தமாத்திரம் அல்ல, மனச்சாட்சியின் நிமித்தமும் அப்படி இருக்கவேண்டும்.–6 அதினாலே நீங்கள் (அவர்களுக்கு) வரிப்பணத்தையும் கொடுக்கிறீர்களே; அவர்கள் தங்கள் உத்தியோகத்தை இடைவிடாமல் பற்றிக்கொள்ளுகிற தேவ ஊழியக்காரர்களாய் இருக்கிறார்களே. — 7 ஆனபடியினாலே எவர்களுக்கும் கடமைகளைச் செலுத்துவீர்களாக; வரியைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்கு வரியைச் செலுத்துங்கள். தீர்வையைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குத் தீர்வையைச் செலுத்துங்கள்; பயப்படவேண்டியது எவனுக்கோ, அவனுக்குப் பயப்படுங்கள், கனத்தைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குக் கனத்தைச் செலுத்துங்கள்.

8 ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கிறதே அன்றி, மற்றொன்றும் ஒருவனுக்கும் கடன்படாதிருப்பீர்களாக; மற்றவனில் அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறானே.— 9 எப்படியென்றால் விபசாரம்பண்ணாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக, இச்சியாதிருப்பாயாக என்று இந்தக் கற்பனைகளும் வேறு எந்தக் கற்பனையும் உன்மேல் அன்புகூருகிறதுபோல, பிறன்மேலும் அன்புகூர்வாயாக என்கிற ஒரே பிரமாணத்திலே தொகையாய் அடங்கியிருக்கின்றன. — 10 அன்பானது பிறனுக்குப் பொல்லாங்கைச் செய்யாது; ஆதலால் அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறதாய் இருக்கின்றது.

11 மேலும் நித்திரையைவிட்டு எழுந்திருக்கத்தக்க வேளையாயிற்று என்று நாம் காலத்தை அறிந்திருக்கிறபடியால், இப்படி எச்சரிக்கிறேன்; அன்றியும் நாம் விசுவாசிகளானபொழுது இரட்சிப்பு சமீபமாயிருந்ததிலும் இப்பொழுது அது நமக்கு அதிக சமீபமாயிருக்கின்றது.—12 இரவு சென்றுபோயிற்று; பகல் சமீபமாயிற்று. ஆனபடியினாலே அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்ளிப்போட்டு, ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளக்கடவோம்.—13 பேருணவையாவது, வெறிகொள்ளுதலையாவது, வேசித்தனத்தையாவது, காமவிகாரத்தையாவது, சண்டையையாவது, பொறாமையையாவது, நடப்பியாமல் பகலிலே நடக்கிறவர்கள்போல யோக்கியமாய் நடக்கக்கடவோம்.–14 துர்இச்சைகளுக்கு இடமாய் உங்கள் தேகத்தைப் போஷியாமல், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரித்துக்கொள்வீர்களாக.

## ௰௪. அதிகாரம்.

விசுவாசத்தில் பலஈனமுள்ளவனுடைய நினைவுகளை நீங்கள் குற்றமாய் எண்ணாமல், அவனைச் சேர்த்துக்கொள்ளுங்கள்.—2 ஒருவன் எல்லாப் பதார்த்தங்களையும் புசிக்கலாம் என்று நம்புகிறான்; பலஈனமுள்ள மற்றொருவன் மரக்கறிகளை மாத்திரம் புசிக்கிறான்.—3 புசிக்கிறவன் புசியாதிருக்கிறவனை அசட்டைபண்ணாதிருப்பானாக; புசியாமலிருக்கிறவனும் புசிக்கிறவனைக் குற்றமுள்ளவன் என்று நினையாதிருப்பானாக; பராபரன் அவனைச் சேர்த்துக்கொண்டாரே.—4 மற்றொருவனுடைய வேலைக்காரனைக் குற்றமுள்ளவன் என்று தீர்க்கிற நீ யாவன்? அவன் நின்றாலும் விழுந்தாலும் அவனுடைய சொந்த எசமானே அவனை விசாரிப்பான்; மேலும் பராபரன் அவனை நிலைநிறுத்த வல்லவரானபடியால் அவன் நிலைநிறுத்தப்படுவான்.

5 அன்றியும் ஒருவன் ஒருநாளை மற்ற நாளிலும் விசேஷமாக எண்ணுகிறான்; வேறொருவன் எல்லா நாள்களையும் சரியாய் எண்ணுகிறான்; (அதைக்குறித்து) அவனவன் தன் மனதிலே முழு நிச்சயத்தை உடையவனாய் இருக்கக்கடவன்.—6 ஒரு நாளை விசேஷித்துக்கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; நாள்களை விசேஷித்துக்கொள்ளாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; புசிக்கிறவன் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறபடியால், கர்த்தருக்கென்று புசிக்கிறான்; புசியாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று புசியாமலிருந்து பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறான்.—7 நம்மில் யாவனும் தனக்காகப் பிழைக்கிறதும் இல்லை; யாவனும் தனக்காக மரிக்கிறதும் இல்லையே, நாம் பிழைக்கிறது கர்த்தருக்காகப் பிழைக்கிறோம்; மரிக்கிறது கர்த்தருக்காக மரிக்கிறோம்.—8 ஆகையால் நாம் பிழைத்தாலும் மரித்தாலும் கர்த்தருடையவர்களாயே இருப்போம். — 9 அதற்காகக் கிறிஸ்துவும் மரித்தோர்மேலும் சீவனுள்ளோர்மேலும் ஆண்டவராயிருக்கும்பொருட்டாக மரித்தும் எழுந்தும் உயிரடைந்தும் இருக்கிறார்.

10 இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்றமுள்ளவன் என்று நினைக்கிறதென்ன? அல்லது, உன் சகோதரனை அசட்டைபண்ணுகிறதென்ன? நாம் எல்லாரும் கிறிஸ்துவினுடைய நியாயாசனத்திற்குமுன்பாக நிறுத்தப்படுவோமே.—11 நான் சீவனுள்ளவன்; முழங்கால் யாவும் எனக்குமுன்பாக முடங்கும்; நாவுகள் யாவும் பராபரனை அறிக்கைபண்ணுமென்று பராபரன் திருவுளம்பற்றுகிறார் என்று எழுதியிருக்கிறதல்லவோ?–12 அந்தப்படி நம்மில் அவனவன் தன் தன்னைக்குறித்துப் பராபரனுக்குக் கணக்கு ஒப்புவிப்பான்.

13 ஆதலால் நாம் இனிமேல் ஒருவரை
ஒருவர் குற்றமுள்ளவர்களென்று எண்ணுதிருப்
போமாக; வழுவுதற்காவது விழுதற்காவது எதை
யாகிலும் சகோதரனுக்குமுன்பாக வைத்துப்போ
டாதபடிக்கே எண்ணமுள்ளவர்கள் ஆவீர்க
ளாக. — 14 நான் கர்த்தராகிய இயேசுவினலே
அறிந்திருக்கிறபடி, ஒரு பொருளை அசுத்தம்
என்று எண்ணிக்கொள்ளுகிறவனுக்கு அது அசுத்
தமாயிருக்கிறதே அன்றி, ஒரு பொருளும் தானய்
அசுத்தம் இல்லை.—15 அன்றியும் புசிக்கிறதின
லே உன் சகோதரனுக்கு விதனம் உண்டாக்கி
ல், நீ அன்பாய் நடக்கிறவன் அல்ல, அவனுக்
காகக் கிறிஸ்து மரித்தாரே; அப்படிப்பட்டவனை
உன் போசனத்தினலே கெடுத்துப்போடாதிருப்
பாயாக. — 16 உங்கள் நன்மை தூஷணிக்கப்ப
டாதிருப்பதாக. — 17 பராபரனுடைய இராச்சி
யம் புசிப்பினலும் குடிப்பினலும் அல்ல, நீதியி
னலும் சமாதானத்தினலும் பரிசுத்தஆவியால் வரு
கிற சந்தோஷத்தினலும் பொருந்தியிருக்கின்றது.
18 இவைகளாலே கிறிஸ்துவுக்கு ஊழியம்
செய்கிறவன் பராபரனுக்குப் பிரியமானவனுமாய்,
மனிதருக்குப் பாத்திரனுமாய் இருக்கிறன். —
19 இப்படியிருக்க, சமாதானத்திற்கும் யாவரை
யும் ஐக்கப்படுத்துதற்கும் ஏற்றவைகளைத் தேடிக்
கொள்ளக்கடவோம்.—20 போசனத்தின் நிமித்
தம் பராபரனுடைய கிரியையை அழித்துப்போ
டாதிருப்பாயாக; எந்தப் பதார்த்தமும் சுத்தமுள்
ளதுதான்; (மற்றவன்) விழுதற்கு ஏதுவாகும்படி
எதையாகிலும் புசிக்கிறவனுக்கே அது தீமையா
யிருக்கும். — 21 உன் சகோதரன் வழுவுதற்கா
வது, விழுதற்காவது, பலஈனமாகுதற்காவது ஏது
வான மாம்சத்தைப் புசியாமலும், இரசத்தைப்
பானம்பண்ணுமலும், மற்ற எதையாகிலும் செய்
யாமலும் இருக்கிறதே நன்மையாயிருக்கின்றது.–
22 நீ நிச்சய அறிவுள்ளவனனல், அதைப் பரா
பரனுக்குமுன்பாக நீ தானய்க் கொள்வாயாக;
ஒருவன் தான் சம்மதிக்கிற பொருளினலே தனக்
குக் குற்றம்வரப்பண்ணுதிருந்தால், அவன் பாக்
கியவானயிருப்பான்.—23 (போசனபதார்த்தங்
களுக்குள்ளே) வித்தியாசம்பண்ணுகிறவன் (அ
வைகளை) நிச்சய அறிவில்லாமல் புசித்தபடியின
லே ஆக்கினைக்கு ஏதுவாயிருப்பான்; நிச்சய அறி
வினலே வராத யாவும் பாவமாயிருக்கின்றன.

## ௰௫. அதிகாரம்.

ஆனபடியினலே பலமுள்ளவர்களாகிய நாம்
பலஈனமுள்ளவர்களுடைய பலஈனங்களைப் பொ
றுமையோடே சகிக்கவேண்டும்; அல்லாமலும்
நாம் நமக்குப் பிரியமாய் நடவாமல்,—2 அவன
வன் தன் தனக்கடுத்த பிறனுடைய ஞானவளர்ப்
புக்கு ஏதுவான நன்மை உண்டாகும்படி அவ
னுக்குப் பிரியமாய் நடக்கக்கடவோம்.—3 கிறிஸ்
துவானவரும் தமக்குப் பிரியமாய் நடவாமல்,
உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தைகள் என்
மேல் விழுந்தன என்று எழுதியிருக்கிறபடி நடந்
தார்.—4 அன்றியும் வேதவாக்கியங்கள் திருட்
டாந்தப்படுத்தின பொறுமையினலும் ஆறுதலி
னலும் நாம் நம்பிக்கையுள்ளவர்கள் ஆகும்பொ
ருட்டாய், முன்பு எழுதியிருக்கிறவைகள் எல்
லாம் நமக்குப் போதகமாக எழுதப்பட்டிருக்கின்
றன.—5 அந்தப்படி பொறுமையையும் ஆறுதலை
யும் கொடுக்கிற பராபரன், நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவுக்குத் தேவனும் பிதாவுமா
னவரை நீங்கள் ஐக்கமாய் ஒரே வாயினலே
துதிக்கும்படிக்கு, — 6 கிறிஸ்து இயேசுவினு
டைய சித்தத்தின்படியே ஒருவருக்கொருவர்
ஒரேவிதமான சிந்தையுள்ளவர்களாய் இருப்ப
தற்கு அநுக்கிரகம்செய்வாராக.
7 அப்படியே பராபரனுக்குப் புகழ்ச்சி உண்
டாகத்தக்கதாய்க் கிறிஸ்து நம்மைச் சேர்த்துக்
கொண்டதுபோல, நீங்களும் ஒருவரை ஒருவர்
சேர்த்துக்கொள்ளுங்கள். — 8 (இதைக்குறித்து)
நான் பின்னும் சொல்லுகிறதாவது: பிதாக்களுக்
குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதி
யாக்கும்படிக்கு, பராபரனுடைய சத்தியத்தின்
நிமித்தம் இயேசுக்கிறிஸ்து விருத்தசேதனம் உள்
ளவர்களுக்கு ஊழியக்காரரானர். — 9 புறத்தே
சத்தாரும் (அவருடைய) இரக்கத்திற்காகப் பரா
பரனைத் துதிக்கும்படிக்கு அப்படியானர்; ஆத
லால் எழுதியிருக்கிறதாவது: இதின்நிமித்தம்
நான் புறத்தேசத்தாருக்குள்ளே உம்மை அறிக்
கைபண்ணி, உம்முடைய நாமத்தைச் சொல்லி,
சங்கீதம் பாடுவேன் என்பதே; மறுபடியும் அவன்
சொல்லியிருக்கிறது:—10 புறத்தேசத்தார்களே,
அவருடைய சனங்களோடேகூடச் சந்தோஷப்
படுங்கள் என்பதே. — 11 மறுபடியும் அவன்
சொன்னது: எல்லாப் புறத்தேசத்தார்களே, பரா
பரனைத் துதியுங்கள்; எல்லாச் சனங்களே, அவ
ரை மிகவும் துதியுங்கள் என்றன்.—12 ஏசாயா
வும் சொன்னது: ஈசாயின் வேர் இருக்கும்; புறத்
தேசத்தாரை ஆளும்படி எழும்புவாரும் இருப்
பார்; அவரில் புறத்தேசத்தார்கள் நம்பிக்கையாய்
இருப்பார்கள் என்றன்.–13 அந்தப்படியே நீங்
கள் பரிசுத்த ஆவியின் பலத்தினலே அந்த நம்
பிக்கையை அதிகமாய் அடையும்படிக்கு நம்பிக்
கைக்கு ஏதுவான் பராபரன் விசுவாசத்தினல்
உண்டாகும் எல்லாவித சந்தோஷத்தினலும்
சமாதான சவுக்கியத்தினலும் உங்களை நிரப்பு
வாராக.
14 என் சகோதரரே, நீங்கள்தாமே நற்குணத்
தினல் நிறைந்தவர்களுமாய், சகல அறிவினலும்
நிறைந்தவர்களுமாய், ஒருவருக்கொருவர் புத்தி
சொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்கள் என்று
நானும் உங்களைக்குறித்து நிச்சயமாய் அறிந்திருக்

கிறேன். — 15 அப்படியிருந்தும் சகோதரரே, பராபரன் எனக்குக் கொடுத்த கிருபையினாலே நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு, இவைகளை அதிக தயிரியமாய் எழுதினேன். — 16 புறத்தேசத்தார்கள் பரிசுத்தஆவியினாலே பரிசுத்தமாக்கப்பட்டுப் பராபரனுக்கு மிகவும் பிரியமான பலியாகும்படிக்கு, நான் புறத்தேசத்தாருக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனாய்ப் பராபரனுடைய சுவிசேஷத்திற்கு ஏற்ற ஆராதனை செய்யும்பொருட்டு (அந்தக் கிருபை எனக்கு உண்டாயிற்று).—17 ஆதலால் நான் இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரனுக்கு உரியவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுதற்கு முகாந்தரம் உண்டு. — 18 ஆனபடியினாலே கிறிஸ்துவானவர் என்னாலே நடப்பியாதவைகளில் ஒன்றையுங்குறித்துப் பேசத்துணியாமல்,— 19 புறத்தேசத்தார் வார்த்தையிலும் செய்கையிலும் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு, எருசலேம் நகரத்தை தொடங்கி அதைச் சூழ்ந்த திசையிலேயும் இல்லீரிக்குத் தேசம்வரைக்கும் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை விஸ்தாரமாய்ப் பிரசங்கிக்கத்தக்கதாக அற்புதங்கள் அதிசயங்கள் என்று இவைகளின் பலத்தினாலும் பரிசுத்தஆவியினுடைய பலத்தினாலும் அவர் என்னாலே நடப்பித்தவைகளைக்குறித்துமாத்திரம் பேசத்துணிகிறேன். — 20 மேலும் அவரைக்குறித்து அறிவை அடையாதவர்கள் அவரைப் பார்ப்பார்கள் என்றும், கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்வார்கள் என்றும் எழுதியிருக்கிறபடியே,– 21 நான் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின் மேலே கட்டாதபடிக்கு, கிறிஸ்துவின் நாமம் சொல்லப்பட்டிராத இடங்களிலே சுவிசேஷத்தை அறிவிக்கும்படி, அதிக கருத்துள்ளவனாய் இருக்கிறேன்.

22 அதினாலே நான் உங்களிடத்தில் வருகிறதற்கு அநேகந்தரம் தடை உண்டாயிற்று. — 23 இப்பொழுது நான் இந்தத் திசைகளிலே இருக்கிறதற்கு இடம் இல்லாதபடியினாலும், உங்களிடத்துக்கு வரும்படி அநேக வருஷங்களாய் எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிருந்தபடியினாலும், — 24 நான் இஸ்பானியா தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகும்பொழுது, உங்களிடத்தில் வந்து உங்களைக் கண்டுபேசவும், உங்களோடு இருக்கிறதினாலே முந்திச் சற்று மனச்சந்தோஷம் அடைந்தபின்பு அவ்வழியே உங்களால் அனுப்பிவிடப்படவும் நம்பியிருக்கிறேன்.– 25 இப்பொழுது மக்கேதோனியா நாட்டிலும் அகாயா நாட்டிலும் உள்ள சபையார் எருசலேமில் இருக்கிற பரிசுத்தவான்களுக்குள்ளே இருக்கிற ஏழைகளுக்காகச் சில தருமங்களைச் சேர்த்துக்கொள்ளப் பிரியமானபடியினாலே,–26 நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்கு ஊழியம் செய்யும்படி அவ்விடத்திற்குப் பிரயாணமாய்ப் போக எத்தனமாயிருக்கிறேன்.—27 அப்படிப்பட்ட பிரியமுள்ளவர்கள் ஆவதற்கு அவர்களுடைய கடனாளிகளாயும் இருக்கிறார்கள்; எப்படியென்றால், புறத்தேசத்தார் அவர்களுடைய ஞான நன்மைகளில் பங்குபெற்றிருக்க, (தங்கள்) சரீர நன்மைகளால் அவர்களுக்கு ஊழியம்செய்ய நியாயமாயிருக்கின்றதே. — 28 இந்த ஊழியத்தை நான் நிறைவேற்றி, இந்தப் பலனை அவர்கள் கையிலே பத்திரப்படுத்தினபின்பு, உங்கள் ஊர் வழியாய் இஸ்பானியா தேசத்திற்குச் செல்லுவேன்.—29 நான் உங்களிடத்தில் வரும்பொழுது, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்திலுள்ள சம்பூரணமான ஆசீர்வாதங்களோடே வருவேனென்று அறிந்திருக்கிறேன்.

30 மேலும் சகோதரரே, யூதேயாதேசத்தில் இருக்கிற அவிசுவாசிகளுக்கு நான் தப்புவிக்கப்படும்படிக்கும், பராபரனுடைய சித்தத்தினாலே நான் சந்தோஷத்துடனே உங்களிடத்திற்கு வந்து உங்களோடேகூடச் சவுக்கியப்படத்தக்கதாக, — 31 நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்குச் செய்யப்போகிற ஊழியம் அவர்களுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கும்,—32 என்னோடேகூட நீங்கள் எனக்காகப் பராபரனை நோக்கி, போராட்டமாய்ச் செபம்பண்ணவேண்டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நிமித்தமும் ஆவியானவரால் வரும் அன்பின் நிமித்தமும் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.—33 சமாதானத்தை அளிக்கிற பராபரன் உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்கடவர்.—ஆமன்.

## ௰௬. அதிகாரம்.

*பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி நீங்கள் கெங்கிரேயா ஊரின் சபைக்கு ஊழியக்காரியாகிய நம்முடைய சகோதரி வொய்பேயாளைக் கர்த்தரைப் பற்றி இருக்கிறவள் என்று உபசாரம்செய்து,—* 2 அவளுக்கு உங்கள் உதவி வேண்டியகாரியம் ஏதோ, அதிலே அவளுக்கு உதவியாய் இருக்க வேண்டுமென்று அவளை உங்களுக்கு ஒப்புவிக்கிறேன்; அவளும் அநேகருக்கும் எனக்குங்கூட ஆதரவாய் இருந்தாளே.

3 கிறிஸ்து இயேசுவினிடத்தில் என்னுடனேகூட வேலையாள்களாகிய பிரிஸ்கில்லாளையும் ஆக்கில்லாவையும் வாழ்த்துதல் செய்யுங்கள்.— 4 அவர்கள் என் பிராணனுக்காகத் தங்கள் கழுத்தையும் நீட்டினவர்கள்; அவர்களுக்கு நான்மாத்திரமல்ல, புறத்தேசத்தாரில் உண்டான சபையார் எல்லாரும் நன்றியறிதலைக் காண்பிக்கத்தக்கது. — 5 அவர்களுடைய வீட்டிலே கூடிவருகிற சபையையும் வாழ்த்துங்கள், அகாயா நாட்டிலே கிறிஸ்துவுக்கு முதற்பலனாகிய எனக்குப்

பிரியமான எப்பெனெத்து என்பவனை வாழ்த்துங்
கள். — 6 எங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட
மரியாளை வாழ்த்துங்கள். — 7 அப்போஸ்தலர்க
ளால் புகழ்ச்சி அடைந்தவர்களுமாய், எனக்கு
முந்திக் கிறிஸ்துவுக்கு உள்ளானவர்களுமாய், என்
இனத்தாருமாய், என்னுடனேகூடக் காவலில்
வைக்கப்பட்டிருக்கிறவர்களுமாய் இருக்கிற அந்
திரோனிக்கையும் யூனியாவையும் வாழ்த்துங்
கள். — 8 கர்த்தாவினாலே எனக்குப் பிரியமான
அம்பிலியாவை வாழ்த்துங்கள்.—9 கிறிஸ்துவினி
டத்திலே நம்முடனேகூட வேலையாளாகிய உரு
பானுவையும் எனக்குப் பிரியமான இஸ்தாகுவை
யும் வாழ்த்துங்கள். — 10 கிறிஸ்துவினிடத்தில்
உண்மையான அப்பெல்லேயை வாழ்த்துங்கள்;
அரிஸ்தோபுலியினுடையவர்களை வாழ்த்துங்கள்.-
11 என் இனத்தானாகிய ஏரோதியோனை வாழ்த்
துங்கள்; கர்த்தரைப்பற்றி இருக்கிறவர்களாகிய
நருக்கீசுவினுடையவர்களை வாழ்த்துங்கள். —
12 கர்த்தாவின் நிமித்தம் பிரயாசப்படுகிற திரிபே
னாளையுந் திரிபோசாளையும் வாழ்த்துங்கள்; கர்த்தா
வின் நிமித்தம் மிகவும் பிரயாசப்பட்டு, எனக்குப்
பிரியமாயிருக்கிற பெர்சிசாளை வாழ்த்துங்கள்.—
13 கர்த்தராலே தெரிந்துகொள்ளப்பட்ட உரூப்
புவையும் எனக்கும் அவனுக்கும் தாயானவளை
யும் வாழ்த்துங்கள். — 14 அசிங்கிரித்துவையும்
பிலேகோனையும் எர்மாவையும் பத்திரோபாவை
யும் எருமேயையும் அவர்களுடனே இருக்கிற
சகோதரரையும் வாழ்த்துங்கள்.—15 பிலோலோ
கையும் யூலியாளையும் நேரேயையும் அவனுடைய
சகோதரியையும் ஒலிம்பாவையும் அவர்களோடி
ருக்கிற பரிசுத்தவான்கள் எல்லாரையும் வாழ்த்
துங்கள்.—16 ஒருவரையொருவர் பரிசுத்தமாய்
முத்தம்செய்து வாழ்த்துங்கள்; கிறிஸ்துவின் சபை
யார்கள் உங்களை வாழ்த்துகிறார்கள்.
17 மேலும் சகோதரரே, நீங்கள் கற்றுக்
கொண்ட உபதேசத்திற்கு விரோதமாய்ப் பிரிவி
னைகளையும் விழுதற்கு ஏதுவானவைகளையும் உண்
டாக்குகிறவர்களை ஆராய்ந்துபார்க்கவேண்டுமெ
ன்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன். —
18 அப்படிப்பட்டவர்கள் நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவுக்கு அல்ல, தங்கள் வயிற்
றுக்கு ஊழியம்செய்து, நயவசனிப்பினாலும்
ஆசீர்வாதம் சொல்லுகிறதினாலும் பேதைமையா
னவர்களுடைய இருதயங்களை வஞ்சிக்கிறவர்க
ளானபடியினாலே, நீங்கள் அவர்களைவிட்டு வில
குவீர்களாக. — 19 நீங்கள் கீழ்ப்படிகிறவர்கள்
என்பது யாவருக்கும் தெரியவந்திருக்கின்றது;
ஆகையால் உங்களைக்குறித்துச் சந்தோஷப்படுகி
றேன்; மேலும் நீங்கள் நன்மைக்கு ஞானிகளு
மாய், தீமைக்குப் பேதைகளுமாய் இருக்கவேண்
டும் என்று விரும்புகிறேன். — 20 மேலும் சமா
தானசவுக்கியத்தை அளிக்கிற பராபரன் சீக்கிர
மாய்ச் சாத்தானை உங்கள் கால்களின்கீழே நசுக்
கிப்போடும்படி செய்வார்; நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்
களுடனேகூட இருக்கக்கடவது.—ஆமென்.
21 என் உடன்வேலையாளாகிய தீமோத்தே
யும் என் இனத்தாராகிய இலூக்கியும் இயாசோ
னும் சோசிப்பத்தரும் உங்களை வாழ்த்துகிறார்
கள்.—22 இந்த நிருபத்தை எழுதின தெர்த்தி
என்னப்பட்ட நான் கர்த்தராலே உங்களை வாழ்த்
துகிறேன்.–23 எனக்கும் சபையார் எல்லாருக்கும்
வீட்டிலே உபசாரம்செய்துவருகிற காயு என்ப
வன் உங்களை வாழ்த்துகிறான்; பட்டணத்து நிலை
மைக் கணக்கனாகிய எரஸ்தும் சகோதரனாகிய
குவர்த்தும் உங்களை வாழ்த்துகிறார்கள்.—24 நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினு
டைய கிருபை உங்கள் எல்லாரோடுங்கூட
இருக்கக்கடவது.—ஆமென்.
25 பூர்வீககாலங்களில் மறைவாயிருந்து, இப்
பொழுது தீர்க்கதரிசன ஆகமங்களினாலே அநா
தியான பராபரனுடைய கட்டளையின்படி வெளி
யரங்கமாக்கப்பட்டதுமாய் விசுவாசத்திற்குக் கீழ்
ப்படியும்படிக்கு எல்லாத் தேசத்தாருக்கும் அறி
விக்கப்பட்டதுமாய் இருக்கிற இரகசியத்தை
வெளிப்படுத்துகிறதாயும்,—26 இயேசுக்கிறிஸ்து
வினுடைய பிரசங்கமாயுமிருக்கிற என் சுவிசே
ஷத்தின்படியே உங்களை ஸ்திரப்படுத்தற்கு
வல்லவருமாய்,—27 ஒருவராய் ஞானமுள்ளவரு
மாய் இருக்கிற பராபரனுக்கு இயேசுக்கிறிஸ்து
மூலமாய் என்றென்றைக்கும் புகழ்ச்சி உண்டா
வதாக.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய பவுல்
# கொரிந்தியருக்கு எழுதின
## முதலாம் நிருபம்.

### ௧. அதிகாரம்.

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்
துவின் அப்போஸ்தலனாக அழைக்கப்பட்ட பவு
லும்,—2 சகோதரனாகிய சொஸ்தெனேயும் கொ
ரிந்துவிலே பரிசுத்தவான்களாகும்படி அழைக்
கப்பட்டவர்களாயும் கிறிஸ்து இயேசுவினால் பரி
சுத்தமாக்கப்பட்டவர்களாயும் இருக்கிற பராபரனு

டைய சபையாருக்கும் எவ்விடத்திலேயும் நமக்
குப் பொதுவாயிருக்கிற கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவின் நாமத்தைத் தொழுதுகொள்ளுகிற
அனைவருக்குங்கூட எழுதுகிறதாவது:—3 நம்மு
டைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இ
யேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும்
சமாதானமும் உண்டாகக்கடவது.

4 நீங்கள் ஒரு வரத்திலும் குறைவு இல்லாத
வர்களாயிருந்து, நம்முடைய கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்து வெளிப்படுவதற்குச் சந்தோஷமாய்க்
காத்திருக்கத்தக்கதாக,—5 கிறிஸ்துவைக்குறித்துச்
சொன்ன சாட்சி உங்களுக்குள்ளே ஸ்திரப்படுத்
தப்பட்டிருக்கையால்,—6 நீங்கள் இயேசுக்கிறி
ஸ்துவினாலே எல்லாவற்றிலும் எல்லா உபதேசத்
திலேயும் எல்லா அறிவிலேயும் சம்பூரணம் உள்
ளவர்களானபடியினாலே, — 7 அவர் மூலமாய்
உங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேவகிருபைக்
காக நான் உங்களைக்குறித்து எப்பொழுதும் என்
பராபரனைத் தோத்திரிக்கிறேன்.—8 அவரும் நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாளி
லே நீங்கள் குற்றம்சாற்றப்படாதவர்களாய் இருக்
கும்படி, முடிவுபரியந்தம் உங்களை ஸ்திரப்படுத்து
வார்.—9 தம்முடைய குமாரனுமாய் நம்முடைய
கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவுடனே ஐக்
கியமாய் இருப்பதற்கு உங்களை அழைத்த பராபரன்
உண்மையுள்ளவராய் இருக்கிறாரே.

10 ஆகிலும் என் சகோதரரே, உங்களுக்குள்
ளே வாக்குவாதங்கள் உண்டென்று குலோவே
யாளுக்கு உரித்தானவர்களாலே எனக்கு அறிவிக்
கப்பட்டது. — 11 ஆதலால் நீங்கள் எல்லாரும்
ஒரேவிதமாய்ப் பேசவும், பிரிவினைகள் இல்லா
மல் ஏக மனதினாலும் ஏக யோசனையினாலும் ஐக்
கப்பட்டிருக்கவும் வேண்டும் என்று நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே
உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.—12 உங்
களில் ஒருவன் நான் பவுலைச் சேர்ந்தவன் என்
றும், ஒருவன் அப்பொல்லோவைச் சேர்ந்தவன்
என்றும், ஒருவன் கேபாவைச் சேர்ந்தவன்
என்றும், ஒருவன் கிறிஸ்துவைச் சேர்ந்தவன்
என்றும் சொல்லுகிறபடியால், நான் இப்படிச்
சொல்லுகிறேன்.

13 கிறிஸ்து பிரிந்திருக்கிறாரா? உங்களுக்கா
கப் பவுல் சிலுவையில் அறையப்பட்டானா? அல்
லது பவுலின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்
றீர்களா? — 14 என்னுடைய நாமத்தினாலே
ஞானஸ்நானம் கொடுத்தேன் என்று ஒருவனும்
சொல்லாதபடிக்கு,—15 நான் கிறிஸ்புக்கும் கா
யுக்குமே அன்றி, உங்களில் வேறொருவருக்கும்
ஞானஸ்நானம் கொடாததினாலே, பராபரனைத்
தோத்திரம்செய்கிறேன்.—16 ஸ்தேவானுடைய
வீட்டாருக்கும் ஞானஸ்நானம் கொடுத்தேன்;
பின்னும் (உங்களில்) வேறொருவனுக்கு நான்
ஞானஸ்நானம் கொடுத்தேனோ இல்லையோ
என்று அறியேன்.

17 சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கே
அல்லாமல், ஞானஸ்நானத்தைக் கொடுக்கும்ப
டிக்குக் கிறிஸ்து என்னை அனுப்பவில்லையே; கிறி
ஸ்துவின் சிலுவை வீணாய்ப் போகாதபடிக்கு,
நான் அதை லவுகீக ஞானவசனங்களோடே
அல்ல, பிரசங்கிக்கும்படிக்கு அனுப்பினார். —
18 அந்தச் சிலுவையைக்குறித்துச் சொல்லிய
வசனம் கெட்டுப்போகிறவர்களுக்குப் பயித்திய
மாகத் தோன்றுகின்றதே அன்றி, இரட்சிக்கப்படு
கிற நமக்கு அது தேவபலனாய் இருக்கின்றது.—
19 அந்தப்படி ஞானிகளுடைய ஞானத்தை
நான் அழித்து, புத்திசாலிகளுடைய புத்தியை
மறைந்துபோகப்பண்ணுவேன் என்று எழுதியி
ருக்கின்றதே. — 20 ஞானியானவன் எங்கே?
வேதபாரகன் எங்கே? இப்பிரபஞ்ச தருக்கசாஸ்
திரி எங்கே? இந்த உலக ஞானத்தைப் பராபரன்
பயித்தியமாக்கவில்லையா?—21 எப்படியெனில்
பராபரனுடைய ஞானத்திற்கு ஏற்றதாய் உலகத்
தார் தங்கள் சொந்த ஞானத்தினாலே பராபரனை
அறியாதபடியினாலே, பயித்தியமாகத் தோன்று
கிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்க
வேண்டும் என்று பராபரன் பிரியமாயிருந்தார்.—
22 அந்தப்படி யூதர்கள் அடையாளத்தைக் கேட்
கிறார்கள்; கிரேக்கர் ஞானத்தைத் தேடுகிறார்
கள். — 23 நாங்களோ சிலுவையில் அறையப்
பட்ட கிறிஸ்துவைக் கூறுகிறோம்; அது யூதர்க
ளுக்கு இடறலாயும், கிரேக்கருக்குப் பயித்திய
மாயும் இருக்கின்றது. — 24 ஆகிலும் யூதரிலும்
கிரேக்கரிலும் எவர்கள் அழைக்கப்பட்டார்களோ,
அவர்களுக்குக் கிறிஸ்து தேவபலனுமாய்த் தேவ
ஞானமுமாய் இருக்கிறார்.—25 ஆனதால் தேவ
னைக்குறித்து அவர்கள் சொல்லுகிற பயித்தியம்
மனிதருடைய ஞானத்திலும் அதிக ஞானமாயும்,
தேவனைக்குறித்து அவர்கள் சொல்லுகிற பெல
ஈனம் மனிதருடைய பெலனிலும் அதிக பெல
னாயும் இருக்கின்றது.

26 அதற்காகச் சகோதரரே, உங்களை அழை
த்த விதத்தைப் பாருங்கள்; அநேக லவுகீக ஞா
னிகளாவது, அநேக வல்லவர்களாவது, அநேக
உயர்குலத்தாராவது இல்லையே.—27 அந்த ஞா
னிகளை வெட்கப்படுத்தும்படிக்கு, பராபரன் உல
கத்திலே பயித்தியரென்று எண்ணப்பட்டவர்க
ளைத் தெரிந்துகொண்டார்; பெலவான்களை வெ
ட்கப்படுத்தும்படிக்கு, பராபரன் உலகத்திலே
பெலஈனரானவர்களைத் தெரிந்துகொண்டார்.—
28 இருக்கிறவர்களைத் தள்ளும்படிக்கு, இல்லாத
வர்களையும் உலகத்திலே இழிந்த குலத்தாரானவர்
களையும் அற்பமாய் எண்ணப்பட்டவர்களையும்
பராபரன் தெரிந்துகொண்டார்.—29 எந்த மாம்
சதேகியும் பராபரனுக்குமுன்பாகப் பெருமைபா

ராட்டாதபடிக்கு அப்படிச் செய்தார்.—30 ஆத
லால் நீங்கள் அவராலே கிறிஸ்து இயேசுவுக்கு
உட்பட்டிருக்கிறீர்கள்; அவரே நமக்குத் தேவ
ஞானமும் நீதியும் பரிசுத்தமும் மீட்புமானார். —
31 ஆனதால் எழுதியிருக்கிறபடி மேன்மைபா
ராட்டுகிறவன் கர்த்தரைக்குறித்தே மேன்மைபா
ராட்டக்கடவன்.

## உ. அதிகாரம்.

சகோதரரே, நானும் உங்களிடத்தில் வந்து பரா
பரனுடைய சாட்சியை உயர்ந்த வசனிப்போ
டும் அல்லது ஞானத்தோடும் உங்களுக்கு அறி
விக்கவில்லை.—2 நான் தீர்மானித்தபடி சிலுவை
யில் அறையப்பட்ட இயேசுக்கிறிஸ்துவையே
அன்றி, வேறென்றையும் உங்களுக்கு அறிவிக்க
வில்லையே.—3 அல்லாமலும் நான் பெலஈனத்
தோடும் பயத்தோடும் மிகுந்த நடுக்கத்தோடும்
உங்களிடத்தில் இருந்தேன்.—4 என் பேச்சும்
என் பிரசங்கமும் மனிதஞானத்திற்கு உரிய போ
தனை வார்த்தைகளாய் இருக்கவில்லை. — 5 உங்
கள் விசுவாசம் மனிதருடைய ஞானத்தில் அல்ல
பராபரனுடைய பெலத்திலே நிற்கத்தக்கதாக அது
ஆவியையும் பெலனையும் காண்பித்தது.
6 எப்படியும் தேறினவர்களுக்குள்ளே நாங்
கள் ஞானத்தையே பேசுகிறோம்; அந்த ஞானம்
இப்பிரபஞ்சத்தின் ஞானமல்ல, அழிந்துபோ
கிறவர்களாகிய இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களு
டைய ஞானமும் அல்ல. — 7 லோகத்தோற்றத்
திற்குமுன்னே பராபரன் நம்முடைய மகிமைக்
காகக் குறித்ததுமாய் இரகசியத்திலே மறைக்கப்
பட்டதுமாயிருந்த தேவஞானத்தையே பேசுகி
றோம்.—8 அதை இப்பிரபஞ்சத்துப் பிரபுக்களில்
ஒருவனும் அறிந்துகொள்ளவில்லை; (அறிந்து
கொண்டிருந்தார்களானால்) மகிமையின் கர்த்த
ரை அவர்கள் சிலுவையில் அறையமாட்டார்க
ளே. — 9 வேதத்தில் எழுதியிருக்கிறபடி பரா
பரன் தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்கு எத்
தனம் பண்ணினவைகளை (மனிதர்) கண்காண
வும் இல்லை; காதுகேட்கவும் இல்லை; அவைகள்
மனிதருடைய இருதயத்திலே தோன்றவும்
இல்லை. — 10 நமக்கே பராபரன் அவைகளைத்
தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார்; அந்த
ஆவியானவர் எல்லாவற்றையும் பராபரனுடைய
ஆழங்களையும் ஆராய்ந்திருக்கிறாரே.—11 மனித
னிலுள்ள ஆவியே அன்றி மனிதரில் எவன் மனி
தனுக்கு உரியவைகளை அறிவான், (மாட்டானே;)
அப்படிப்போல, பராபரனுடைய ஆவியே அல்
லாமல் ஒருவனும் பராபரனுடைய ஆழங்களை
அறியமாட்டான்.—12 இப்படியிருக்க நாங்கள்
பராபரனால் நமக்கு அருளப்பட்டவைகளை அறி
யும்படிக்கு உலகத்தின் ஆவியை அல்ல, பரா
பரனிலிருந்து புறப்படுகிற ஆவியையே பெற்
றோம்.—13 அவைகளை நாங்கள் மனிதருடைய
சொந்தஞானம் போதிக்கிற வார்த்தைகளால்
அல்ல, பரிசுத்தஆவி போதிக்கிற வார்த்தைகளா
லே பிரசங்கம்பண்ணி, ஆவிக்கு உரியவைகளை
ஆவிக்கு உரியவைகளாலே ஒத்துப்பார்த்துக்
காண்பிக்கிறோம்.—14 ஆகிலும் சென்மசுபாவத்
தின்படியான மனிதன் பராபரனுடைய ஆவிக்கு
உரியவைகளை ஏற்றுக்கொள்ளமாட்டான்; அவை
கள் அவனுக்குப் பயித்தியமாகத் தோன்றுமே;
மேலும் அவைகளை ஆவிக்கேற்ற பிரகாரமாய்
ஆராய்ந்து நிதானிக்கவேண்டியபடியால், அவன்
அவைகளை அறியமாட்டான்.—15 ஆவிக்கு உரி
யவனே எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதா
னித்து, மற்றொருவனாலும் ஆராய்ந்து நிதானிக்
கப்படான். — 16 அவனுக்குப் போதிக்கத்தக்க
தாக, கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன்
யாவன்? நாங்களே கிறிஸ்துவின் சிந்தையைப்
போலச் சிந்தையுள்ளவர்களாயிருக்கிறோம்.

## ௩. அதிகாரம்.

நானும் சகோதரரே, உங்களை ஆவிக்கு உரியவர்
கள் என்று எண்ணவும் உங்களுடனே பேசவும்
கூடாமல் உங்களை மாம்சத்திற்கு உரியவர்கள்
என்றும் கிறிஸ்துவில் குழந்தைகள் என்றும்
எண்ணி உங்களுடனே பேசவேண்டியதாய்
இருந்தது.—2 உணவை நீங்கள் தாங்கத் திரா
ணியில்லாதபடியால் அதை உங்களுக்குக் கொ
டாமல், பாலைக் குடிக்கக்கொடுத்தேன்; இன்
னமும் நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்களாயிருக்
கிறபடியால் இப்பொழுதும் அதைத் தாங்கமாட்
டீர்கள். — 3 வைராக்கியமும் வாக்குவாதமும்
பேதகங்களும் உங்களுக்குள்ளே இருக்க, நீங்கள்
மாம்சத்திற்கு உரியவர்களாயும், மனிதருடைய
மார்க்கமாய் நடக்கிறவர்களாயும், இருக்கிறீர்கள்
அல்லவோ?—4 உங்களில் ஒருவன் நான் பவு
லைச் சேர்ந்தவன் என்றும் வேறொருவன் நான்
அப்பொல்லோவைச் சேர்ந்தவன் என்றும் சொல்
லுகிறதால், நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்கள்
அல்லவா?
5 பவுல் யாவன்? அப்பொல்லோ யாவன்?
அவர்கள் நீங்கள் விசுவாசிகளாகிறதற்கு ஏதுவா
யிருந்த ஊழியக்காரர்தானே; அதுவும் அவனவ
னுக்குக் கர்த்தர் அருள் அளித்தபடியே இருக்கி
றது.—6 நான் நட்டேன், அப்பொல்லோ நீர்
பாய்ச்சினான், பராபரனே வளர்த்தார்.—7 அப்
படியிருக்க நடுகிறவனாலும் ஒன்றுமில்லை, நீர்
பாய்ச்சுகிறவனாலும் ஒன்றுமில்லை; வளர்க்கிற
பராபரனாலே எல்லாம் ஆகும்.—8 ஆகையால்
நடுகிறவனும் நீர்பாய்ச்சுகிறவனும் ஒன்றாயிருக்கி
றார்கள்; ஆகிலும் நாங்கள் பராபரனோடே கூடிய
வேலையாள்களானபடியால் அவனவன் தன் தன்
னுடைய வேலைக்குத்தக்கதாய்ப் பலனைப் பெறு

வான்.—9 நீங்கள் பராபரனுடைய பண்ணையும்
பராபரனுடைய மாளிகையுமாய் இருக்கிறீர்கள்.
10 எனக்கு அளிக்கப்பட்ட தேவகிருபை
யின்படியே, விவேகமுள்ள சிற்பாசாரியைப்
போல அஸ்திபாரத்தைப் போட்டேன்; வேறொ
ருவன் அதின்மேலே கட்டுகிறான்; எவனானாலும்
தான் அதின்மேலே கட்டுகிறது இன்னதென்று
பார்க்கக்கடவன். — 11 என்னத்தினாலெனில்,
இயேசுக்கிறிஸ்துவே அஸ்திபாரமாகப் போடப்
பட்டிருக்கிறாரே; போடப்பட்ட அந்த அஸ்தி
பாரத்தைத்தவிர வேறே அஸ்திபாரத்தை ஒருவ
னும் போடக்கூடாது.—12 ஒருவன் அந்த அஸ்
திபாரத்தின்மேல் பொன், வெள்ளி, இரத்தினக்
கற்கள், மரங்கள், புல், தாளடி, இப்படிப்பட்ட
வைகளைச் சேர்த்துக் கட்டினால் அவனவனு
டைய கிரியை வெளிப்படும்.—13 அக்கினியி
னாலே வெளியாக்கப்படுவதால், அது தோன்றும்
நாளே அதை வெளிப்படுத்தும்; அவனுடைய
கிரியை இப்படிப்பட்டதென்று அக்கினியே
சோதிக்கும்.—14 அஸ்திபாரத்தின்மேலே கட்
டின ஒருவனுடைய கிரியை நின்றால், அவன்
பலனைப் பெறுவான்.—15 ஒருவனுடைய கிரி
யை வெந்துபோனால், அவனுக்கு நஷ்டம்வரும்;
ஆகிலும் அவனே இரட்சிக்கப்படுவான்; அது
வும் அக்கினியில் அகப்பட்டுத் தப்பினாற்போல
வே இருக்கும்.
16 நீங்கள் பராபரனுடைய ஆலயமாய் இருக்
கிறீர்கள் என்றும், பராபரனுடைய ஆவியானவர்
உங்களிடத்தில் வாசமாயிருக்கிறார் என்றும் அறி
யாமல் இருக்கிறீர்களா? பராபரனுடைய ஆலயம்
பரிசுத்தமாயிருக்கின்றது.—17 ஆதலால் அவரு
டைய ஆலயத்தை ஒருவன் கெடுத்தால் அவ
னைப் பராபரன் கெடுப்பார்.—18 நீங்களே அந்த
ஆலயம்; ஒருவனும் தன்னைத்தானே வஞ்சனை
செய்யாதிருப்பானாக; ஞானிகளை அவர்களுடைய
தந்திரத்திலே பிடிக்கிறாரென்றும்,—19 ஞானிக
ளுடைய சிந்தனைகள் வீணாயிருக்கின்றன என்று
கர்த்தர் அறிந்திருக்கிறார் என்றும் எழுதியிருக்கிற
படி, இவ்வுலகத்தின் ஞானம் பராபரனுக்குமுன்
பாகப் பயித்தியமாய் இருக்கின்றதே.—20 ஆன
தால் உங்களில் ஒருவன் இவ்வுலகத்திலே தன்
னை ஞானியென்று எண்ணினால், அவன் மெய்
ஞ்ஞானியாகும்படிக்குப் பயித்தியக்காரனாகக்கட
வன்.
21 இப்படியிருக்க ஒருவனும் மனிதனைக்கு
றித்துப் பெருமைபாராட்டக்கூடாது; எல்லாம்
உங்களுடையதே.-22 பவுலாகிலும், அப்பொல்
லோவாகிலும், கேபாவாகிலும், லோகமாகிலும்,
ஜீவனாகிலும், மரணமாகிலும், நிகழ்காரியங்களாகி
லும், வருங்காரியங்களாகிலும், எல்லாம் உங்களு
டையது. — 23 நீங்கள் கிறிஸ்துவினுடையவர்
கள், கிறிஸ்து பராபரனுடையவர்.

## ச. அதிகாரம்.

இப்படி இருக்கிறபடியால், யாவரும் எங்களைக்
கிறிஸ்துவின் ஊழியக்காரர் என்றும், பராபரனு
டைய இரகசியங்களின் உக்கிராணக்காரர் என்
றும், எண்ணிக்கொள்ளக்கடவர்கள். — 2 உக்கி
ராணக்காரரிடத்திலே உண்மையையே காணத்
தேடுவார்கள்.—3 (அதைக்குறித்து) நான் உங்
களாலே அல்லது மற்றொரு மனித அதிகாரத்தி
னாலே நியாயத்தீர்ப்பைப் பெறுவது எனக்கு மிக
வும் சிறிதான காரியமாயிருக்கின்றது; என்னைக்கு
றித்து நானும் நியாயத்தீர்ப்புச் சொல்லுகிற
தில்லை. — 4 குற்றத்தை நான் என்னிடத்தில்
அறியேன்; ஆகிலும் அதினாலே நான் நீதிமானா
கிறதில்லை; கர்த்தரே என்னைக்குறித்துத் தீர்ப்புச்
சொல்லுகிறவர். — 5 ஆனபடியினாலே கர்த்தர்
வருமளவும் நீங்கள் காலத்திற்குமுன்னே ஒன்றை
யுங்குறித்துத் தீர்ப்புச்சொல்லாதிருப்பீர்களாக;
அவரே இருளின் அந்தரங்கங்களை வெளியரங்க
மாக்கி, இருதயங்களின் யோசனைகளையும் வெ
ளிப்படுத்துவார்; அப்பொழுது அவனவனுக்குப்
பராபரனாலே புகழ்ச்சி உண்டாகும்.
6 சகோதரரே, எழுதப்பட்டதற்கு மேலாகப்
(போதகரை) எண்ணிக்கொள்ளாதபடிக்கு, நீங்
கள் எங்களாலே கற்கும்பொருட்டாகவும், ஒரு
வன் நிமித்தம் மற்றொருவனுக்கு விரோதமாய்
இறுமாப்பை அடையாதிருக்கும்பொருட்டாக
வும், நான் உங்கள் நிமித்தம் என்னையும் அப்
பொல்லோவையும் திருட்டாந்தங்களாகவைத்து,
இவைகளை எழுதினேன்.—7 அன்றியும், உன்னை
விசேஷித்துக்கொள்ளுகிறவன் யாவன்? நீ பெற்
றுக்கொள்ளாமல், உனக்கு உண்டாயிருக்கிறது
யாது? நீயும் பெற்றிருக்கப் பெற்றுக்கொள்ளாத
வன்போல ஏன் பெருமைபாராட்டுகிறாய்?
8 இப்பொழுதே திருத்தி அடைந்திருக்கி
றீர்கள்; இப்பொழுது ஐசுவரியமுள்ளவர்களாய்
இருக்கிறீர்கள்; எங்களைத்தவிர ஆண்டீர்கள்; நீங்
கள் ஆண்டீர்களானால் நன்மையாயிருக்கும்; அப்
பொழுது உங்களுடனேகூட நாங்களும் ஆளு
வோமே.—9 அப்படியன்றி எனக்குத் தோன்று
கிறபடி பராபரன் அப்போஸ்தலராகிய எங்களைக்
கடைசியிலே மரணத்திற்குக் குறிக்கப்பட்டவர்
களைப்போலக் காணப்படப்பண்ணினார்; உலகத்
திற்கும் தூதருக்கும் மனிதருக்கும் வேடிக்கையா
னோமே, நாங்கள் கிறிஸ்துவின்நிமித்தம் பயித்தி
யக்காரர். — 10 நீங்கள் கிறிஸ்துவில் புத்திசாலி
கள்; நாங்கள் பலஈனர்; நீங்கள் பலவான்கள்;
நீங்கள் கனம்பொருந்தியவர்கள்; நாங்கள் கனமற்
றவர்கள். — 11 இந்நேரம்வரைக்கும் பசியும் தா
கமும் நிருவாணமும் உள்ளவர்களாய் இருக்கி
றோம்; குட்டுண்டும் நிலையற்றும் இருக்கிறோம்.—
12 எங்கள் கைகளினாலே வேலைசெய்து பிரயா

சப்படுகிறோம்; வையப்படுகிறபொழுது ஆசீர்
வதிக்கிறோம்; துன்பப்படுகிறபொழுது சகிக்கி
றோம்.–13 தூஷணிக்கப்படுகிறபொழுது வேண்
டிக்கொள்ளுகிறோம்; இன்றையவரைக்கும் நாங்
கள் உலகத்தின் குப்பைகளைப்போலவும், எல்லா
ரும் துடைக்கிற அழுக்கைப்போலவும் ஆனோம்.
14 உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு நான்
இவைகளை எழுதவில்லை; நீங்கள் எனக்குப் பிரி
யமான பிள்ளைகள் என்று உங்களுக்குப் புத்தி
சொல்லுகிறேன். — 15 கிறிஸ்துவில் உங்களுக்
குப் பதினாயிரம் உபாத்திகள் இருந்தாலும், அ
நேகம் தகப்பன்மார் உங்களுக்கு இல்லையே,
கிறிஸ்து இயேசுவில் சுவிசேஷத்தினாலே நானே
உங்களைப் பெற்றேன்.–16 ஆகையால் என்னைப்
பின்பற்றுகிறவர்கள் ஆகுங்கள் என்று உங்களுக்
குப் புத்திசொல்லுகிறேன்.
17 இதுநிமித்தமாக நான் எனக்குப் பிரிய
மும் கர்த்தருக்குள் உண்மையுமான என்னுடைய
குமாரனாகிய தீமோத்தேயுவை உங்களிடத்தில்
அனுப்பினேன்; அவன் எங்கும் எந்தச் சபையி
லும் நான் போதிக்கிற வகை இன்னதென்று
கிறிஸ்துவுக்குள்ளான என் வழிகளை உங்களுக்கு
நினைவு உண்டாக்குவான்.–18 நான்தானே உங்
களிடத்திற்கு வருகிறதில்லை என்கிறதாகச் சிலர்
இறுமாப்படைந்தார்கள்.—19 ஆகிலும் கர்த்தருக்
குச் சித்தமானால் நான் சீக்கிரமாய் உங்களிடத்
திற்கு வந்து, பராபரனுடைய இராச்சியம் வச
னிப்பினாலே அல்ல பலத்தினாலே உண்டாயி
ருக்கிறபடியால்,—20 இறுமாப்படைந்தவர்களு
டைய வசனிப்பை அல்ல, பலத்தை அறிந்து
கொள்வேன். — 21 உங்களுக்கு என்னவேண்
டும்? நான் பிரம்புடனே உங்களிடத்தில் வர
வேண்டுமோ? அல்லது அன்போடும் சாந்தமு
ள்ள ஆவியோடும் வரவேண்டுமோ?

## ௫. அதிகாரம்.

அஞ்ஞானிகளுக்குள்ளும் சொல்லப்படாத வே
சித்தனம் உங்களுக்குள்ளே உண்டென்று பொ
துவாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்; என்ன
வெனில், ஒருவன் தன் தகப்பனுடைய மனைவி
யை வைத்துக்கொள்ளுகிறதே.—2 மேலும் இப்
படிப்பட்ட கிரியையைச் செய்தவனை உங்களி
லிருந்து நீக்கத்தக்கதாகத் துயரப்படவேண்டிய
நீங்களும் இறுமாப்புள்ளவர்களாய் இருக்கிறீர்
கள். — 3 ஆதலால் நான் சரீரத்தினாலே உங்க
ளுக்குத் தூரமாயிருந்தும், ஆவியால் உங்களோ
டேகூட இருக்கிறவனாய் அப்படிச் செய்தவ
னைக்குறித்து இப்பொழுதே கூட இருக்கிறது
போலத் தீர்ப்புப்பண்ணினேன். — 4 (என்ன
வென்றால்,) நம்முடைய கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவின் நாமத்தினாலே நீங்களும் என்னு
டைய ஆவியுங்கூட இருக்கையில், —5 அப்ப
டிப்பட்டவனுடைய ஆவி கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவின் நாளிலே இரட்சிக்கப்படும்படிக்கு,
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
வல்லமையோடே அவனுடைய சரீரத்தில் அழி
வுண்டாக, அவனைச் சாத்தானுக்கு ஒப்புக்கொ
டுக்கவேண்டும்.
6 நீங்கள் மேன்மைபாராட்டல் நல்லதல்ல;
கொஞ்சமான புளிப்புமா பிசைந்தமா அனைத்தை
யும் உப்பப்பண்ணுகிறதென்று அறியாமலிருக்கி
றீர்களா?—7 ஆனபடியினாலே கிறிஸ்து என்னும்
நம்முடைய பஸ்காவும் நமக்காக அடிக்கப்பட்டி
ருக்கிறதால், நீங்கள் புளிப்பில்லாதவர்களாயிருக்
கிறபடியே புதிதாய்ப் பிசைந்தமாவாகும்படிக்கு,
பழைய புளிப்புமாவைப் புறம்பே கழித்துப்போ
டுங்கள். — 8 அப்படிக்குப் பழைய புளிப்புமா
வோடே அல்ல, துர்க்குணம் பொல்லாப்பு என்
னும் புளிப்புமாவோடும் அல்ல, துப்புரவு உண்
மை என்னும் புளிப்பில்லாமையோடே பண்டி
கையை ஆசரிக்கக்கடவோம்..
9 வேசிக்கள்ளருடனே கலந்திருக்கக்கூடா
தென்று நிருபத்திலே உங்களுக்கு எழுதினேன்.–
10 அப்படி நான் இவ்வுலகத்தாராகிய வேசிக்
கள்ளர் அல்லது பொருளாசைக்காரர் அல்லது
கொள்ளைக்காரர் அல்லது விக்கிரக ஆராதனைக்கா
ரர் இவர்களைக்குறித்துப் பொதுவாய் எழுதவில்
லை; அப்படியிருந்தால், நீங்கள் உலகத்தை விட்
டுப் புறப்பட்டுப் போகவேண்டியதாயிருக்கு
மே.—11 இப்பொழுதும் நான் உங்களுக்கு எழு
துகிறதென்னவென்றால், சகோதரன் என்னப்
பட்ட ஒருவன் வேசிக்கள்ளன், அல்லது பொ
ருளாசைக்காரன், அல்லது விக்கிரக ஆராதனைக்
காரன், அல்லது உதாசினன், அல்லது வெறி
யன், அல்லது கொள்ளைக்காரனானால் அவனோ
டே கலந்திருக்கக்கூடாது; அப்படிப்பட்டவனு
டனேகூடப் புசிக்கவும் கூடாது.—12 புறத்தில்
இருக்கிறவர்களுக்கும் நியாயத்தீர்ப்புச் சொல்லு
கிறது என்னுடைய காரியமா? உள்ளே இருக்கி
றவர்களுக்கு நீங்களும் நியாயத்தீர்ப்புச் சொல்லு
கிறீர்கள் அல்லவோ?—13 புறத்தில் இருக்கிற
வர்களுக்குப் பராபரனே நியாயத்தீர்ப்புக் கொடுப்
பார்; ஆகையால் அந்தப் பொல்லாதவனை உங்க
ளிடத்திலிருந்து எடுத்துப்போடுங்கள்.

## ௬. அதிகாரம்.

உங்களில் ஒருவன் மற்றொருவனுக்கு விரோத
மான காரியமுடையவனாய் இருக்கிறபொழுது
அவன் நியாயம் பெற்றுக்கொள்ளுதற்குப் பரிசுத்
தவான்களிடத்தில் போகாமல், அநீதிக்காரரிடத்
திலே போகத் துணிகிறதென்ன?—2 பரிசுத்த
வான்கள் உலகத்திற்கு நியாயத்தீர்ப்புச் சொல்
லுவார்கள் என்று அறியாமல் இருக்கிறீர்களா?
உலகமும் உங்களால் நியாயந்தீர்க்கப்படுவதால்,

அற்ப வழக்குகளைத் தீர்க்க அபாத்திரராயிருக்கி
றீர்களா? — 3 தூதர்கள் நம்மால் நியாயத்தீர்ப்
பைப் பெறுவார்கள் என்று அறியீர்களா? இச்சீ
வனுக்கு ஏற்றவைகளை நீங்கள் தீர்த்துக்கொள்ளக்
கூடாதிருக்கிறது எப்படி? — 4 இச்சீவனுக்கு
ஏற்ற வழக்குகள் உங்களுக்கு இருக்கும்பொழுது,
நீங்கள் சபையிலே அற்பமாய் எண்ணப்பட்
டவர்களை வைக்கிறீர்கள்.—5 உங்களுக்கு வெட்
கம் உண்டாகும்படி இதைச் சொல்லுகிறேன்;
இப்படிச் சகோதரனுக்கும் சகோதரனுக்கும்
உண்டான வழக்கைத் தீர்க்கத்தக்க விவேகி ஒரு
வனாகிலும் உங்களுக்குள்ளே இல்லையோ? —
6 சகோதரனோடே சகோதரன் வழக்காடுகி
றான்; அப்படி அவிசுவாசிகளுக்கு முன்பாகவே
செய்கிறான். — 7 நீங்கள் ஒருவரோடொருவர்
வழக்காடுகிறதே எவ்விதத்திலும் தப்பிதமாயிருக்
கின்றது; அப்படியன்றி நீங்கள் அநியாயத்தையும்
சேதத்தையும் அநுபவியாதிருக்கிறது என்ன?—
8 அப்படிச் செய்யாமல் நீங்களே சகோதரருக்
கே அநியாயம் செய்து, சேதம் உண்டாக்குகி
றீர்கள்.

9 அநியாயக்காரர் பராபரனுடைய இராச்சியத்
தைச் சுதந்தரிப்பதில்லை என்று அறியாமல் இருக்
கிறீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்கள்; வேசிக்கள்
ளரும் விக்கிரக ஆராதனைக்காரரும் விபசாரக்கார
ரும் சுயபுணர்ச்சிக்காரரும் ஆண்புணர்ச்சிக்கார
ரும்,—10 திருடரும் பொருளாசைக்காரரும் வெ
றியரும் உதாசினரும் கொள்ளைக்காரரும் பராபர
னுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை.—
11 (முன்னே) நீங்களும் சிலர் இப்படிப்பட்
டவர்களாய் நடந்தீர்கள்; இப்பொழுது கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலும் நம்மு
டைய பராபரனுடைய ஆவியினாலும் கழுவப்பட்
டும், பரிசுத்தமாக்கப்பட்டும், நீதிமான்களாக்கப்
பட்டும் இருக்கிறீர்கள்.

12 நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆ
கிலும் எல்லாம் தகுதியாய் இருக்கமாட்டாது;
நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆகிலும்
நான் ஒன்றினாலும் ஆளப்படமாட்டேன்.—
13 போசனபதார்த்தங்கள் வயிற்றுக்கும் வயிறு
போசனபதார்த்தங்களுக்கும் ஏற்கும்; பராபரன்
இதையும் அவைகளையும் அழியப்பண்ணுவார்;
சரீரம் வேசித்தனத்திற்கு அல்ல, கர்த்தருக்கே
ஏற்றது; கர்த்தரும் சரீரத்திற்கு ஏற்றவர். —
14 ஆதலால் கர்த்தரைப் பராபரன் எழுப்பினது
போல, தம்முடைய வல்லமையினாலே நம்மை
யும் எழுப்புவார்.—15 உங்கள் சரீரங்கள் கிறிஸ்
துவின் அவயவங்களாயிருக்கின்றன என்று அறி
யாமலிருக்கிறீர்களா? அப்படியிருக்க, கிறிஸ்து
வினுடைய அவயவங்களை நான் எடுத்துக்கொண்
டு வேசியின் அவயவங்கள் ஆக்கலாமா? அப்
படி வராதிருப்பதாக.—16 அல்லது இருவரும்
ஒரே சரீரமாயிருப்பார்கள் என்று சொல்லியிருக்
கிறபடி, வேசியோடு ஒட்டிக்கொள்ளுகிறவன்
அவளுடனே ஒரே சரீரமாயிருக்கிறான் என்றும்,—
17 கர்த்தரோடு ஒட்டிக்கொள்ளுகிறவன் (அவ
ருடனே) ஒரே ஆவியாயிருக்கிறான் என்றும்
அறியாமலிருக்கிறீர்களா? — 18 வேசித்தனத்
திற்கு விலகி ஓடுங்கள்; மனிதன் செய்யும் எந்
தப் பாவமும் சரீரத்திற்குப் புறம்பே இருக்கின்
றன; வேசித்தனம் செய்கிறவன் தன் சுய சரீ
ரத்திற்கு விரோதமாகப் பாவஞ்செய்கிறான். —
19 அல்லது உங்கள் சரீரமானது பராபரனாலே
நீங்கள் பெற்றும், உங்களில் தங்கியும் இருக்கிற
பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கின்றது
என்று அறியாமலிருக்கிறீர்களா?—20 அல்லாம
லும் மிகுந்த கிரயத்தினாலே நீங்கள் கொள்ளப்ப
ட்டபடியினாலே, நீங்கள் உங்களுடையவர்கள்
அல்லவே, ஆகையால் பராபரனுக்கு உடையவர்
களாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினா
லும் பராபரனுடைய மகிமையைப் பிரசித்தம்ப
ண்ணுவீர்களாக.

## எ. அதிகாரம்.

நீங்கள் எனக்கு எழுதின காரியங்களைக்குறித்து
நான் எழுதுகிறது என்னவென்றால், மனிதன்
ஸ்திரியைத் தொடாமலிருந்தால் நலமாயிருக்
கும்.—2 ஆகிலும் வேசித்தனங்கள் இராதபடிக்கு,
அவனவன் தன் மனைவியையும் அவளவள் தன்
புருஷனையும் கொள்வார்களாக. — 3 புருஷனும்
தன் மனைவிக்குச் செய்யவேண்டிய கடமையைச்
செய்யக்கடவன்; மனைவியும் தன் புருஷனுக்கு
அப்படியே செய்யக்கடவள். — 4 மனைவியான
வள் தன் சுய சரீரத்துக்கு அதிகாரியாயிராமல்,
புருஷனே அதற்கு அதிகாரியாயிருக்கிறான்; அப்
படியே புருஷனும் தன் சுயசரீரத்திற்கு அதிகாரி
யாயிராமல், மனைவியே அதிகாரியாயிருக்கிறாள்.—
5 ஒருவருக்கொருவர் விலகாதிருங்கள்; உபவா
சத்திற்கும் செபம்பண்ணுதற்கும் சாவகாசம்
உண்டாயிருக்கும்படிக்கு, இருவரும் சிலகாலத்
திற்காக விலகவேண்டும் என்று சம்மதித்தால்
அப்படிச் செய்யலாம்; பின்பு உங்களுக்கு விர
தத்துவம் இல்லாமையால் சாத்தான் உங்களை
எழுப்பாதபடிக்கு, மறுபடியும் கூடியிருங்கள்.—
6 இதை நான் கட்டளையாக அல்ல, உத்தாரமா
கச் சொல்லுகிறேன்.—7 எல்லா மனிதரும் என்
னைப்போல இருக்க விரும்புகிறேன்; ஆகிலும்
பராபரனாலே அவனவனுக்குச் சொந்தமான வரம்
உண்டு; ஒருவனுக்கு ஒருவிதமாயும் மற்றொரு
வனுக்கு ஒருவிதமாயும் இருக்கிறது —8 எப்ப
டியும் விவாகம் இல்லாதவர்களையும் கைம்பெண்
களையுங்குறித்து நான் சொல்லுகிறது என்ன
வென்றால், அவர்கள் என்னைப்போல இருந்து
விட்டால் நலமாயிருக்கும். — 9 ஆகிலும் அவர்

கள் விரத்தராய் இருக்கக்கூடாதிருந்தால், விவாகம்பண்ணக்கடவர்கள்; வேகிறதைவிட விவாகம்பண்ணுகிறது தகுதியாயிருக்குமே.—10 விவாகம் பண்ணினவர்களுக்கு நானல்ல, கர்த்தர் கட்டளையிடுகிறது என்னவெனில், மனைவியானவள் தன் புருஷனை விட்டுப் பிரியாதிருப்பாளாக.—11 பிரிந்துபோனால் அவள் விவாகம் இல்லாதிருக்கக்கடவள்; அல்லது புருஷனுடனே ஒப்புரவாகக்கடவள்; புருஷனும் தன் மனைவியைவிட்டுப் போகாதிருப்பானாக.

12 மற்றவர்களுக்குக் கர்த்தர் அல்ல நான் சொல்லுகிறதாவது: சகோதரன் ஒருவன் அவிசுவாசியான மனைவியை உடையவனாயிருந்து தன்னுடனே அவள் வாசமாயிருக்கச் சம்மதித்தால், அவளை விட்டுவிடாதிருக்கக்கடவன்.—13 மனைவி ஒருத்தியும் அவிசுவாசியான புருஷனை உடையவளாயிருந்து தன்னுடனே அவன் வாசமாயிருக்கச் சம்மதித்தால், அவனை விட்டுவிடாதிருக்கக்கடவள்.—14 என்னத்தினாலெனில் அவிசுவாசியான புருஷன் தன் மனைவியால் பரிசுத்தமாக்கப்பட்டான்; அவிசுவாசியான மனைவியும் புருஷனால் பரிசுத்தமாக்கப்பட்டாள்; இல்லாவிட்டால் உங்கள் பிள்ளைகள் அசுத்தமாயிருக்குமே; இப்பொழுது அவைகள் பரிசுத்தமாயிருக்கின்றனவே. — 15 ஆகிலும் அவிசுவாசிகளானவர்கள் பிரிந்துபோனால் பிரிந்துபோகட்டும்; சகோதரனாவது சகோதரியாவது அப்படிப்பட்டவர்களால் அடிமையாக்கப்பட்டவர்கள் அல்ல, சமாதானமாய் இருக்கும்படிக்கே பராபரன் நம்மை அழைத்தார்.—16 மனைவியே, நீ உன் புருஷனைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி அறிந்திருக்கிறாய்? அல்லது புருஷனே, நீ உன் மனைவியைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி அறிந்திருக்கிறாய்? — 17 பராபரன் அவனவனுக்குப் பகிர்ந்து கொடுத்தது எப்படியோ, கர்த்தர் அவனவனை அழைத்தது எப்படியோ, அப்படியே அவனவனும் நடக்கக்கடவன்; எல்லாச் சபைகளிலேயும் இப்படியே திட்டம்பண்ணுகிறேன்.

18 ஒருவன் விருத்தசேதனத்தைப் பெற்றவனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனம் இல்லாமையைத் தேடாமலிருப்பானாக; ஒருவன் விருத்தசேதனம் இல்லாதவனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனத்தைப் பெறாமலிருப்பானாக.—19 விருத்தசேதனத்தினால் ஒன்றுமில்லை; விருத்தசேதனம் இல்லாமையாலும் ஒன்றுமில்லை; பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே பிரயோசனமாயிருக்கும்.—20 அவனவனும் தான் அழைக்கப்பட்டபொழுது இருந்த நிலைமையிலே நிலைநிற்கக்கடவன்.—21 அடிமையாகிய நிலைமையிலே அழைக்கப்பட்டாயானால், சுயாதீனமாயிருக்கும்படி கவலைப்படாதிருப்பாயாக; சுயாதீனமாக்கப்படக்கூடுமேயானால், அப்படி அநுசரிக்கலாம். — 22 கர்த்தரால் அழைக்கப்பட்ட அடிமையானவன் கர்த்தருக்குச் சுயாதீனனாய் இருக்கிறான்; அதுபோல அழைக்கப்பட்ட சுயாதீனன் கிறிஸ்துவுக்கு அடிமையாயிருக்கிறான். — 23 மிகுந்த கிரயத்தினாலே கொள்ளப்பட்டீர்கள்; மனிதருக்கு அடிமைகளாகாமல் இருப்பீர்களாக. — 24 சகோதரரே, அவனவன் அழைக்கப்பட்டபொழுது இருந்த நிலைமையிலே தானே பராபரனுக்கு முன்பாக நிலைநிற்கக்கடவன்.

25 அன்றியும் விவாகம் இல்லாதவர்களுக்காகக் கர்த்தருடைய கட்டளை எனக்கு இல்லை; அப்படியிருந்தும் நான் உண்மையாயிருக்கிறதற்குக் கர்த்தரால் இரக்கம்பெற்று யோசனைசொல்லுகிறேன்.—26 ஆகையால் நான் பிரமாணிக்கிறது என்னவெனில், இப்பொழுது உண்டாயிருக்கிற இடுக்கணின்நிமித்தம் மனிதர் அப்படியே (விவாகமில்லாமல்) இருந்தால், அவர்களுக்கு நலமாயிருக்கும். — 27 நீ ஒரு மனைவியோடே கட்டப்பட்டிருந்தால், அவிழ்க்கப்படும்படி தேடாதிருப்பாயாக; நீ ஒரு பெண்ணில்லாதவனாயிருந்தால், ஒரு பெண்ணைத் தேடாதிருப்பாயாக.—28 நீ விவாகம்பண்ணினாலும் பாவமில்லை; ஒரு கன்னிகாஸ்திரி விவாகம்பண்ணினாலும் பாவமில்லை; ஆகிலும் அப்படிப்பட்டவர்கள் (சரீரத்திலே) உபத்திரவப்படுவார்கள்; அதற்கு நீங்கள் தப்பவேண்டும் என்கிறேன்.

29 சகோதரரே, பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், இனிவரும் காலம் சுருக்கமானபடியினாலே, மனைவிகளை உடையவர்கள் மனைவிகள் இல்லாதார்போலவும், அழுகிறவர்கள் அழாதார்போலவும்,—30 சந்தோஷப்படுகிறவர்கள் சந்தோஷப்படாதார்போலவும், பொருளைக் கொள்ளுகிறவர்கள் பொருளைக் கொள்ளாதார்போலவும், — 31 இவ்வுலகத்தை அநுபவிக்கிறவர்கள் அதை அநுபவியாதார்போலவும் இருக்கவேண்டும்; இவ்வுலகத்தின் வேஷம் கடந்துபோகின்றதே.—32 நீங்கள் கவலையற்றவர்களாய் இருக்க விரும்புகிறேன்; விவாகமில்லாதவன் கர்த்தருக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று கர்த்தருக்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்.—33 விவாகம்பண்ணினவன் தன் மனைவிக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான். — 34 அதுபோல விவாகஸ்திரிக்கும் கன்னிகாஸ்திரிக்கும் வித்தியாசம் உண்டு; விவாகம் இல்லாதவள் சரீரத்திலும் ஆத்துமாவிலும் பரிசுத்தமாயிருக்கும்படிக்கு, கர்த்தருக்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள்; விவாகம்பண்ணினவள் புருஷனுக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள். — 35 இதை நான் உங்கள்மேல் வலையைப்போடு

றைதற்காகச் சொல்லாமல், கனம்பொருந்தியதா யிருக்கும் என்றும், தடையில்லாமல் கர்த்தரைப் பற்றிக்கொள்ளலாம் என்றும் உங்கள் சுயபிரயோசனத்திற்காகவே சொல்லுகிறேன்.

36 ஆகிலும் ஒருவன் தன் கன்னிகை, பருவ வயது சென்றுபோனவளாகக் கலியாணம் இல்லாமலிருந்தால் யோக்கியம் அல்ல என்றும், விவாகம்பண்ணுவிக்கவேண்டும் என்றும் நினைத்தால், தன் மனதின்படி செய்யக்கடவன்; அது பாவமல்ல, விவாகம்பண்ணட்டும். — 37 ஆகிலும் தன் கன்னிகையைக் கொடுக்க அவசியத்தைக் காணாமல், தன் இருதயத்திலே உறுதி உள்ளவனும் தன் சுய சித்தத்தின்படி செய்ய அதிகாரம் உள்ளவனும் இருந்து, அவளை அப்படியே காக்கவேண்டும் என்று தன் இருதயத்திலே தீர்மானிக்கிறவனே நன்மைசெய்கிறவன்.—38 ஆதலால் விவாகம்பண்ணிக்கொடுக்கிறவனும் நன்மை செய்கிறான்; கொடாமலிருக்கிறவனும் அதிக நன்மை செய்கிறான்.

39 மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்கும் காலமளவும் கட்டப்பட்டிருக்கிறாள்; அவளுடைய புருஷன் மரித்தபின்பு, அவள் எவனையாகிலும் தன் இஷ்டப்படி விவாகம்பண்ண விடுதலையாயிருக்கிறாள்; கர்த்தருக்கு உட்பட்டவளாகமாத்திரம் அப்படிச் செய்யவேண்டும். — 40 அவள் விடுதலையாகவே இருந்துவிட்டால், என்னுடைய யோசனையின்படி அதிக பாக்கியவதியாய் இருப்பாள்; என்னிடத்திலும் பராபரனுடைய ஆவி உண்டென்று எண்ணுகிறேன்.

## அ. அதிகாரம்.

விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைக் குறித்து நாம் எல்லாரும் அறிவுள்ளவர்கள் என்று அறிந்திருக்கிறோம்; அறிவுமாத்திரம் இறுமாப்பாயிருக்கச் செய்கின்றது; அன்பே எழுப்புதற்கு ஏதுவாயிருக்கிறது.—2 ஆகையால் தன்னை அறிவுள்ளவன் என்று (இறுமாப்பாய்) எண்ணுகிற ஒருவன் தான் அறியவேண்டிய பிரகாரமாக ஒன்றும் அறிந்தவன் அல்ல. — 3 பராபரனிடத்தில் அன்பாயிருக்கிறவனே அவரால் அறிந்துகொள்ளப்படுகிறான். — 4 ஆனதால் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் புசிக்கிறதைக் குறித்து நாம் அறிந்திருக்கிறது என்னவெனில், உலகத்திலே விக்கிரகமானது ஒன்றுமில்லை; அல்லாமலும் ஒருவரே அன்றி வேறொரு தேவனும் இல்லை. — 5 வானத்திலேயும் பூமியிலேயும் தேவர்கள் என்னப்பட்டவர்கள் உண்டு; இப்படி அநேக தேவர்களும் அநேக கர்த்தர்களும் உண்டாயிருந்தாலும்,—6 நமக்குப் பிதாவாகிய ஒரே தேவன் உண்டு; அவரிலிருந்து சகலமும் உண்டாயிருக்கின்றன; அவரிடத்தில் நாமும் இருக்கிறோம்; இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே கர்த்தாவும் நமக்குண்டு; அவராலே சகலமும் உண்டாயிருக்கின்றன; அவராலே நாமும் இருக்கிறோம்.—7 அப்படியிருந்தும் இந்த அறிவு எல்லாரிடத்திலும் இல்லை; ஆனதால் சிலர் இன்றைவரைக்கும் விக்கிரகத்தையும் (ஒரு தேவனென்று) நினைத்து, விக்கிரகத்துக்குப் படைக்கப்பட்டதைப் புசிக்கிறார்கள்; அதினாலே பெலஈனமாயிருக்கிற அவர்களுடைய மனது அசுசிப்படுகின்றது.

8 போசனமானது நம்மைப் பராபரனுக்கு உகந்தவர்கள் ஆக்கமாட்டாது; என்னத்தினாலெனில் புசித்தால் நாம் பெருகுவதும் இல்லை; புசியாதிருந்தால் நாம் குறைவதும் இல்லையே.— 9 ஆகிலும் இதைக்குறித்து உங்களுக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்தினாலே பெலஈனருக்குத் தவறுதல் வராதபடிக்குப் பார்ப்பீர்களாக.—10 எப்படியென்றால் அறிவுள்ள உன்னை ஒருவன் விக்கிரகக் கோவிலிலே போசனபந்தி இருக்கக்கண்டால் பெலஈனனாயிருக்கிற அவனுடைய மனது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் புசிக்கிறதற்கு எழுப்பப்படும் அல்லவோ? — 11 பெலஈனனாகிய உன் சகோதரனுக்காகக் கிறிஸ்து மரித்தாரே; அவன் உன்னுடைய அறிவினாலே கெட்டுப்போகலாமா?–12 இப்படிச் சகோதரருக்கு விரோதமாகப் பாவம்செய்து பெலஈனமான அவர்களுடைய மனதைக் காயப்படுத்துகிறதினாலே, நீங்கள் கிறிஸ்துவுக்கே விரோதமாகப் பாவம்செய்கிறீர்கள்.—13 ஆனபடியினாலே போசனம் என் சகோதரனுக்குக் கேடு வருதற்கு ஏதுவானால், என் சகோதரனுக்குக் கேடு வராதபடிக்கு என்றைக்கும் இறைச்சியைப் புசிக்கமாட்டேன்.

## கூ. அதிகாரம்.

நான் அப்போஸ்தலன் அல்லவா? நான் சுயாதீனன் அல்லவா? நான் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரிசிக்க இல்லையா? கர்த்தராலே நீங்கள் என்னுடைய கிரியைக்குத் (திருட்டாந்தங்களாய்) இருக்கிறீர்கள் அல்லவா?—2 நான் மற்ற மனிதருக்கு அப்போஸ்தலனாய் இராவிட்டாலும், உங்களுக்கல்லவோ அப்போஸ்தலனாயிருக்கிறேன்; கர்த்தராலே நீங்கள் என் அப்போஸ்தல ஊழியத்தின் முத்திரையாய் இருக்கிறீர்களே.—3 என்னைக்குறித்துத் தீர்ப்புச் சொல்லுகிறவர்களுக்கு நான் என்ன உத்தரவு கொடுக்கிறேனெனில்,—4 (சபையின் செலவினாலே) போசனபானம்பண்ண எங்களுக்கு அதிகாரம் இல்லையோ?—5 மற்ற அப்போஸ்தலரும் கர்த்தருடைய சகோதரரும் கேபாவும் செய்கிறதுபோல, நாங்களும் மனைவியாகிய ஒரு கிறிஸ்தவளைக் கூட்டிக்கொண்டு திரிகிறதற்கு எங்களுக்கு அதிகாரம் இல்லையோ?—6 அல்லது கை

வேலைசெய்யாதிருக்கிறதற்கு எனக்கும் பருனபாவுக்கும்மாத்திரம் அதிகாரம் இல்லையோ?

7 எக்காலத்திலாகிலும் தன் சொந்தப்பணத்தைச் செலவழித்து, எவன் தண்டிலே சேவகம் பண்ணுவான்? எவன் திராட்சத்தோட்டம் உண்டாக்கி, அதின் கனிகளில் சில புசியாமல் இருப்பான், அல்லது எவன் ஆடுகளை மேய்த்து, அதின் பாலிலே கொஞ்சம் சாப்பிடாதிருப்பான். — 8 இவைகளை மனிதர் நடக்கையின்படிமாத்திரம் சொல்லுகிறேனே? நியாயப்பிரமாணமும் இப்படிச் சொல்லுகிறதில்லையா? — 9 போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டாதிருப்பாயாக என்று மோசேயின் பிரமாணத்திலே எழுதியிருக்கின்றதே, பராபரன் மாடுகளுக்காக (மாத்திரம்) விசாரிக்கிறாரா? — 10 அது விசேஷமாய் நமக்காகச் சொல்லியிருக்கிறதில்லையா? உழுகிறவன் பலனில் நம்பிக்கையோடே உழவும், போரடிக்கிறவன் தான் நம்பின பலனுக்குப் பங்குள்ளவனுவேன் என்கிற நம்பிக்கையோடே போரடிக்கவும் வேண்டியபடியால், அது நமக்காகவே எழுதியிருக்கின்றது. — 11 நாங்கள் உங்களுக்கு ஞானநன்மைகளை விதைத்திருக்க, உங்கள் சரீரநன்மைகளை அறுத்தால் அது பெரியகாரியமாயிருக்குமா?— 12 வேறுபேர்கள் உங்களிடத்தில் இருந்த அதிகாரத்தை அநுசரித்துக்கொண்டிருக்க, அவர்களிலும் நாங்கள் அதிகமாய் அப்படிச் செய்யலாம் அல்லவா? அப்படியிருந்தும் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு யாதொரு தடையையும் உண்டாக்காதபடிக்கு, நாங்கள் இந்த அதிகாரத்தை அநுபவித்துக்கொள்ளாமல் எல்லாவிதமான பாடும் படுகிறோம்.

13 கோவிலில் ஊழியம்செய்கிறவர்கள் கோவிலுக்கு உரியதில் புசிக்கிறார்கள் என்றும், பீடத்தில் ஆராதனைசெய்கிறவர்கள் பீடத்தில் உள்ளவைகளில் பங்கை அடைகிறார்கள் என்றும் அறியாமலிருக்கிறீர்களா? — 14 அதுபோலக் கர்த்தரும் தமது சுவிசேஷத்தை அறிவிக்கிறவர்களுக்குச் சுவிசேஷத்தினாலே பிழைப்பு வரவேண்டும் என்று கட்டளையிட்டார்.

15 அப்படியிருந்தும் நான் இவைகளில் ஒன்றையும் அநுசரித்துக்கொள்ளவில்லை; இப்படி நான் மேன்மைபாராட்டுகிறதை ஒருவன் அவத்தமாக்குகிறதிலும் சாகிறதே எனக்குப் பிரியமாயிருக்கும்; ஆதலால் அப்படி இனிமேல் அநுசரிக்கவேண்டும் என்று நான் இவைகளை எழுதினதும் இல்லை. — 16 சுவிசேஷத்தை நான் பிரசங்கிக்கிறதினாலே நான் மேன்மைபாராட்டக்கூடாது; அது எனக்கு உண்டான கடமையாய் இருக்கின்றதே. மேலும் சுவிசேஷத்தை நான் பிரசங்கம்பண்ணாமல் இருந்தால், ஐயோ, எனக்கு வேதனைவருமே.—17 அன்றியும் நான மனோச்சாகமாய் அப்படிச் செய்தால் எனக்குப் பலன் உண்டு; மனோச்சாகம் இல்லாதவனாயிருந்தாலும் உக்கிராண உத்தியோகம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. — 18 ஆனதால் எனக்கு என்ன பலன் உண்டு, நான் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கையில், அதில் எனக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்தை அநுசரியாமல், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைச் செலவில்லாமலே ஸ்தாபிப்பேன்; அதுவே எனக்குப் பலன்.

19 ஆகையால் நான் எல்லாரையும் விட்டுச் சுயாதீனனாயிருந்தும் நான் அதிக சனங்களை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு என்னைத்தானே எல்லாருக்கும் ஊழியக்காரன் ஆக்கினேன். — 20 அந்தப்படி யூதரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக யூதருக்கு யூதனைப்போலவும், நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவனைப்போலவும் ஆனேன்.—21 நியாயப்பிரமாணம் இல்லாதவர்களை ஆதாயப்படுத்திக் கொள்ளத்தக்கதாக அவர்களுக்கு நியாயப்பிரமாணம் இல்லாதவனைப்போலவும் ஆனேன்; அப்படியிருந்தும் நான் பராபரனுக்குமுன்பாக நியாயப்பிரமாணம் இல்லாதவனாய் இராமல், விசேஷமாய்க் கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்திற்கு உள்ளானவனாயிருக்கிறேன். — 22 மேலும் பெலஈனரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக பெலஈனருக்குப் பெலஈனனைப்போல ஆனேன்; நான் எப்படியும் சிலரை இரட்சிக்கும்படிக்கு, எல்லாருக்கும் எல்லாவிதமும் ஆனேன்.—23 சுவிசேஷத்தின் பலனுக்கு நான் உடன்பங்காளனாகும்படிக்குச் சுவிசேஷத்தின்நிமித்தமே இப்படிச் செய்கிறேன்.

24 ஓடுதற்கு ஏற்ற சாலையில் எல்லாரும் ஓடுவார்கள்; ஆகிலும் ஒருவன்மாத்திரம் பந்தயப்பொருளைப் பெறுவான் என்று அறியாமலிருக்கிறீர்களா? நீங்கள் (பந்தயப்பொருளைப் பிடிக்கத்தக்கதாகவே ஓடுங்கள்).—25 மேலும் போராடுகிற யாவரும் அழிவுள்ள கிரீடத்தைப் பெறும்படிக்கு, எல்லா இச்சைகளையும் அடக்கிக்கொள்ளுவார்கள்; நாம் அழிவில்லாத கிரீடத்தைப் பெறும்படிக்கு அப்படிச் செய்கிறோம்.—26 ஆதலால் நான் நிச்சயமில்லாமல் ஓடேன்; நான் ஆகாசத்தை அடித்துச் சிலம்பம்பண்ணேன்.—27 ஆதலால் மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தானே அபாத்திரனாய்ப் போகாதபடிக்கு, என் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.

## ௰. அதிகாரம்.

இப்படியிருக்கச் சகோதரரே, நீங்கள் எவைகளை நினைக்கவேண்டுமென்றிருக்கிறேன் என்றால், நம்முடைய பிதாக்கள் எல்லாரும் மேகத்திற்குக் கீழாயிருந்தார்கள்; எல்லாரும் சமுத்திரத்தின் வழியாய் நடந்துவந்தார்கள்.—2 எல்லாரும்

மோசேக்குள்ளாக மேகத்திலும் சமுத்திரத்தி
லும் ஞானஸ்நானம்பண்ணப்பட்டார்கள். —
3 எல்லாரும் ஒரே ஞானபோசன பதார்த்தத்தைப்
புசித்தார்கள். — 4 கிறிஸ்து என்னும் ஞானக்கல்
மலை அவர்களோடேகூடச் சென்றதே; அந்த
ஞானக்கல்மலையின் தண்ணீரை எல்லாரும் கு
டித்து, இப்படியே ஞானபானம்பண்ணினார்கள்.-
5 அப்படியிருந்தும், அவர்களில் அதிகமானபேர்
களிடத்தில் பராபரன் பிரியமாயிருக்கவில்லை.—
6 வனாந்தரத்திலே அவர்கள் அழிக்கப்பட்டார்
களே; அவர்கள் இச்சித்ததுபோல நாமும் பொல்
லாங்கானவைகளை இச்சியாதபடிக்கு இந்தச் சங்
கதிகள் நமக்குத் திருட்டாந்தங்களாய் இருக்கின்
றன.

7 ஆனதால் சனங்கள் புசிக்கவும் குடிக்கவும்
உளுக்காந்து விளையாட எழுந்திருந்தார்கள் என்று
எழுதியிருக்கிறபடி, அவர்களில் சிலர் விக்கிரக
ஆராதனைக்காரர் ஆனதுபோல, நீங்கள் அப்படிப்
பட்டவர்கள் ஆகாதிருங்கள். — 8 அவர்களில்
சிலர் வேசித்தனம்பண்ணி, ஒரே நாளில் இரு
பத்துமூவாயிரம்பேர் விழுந்துபோனார்கள்; அது
போல நாம் வேசிமார்க்கமாய்ப் போகாதிருப்போ
மாக.—9 அவர்களில் சிலர் கிறிஸ்துவைப் பரிட்
சைபார்த்துப் பாம்புகளால் அழிக்கப்பட்டார்கள்;
அதுபோல நாம் கிறிஸ்துவைப் பரிட்சைபாராதி
ருப்போமாக.-10 அவர்களில் சிலர் முறுமுறுத்து,
சங்காரக்காரனாலே அழிகக்கப்பட்டார்கள்; அது
போல நீங்கள் முறுமுறுதிருப்பீர்களாக -11 திரு
ட்டாந்தங்கள் உண்டாகத்தக்கதாக இவைகள்
எல்லாம் அவர்களுக்குச் சம்பவித்து, உலகத்தின்
கடைசிக்காலத்திலுள்ள நமக்கு எச்சரிப்பு உண்
டாகும்படி எழுதப்பட்டிருக்கின்றன.-12 ஆன
படியினாலே (தன்னை) நிற்கிறவனென்று எண்
ணுகிறவன் விழாதபடிக்குப் பார்க்கக்கடவன்.

13 மனிதருக்குரிய உபத்திரவமே அல்லா
மல் வேறே உபத்திரவம் இதுவரைக்கும் உங்க
ளைப் பிடிக்கவில்லை; பராபரன் உண்மையுள்ளவ
ராய் இருக்கிறார்; ஆதலால் இனிமேலும் நீங்கள்
சகிக்கிறதற்கு மேலான உபத்திரவத்தை அவர்
உங்களுக்கு வரப்பண்ணாமல் நீங்கள் தாங்கத்தக்
கதாக உபத்திரவத்தை அல்லாமல் போக்கையும்
உண்டாக்குவார்.

14 ஆகையால் எனக்குப் பிரியமானவர்
களே, விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுவீர்க
ளாக.—15 உங்களைப் புத்திமான்களென்று எண்
ணிப் பேசுகிறேன்; ஆனதால் நான் சொல்லு
கிறதை நீங்களே நிதானித்துப்பாருங்கள். —
16 நாம் ஆசீர்வதிக்கிற ஆசீர்வாதத்தின் பாத்தி
ரம் கிறிஸ்துவினுடைய இரத்தத்துடனே ஐக்கி
யப்படுதற்கு ஏற்றதல்லவோ? நாம் பிட்கிற அப்
பம் கிறிஸ்துவினுடைய சரீரத்துடனே ஐக்கியப்
படுதற்கு ஏற்றதல்லவோ? — 17 ஒரே அப்பம்
இருக்க நாம் எல்லாரும் அந்த ஒரே அப்பத்திற்
குப் பங்காளிகளானபடியினாலே அநேகரான
நாம் ஒரே சரீரமாயிருக்கிறோமே.-18 புறம்பான
இஸ்ரவேலரைப் பாருங்கள்; பலிகளைப் புசிக்கிற
வர்கள் பலிபீடத்தோடே ஐக்கியமாயிருக்கிறார்
கள் அல்லவோ?—19 இதினாலே என்ன சொ
ல்லுகிறேன்? விக்கிரகம் ஒரு பொருள் என்று
சொல்லுகிறேனோ? அல்லது விக்கிரகங்களுக்குப்
படைக்கப்பட்டது ஒரு பொருள் என்று சொல்
லுகிறேனோ? — 20 இல்லையே, அஞ்ஞானிகள்
பலியிடுகிறவைகளைப் பராபரனுக்கு அல்ல, பேய்
களுக்குப் பலியிடுகிறார்கள் என்றே சொல்லுகி
றேன்; நீங்கள் பேய்களோடே ஐக்கியமாயிருக்க
வேண்டும் என்று நான் விரும்புகிறதில்லை. —
21 நீங்கள் கர்த்தருடைய பாத்திரத்திலும் பேய்
களுடைய பாத்திரத்திலும் பானம்பண்ணக்கூ
டாதே; நீங்கள் கர்த்தருடைய போசனபந்திக்
கும் பேய்களுடைய போசனபந்திக்கும் பங்கா
ளிகளாய் இருக்கக்கூடாதே.—22 அல்லது, நாம்
கர்த்தருக்குக் கோபத்தை மூட்டலாமா? அவரி
லும் நாம் பெலவான்களாயிருக்கிறோமா?

23 எல்லாப் பதார்த்தங்களையும் நான் அநுப
விக்கலாம்; ஆகிலும் எல்லாம் பிரயோசனமாயி
ருக்கிறதில்லை; எல்லாப் பதார்த்தங்களையும் நான்
அநுபவிக்கலாம், ஆகிலும் எல்லாம் எழுப்புதற்கு
ஏதுவாயிராது.—24 எவனும் தனக்காகமாத்திரம்
பிரயோசனத்தைத் தேடாமல், மற்றவனுக்காகவும்
அப்படித் தேடக்கடவன்.—25 பூமியும் அதிலு
ள்ள நிறைவு யாவும் கர்த்தருடையது என்பதின்
படி,—26 உங்கள் மனது அடைந்த அறிவினாலே
நீங்கள் ஒன்றையும் விசாரியாமல், கடையிலே
விற்கப்படுகிற எதையும் வாங்கிப் புசியுங்கள்.—
27 அல்லாமலும் அவிசுவாசிகளில் ஒருவன்
உங்களைப் போசனபந்திக்கு அழைக்கும்பொ
ழுது, நீங்கள் போக மனதுண்டானால் உங்கள்
மனது அடைந்த அறிவினாலே ஒன்றையும் விசாரி
யாமல் உங்கள் முன் வைக்கப்பட்ட எதையும் பு
சியுங்கள். — 28 அப்பொழுது இது விக்கிரகங்க
ளுக்குப் படைக்கப்பட்டது என்று ஒருவன் உங்
களுக்குச் சொன்னால், அப்படி அறிவித்தவன்
நிமித்தமும் மனதறிவின் நிமித்தமும் புசியாதிருங்
கள்; பூமியும் அதிலுள்ள நிறைவு யாவும் கர்த்தரு
டையதே. — 29 உன்னுடைய மனதைக்குறித்து
அல்ல, மற்றொருவனுடைய மனதைக்குறித்தே
சொல்லுகிறேன்; ஆகிலும் என்னுடைய சுயாதீ
னம் மற்றொருவனுடைய மனதின்நிமித்தம் குற்
றமாய் எண்ணப்படவேண்டுவதென்ன? —
30 மேலும் நான் அதைத் தோத்திரிப்புடனே
அநுபவித்தால், தோத்திரித்து அநுபவிக்கிறதற்
காக நான் தூஷணிக்கப்படவேண்டுவதென்
ன? — 31 அதினாலேதானே நீங்கள் புசித்தா
லும், பானம்பண்ணினாலும், எதைச் செய்தாலும்

சகலத்தையும் பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டா
கச் செய்யுங்கள்.–32 நான் எனக்கு (மாத்திரம்)
பிரயோசனத்தைத் தேடாமல் அநேகரும் இரட்
சிக்கப்படும்படிக்கு அவர்களுக்காகவும் பிரயோச
னத்தைத் தேடிக்கொண்டு, எவ்விதத்திலும் எல்
லாருக்கும் பிரியமாய் நடக்கிறதுபோல,–33 நீங்க
ளும் யூதருக்கும் கிரேக்கருக்கும் பராபரனுடைய
சபைக்கும் விதனம் உண்டாகாதபடிக்கு, எச்ச
ரிக்கையாய் இருப்பீர்களாக.

## ௰௧. அதிகாரம்.

நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல,
நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாய் இருக்
கக்கடவீர்கள்.—2 சகோதரரே, நீங்கள் எல்லா
விதத்திலும் என்னை நினைத்துக்கொண்டு, நான்
உங்களுக்கு ஒப்புவித்த முறைமைகளின்படியே
அவைகளைக் கைக்கொண்டிருக்கிறதற்காக உங்க
ளைப் புகழுகிறேன். — 3 இப்பொழுது நீங்கள்
என்ன அறியவேண்டும் என்று இருக்கிறேன்
என்றால், கிறிஸ்து புருஷனானவனுக்குத் தலையா
யிருக்கிறார், புருஷன் மனைவிக்குத் தலையாயிருக்
கிறான்; பராபரன் கிறிஸ்துவுக்குத் தலையாயிருக்கி
றார்.—4 எந்தப் புருஷனானாலும் செபம்பண்ணி
அல்லது தீர்க்கதரிசனம் சொல்லுகிறபொழுது,
தன் தலையை மூடிக்கொண்டிருந்தால் தன்
தலையைக் கனஈனப்படுத்துவான். — 5 ஸ்திரியா
னவள் செபம்பண்ணி அல்லது தீர்க்கதரிசனம்
சொல்லுகிறபொழுது, தலையை மூடிக்கொள்
ளாமலிருந்தால், தன் தலையைக் கனஈனப்படுத்
துவாள்; அவள் தலை சிரைக்கப்பட்டதுபோல
இருக்குமே. — 6 ஆனதால் ஸ்திரியானவள் மூ
டிக்கொள்ளாவிட்டால், மயிரைக் கத்தரித்துப்
போடக்கடவள்; அப்படி மயிர் கத்தரிக்கப்படுகி
றது அல்லது சிரைக்கப்படுகிறது ஸ்திரிக்கு வெ
ட்கமானபடியினாலே, மூடிக்கொண்டு இருக்கக்
கடவள். — 7 புருஷனானவன் பராபரனுடைய
சாயலுமாய் மகிமையுமாயிருக்கிறபடியால், தன்
தலையை மூடிக்கொள்ளவேண்டுவது இல்லை.—
8 மேலும் புருஷன் ஸ்திரியினாலே தோன்றின
வன் அல்ல, ஸ்திரியே புருஷனால் தோன்றின
வள். — 9 அல்லாமலும் புருஷன் ஸ்திரிக்காகச்
சிருட்டிக்கப்பட்டவன் அல்ல, ஸ்திரியே புருஷ
னுக்காகச் சிருட்டிக்கப்பட்டவள். — 10 ஆகை
யால் ஸ்திரியானவள் புருஷனுடைய மகிமையா
யிருக்கிறதும் அல்லாமல், தூதர்களின் நிமித்தம்
அவள் தன் தலையின்மேல் வஸ்திரத்தால் மூடி
வைக்கவேண்டும். — 11 ஸ்திரி புருஷனால் இ
ருக்கிறதுபோலப் புருஷனும் ஸ்திரியினாலே இ
ருக்கிறதால்,—12 கர்த்தருடைய முறைமையின்
படி ஸ்திரி இல்லாமல் புருஷனும் இல்லை; புரு
ஷன் இல்லாமல் ஸ்திரியும் இல்லை; சகலமும்
பராபரனாலே இருக்கின்றது.

13 ஸ்திரியானவள் பராபரனைத் தொழுது செ
பம்பண்ணுகையில், தன் தலையை மூடிக்கொள்
ளாமலிருக்கிறது இலக்கணமாயிருக்குமோ என்று
உங்களுக்குள்ளே நீங்களே எண்ணிக்கொள்ளுங்
கள்.—14 அல்லது புருஷன் மயிரை நீளமாய்
வளர்த்தால், அது அவனுக்குக் கனஈனமாயிருக்
கின்றது என்றும்,–15 ஸ்திரி தனக்கு முக்காடாக
மயிர் கொடுக்கப்பட்டிருக்கிறபடியினாலே தன்
மயிரை நீளமாய் வளர்த்தால், அது அவளுக்கு மகி
மையாயிருக்கிறதென்றும் சுபாவமே உங்களுக்
குப் போதிக்கிறதில்லையோ?

16 ஆகிலும் (இதைக்குறித்து) ஒருவன்
வாக்குவாதம் செய்யப் பிரியனாய் இருந்தால்,
எங்களுக்கும் பராபரனுடைய சபைகளுக்கும் அப்
படிப்பட்ட வழக்கம் இல்லையென்று அறியக்க
டவன்.

17 பின்னும் நான் அறிவிக்கிறது என்னவெ
னில், நீங்கள் கூடிவருதல் அதிக நன்மைக்கு
அல்ல, அதிக தீமைக்கே ஏதுவாயிருக்கின்றது;
அதைக்குறித்து நான் உங்களைப் புகழக்கூ
டாது.—18 என்னவென்றால் முதலாவது, நீங்
கள் சபையின் வீட்டிலே கூடிவந்திருக்கும்பொ
ழுது, உங்களில் பிரிவினைகள் உண்டென்று கேள்
விப்படுகிறேன். — 19 பாத்திரவான்கள் வெளி
யாகும்படிக்கு மார்க்கபேதங்களும் உங்களில்
உண்டாயிருக்கவேண்டியதால், நான் (கேள்விப்
பட்டவைகளில்) சில நம்புகிறேன்.

20 ஆனதால் நீங்கள் ஏகமாய்க் கூடிவந்து
சாப்பிடுங்காலத்தில், ஒருவன் பசியாயிருக்கவும்
ஒருவன் திருத்தி அடையவும்தக்கதாக, முன்னே
அவனவன் தன் சொந்தப் போசனத்தைப் பண்
ணுவான். — 21 அப்படிச் செய்கிறது கர்த்தரு
டைய இராப்போசனம்பண்ணுதல் அல்லவே.–
22 அதென்ன? போசனபானம்பண்ணுதற்கு
உங்களுக்கு வீடுகள் இல்லையா? அல்லது பரா
பரனுடைய சபையின் வீட்டை அசட்டைபண்
ணி, போசனம் இல்லாதவர்களை வெட்கப்படுத்து
கிறீர்களா? உங்களைக்குறித்து நான் என்னசொல்
லலாம்? உங்களைப் புகழலாமா? அதைக்குறித்து
நான் உங்களைப் புகழக்கூடாது.

23 நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்த
ராலே அடைந்தேன்; என்னவெனில், கர்த்தரா
கிய இயேசு தம்மைக் காட்டிக்கொடுக்கப்பட்ட
அன்று இராத்திரியிலே அப்பத்தை எடுத்துக்
கொண்டு தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு,
நீங்கள் வாங்கிப் புசியுங்கள்.—24 இது உங்க
ளுக்காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயி
ருக்கின்றது; என்னை நினைத்துக்கொள்ளும்படிக்கு
இப்படிச் செய்யுங்கள் என்றார்.—25 அந்தப்ப
டியே அவர் இராப்போசனம்பண்ணின பின்பு,
பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு, இந்தப் பாத்
திரம் என்னுடைய இரத்தத்தினாலே புதிய உடம்

படிக்கையாய் இருக்கின்றது; நீங்கள் பானம்பண்ணும்பொழுதெல்லாம் என்னை நினைத்துக்கொள்ளும்படிக்கு இப்படிச் செய்யுங்கள் என்றார்.—26 ஆகையால் கர்த்தர் வருமளவும் நீங்கள் இந்த அப்பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்தில் பானம்பண்ணும்பொழுதெல்லாம் அவருடைய மரணத்தைக் கூறுகிறீர்கள்.

27 இப்படியிருக்க எவனாகிலும் கர்த்தருடைய அப்பத்தையாவது பாத்திரத்தையாவது அபாத்திரமானவிதமாய்ப் போசனபானம்பண்ணினால், அவன் கர்த்தருடைய சரீரத்திற்கும் இரத்தத்திற்கும் குற்றமுள்ளவனாய் இருப்பான்.—28 அந்தப்படி அபாத்திரமானவிதமாய் அதைப் போசனபானம்பண்ணுகிறவன், கர்த்தருடைய சரீரத்தை விசேஷித்துக்கொள்ளாமல், தனக்கு ஆக்கினை வரும்படி போசனபானம்பண்ணுகிறபடியினாலே,-29 எவனாகிலும் தன்னைத்தான் சோதித்து அறிந்து, பின்பு இந்த அப்பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்திலே பானம்பண்ணக்கடவன்.—30 அந்தக் குற்றத்தினாலேதானே உங்களில் அநேகர் பலஈனருமாய் வியாதியுள்ளவர்களுமாய் இருக்கிறார்கள்; வேறு அநேகரும் இறந்துபோயிருக்கிறார்கள்.—31 நம்மைநாமே வகையறுத்துப் பார்த்தால், நாம் அப்படித் தண்டிக்கப்படுவதில்லை.—32 நாம் தண்டிக்கப்பட்டிருக்க, உலகத்தோடே நித்திய ஆக்கினைக்கு உள்ளாக்கப்படாதபடிக்கு, கர்த்தராலே தண்டிக்கப்படுகிறோம்.—33 ஆகையால் என் சகோதரரே, நீங்கள் போசனம்பண்ணக் கூடிவருகிறபொழுது, ஒருவருக்காக ஒருவர் காத்திருங்கள்.—34 ஒருவருக்குப் பசியிருந்தால் நீங்கள் ஆக்கினைக்கு ஏதுவாகக் கூடிவராதபடிக்கு, அவன் வீட்டிலே சாப்பிடக்கடவன்; மற்றக் காரியங்களை நான் வரும்பொழுது திட்டம்பண்ணுவேன்.

## ௰௨. அதிகாரம்.

மேலும் சகோதரரே, ஆவியால் வருகிற வரங்களைக்குறித்து நீங்கள் அறிவீனராயிருக்க எனக்கு மனதில்லை.—2 (முன்னே) நீங்கள் அஞ்ஞானிகளாய், மற்றவர்களால் நடத்தப்பட்ட பிரகாரமாகவே ஊமையான விக்கிரகங்களைச் சேர்ந்திருந்தீர்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கின்றது.—3 ஆதலால் நான் உங்களுக்கு அறிவிக்கிறது என்னவெனில், பராபரனுடைய ஆவியினாலே பேசுகிற எவனும் இயேசுவைச் சபிக்கப்பட்டவன் என்று சொல்லமாட்டான்; அன்றியும் பரிசுத்தஆவியினாலே அல்லாமல் ஒருவனும் இயேசுவைக் கர்த்தரென்று சொல்லமாட்டான்.

4 வரங்களில் வித்தியாசங்கள் உண்டு.—5 ஆவி ஒருவரே; ஊழியங்களிலேயும் வித்தியாசங்கள் உண்டு; கர்த்தர் ஒருவரே.—6 உள்ளான கிரியைகளிலேயும் வித்தியாசங்கள் உண்டு; எல்லாவற்றையும் எல்லாருக்குள்ளும் நடப்பிக்கிற பராபரன் ஒருவரே.—7 ஆவியின் வரங்கள் பிரயோசனம் உண்டாகும்படியே, அவனவனுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.—8 எப்படியெனில் ஒருவனுக்கு ஆவியினாலே ஞானத்தைப் போதித்தல் கொடுக்கப்பட்டது; வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே கல்வியோடே போதித்தல் உண்டாயிற்று.—9 வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே விசுவாசம் உண்டாயிற்று; வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே குணமாக்கும் வரங்கள் உண்டாயின.—10 வேறொருவனுக்குப் பலத்த அற்புதங்களைச் செய்கிற பலன்களும், வேறொருவனுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லுதலும், வேறொருவனுக்கு ஆவிகளை வகையறுக்குதலும், வேறொருவனுக்கு அந்நியபாஷைகளைப் பேசுதலும், வேறொருவனுக்கு அந்நியபாஷைகளை வியாக்கியானம்பண்ணுதலும் அளிக்கப்பட்டிருக்கின்றன.—11 இந்த வரங்களை எல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்து, தமது சித்தத்தின்படி அவனவனுக்குத் தகுதியானவைகளைப் பகிர்ந்துகொடுக்கிறார்.

12 அது எப்படியெனில், சரீரம் ஒன்றாய் அநேகம் அவயவங்கள் உள்ளது; ஒரே சரீரத்தின் அவயவங்கள் எல்லாம் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றாயிருக்கின்றது; அதுபோலக் கிறிஸ்துவும் இருக்கிறார்.—13 நாம் யூதராயிருந்தும், கிரேக்கராயிருந்தும், அடிமைகளாயிருந்தும், சுயாதீனராய் இருந்தும் எல்லாரும் ஒரே சரீரமாக ஒரே ஆவியினாலே ஞானஸ்நானம் பண்ணப்பட்டு எல்லாரும் ஒரே ஆவியில் பானம்பண்ணும்படி செய்யப்பட்டோம்.

14 சரீரமும் ஒரே அவயவம் உள்ளதாயிராமல், அநேக அவயவங்கள் உள்ளதாயிருக்கின்றது.—15 காலானது நான் கையாயிராதபடியினாலே நான் சரீரத்தின் அவயவம் அல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவம் அல்லாமல்போகுமா?—16 காதானது நான் கண்ணாயிராதபடியினாலே நான் சரீரத்தின் அவயவம் அல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவம் அல்லாமல்போகுமா?—17 சரீரமுழுவதும் கண்ணானால், செவி எங்கே இருக்கும்? அது முழுவதும் செவியானால், மோத்தல் எங்கே உண்டாயிருக்கும்?—18 ஆனதால் பராபரன் தமது சித்தத்தின்படி அவயவங்களை ஒன்றொன்றாகச் சரீரத்திலே வைத்தார்.—19 அவையெல்லாம் ஒரே அவயவமாயிருந்தால், சரீரம் எப்படி இருக்கும்?—20 ஆனதால் அவயவங்கள் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றே.—21 அன்றியும் கண்ணானது கையுடனே நீ எனக்கு வேண்டுவதில்லை என்றும், அல்லது தலையானது கால்களுடனே நீங்கள் எனக்கு வேண்டுவதில்லை என்றும் சொல்லமாட்டாது.—

22 அதைத்தவிர சரீர அவயவங்களில் பலஈன
மாய்க் காணப்படுகிறவைகளே மிகவும் வேண்
டியவைகளாய் இருக்கின்றன. — 23 அல்லாம
லும் சரீர அவயவங்களில் கனஈனமாய்க் காணப்
படுகிறவைகளுக்கே அதிக கனத்தைக் கொடுக்
கிறோம்; இவ்விதமாய் நம்மிடத்தில் அவலட்ச
ணமானவைகளுக்கே அதிக இலட்சணம் உண்
டாயிருக்கின்றது. — 24 இலட்சணமானவைக
ளுக்கு அப்படிச் செய்யவேண்டுவதில்லை; ஆன
தால் சரீரத்திலே பிரிவினை உண்டாயிராமல், அவ
யவங்கள் ஒன்றுக்கொன்று ஒரேவிதமான கவலை
யாயிருக்கும்படிக்கு, — 25 பராபரன் கனத்தில்
குறைவுள்ளதற்கு அதிக கனத்தைக் கொடுத்து,
இப்படிச் சரீரத்தை ஏற்படுத்தினார்.—26 ஆனதி
னாலே ஒரு அவயவம் பாடுபடும்பொழுது, மற்ற
அவயவங்கள் யாவும் கூடப் பாடுபடும்; ஒரு
அவயவம் மகிமை அடையும்பொழுது, மற்ற
அவயவங்கள் யாவும் கூடச் சந்தோஷப்படும்.—
27 நீங்களே கிறிஸ்துவின் சரீரமாயும் தனித்தனி
யான அவயவங்களாயும் இருக்கிறீர்கள்.

28 அவர்களில் சிலரைப் பராபரன் சபையி
லே முதலாவது, அப்போஸ்தலராகவும், இரண்
டாவது, தீர்க்கதரிசிகளாகவும், மூன்றாவது, போ
தகராகவும், பின்பு வல்லமைகளையும், பின்பு குண
மாக்கும் வரங்களையும், உதவிசெய்தலையும், ஆளு
கைகளையும், அந்நிய பாஷைகளையும் ஏற்படுத்தி
னார். — 29 எல்லாரும் அப்போஸ்தலர்களாய்
இருக்கிறார்களா? எல்லாரும் தீர்க்கதரிசிகளாய்
இருக்கிறார்களா? எல்லாரும் போதகராய் இருக்
கிறார்களா? எல்லாரும் வல்லமைகளைச் செய்கி
றவர்களா?—30 எல்லாரும் குணமாக்கும் வரங்
கள் உள்ளவர்களா? எல்லாரும் அந்நியபாஷை
களைப் பேசுகிறார்களா? எல்லாரும் வியாக்கியா
னம்பண்ணுகிறார்களா?

31 அப்படியிருக்க, நீங்கள் அதிக நன்மை
யானவரங்களைத் தேடிக்கொள்ளுங்கள், அதற்காக
மிகவும் அதிக மேன்மையான வழியையே உங்க
ளுக்காகக் காண்பிக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

நான் மனிதர் பாஷைகளையும் தூதர் பாஷைகளை
யும் பேசினாலும், அன்பு எனக்கு இராவிட்
டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசை
யிடுகிற கைத்தாளத்தைப்போலவும் இருப்
பேன்.—2 நான் தீர்க்கதரிசனங்களை அடைந்தா
லும், சகல இரகசியங்களையும் சகல கல்விகளை
யும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாக
மிகுந்த விசுவாசம் உள்ளவனாயிருந்தாலும், அன்பு
எனக்கு இராவிட்டால் வீணனாய் இருப்பேன்.—
3 மேலும் எனக்கு உண்டான ஆஸ்திகள் யாவை
யும் ஏழைகளுக்குக் கொடுத்தாலும், சுட்டெரிக்
கப்படுவதற்கு என் சரீரத்தைக் கொடுத்தாலும்,
அன்பு எனக்கு இராவிட்டால் எனக்குப் பிர
யோசனம் வராது.

4 அன்பு நீடிய சாந்தமும் தயவும் உள்ளது;
அன்புக்குப் பொறாமை இல்லை; அன்பு தன்னைப்
புகழாது, இறுமாப்பாயிராது, ஆகாததைச் செய்
யாது.—5 தன் பொழிவைப் பாராது, உக்கிரத்தை
அடையாது, பொல்லாங்கானதைச் சிந்தியாது,—
6 அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்
தில் சந்தோஷப்படுகின்றது; அது சகலத்தையும்
மூடுகின்றது.—7 சகலத்தையும் விசுவாசிக்கின்
றது; சகலத்தையும் நம்புகின்றது, சகலத்தையும்
சகிக்கின்றது.

8 தீர்க்கதரிசனம் சொல்லுதல் ஒழிந்துபோம்;
அந்நியபாஷைகளும் ஓய்ந்துபோம்; கல்வியும்
ஒழிந்துபோம்; அன்பே ஒருக்காலும் ஒழியாது.—
9 அல்லாமலும் நம்முடைய அறிவு குறைவுள்
ளது; நாம் தீர்க்கதரிசனம் சொல்லுதலும் குறை
வுள்ளது. — 10 நிறைவானது வரும்பொழுது,
குறைவானது ஒழிந்துபோம். — 11 நான் குழந்
தையாயிருந்தபொழுது, குழந்தையைப்போலப்
பேசினேன்; குழந்தையைப்போலச் சிந்தித்
தேன்; குழந்தையைப்போல யோசித்தேன்;
நான் புருஷனானபொழுது குழந்தைக்கு ஏற்ற
வைகளை ஒழித்துவிட்டேன்.—12 இப்பொழுது
கண்ணாடியினாலே நிழலாய்ப் பார்க்கிறோம்,
அப்பொழுது முகமுகமாகவே பார்ப்போம்; இப்
பொழுது நான் குறைந்த அறிவுள்ளவன்; அப்
பொழுது நான் அறியப்பட்டபடி அறிந்துகொள்
வேன்.

13 ஆனதால் இப்பொழுது விசுவாசம், நம்
பிக்கை, அன்பு இம்மூன்றும் நிற்கின்றன; இவை
களில் அன்பே பெரிதாயிருக்கின்றது.

## ௰௪. அதிகாரம்.

அன்பையே அதிகமாய்த் தொடருங்கள்; ஆ
விக்குரிய வரங்களையும் தேடுங்கள்; (அவைக
ளில்) தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்தையே
விரும்புங்கள்.—2 என்னத்தினாலெனில், அந்நிய
பாஷையில் பேசுகிறவன் மனிதருக்கு அல்ல,
பராபரனுக்குத் தெரியப் பேசுகிறான்; ஆவியினா
லே அவன் இரகசியங்களைப் பேசிக்கொள்ளுகி
றபடியால், ஒருவனும் அவன் பேசுகிறதை அறி
யமாட்டானே.—3 தீர்க்கதரிசனம் காட்டுகிறவ
னே மனிதருக்கு எழுப்புதலும் புத்தியும் ஆறுத
லும் உண்டாகத்தக்கவிதமாகப் பேசுகிறான். —
4 அந்நியபாஷையில் பேசுகிறவன் தனக்குத்தா
னே எழுப்புதல் உண்டாக்குகிறான்; தீர்க்கதரிச
னம் காட்டுகிறவனே சபைக்கு எழுப்புதல் உண்
டாக்குகிறான். — 5 நீங்கள் எல்லாரும் அந்நிய
பாஷைகளைப் பேச விரும்புகிறேன்; ஆகிலும்
அந்நியபாஷைகளில் பேசுகிறவன் சபைக்கு
எழுப்புதல் உண்டாகும்படிக்கு அதின் அருத்

தத்தையும் சொல்லாவிட்டால், தீர்க்கதரிசனம்
காட்டுகிறவன் அவனிலும் பெரியவனாயிருப்பதி
னாலே நீங்கள் தீர்க்கதரிசனம் காட்டுகிறவர்களா
கவேண்டும் என்று அதிகமாய் விரும்புகிறேன்.
6 அந்தப்படி சகோதரரே, நான் உங்களிடத்
தில் வந்து, உங்களுக்கு இரகசியங்களை வெளிப்
படுத்தலுக்காவது, உயர்ந்த அறிவு உண்டாக்கு
தற்காவது, தீர்க்கதரிசனத்தை அறிவதற்காவது,
மற்றப் போதகம் உண்டாகுதற்காவது, எதுவா
னதைச் சொன்னாலும், அந்நியபாஷைகளில் பே
சினால் உங்களுக்கு என்னாலே எந்தப் பிரயோ
சனம் வரும்?—7 சத்தமிடுகிற உயிரில்லாத வாத்
தியங்களும் தீங்குழலானாலும் சுரமண்டலமானா
லும் சட்டமான தொனிகளினாலே வித்தியாசம்
காட்டாவிட்டால், ஊதினது அல்லது கொட்டி
னது இன்னதென்று எப்படித் தெரியும்?—
8 அந்தப்படி எக்காளமானது சட்டமில்லாத
தொனியை இட்டால், எவன் யுத்தத்திற்கு எத்
தனம்பண்ணுவான்?—9 அதுபோல நீங்களும்
தெளிவான பேச்சை நாவினாலே வசனியாவிட்
டால், சொல்லப்பட்டது இன்னது என்று எப்ப
டித் தெரியும்? ஆகாசத்தில் சொல்லுகிறவர்க
ளாயிருப்பீர்களே.—10 உலகத்திலே இத்தனை
விதமான பாஷைகள் உண்டாயிருக்கின்றன.—
11 அவைகளில் ஒன்றும் கருத்தில்லாததல்ல;
அது மெய்தான். ஆகிலும் நான் பாஷையின்
கருத்தை அறியாமலிருந்தால், பேசுகிறவனுக்கு
அந்நியனாயிருப்பேனே; பேசுகிறவன் எனக்கும்
அந்நியனாயிருப்பான்.
12 ஆனதால் நீங்களும் ஆவிக்குரிய வரங்களை
நாடுகிறவர்களாயிருக்க, சபையாருக்கு எழுப்பு
தலுக்கு ஏற்றவைகளையே அதிகமாய்ப் பெற்றுக்
கொள்ளப் பாருங்கள்.—13 அந்தப்படி அந்நிய
பாஷையில் பேசுகிறவன் அதின் கருத்தையும்
சொல்லத்தக்கதாக விண்ணப்பம்பண்ணக்கட
வன்.—14 என்னத்தினாலெனில், நான் அந்நிய
பாஷையிலே விண்ணப்பம்பண்ணினால், என்
ஆவி விண்ணப்பம்பண்ணுமே அன்றி, என்னு
டைய கருத்து (மற்றவர்களுக்குப்) பலன் அற்ற
தாயிருக்கும்.—15 ஆனதால் நான் என்னசெய்
யவேண்டும்? ஆவியாலே நான் விண்ணப்பம்
பண்ணவேண்டும்; அதின் கருத்தும் விளங்க
விண்ணப்பம்பண்ணவேண்டும்; நான் ஆவியா
லே பாடவேண்டும்; அதின் கருத்தும் விளங்கப்
பாடவேண்டும்.—16 இல்லாவிட்டால் நீ ஆவி
யினாலே தோத்திரம்செய்யும்பொழுது, கல்லாத
கூட்டத்தாரிடத்தில் இருக்கிறவன் உன் பேச்
சை அறியாதபடியால், உன்னுடைய தோத்திரத்
துக்கு ஆமென் என்று எப்படிச் சொல்வான்?—
17 நீ நன்றாய்த் தோத்திரிப்பாய்; மற்றவன் எழுப்
பப்படமாட்டானே.—18 உங்கள் எல்லாரிலும்
நான் அதிகமாய்ப் பாஷைகளைப் பேசிக்கொ
ண்டு, என் தேவனைத் தோத்திரிக்கிறேன்.—
19 அப்படியிருந்தும், நான் சபையிலே அந்நிய
பாஷையில் பதினாயிரம் வார்த்தைகளைப் பேசுகி
றதிலும், மற்றவர்களுக்குப் பிரயோசனமாய் உப
தேசம் சொல்லும்படிக்கு, என் கருத்து விளங்
கத்தக்கதாக ஐந்து வார்த்தைகளைமாத்திரம் பேச
வே அதிகமாய் விரும்புகிறேன்.
20 சகோதரரே, நீங்கள் புத்திக்குக் குழந்தை
களாயிராமல், துர்க்குணத்திற்குக் குழந்தைகளைப்
போல இருங்கள்; புத்தியிலே தேறினவர்கள்
ஆவீர்களாக.—21 மறுபாஷைகளாலும் மறு உத
டுகளினாலும் இந்தச் சனங்களுடனே பேசு
வேன்; அப்படியும் அவர்கள் எனக்குச் செவி
கொடுப்பதில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார்
என்று வேதத்தில் எழுதியிருக்கிறதே.—22 ஆன
படியினாலே அந்நியபாஷைகள் விசுவாசிகளுக்கு
அல்ல, அவிசுவாசிகளுக்கு அடையாளமாய்
இருக்கின்றன; தீர்க்கதரிசனம் காட்டுதல் அவிசு
வாசிகளுக்கு அல்ல, விசுவாசிகளுக்கு அடையா
ளமாய் இருக்கின்றது.
23 அப்படியிருக்கச் சபையார் எல்லாரும்
ஏகமாய்க் கூடிவந்து எல்லாரும் அந்நியபாஷை
களில் பேசிக்கொண்டால் கல்லாதவர்கள் அல்
லது அவிசுவாசிகள் உள்ளே பிரவேசிக்கும்பொ
ழுது நீங்கள் பயித்தியம்பிடித்தவர்கள் என்பார்
கள் அல்லவோ?—24 எல்லாரும் தீர்க்கதரிச
னம் காட்டினால், அவிசுவாசி அல்லது கல்லாத
வன் ஒருவன் உள்ளே பிரவேசிக்கும்பொழுது,
அவன் எல்லாராலும் கண்டிக்கப்பட்டும் எல்லா
ராலும் நிதானிக்கப்பட்டும் இருப்பான்.—25 அவ
னுடைய இருதயத்தின் அந்தரங்கங்களும் வெளி
யரங்கமாம்; இவ்விதமாய் அவன் முகம் கீழாக
விழுந்து, பராபரனைப் பணிந்துகொண்டு, பரா
பரன் மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறார்
என்று அறிக்கையிடுவான்.
26 அப்படிக்கன்றி சகோதரரே, நீங்கள் கூடி
யிருக்கிறபொழுது உங்களில் ஒருவன் சங்கீதம்
பாடவும், ஒருவன் போதகம்பண்ணவும், ஒரு
வன் அந்நியபாஷை பேசவும், ஒருவன் இரகசி
யத்தை வெளிப்படுத்தவும், ஒருவன் வியாக்கியா
னம்பண்ணவும் வேண்டுவதென்ன? அவை
யெல்லாம் எழுப்புதல் உண்டாகத்தக்கதாக நடக்
கக்கடவது.—27 அந்தப்படி ஒருவன் அந்நியபா
ஷையிலே பேசவேண்டுமானால், அவன் இரண்
டு, அல்லது மிகுதியானால் மூன்று (வாக்கியங்
களை) மாத்திரம் வெவ்வேறாகப் பேசவும், ஒரு
வன் வியாக்கியானம்பண்ணவும் வேண்டும்.—
28 வியாக்கியானம்பண்ணுகிறவன் இல்லாவிட்
டால், சபையிலே பேசாமல் தனக்கும் பராபர
னுக்கும் தெரியப் பேசக்கடவன்.—29 தீர்க்கதரி
சனம் காட்டுகிற இரண்டுபேர் அல்லது மூன்று
பேர் பேசலாம்; மற்றவர்கள் நிதானிக்கக்கடவர்

கள்.—30 அப்பொழுது உளுக்காந்திருக்கிற மற்
றொருவனுக்கு ஏதாகிலும் வெளிப்படுத்தப்பட்
டால், முந்தினவன் பேசாமலிருக்கக்கடவன்.—
31 எல்லாரும் கற்கிறதற்கும் எல்லாரும் ஆறு
தலை அடைகிறதற்கும் நீங்கள் அனைவரும் ஒரு
வன் ஒருவனைத் தீர்க்கதரிசனம் காட்டலாமே.–
32 தீர்க்கதரிசனம் காட்டுகிறவர்களுக்கு உண்
டான ஆவிக்கு உரிய வரங்கள் அதைக் காட்டு
கிறவர்களுடைய அதிகாரத்திற்குள்ளே இருக்கு
மே.—33 பராபரனும் கலகத்தில் பிரியமானவர்
அல்ல, சமாதானத்தில் பிரியமானவராய் இருக்கி
றாரே; பரிசுத்தவான்களுடைய எல்லாச் சபைக
ளிலேயும் நடக்கிறதுபோல,

34 உங்கள் சபைகளிலேயும் பெண்பிள்ளை
கள் பேசாமலிருக்கக்கடவர்கள்; பேசும்படிக்கு
அவர்களுக்கு உத்தரவு இல்லை; அவர்கள் கீழ்ப்
படியவேண்டும்.–35 அப்படி வேதமும் சொல்
லுகின்றது; அவர்கள் ஒரு காரியத்தைக் கற்றுக்
கொள்ள விரும்பினால், வீட்டிலே தங்கள் புருஷ
ரிடத்திலே விசாரிக்கக்கடவர்கள்; ஸ்திரிகள் சபை
யிலே பேசுகிறது அவலட்சணமாயிருக்கிறதே.–
36 அல்லது பராபரனுடைய வசனம் உங்களி
டத்தில் இருந்தா புறப்பட்டது? அல்லது அது
உங்களிடத்திற்குமாத்திரமா வந்தது?

37 ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசி அல்லது
ஆவியைப் பெற்றவன் என்று எண்ணினால், நான்
உங்களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய கற்
பனைகளாயிருக்கின்றன என்று அறிக்கையிடக்க
டவன்.–38 ஒருவன் அறியாமற்போனால், அவன்
அறியாமல்போகட்டும்,—39 ஆகையால் சகோ
தரரே, தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்தைத் தே
டிக்கொள்வீர்களாக; அந்நியபாஷைகளைப் பேசு
கிறதற்கும் தடைபண்ணாதிருங்கள்.—40 சகல
மும் நல்லொழுக்கமாயும் சட்டத்தின்படியேயும்
நடக்கக்கடவது.

## ௧௫. அதிகாரம்.

அன்றியும் சகோதரரே, நான் உங்களுக்குச்
சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேனே; நீங்களும்
அதை ஏற்றுக்கொண்டு, அதிலே நிலைநிற்கிறீர்
களே.—2 அல்லாமலும் நீங்கள் வீணாய் விசுவா
சியாமல், நான் உங்களுக்குப் பிரசங்கித்த வித
மாய் அதைக் கைக்கொண்டிருந்தால் இரட்சிப்பு
உங்களுக்கு அதினாலே கிடைக்குமே; அந்தச்
சுவிசேஷத்தை நான் உங்களுக்கு மறுபடியும் அ
றிவிக்கிறேன்.—3 நான் அடைந்ததும் உங்களுக்
குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்
றால், கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி
நம்முடைய பாவங்களுக்காக மரித்ததும்,—4 வேத
வாக்கியங்களின்படி அடக்கம்பண்ணப்பட்டும்,
மூன்றாம்நாளில் எழுந்தும் இருக்கிறார்.—5 கே
பாவுக்கும், பின்பு பன்னிருவருக்கும் தரிசனையா
னார்.—6 அதின் பின்பு அவர் ஐந்நூறுபேருக்கு
அதிகமான சகோதரருக்கும் ஒருமிக்கத் தரிசனை
யானார், அவர்களில் சிலர்மாத்திரம் நித்திரை அ
டைந்தார்கள்; மற்ற அதிகமானவர்கள் இந்நாள்
வரைக்கும் இருக்கிறார்கள்.—7 பின்பு யாக்கோ
புக்கும், அதின்பின்பு அப்போஸ்தலர் எல்லா
ருக்கும் தரிசனையானார்.—8 எல்லாருக்கும் பின்பு
எனக்கும் தரிசனையானார்; நான் பூரணகர்ப்பத்
தில் பிறவாமல், அதற்கு முன்பிறந்த பிள்ளையைப்
போல அப்போஸ்தலனானவன். — 9 நான் அப்
போஸ்தலர் எல்லாரிலும் சிறியவனாயிருக்கிறேன்;
பராபரனுடைய சபையைத் துன்பப்படுத்தினபடி
யினாலே, நான் அப்போஸ்தலன் என்று அழைக்
கப்படுவதற்குப் பாத்திரன் அல்ல.—10 பராபர
னுடைய கிருபையினாலே இருக்கிறேன்; அன்றி
யும் அவர் என்மேல் வைத்த கிருபை வீணாயி
ருக்கவில்லை; மற்ற எல்லாரிலும் நான் அதிகமாய்
உழைத்தேன்; நானாக அல்ல, என்னுடனே இ
ருக்கிற பராபரனுடைய கிருபையினாலே அப்ப
டிச் செய்தேன். — 11 ஆகையால் நானாவது
அவர்களாவது இப்படியே பிரசங்கித்து வருகி
றோம்; நீங்களும் இப்படியே விசுவாசித்து வரு
கிறீர்கள்.

12 அந்தப்படி கிறிஸ்து மரித்தோரிலிருந்து
எழுந்திருக்கிறார் என்று பிரசங்கித்திருக்க மரித்
தோர் உயிரோடெழும்புதல் இல்லையென்று உங்
களில் சிலர் எப்படிச் சொல்லலாம்?—13 மரித்
தோர் உயிரோடெழும்புதல் இல்லாவிட்டால்
கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே. — 14 கிறி
ஸ்து எழும்பாமல் இருந்தால் எங்கள் பிரசங்கம்
அபத்தமாயிருக்குமே, உங்கள் விசுவாசமும் அபத்
தமாயிருக்குமே.–15 மரித்தோர் மெய்யாய் எழும்
பாவிட்டால், பராபரன் எழுப்பாத கிறிஸ்துவைப்
பராபரன் எழுப்பினாரென்று அவரைக்குறித்துச்
சாட்சி சொன்னதினாலே நாங்கள் பராபரனுக்கா
கப் பொய்ச்சாட்சிகளாயும் இருப்போமே. —
16 அந்தப்படி மரித்தோர் எழும்பாவிட்டால்,
கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.—17 அன்
றியும் கிறிஸ்து எழும்பாமலிருந்தால், உங்கள் விசு
வாசம் வீணாயிருக்குமே, நீங்கள் எப்பொழுதும்
உங்கள் பாவங்களோடே இருப்பீர்களே. —
18 கிறிஸ்துவைப்பற்றி நித்திரை அடைந்தவர்க
ளும் கெட்டிருப்பார்களே.—19 அந்தப்படி நாம்
கிறிஸ்துவின்மேலே இம்மைக்காகமாத்திரம் நம்
பிக்கையாயிருந்தால், எல்லா மனிதர்களிலும் நாம்
அதிக நிர்ப்பாக்கியம் உள்ளவர்களாய் இருப்
போம்.

20 அப்படி அல்ல, கிறிஸ்து நித்திரை அ
டைந்தவர்களில் முதற்பாகமாக மரித்தோரிலி
ருந்து எழுந்திருக்கிறார். — 21 அந்தப்படி ஒரு
மனிதனால் மரணம் உண்டானபடியினாலே, ஒரு
மனிதனாலும் மரணத்தினின்று உயிரோடெழும்

புதலும் உண்டாயிருக்கின்றது. — 22 ஆதாமி
னாலே எல்லாரும் மரிக்கிறதுபோல, கிறிஸ்துவி
னாலே எல்லாரும் உயிராக்கப்படுவார்கள். —
23 அவனவன் தன் இனவரிசையிலே அப்படி
ஆவான்; முதற்பாகமானவர் கிறிஸ்து, பின்பு அ
வர் வரும்பொழுது அவரைச் சேர்ந்தவர்கள் எ
ழுந்திருப்பார்கள்.—24 அதன்பின்பு முடிவிருக்
கும்; அப்பொழுது அவர் சகல துரைத்தனத்தை
யும் சகல அதிகாரத்தையும் வல்லமையையும் பரி
கரித்து, இராச்சியபரிபாலனத்தைப் பிதாவாகிய
பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பார்.—25 இப்படி
அவர் எல்லாச் சத்துருக்களையும் தமது பாதத்திற்
குக் கீழாக்கிப்போடும்வரைக்கும் அவர் ஆளுகை
செய்யவேண்டும். — 26 அவர் பரிகரிக்கும்
கடைசிச் சத்துரு மரணம்.–27 எல்லாவற்றையும்
அவருடைய பாதத்திற்குக் கீழ்ப்படுத்தினாரே;
ஆகிலும் சகலமும் அவருக்குக் கீழ்ப்படுத்தப்பட்
டது என்று சொல்லும்பொழுது, சகலத்தையும்
அவருக்குக் கீழ்ப்படுத்தினவர் தவிர என்பது
வெளியரங்கமாய் இருக்கின்றது.—28 சகலமும்
அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்பொழுது, பரா
பரனே எல்லா இடங்களிலும் எல்லாவற்றிற்கும்
மேலாயிருக்கத்தக்கவிதமாகக் குமாரன் தாமும்
தமக்கு எல்லாவற்றையும் கீழ்ப்படுத்தினவருக்
குக் கீழ்ப்பட்டிருப்பார்.

29 பின்னும் மரித்தோர் எழும்பாவிட்டால்,
மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம் பெறுகிறவர்
கள் என்ன செய்வார்கள்? மரித்தவர்களுக்காக
ஏன் ஞானஸ்நானம் பெறுவார்கள்?—30 நாங்க
ளும் ஏன் எந்நேரமும் நாசமோசத்திற்கு எதுவா
வோம்? — 31 நாடோறும் நான் மரிக்கிறேன்;
அதை நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசு
வினாலே உங்களைக்குறித்து எனக்கு உண்டாயி
ருக்கிற மேன்மையின்பேரிலே நிச்சயமாய்ச்
சொல்லுகிறேன்.—32 மரித்தோர் எழும்பாவிட்
டால், நான் எபேசுவிலே மனிதர் வழக்கமாய்த்
துஷ்டமிருகங்களுடனே போராடினதினாலே,
எனக்கு என்ன பிரயோசனம் வரும்? நாளைக்குச்
சாவோம்; ஆகையால் புசிக்கவும் குடிக்கவும் கட
வோம் என்று சொல்லலாமே.—33 வஞ்சிக்கப்
படாதிருப்பீர்களாக; பொல்லாத சம்பாஷணை
கள் நல்லொழுக்கங்களைக் கெடுக்கும்.—34 நீங்
கள் பின்னும் பாவம்செய்யாமல், நியாயமானபடி
தெளிவு அடையுங்கள்; (உங்களில்) சிலர் பரா
பரனை அறியாதிருக்கிறார்களே; உங்களுக்கு வெ
ட்கம் வர இதைச் சொல்லுகிறேன்.

35 (ஆகிலும்) மரித்தோர் எப்படி எழும்பு
வார்கள்? எப்படிப்பட்ட சரீரத்தோடே வருவார்
கள் என்று கேட்டால்,—36 ஆ புத்தியீனனே,
நீ விதைக்கிற தானியம் கெடாவிட்டால், புதிதா
ன பயிர் தோன்றமாட்டாதே. — 37 மேலும் நீ
விதைக்கிறபொழுது இனிமேல் விளையும் உடலை
விதையாமல், கோதுமை அல்லது மற்றொரு தா
னியத்தினுடைய வெறுமணியையே விதைக்கி
றாய்.—38 அதற்குப் பராபரன் தமது சித்தத்தின்
படியே உடலைக் கொடுக்கிறார்; அந்தப்படி வி
தைவகைகள் யாவற்றிற்கும் அதற்கதற்கு ஏற்ற
உடல் உண்டு.—39 எல்லா மாம்சமும் ஒரேவி
தமான மாம்சம் அல்ல; மனிதருடைய மாம்சமும்
வேறே, மிருகங்களுடைய மாம்சமும் வேறே,
மச்சங்களுடையதும் வேறே, பறவைகளுடைய
தும் வேறே. — 40 பரமண்டலத்திற்கு உரிய
தேகங்களும் உண்டு; பூமிக்கு உரிய தேகங்களும்
உண்டு, பரமண்டலத்திற்கு உரிய தேகங்களு
டைய மகிமையும் வேறே, பூமிக்கு உரிய தேகங்
களுடைய மகிமையும் வேறே. — 41 சூரியனு
டைய மகிமையும் வேறே, சந்திரனுடைய மகி
மையும் வேறே, நட்சத்திரங்களுடைய மகிமை
யும் வேறே, அவைகளில் ஒரு நட்சத்திரத்தினு
டைய மகிமை மற்றொரு நட்சத்திரத்தின் மகி
மைக்கு மேற்படுகின்றதே.

42 அப்படிப்போல, மரித்தோர் உயிரோ
டெழும்புதலும் உண்டாயிருக்கும்; அழிவுள்ள
சரீரம் விதைக்கப்பட்டு, பின்பு அழிவில்லாமை
யாய் எழுந்திருக்கும். — 43 கனஈனமான சரீரம்
விதைக்கப்பட்டு, பின்பு மகிமையாய் எழுந்தி
ருக்கும்; பலஈனமுள்ள சரீரம் விதைக்கப்பட்டுப்
பின்பு பலமாய் எழுந்திருக்கும். — 44 சீவனான
சரீரம் விதைக்கப்படும்; ஆவிக்குரிய சரீரம் எழுந்
திருக்கும்;இரத்தமாம்சமுடைய சரீரமும் உண்டு;
ஆவிக்குரிய சரீரமும் உண்டு. — 45 ஆனதால்
வேதத்திலே எழுதியிருக்கிறபடி முந்தின மனித
னாகிய ஆதாம் சீவாத்துமாவானான், பிந்தின ஆ
தாம் உயிர்ப்பிக்கிற ஆவியானார்.—46 ஆவியான
சரீரம் முந்தினதாயிராமல், இரத்தமாம்சமுடைய
சரீரமே முந்தினதாயிருக்கிறது.—47 பின்பு ஆவி
யான சரீரம் உண்டாம்; முந்தின மனிதன் பூமி
யின் மண்ணானவன்; இரண்டாம் மனிதன் பர
மண்டலத்திற்குரிய கர்த்தர். — 48 மண்ணான
வன் எப்படியோ அப்படி மண்ணானவர்களும்
இருப்பார்கள்; பரமண்டலத்திற்குரியவர் எப்படி
யோ அப்படிப் பரமண்டலத்திற்குரியவர்களும்
இருப்பார்கள். — 49 மேலும் மண்ணானவனு
டைய சாயலை நாம் அணிந்திருக்கிறதுபோல, பர
மண்டலத்திற்குரியவருடைய சாயலையும் அணி
ந்துகொள்வோம்.

50 சகோதரரே, மாம்சமும் இரத்தமும் பரா
பரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிக்கக்கூடா
து; அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிக்கமாட்
டாது; ஆனதால் இவைகளைச் சொன்னேன்.—
51 மேலும் நான் உங்களுக்கு இரகசியத்தை அறி
விக்கிறேன்; (என்னவெனில்,) நாம் எல்லாரும்
நித்திரை அடைந்துபோவதில்லை; ஆகிலும் எல்
லாரும் கடைசி எக்காளம் தொனிக்கும்பொழுது

ஒரு நிமிஷத்திலே ஒரு இமைப்பொழுதிலே மறுரூபமாக்கப்படுவோம். — 52 எக்காளம் தொனிக்குமே; அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எழும்புவார்கள்.—53 அன்றியும் அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கினமாகிய இது சாவாமையையும் தரித்துக்கொள்ளவேண்டியபடியால், நாமும் மறுரூபமாக்கப்படுவோம்.

54 அந்தப்படி அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கினமாகிய இது சாவாமையையும் தரித்துக்கொள்ளும்பொழுது, மரணம் செயமாக விழுங்கப்பட்டதென்று எழுதியிருக்கிற வார்த்தை நிறைவேறும்.—55 ஆ மரணமே, உன் கூர்மை எங்கே? பாதாளமே, உன் செயம் எங்கே? மரணத்தின் கூர்மை பாவம்.—56 பாவத்தின் பலன் நியாயப்பிரமாணம். — 57 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே, நமக்குச் செயங்கொடுத்திருக்கிற பராபரனுக்குத் தோத்திரம் உண்டாவதாக. — 58 ஆகையால் எனக்குப் பிரியமான சகோதரரே, கர்த்தரைக்குறித்து உங்கள் வேலை வீணாயிராதென்று அறிந்து, நீங்கள் உறுதிப்பட்டவர்களாயும், அசையாதவர்களாயும், கர்த்தருடைய கிரியையிலே எப்பொழுதும் பெருகிக்கொள்ளுகிறவர்களாயும் இருப்பீர்களாக.

## யசா. அதிகாரம்.

பரிசுத்தவான்களுக்காகச் சேர்க்கப்படும் தருமங்களைக்குறித்து நான் கலாத்தியதேசத்துச் சபைகளுக்குப் பண்ணின திட்டத்தின்படியே, நீங்களும் செய்வீர்களாக —2 நான் வரும்பொழுதே தருமம் சேர்க்குதல் உண்டாயிராதபடிக்கு, உங்களில் அவனவன் வாரத்து முதல்நாள்தோறும் தன்தன் வாழ்வுக்குத்தக்கதாக எதையாகிலும் எடுத்து, தன்னிடத்திலே சேர்த்துவைக்கக்கடவன்.—3 நான் வந்திருக்கும்பொழுது, உங்களுடைய உபகாரத்தை எருசலேமுக்குக் கொண்டுபோகும்படிக்கு நீங்கள் நிரூபங்களினாலே ஏற்படுத்துகிறவர்கள் எவர்களோ, அவர்களை அனுப்புவேன்.—4 நானும் போகத் தகுதியானால், அவர்கள் என்னுடனேகூட வரலாம்.

5 நான் மக்கேதோனியா நாட்டின் வழியாய்ப் போகிறேன்; அதின்வழியாய்ப் போகும்பொழுது, உங்களிடத்திற்கு வருவேன்.—6 ஒருவேளை நான் உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருப்பேன்; நான் எங்கே போனாலும், நீங்கள் என்னை வழிவிட்டனுப்பும்படிக்கு, ஒருவேளை மாரிகாலம் முடியுமளவும் இருப்பேன்.—7 ஆனதால் நான் இப்பொழுது போகிற பிரயாணத்திலே உங்களைப் பார்க்கமாட்டேன்; கர்த்தர் உத்தரவுகொடுத்தால், உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருக்கலாம் என்று நம்பியிருக்கிறேன்.—8 இந்த எபேசு பட்டணத்திலே பெரிதும் பெலனுமான கதவு எனக்குத் திறக்கப்பட்டிருக்கிறபடியினாலும் விரோதஞ்செய்கிறவர்களும் அநேகர் இருக்கிறபடியினாலும், — 9 பெந்தக்கோஸ்து பண்டிகைவரைக்கும் இங்கே இருப்பேன்.

10 தீமோத்தேயு உங்களிடத்திற்கு வரும்பொழுது, அவன் உங்களிடத்தில் பயமில்லாமல் இருக்கும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; என்னைப்போல அவனும் கர்த்தருடைய கிரியையை நடப்பிக்கிறானே.—11 ஆனபடியினாலே ஒருவனும் அவனை அற்பமாய் எண்ணாதிருப்பானாக; அன்றியும் அவனும் அவனுடனேகூட இருக்கிற சகோதரரும் வருகிறதற்கு நான் காத்திருக்கிறபடியால், நீங்கள் அவனைச் சமாதானத்தோடே என்னிடத்தில் வரும்படிக்கு வழிவிட்டனுப்புங்கள். — 12 சகோதரனாகிய அப்பொல்லோவும் இந்தச் சகோதரரோடுங்கூட உங்களிடத்தில் வரும்படிக்கு, அவனை மிகவும் வேண்டிக்கொண்டேன்; அப்படியிருந்தும் இப்பொழுது போக அவனுக்கு மனதே இல்லை; அவனுக்கு நற்சமயம் உண்டாயிருக்கும்பொழுது உங்களிடத்தில் வருவான்.

13 விழித்திருங்கள், விசுவாசத்திலே நிலைத்திருங்கள்; புருஷராயிருங்கள்; பெலன்கொள்ளுங்கள். — 14 உங்கள் காரியங்களை எல்லாம் அன்போடே செய்வீர்களாக.

15 சகோதரரே, ஸ்தேவானுடைய குடும்பத்தார் அகாயதேசத்திலே முதற்பாகமானவர்கள் என்றும், பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்கள் தங்களை நியமித்தவர்கள் என்றும் அறிந்திருக்கிறீர்களே.—16 இப்படிப்பட்டவர்களுக்கும் உதவிசெய்து பிரயாசப்படுகிற மற்ற யாவருக்கும் நீங்களும் கீழ்ப்படிந்திருக்கவேண்டும் என்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன். — 17 ஸ்தேவானும் பொருத்துநாத்தும் அகாயிக்குசும் வந்து சேர்ந்ததினாலே சந்தோஷமாய் இருக்கிறேன். — 18 உங்கள் ஆவிக்குச் செய்ததுபோல அவர்கள் என்னுடைய ஆவிக்கும் ஆறுதல் செய்தபடியால் நீங்கள் இல்லாததினால் உண்டான குறைவை நீக்கி நிறைவுண்டாக்கினார்கள்; இப்படிப்பட்டவர்களைக் கனமாய் எண்ணிக்கொள்வீர்களாக.

19 ஆசியதேசத்திலுள்ள சபைகள் உங்களை வாழ்த்துதல் செய்கிறார்கள்; ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் தங்கள் வீட்டிலே கூடிய சபையோடுங்கூடக் கர்த்தரைப்பற்றிய உங்களை மிகவும் வாழ்த்துகிறார்கள். — 20 சகோதரர் எல்லாரும் உங்களை வாழ்த்துகிறார்கள்; நீங்கள் ஒருவரை ஒருவர் பரிசுத்தமான முத்தத்தினால் வாழ்த்துதல் செய்வீர்களாக.

21 பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதல்செய்கிறேன்.—22 ஒருவன் கர்த்த

ராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் அன்புகூ
ராமற்போனால், அவன் சபிக்கப்பட்டவனாய்
இருப்பான்; அவனுக்குத் தண்டிப்பாகக் கர்த்தர்
வருவார்.—23 கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவி
னுடைய கிருபை உங்களுடனேகூட இருக்கக்
கடவது.—24 என்னுடைய அன்பு கிறிஸ்து
இயேசுவைப் பற்றிக்கொள்ளுகிற உங்கள் எல்
லாரோடும்கூட இருக்கின்றது.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்
துவின் அப்போஸ்தலனாகிய பவுலும் சகோதரனா
கிய தீமோத்தேயும் கொரிந்துபட்டணத்திலுள்ள
பராபரனுடைய சபைக்கும் அகாயதேசம் எங்கு
முள்ள எல்லாப் பரிசுத்தவான்களுக்கும்கூட எழு
துகிறதாவது:—2 நம்முடைய பிதாவாகிய பரா
பரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும்
உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டா
கக்கடவது.

3 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து.
வின் பிதாவுமாய், பராபரனுமாய், மிகுந்த தயையு
டைய பிதாவுமாய், சகலவிதமான ஆறுதலையும்
அநுக்கிரகிக்கிற தேவனுமாய் இருக்கிறவர் தோத்
திரிக்கப்படக்கடவர். — 4 அவரே எங்களுக்கு
வரும் சகல உபத்திரவகாலங்களிலேயும் எங்க
ளுக்கு ஆறுதல்செய்கிறவர்; பராபரனாலே நாங்
கள் அடைகிற ஆறுதலினாலே சகலவித உபத்தி
ரவகாலங்களிலும் அகப்படுகிற மற்றவர்களுக்கு
நாங்கள் ஆறுதல்செய்யத் திராணியாய் இருக்கி
றோம். — 5 எப்படியெனில், கிறிஸ்துவின்நிமித்
தம் பாடுகள் எங்கள்மேலே பெருகுகிறது
போல, கிறிஸ்துவினாலே எங்களுக்கு ஆறுதலும்
பெருகுகின்றது.—6 ஆனதால் நாங்கள் உபத்தி
ரவப்பட்டால், அது உங்கள் ஆறுதலுக்காகவும்,
இரட்சிப்புக்காகவும் இருக்கும்; நாங்கள் ஆறுத
லடைந்தால், அதுவும் உங்கள் ஆறுதலுக்காக
இருக்கும்; நாங்கள் பாடுபடுகிறதுபோல, நீங்க
ளும் படுகிற பாடுகளைப் பொறுமையோடே சகிக்
கிறதினாலே, அந்த ஆறுதல் பலனைச் செய்கின்
றது. — 7 அப்படி நீங்கள் எங்களோடேகூடப்
பாடுபடுகிறதுமல்லாமல் எங்களோடேகூட ஆறு
தலையும் அடைகிறீர்கள் என்று நாங்கள் அறிந்து,
உங்களைக்குறித்து உறுதியான நம்பிக்கையுள்ள
வர்களாய் இருக்கிறோம்.

8 ஆகையால் சகோதரரே, ஆசியாவில் எங்க
ளுக்கு வந்த உபத்திரவத்தை நீங்கள் அறியாதி
ருக்கவேண்டுமென்று எங்களுக்கு மனதில்லை;
என்னவெனில் பிழைப்போமா என்றும் நாங்கள்
மிகவும் சந்தேகப்படத்தக்கதாக, (எங்கள்) பலத்
திற்கு மிஞ்சின அதிக பாரம் எங்களுக்கு உண்
டாயிற்று.—9 மேலும் மரணம் வருமென்று நாங்
கள் எங்களுக்குள்ளே நிச்சயித்திருந்தோம்; அது
எங்கள்மேலே அல்ல, மரித்தோரை எழுப்புகிற
பராபரன்மேலே நாங்கள் நம்பிக்கையாய் இருக்
கும்படிக்கு ஏதுவாயிருந்தது. — 10 அப்படிப்
பட்ட மரணத்தினின்று அவர் எங்களை இழுத்
தார்; இப்பொழுதும் இழுக்கிறார்; பின்னும் இழுப்
பார் என்று அவரை நம்பியிருக்கிறோம்.–11 அதற்
காக நீங்களும் விண்ணப்பத்தினாலே எங்களுக்கு
உதவிசெய்யும்பொழுது, அநேகர் நிமித்தம் எங்க
ளுக்கு உண்டான ஈவுக்காக அநேகராலே எங்
கள்நிமித்தம் தோத்திரங்களும் செலுத்தப்படும்.

12 அதற்கு ஏதுவாக எங்களுடைய புகழ்ச்சி
என்னவென்றால், நாங்கள் உலகத்திலே விசே
ஷமாக உங்களிடத்திலே கபடமில்லாமல் திவ்
விய உண்மையோடும் மாம்சத்திற்கு ஏற்ற ஞானத்
தோடே அல்ல, பராபரனுடைய கிருபையோ
டும் சஞ்சரித்தோம் என்று எங்கள் மனது எங்க
ளுக்குச் சாட்சிசொல்லுகின்றது; இதுவே எங்க
ளுடைய புகழ்ச்சி.—13 ஆனதால் (இங்கே)
நீங்கள் வாசித்தும் அறிந்து ஒத்துக்கொண்டும்
இருக்கிற பொருள்களையே அன்றி, வேறே பொ
ருள்களை நாங்கள் உங்களுக்கு எழுதுகிறதில்லை;
முடிவுபரியந்தமும் அப்படியே அறிந்து ஒத்துக்
கொள்வீர்கள் என்று நம்பியிருக்கிறேன்.–14 கர்த்
தராகிய இயேசுவினுடைய நாளிலே நீங்கள் எங்
களுக்குப் புகழ்ச்சியாயிருப்பதுபோல, நாங்களும்
உங்களுக்குப் புகழ்ச்சியாயிருக்கிறதை ஒரு பாக
மாய் அறிந்து ஒத்துக்கொண்டிருக்கிறீர்களே.

15 இப்படிப்பட்ட நம்பிக்கையினாலே நான்
உங்களுக்கு மறுபடியும் உபகாரம் உண்டாகும்ப
டிக்கு, – 16 முதலாவது உங்களிடத்தில் வரவும்,

உங்கள் ஊர்வழியாக மக்கேதோனியா நாட்டுக்
குப் போகவும், மக்கேதோனியாவை விட்டுத் திரு
ம்ப உங்களிடத்தில் வரவும், உங்களால் யூதேயா
நாட்டுக்கு வழிவிட்டு அனுப்பப்படவும் யோசனை
யாய் இருந்தேன். — 17 இப்படி நான் வீணாகவா
யோசித்தேன்? அல்லது என்னிடத்திலே ஆம்
என்பது ஆமென்றும், அல்லவென்பது அல்லவெ
ன்றும் இருக்கத்தக்கதாக, நான் யோசிக்கிறவைக
ளைத் தேக இச்சையின்படியா யோசிக்கிறேன்?
18 அப்படியல்ல, நாங்கள் உங்களுக்குச்
சொன்ன வார்த்தை ஆம் என்றும், அல்ல என்
றும் இருக்கவில்லை என்கிறதற்கு உண்மையுள்ள
பராபரனே சாட்சியாய் இருக்கிறார். — 19 பராபர
னுடைய வாக்குத்தத்தங்கள் எல்லாம் இயேசுக்
கிறிஸ்துவினாலே ஆமென்றும் ஆமனென்றும் இ
ருக்கிறபடியால், — 20 பராபரனுடைய மகிமை
பிரஸ்தாபமாகும்படிக்கு, என்னாலும் சிலுவானு
வினாலும் தீமோத்தேயுவினாலும் உங்களுக்குள்
ளே பிரசங்கிக்கப்பட்ட பராபரனுடைய குமார
னாகிய இயேசுக்கிறிஸ்துவும் ஆமென்றும் அல்ல
வென்றும் இராமல், ஆம் என்று (எப்பொழுதும்
ஒரேவிதமாய்) இருந்தாரே. — 21 எங்களையும் உங்
களையும் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி, நமக்கு
அபிஷேகம்பண்ணினவர் பராபரன். — 22 அவ
ரும் நம்மை முத்திரைப்படுத்தி, நம்முடைய இரு
தயங்களில் ஆவியென்னும் அச்சாரத்தைக் கொ
டுத்திருக்கிறார்.
23 நான் உங்களைத் தப்பவிடும்படிக்கே இது
வரைக்கும் கொரிந்துபட்டணத்திற்கு வாராதிருக்
கிறேன்; இதைக்குறித்து என் ஆத்துமாவுக்குச்
சாட்சியாகப் பராபரனையே அழைக்கிறேன். —
24 விசுவாசத்தின் நிமித்தம் நாங்கள் உங்களைப்
பலவந்தமாய் ஆளுகிறவர்களாக அல்ல, நீங்கள்
(இதுவரைக்கும்) விசுவாசத்திலே நிலைநிற்கிறப
டியால், உங்கள் சந்தோஷத்திற்கு உதவிக்கார
ராகவே இப்படிச் சொல்லுகிறேன்.

## ௨. அதிகாரம்.

ஆனதால், துக்கத்துடனே நான் உங்களிடத்தி
லே திரும்ப வராதபடிக்கு எனக்குள்ளே தீர்மா
னம்செய்தேன். — 2 நான் உங்களைத் துக்கப்படுத்
தினால் என்னாலே துக்கம் அடைந்தவனே அல்
லாமல், எவன் என்னைச் சந்தோஷப்படுத்து
வான்? — 3 ஆகையால் என்னுடைய சந்தோ
ஷம் உங்கள் எல்லாருக்கும் சந்தோஷமாய்
இருக்குமென்று நான் உங்கள் எல்லாரையும் நம்
பிக்கொண்டு, நான் வரும்பொழுது எனக்குச் சந்
தோஷம் உண்டாக்கவேண்டியவர்களால் நான்
துக்கம் அடையாதபடிக்கு, (முன்னே) அப்
படித்தானே உங்களுக்கு எழுதினேன். —
4 அன்றியும் மிகுந்த வியாகுலமும் மனஇடுக்க
மும் அடைந்தவனாய், அதிகமான கண்ணீரோ
டே உங்களுக்கு எழுதினேன்; நீங்கள் துக்கப்ப
டும்படிக்கு அல்ல, உங்கள்மேலே அதிகமாயி
ருக்கிற என்னுடைய அன்பை நீங்கள் அறியும்ப
டிக்கே அப்படிச் செய்தேன்.
5 துக்கம் உண்டாக்கினவன் என்னை (மாத்
திரமல்ல) நான் அதிக பாரம் வையாதபடிக்கு,
(என்னாலே) ஒருவிதமாய் உங்கள் எல்லாரை
யும் துக்கப்படுத்தினான். — 6 அப்படிப்பட்டவ
னுக்கு அநேகரால் உண்டான இந்தத் தண்டனை
போதும். — 7 ஆனதால் அவன் அதிக துக்கத்தி
னாலே விழுங்கப்படாதபடிக்கு, நீங்கள் அதிக
சந்தோஷமாய் அவனுக்கு மன்னித்து ஆறுதல்
செய்யவேண்டும். — 8 அந்தப்படி நீங்கள் உங்கள்
அன்பை அவனுக்குக் காண்பிப்பீர்களாக என்று
உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். — 9 அதற்
காகவும் நீங்கள் சகலத்திலேயும் கீழ்ப்படிந்திருக்
கிறீர்களோ என்று உங்கள் குணத்தை அறியவும்
இப்படி எழுதியிருந்தேன். — 10 ஆனதால் யா
ருக்கு மன்னிக்கிறீர்களோ, அவனுக்கு நானும்
மன்னிக்கிறேன்; மேலும் எதை நான் (இப்பொ
ழுது) மன்னித்தேனோ, அதை நான் உங்கள்
நிமித்தம் கிறிஸ்துவினுடைய சந்நிதானத்திலே
மன்னித்தேன். — 11 சாத்தானுடைய யோசனை
கள் எங்களுக்குத் தெரியாமல் இருக்கவில்லை;
ஆனதால் நாம் அவனாலே மேற்கொள்ளப்படா
தபடிக்கு அப்படிச் செய்தேன்.
12 மேலும் நான் கிறிஸ்துவின் சுவிசேஷத்
தைப் பிரசங்கிக்கும்படி துரோவாப் பட்டணத்
திலே வந்தபொழுது, கர்த்தராலே எனக்குக்
கதவு திறக்கப்பட்டிருக்கையில், — 13 நான் என்
சகோதரனாகிய தீத்துவைக் காணாததினாலே என்
ஆவிக்கு அமைதல் இருக்கவில்லை; ஆனதால்
நான் அவர்களாலே அனுப்பப்பட்டு, மக்கேதோ
னியா நாட்டுக்குப் புறப்பட்டுப்போனேன்.
14 கிறிஸ்துவினாலே எங்களை எப்பொழுதும்
வெற்றிசிறக்கப்பண்ணி, எல்லா இடங்களிலே
யும் எங்களைக்கொண்டு அவரை அறிகிற அறி
வின் வாசனையை வெளிப்படுத்துகிற பராபரனுக்
குத் தோத்திரம் உண்டாவதாக. — 15 இரட்சிக்
கப்படுகிறவர்களுக்குள்ளேயும் கெட்டுப்போகிற
வர்களுக்குள்ளேயும் நாங்கள் பராபரனுக்குக் கி
றிஸ்துவின் நற்கந்தமாய் இருக்கிறோமே. —
16 கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே மரணத்
திற்கு ஏதுவான மரணவாசனையாகவும்; இரட்சிக்
கப்படுகிறவர்களுக்குள்ளே ஜீவனுக்கு ஏதுவான
ஜீவவாசனையாகவுமே இருக்கிறோம்; இவைகளைப்
(போதிக்கிறதற்கு) யார் தகுதியாயிருக்கிறார்
கள். — 17 அநேகர் செய்கிறதுபோல நாங்கள்
பராபரனுடைய வசனத்தைக் கலப்பாய்ப் பேசா
மல், துப்புரவாகவும் பராபரனாலே பெற்றதாகவும்
பராபரனுக்குமுன்பாகவும் கிறிஸ்துவைக்குறித்துப்
பேசுகிறோம்.

## ௩. அதிகாரம்.

ஏங்களை நாங்களே மறுபடியும் மெச்சிக்கொள்ளத் தொடங்குகிறோமா? அல்லது சிலருக்கு வேண்டியதாயிருக்கிறதுபோல, உங்களுக்கு உபசார நிருபங்களை அனுப்பவும், அல்லது உங்களிடத்தில் உபசார நிருபங்களை வாங்கவும், எங்களுக்கு வேண்டுமோ? — 2 நீங்களே எங்களுக்கு அப்படிப்பட்ட நிருபமாயிருக்கிறீர்கள்; அது எங்கள் இருதயங்களில் எழுதப்பட்டிருக்கிறது; மேலும் அது சகல மனிதராலும் அறிந்து வாசிக்கப்பட்டுவருகின்றது. — 3 நீங்களே எங்கள் ஊழியத்தில் உண்டான கிறிஸ்துவினுடைய நிருபமாக வெளியரங்கமாக்கப்பட்டவர்கள்; அது மையினாலல்ல, சீவனுள்ள பராபரனுடைய ஆவியினாலே, கற்பலகைகளில் அல்ல, மாம்சமான இருதயங்களாகிய பலகைகளிலே எழுதப்பட்டிருக்கின்றது.

4 இப்படிப்பட்ட நம்பிக்கையை நாங்கள் பராபரனுக்கு முன்பாகக் கிறிஸ்துவின் மூலமாகக் கொண்டிருக்கிறோம்.—5 ஒன்றை யோசிக்கிறதற்கு நாங்கள் எங்களாலே திராணியுள்ளவர்களாக அல்ல, எங்களுடைய திராணி பராபரனால் உண்டாயிருக்கின்றது.—6 நாங்கள் புது உடம்படிக்கையின் ஊழியக்காரராயிருக்கும்படி அவரே எங்களுக்குத் திராணியைக் கொடுத்தார்; அந்த உடம்படிக்கை எழுத்திற்குரியதல்ல,ஆவிக்குரிய உடம்படிக்கையாயிருக்கின்றது. எழுத்திற்குரியது கொலைசெய்கின்றது; ஆவிக்குரியது உயிர்ப்பிக்கின்றதே.—7 கற்களில் எழுத்துக்களால் பதிந்திருந்த மரணத்திற்கு ஏதுவான ஊழியத்தை மோசே செய்தபொழுது, அவனுடைய முகத்திலே மகிமைப் பிரகாசம் உண்டானதால், இஸ்ரவேல் சந்ததியார் அவனுடைய முகத்தை நோக்கிப் பார்க்கமாட்டாமல் இருந்தார்களே; ஒழிந்துபோன மகிமையையுடைய அந்த ஊழியம் அப்படிப்பட்ட மகிமையுள்ளதாயிருக்க, — 8 ஆவிக்கேற்ற உடம்படிக்கையின் ஊழியம் மிகவும் அதிகமாய் மகிமையுள்ளதாய் இருக்குமல்லவா?—9 ஆக்கினைத்தீர்ப்பைக் கொடுத்த ஊழியம் மகிமையுள்ளதாயிருக்க, நீதியைக் கொடுக்கிற ஊழியம் மிகவும் அதிகமான மகிமையாய் இருக்கும் அல்லவா?–10 இதின்பொருட்டாக மகிமைப்பட்டிருந்த அந்த ஊழியம் இந்த ஊழியத்திற்கு உண்டாயிருக்கிற அதிக மகிமைக்கு முன்பாக மகிமைப்பட்டதல்ல.—11 அன்றியும் ஒழிந்துபோனது மகிமைகொண்டிருப்பதால், நிலைநிற்பது மிகவும் அதிகமாய் மகிமையுள்ளதாயிருக்குமே.

12 ஆனதால் இப்படிப்பட்ட நம்பிக்கையை உடையவர்களாய், நாங்கள் மிகுந்த தயிரியத்தோடே நடக்கிறோம்.—13 அன்றியும் ஒழிந்துபோகிறதின் முடிவை இஸ்ரவேல் சந்ததியார் நோக்கிப் பாராதபடிக்கு, மோசே தன் முகத்தின்மேல் முக்காடு போட்டதுபோல, நாங்கள் போடுகிறதில்லை. — 14 அவர்களுடைய புத்தி கடினமாயிருந்தது; இந்நாள்வரைக்கும் பழைய ஏற்பாட்டின் புத்தகம் வாசிக்கப்படுகையில் அந்த முக்காடு அவர்களிடத்தில் இருக்கின்றது.–15 அந்தப் பழைய உடம்படிக்கை கிறிஸ்துவினாலே நீக்கப்பட்டதென்று அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதில்லை; ஆனதால் மோசேயின் ஆகமங்கள் வாசிக்கப்படும்பொழுது, இந்நாள்வரைக்கும் முக்காடு அவர்கள் இருதயத்தின்மேலே கிடக்கின்றது. — 16 அவர்கள் கர்த்தரிடத்தில் மனம் திருப்பும்பொழுது, அந்த முக்காடு எடுக்கப்படும்.–17 கர்த்தரே அந்த ஆவியாயிருக்கிறார்; கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலையும் இருக்கின்றது.—18 ஆதலால் நாம் எல்லாரும் திறந்தமுகமாய்க் கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே கண்டாற்போலக் கண்டு, ஆவியாயிருக்கிற கர்த்தரால் அந்தச் சாயலாகத்தானே மகிமையின்மேல் மகிமை அடைந்து மறுரூபப்படுகிறோம்.

## ௪. அதிகாரம்.

இப்படிப்பட்ட ஊழியம் எங்களுக்கு இரக்கமாய் உண்டாயிருக்கிறபடியால், நாங்கள் இளைப்படையாமல்,—2 அவலட்சணமான அந்தரங்க காரியங்களைத் தள்ளிப்போட்டு, தந்திரமாய் நடவாமலும், பராபரனுடைய வசனத்தைப் புரட்டாமலும், சத்தியத்தையே வெளிப்படுத்துகிறதினாலே பராபரனுக்குமுன்பாக எல்லா மனிதருடைய மனதுக்கும் எங்களை (நிசஸ்தரென்று) ஒப்புவிக்கிறோம்.

3 அப்படியும் நாங்கள் பிரசங்கிக்கிற சுவிசேஷம் மறைபொருளாயிருந்தால், தங்களைக் கெடுக்கிறவர்களுக்குள்ளேமாத்திரம் அது மறைபொருளாயிருக்கும்.—4 அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் பராபரனுடைய சாயலாகிய கிறிஸ்துவின் மகிமையான சுவிசேஷத்தின் ஒளி பிரகாசமாயிராதபடிக்கு இவ்வுலகத்தின் தலைவன் அவர்களுடைய புத்தியைக் குருடாக்கினான்.—5 நாங்கள் (எங்களைக் கர்த்தரென்று) பிரசங்கியாமல், கிறிஸ்து இயேசுவையே கர்த்தரென்றும், எங்களை இயேசுவுக்காக உங்கள் ஊழியக்காரர் என்றும் பிரசங்கிக்கிறோம்.—6 இருளிலிருந்து ஒளியைப் பிரகாசிக்கச் சொன்ன பராபரன் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் உள்ள தமது மகிமையை அறிகிற அறிவாகிய ஒளியை (உங்களுக்கு) தோன்றப்பண்ணும்பொருட்டாக, எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார்.

7 இப்படிப்பட்ட மகிமையான வல்லமை எங்களால் அல்ல, பராபரனால் உண்டாயிருக்கின்றதென்று தோன்றும்படிக்கு, இந்தப் பொக்

கிஷத்தை மண்பாண்டங்களில் பெற்றிருக்கி
ரேம்.–8 நாங்கள் எப்பக்கத்திலேயும் நெருக்கப்
பட்டும், ஒடுங்கிப்போகிறதில்லை; கலக்கமடைந்
தும் திடனற்றவர்கள் ஆகிறதில்லை.—9 தொட
ரப்பட்டும் கைவிடப்படுகிறதில்லை; கீழே தள்
ளப்பட்டும் கெட்டுப்போகிறதில்லை.–10 இயே
சுவினுடைய சீவனும் எங்கள் சரீரத்திலே வெளி
யரங்கமாகும்படிக்கு, கர்த்தராகிய இயேசுவின்
மரணத்தை எப்பொழுதும் எங்கள் சரீரத்தில்
சுமந்து திரிகிறேம்.—11 சாவுக்கினமான எங்கள்
சரீரத்திலே இயேசுவினுடைய சீவனும் வெளி
யரங்கமாகும்படிக்கு, உயிரோடிருக்கிற நாங்கள்
எப்பொழுதும் இயேசுவின் நிமித்தமாக மரணத்
திற்கு ஒப்புக்கொடுக்கப்படுகிறேம்.

12 இப்படி மரணமானது எங்களிடத்திலும்
சீவனனது உங்களிடத்திலும் கிரியைசெய்கின்
றது. — 13 நான் விசுவாசித்திருக்கிறபடியால்
பேசிக்கொள்ளுகிறேன் என்று எழுதியிருக்கிற
படி, விசுவாச ஆவியை உடையவர்களாய், —
14 நாங்களும் கர்த்தராகிய இயேசுவை எழுப்
பினவர் எங்களையும் இயேசுவைக்கொண்டு எ
ழுப்பி, உங்களுடனேகூடத் தமக்குமுன்பாக
நிறுத்துவாரென்று அறிந்து விசுவாசித்துப் பேசிக்
கொள்ளுகிறேம்.–15 திரளான கிருபை அநேக
ருடைய தோத்திரத்தினலே பராபரனுடைய மகி
மை விளங்குதற்கு ஏதுவாகப் பெருகும்படிக்கு,
இவையெல்லாம் உங்கள் (நன்மைக்காக) நடக்
கின்றன.

16 ஆனபடியினலே நாங்கள் இளைப்படை
கிறதில்லை; மேலும் எங்கள் புறம்பான மனிதத்
துவம் அழிகையிலும் உள்ளான மனிதத்துவம்
நாள்தோறும் புதிதாக்கப்படுகின்றது.–17 மேலும்
அதிசீக்கிரமாய் நீங்குவதுமாய் இலகுவுமாயிருக்
கிற நம்முடைய உபத்திரவம் மிகவும் மிகுதியான
நித்திய கனமகிமையை நமக்கு உண்டாக்குகின்
றது.–18 காணப்படுகிறவைகளை அல்ல, காணப்
படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கே அப்
படி உண்டாக்குகின்றது; காணப்படுகிறவை
கள் அநித்தியமானவைகள்; காணப்படாதவைக
ளே நித்தியமானவைகள்.

## ரு. அதிகாரம்.

அது எப்படியென்றல், பூமிக்குரிய கூடாரம்
போன்ற நம்முடைய வீடு இடிந்துபோகும்பொ
ழுது, பரமண்டலங்களிலே கையால் செய்யப்ப
டாமல், தேவனல் உண்டாக்கப்பட்ட நித்தியமா
ன வீடாகிய வாசஸ்தலம் நமக்கு உண்டென்று
அறிந்திருக்கிறேம்.—2 நாம் வீடில்லாதவர்கள்
அல்ல.—3 தரிக்கப்பட்டவர்களாய் இருக்க, பர
மண்டலத்திலுள்ள நமது வாசஸ்தலத்தை நாம்
தரித்துக்கொள்ள மிகவும் விரும்புகிறவர்களாய்,
இந்த வீட்டிலே தவித்திருக்கிறேம்.—4 இந்தக்
கூடாரத்தில் இருக்கையில், நாம் பாரம் சுமந்து
தவிக்கிறேம்; ஆனதால் நாங்கள் (இதைப்) போர்
க்க விரும்பாமல் சீவனலே மரணம் விழுங்கப்ப
டத்தக்கதாக, (உடனே) அதைத் தரித்துக்
கொள்ள விரும்புகிறேம்.—5 இப்படியே இருக்
கும்படி பராபரனே எங்களை எத்தனம்பண்ணி,
ஆவியென்னும் அச்சாரத்தையும் எங்களுக்குத்தந்
தார்.—6 ஆகையினலே நாங்கள் இந்தத் தேகத்
திலே குடியிருக்கையில், தரிசித்து நடவாமல்
விசுவாசித்து நடக்கிறதால்,—7 கர்த்தாவைச் சே
ராத வழிப்போக்கராயிருக்கிறேம் என்று அறிந்
தும், (எப்பொழுதும்) தயிரியமாய் இருக்கி
றேம்.—8 நாங்கள் தயிரியமாகவே இருந்து, இந்
தத் தேகத்தைவிட்டுப் போகவும் கர்த்தரிடத்தில்
குடியிருக்கவும் அதிகமாய் விரும்புகிறேம்.–9 அ
தின்நிமித்தமே நாங்கள் (அவரிடத்தில்) குடியி
ருந்தாலும், (அவரைவிட்டு) இங்கே சஞ்சரித்
தாலும், அவருக்குப் பிரியமானவர்களாயிருக்க
முக்கியமாய் நாடுகிறேம்.—10 நாம் எல்லாரும்
அவனவன் தான் நடப்பித்த நன்மைக்காகிலும்
தீமைக்காகிலும் தக்கவைகளைச் சரீரத்திலேஅடை
யும்படிக்கு, கிறிஸ்துவின் நியாயாசனத்திற்குமுன்
பாக வெளிப்படவேண்டுமே.

11 ஆகையால் கர்த்தருக்குப் பயப்படத்தக்க
தென்று நாங்கள் அறிநது, மனிதருக்குப் போதிக்
கிறேம்; இப்படிப் பராபரனுக்குமுன்பாக வெளி
யரங்கமாய் இருக்கிறேம்; உங்கள் மனதிலேயும்
(அப்படியே) வெளியரங்கமாய் இருக்கிறேம்
என்று நம்புகிறேன்.—12 இதினலே நாங்கள்
உங்களுக்குமுன்பாக எங்களை மறுபடியும் மெச்
சிக்கொள்ளாமல், இருதயத்தால் அல்ல வெளி
வேஷத்தால் மேன்மைபாராட்டுகிறவர்களுக்கு
எதிரே நீங்கள் எங்களைக்குறித்து மேன்மைபா
ராட்டும்படிக்கு ஏது கொடுக்கிறேம்.—13 (அ
திலே) நாங்கள் பித்தங்கொண்டவர்கள் என்
றல் பராபரனுக்காகவும், தெளிந்த புத்தியுள்ளவர்
கள் என்றல் உங்களுக்காகவும் அப்படி இருக்
கும்.–14 அதற்காகக் கிறிஸ்துவினுடைய அன்பு
எங்களை நெருக்கி ஏவுகின்றது; எப்படி நிதானிக்
கிறேமென்றல், எல்லாருக்காகவும் ஒருவரே
மரித்திருக்க எல்லாரும் மரித்தார்கள்.–15 மேலும்
பிழைத்திருக்கிறவர்கள் இனித் தங்களுக்கென்று
பிழையாமல், தங்களுக்காக மரித்து எழுந்தவருக்
கென்று பிழைக்கும்படிக்கு, அவர் எல்லாருக்கா
கவும் மரித்தாரே என்று நிதானிக்கிறேம். —
16 ஆகையால் இதுமுதற்கொண்டு நாங்கள்
ஒருவனையும் மாம்சத்தின்படி அறியோம்; முன்
னே நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி
அறிந்தும், இப்பொழுதும் இனிமேலும் அவரை
அப்படியாக அறியோம். — 17 கிறிஸ்துவுக்குள்
இருக்கிறவன் புதுச் சிருஷ்டியாயிருக்கிறனே;
பழையவைகள் ஒழிந்துபோயின; சகலமும் புதி

தாயிற்றே.—18 இவையெல்லாம் பராபரனாலே இருக்கின்றன; அவர் இயேசுக்கிறிஸ்துவைக் கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்குக் கொடுத்தார். — 19 என்னவெனில் கிறிஸ்துவினாலே பராபரன் உலகத்தாருடைய பாவங்களை அவர்கள்மேலே சுமத்தாமல் அவர்களைத் தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குதலாகிய உபதேசத்தை எங்களிடத்தில் ஏற்படுத்தினார்.

20 ஆனபடியினாலே நாங்கள் கிறிஸ்துவுக்காகத் தானாதிபதிகளாயிருக்கிறோம்; பராபரனே எங்களாலே புத்திசொல்லுகிறவராயிருக்க, நாங்கள் கிறிஸ்துவுக்காக (மனிதர்களை) நோக்கி, — 21 பாவத்தை அறியாதவராலே நாம் பராபரனுக்கு முன்பாக நீதிமான்களாக்கப்படும்படிக்கு, பராபரன் அவரை நமக்காகப் பாவமாக்கினார்; ஆகையால் பராபரனோடே ஒப்புரவாகுங்கள் என்று வேண்டிக்கொள்ளுகிறோம்.

## ௬. அதிகாரம்.

மேலும் (எனக்குத்) தகுதியான காலத்திலே நான் உனக்குச் செவிகொடுத்து, இரட்சண்ணிய நாளிலே உனக்கு உதவிசெய்தேன் என்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே, பாருங்கள், இப்பொழுதே மிகவும் தகுதியான காலம், இப்பொழுதே இரட்சண்ணியநாள்.—2 ஆனதால் எங்களுடனேகூட வேலைசெய்கிறவர்களே, நீங்கள் பராபரனுடைய கிருபையை வீணாய்ப் பெறுதபடிக்குப் புத்திசொல்லுகிறேன்.—3 நம்முடைய ஊழியத்தைக் குற்றப்படுத்தத்தக்கதாக நாம் ஒருவருக்கும் முகாந்தரத்தைக் கொடாமல், எல்லாவிதத்திலேயும் நம்மைப் பராபரனுடைய ஊழியக்காரராக ஒப்புவிக்கக்கடவோம். — 4 உபத்திரவங்கள், இடுக்கண்கள், நெருக்கங்கள்,—5 அடிகள், காவல்கள், கலகங்கள், பிரயாசங்கள், தூக்கமில்லாமை, உபவாசங்களுள்ள காலங்களில் மிகுந்த பொறுமையினாலும், கற்பினாலும், அறிவினாலும், — 6 நீடிய சாந்தத்தினாலும், தயவினாலும், பரிசுத்தமனதினாலும், வஞ்சகமில்லாத அன்பினாலும்,—7 சத்தியமுள்ள வசனத்தினாலும், திவ்விய பலத்தினாலும், நீதியாகிய வலது இடதுபக்கத்து ஆயுதங்களினாலும், — 8 கனத்தையும் கனஈனத்தையும் பெறுங்காலத்திலேயும், துர்க்கீர்த்தியையும் நற்கீர்த்தியையும் பெறுங்காலத்திலேயும், எத்தர் என்னப்பட்டாலும் நிசஸ்தராகவும்,—9 அறியப்படாதவர்கள் என்னப்பட்டாலும் நன்றாய் அறியப்பட்டவர்களாகவும், மரித்தவர்கள் என்னப்பட்டாலும் உயிரோடிருக்கிறவர்களாகவும், தண்டிக்கப்பட்டவர்களானாலும் கொலைசெய்யப்பட்டிராதவர்களாகவும், — 10 துக்கப்படுகிறவர்கள் என்னப்பட்டாலும் எப்பொழுதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும், தரித்திரர் என்னப்பட்டாலும் அநேகரை ஐசுவரியவான்கள் ஆக்குகிறவர்களாகவும், ஒன்றுமில்லாதவர்கள் என்னப்பட்டாலும் சகலத்தையும் உடையவர்களாகவும் நம்மை ஒப்புவிக்கக்கடவோம்.

11 ஆ கொரிந்தியரே, எங்கள் வாய் உங்கள் பட்சமாய்த் திறக்கப்பட்டிருக்கிறது; எங்கள் இருதயம் விஸ்தாரமாக்கப்பட்டிருக்கின்றது.–12 எங்கள் உள்ளம் உங்களைக்குறித்து நெருக்கப்படவில்லை; உங்கள் உள்ளமே எங்களைக்குறித்து நெருக்கப்பட்டிருக்கின்றது.—13 ஆதலால் மறு ஈடாக நீங்களும் விஸ்தாரமாகுங்கள் என்று (என்) பிள்ளைகளைப்போல உங்களிடத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

14 ஒரே நுகத்திலே அவிசுவாசிகளுடனே பூட்டப்படாதிருப்பீர்களாக; என்னத்தினாலெனில், நீதிக்கும் அக்கிரமத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இருளுக்கும் ஒளிக்கும் ஐக்கம் என்ன?–15 கிறிஸ்துவுக்கும் பிசாசுக்கும் இசைவுண்டா? அல்லது அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்குண்டா?–16 விக்கிரகக்கோவில்களுக்கும் பராபரனுடைய ஆலயத்திற்கும் சம்பந்தம் உண்டா? நான் அவர்களுக்குள்ளே வாசம்பண்ணி, அவர்களுக்குள்ளே நடந்துகொண்டு, அவர்களுடைய தேவனாயிருப்பேன் என்றும், அவர்கள் என்னுடைய சனங்களாயிருப்பார்கள் என்றும் பராபரன் சொன்னபடி, நீங்கள் சீவனுள்ள பராபரனுடைய ஆலயமாயிருக்கிறீர்களே. — 17 ஆனபடியினாலே நீங்கள் அவர்களிடத்திலிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய், அசுத்தமானதைத் தொடாதிருங்கள்.–18 அப்பொழுது நான் உங்களை அங்கிகரித்துக்கொண்டு, உங்களுக்குப் பிதாவாயிருப்பேன்; நீங்கள் எனக்குக் குமாரருமாய்க் குமாரத்திகளுமாய் இருப்பீர்கள் என்று சர்வவல்லமையுள்ள பராபரன் சொல்லுகிறார்.

## ௭. அதிகாரம்.

இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்கு உண்டாயிருக்க, பிரியமானவர்களே, சரீரத்தையும் ஆவியையும் அசுசிப்படுத்துகிற யாவற்றிற்கும் நாம் விலகி, நம்மைச் சுத்திகரித்துக்கொண்டு, தேவபயத்தோடே முழுவதும் பரிசுத்தவான்களாகும்படி நடந்துகொள்ளக்கடவோம்.

2 எங்களை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்; நாங்கள் ஒருவனுக்கும் அநியாயம்செய்யவில்லை; ஒருவனையும் கெடுக்கவில்லை.—3 ஒருவனையும் வஞ்சிக்கவில்லை; உங்களைக் குற்றவாளிகளாக்கும்பொருட்டாக இப்படி நான் சொல்லுகிறதில்லை; முன்னே நான் சொன்னபடி (உங்களுடனே) கூடச்சாவவும் கூடப்பிழைக்கவும்தக்கதாக, எங்கள் இருதயங்களில் இருக்கிறீர்களே.—4 (ஆனதால்) மிகுந்த தயிரியத்தோடே உங்களுடனே பேசுகிறேன்; உங்களைக்குறித்து மிகவும் மேன்

மையபாராட்டுகிறேன்; ஆறுதலால் நிறையப்பட்டி
ருக்கிறேன்; எங்களுக்கு வந்திருக்கிற மிகுந்த உ
பத்திரவத்திலேபரிபூரணசந்தோஷப்படுகிறேன்.
5 எப்படியென்றால், நாங்கள் மக்கேதோனி
யாநாட்டிலே வந்தபொழுது, எங்கள் சரீரத்திற்கு
அமைதல் ஒன்றுமில்லாமல் எப்பக்கத்திலேயும்
உபத்திரவப்பட்டோம்; புறம்பே போராட்டங்க
ளும் உள்ளே பயங்களும் இருந்தன.—6 ஆகிலும்
தாழ்மையானவர்களுக்கு ஆறுதல்செய்கிற பரா
பரன் தீத்து வந்ததினாலே எங்களுக்கு ஆறுதல்
செய்தார்.—7 அவன் வந்ததினால்மாத்திரம் அல்
ல, உங்கள் வாஞ்சையையும், உங்கள் துக்கிப்
பையும், எனக்காக உங்களுக்குள்ள பத்திவைராக்
கியத்தையும் அவன் எங்களுக்கு அறிவித்தபொ
ழுது, தான் உங்களாலே ஆறுதல் அடைந்ததி
னாலும் அதிகமாய்ச் சந்தோஷப்பட்டேன். —
8 ஆனதால் நான் என் நிருபத்தினாலே உங்க
ளைத் துக்கப்படுத்தியிருந்தும் மனஸ்தாபப்பட
மாட்டேன்; அந்த நிருபம் கொஞ்சப்பொழுதா
கிலும் உங்களைத் துக்கப்படுத்திற்றென்று நான்
பார்த்து, மனஸ்தாபப்பட்டிருந்தும், இப்பொழுது
நீங்கள் துக்கப்பட்டதினாலே அல்ல, — 9 நீங்
கள் மனம்திருப்புகிறதற்கு ஏதுவாகத் துக்கப்பட்
டதினாலே சந்தோஷப்படுகிறேன்; நீங்கள் ஒன்
றிலும் எங்களால் நஷ்டப்படாதபடிக்கு, தேவ
எத்தனமான துக்கம் அடைந்தீர்களே.–10 தேவ
எத்தனமான துக்கம் பின்னே மனஸ்தாபம் இல்
லாமல், இரட்சிப்புக்கு ஏதுவான மனம்திருப்பு
தலை உண்டாக்குகின்றது; இலவுகிக துக்கம் மர
ணத்தை உண்டாக்குகின்றது.—11 பாருங்கள்,
நீங்கள் (தேவ எத்தனமான) துக்கம் அடைந்
தது, உங்களிடத்தில் எத்தனை சாக்கிரதையை
யும், எத்தனை நியாயம்சொல்லுதலையும், எத்தனை
விசனத்தையும், எத்தனை பயத்தையும், எத்தனை
வாஞ்சையையும், எத்தனை பத்திவைராக்கியத்தை
யும், எத்தனை தண்டனையையும் உண்டாக்கிற்று?
அந்தச் சங்கதியைக்குறித்து நீங்கள் எவ்விதத்தி
லேயும் உங்களைச் சுத்தவான்களென்று ஒப்புவித்
தீர்கள். — 12 ஆகையினாலே நான் உங்களுக்கு
அப்படி எழுதியிருந்தும், அநியாயத்தைச் செய்த
வன்நிமித்தம் அல்ல, அநியாயம் செய்யப்பட்ட
வன்நிமித்தமும் அல்ல, பராபரனுக்குமுன்பாக
உங்களைக்குறித்து எங்களுக்கு உண்டாயிருக்கிற
சாக்கிரதை உங்களிடத்தில் வெளிப்படுவதின்
நிமித்தமாகவே அப்படி எழுதியிருந்தேன்.
13 ஆனதால் நீங்கள் ஆறுதல் அடைந்ததி
னாலே நாங்களும் ஆறுதல் உள்ளவர்களாய் இ
ருக்கிறோம்; விசேஷமாகத் தீத்துவினுடைய ஆவி
உங்கள் அனைவராலும் ஆறுதல் அடைந்ததினா
லே அவனுக்கு வந்த சந்தோஷத்தால் அதிக
மாய்ச் சந்தோஷப்பட்டோம். — 14 இப்படியி
ருக்க, உங்களுக்குப் புகழ்ச்சியாய் நான் அவனு
டனே சொன்னதைக்குறித்து நான் வெட்கப்ப
டமாட்டேன்; நாங்கள் சகலத்தையும் உங்களுக்
குச் சத்தியமாய்ச் சொன்னதுபோல, தீத்துவுட
னே நான் உங்களுக்குப் புகழ்ச்சியாய்ச் சொன்
னதும் சத்தியமாக விளங்கிற்றே. — 15 மேலும்
அவன் தன்னை நீங்கள் பயத்தோடும் நடுக்கத்
தோடும் ஏற்றுக்கொண்டதையும், நீங்கள் எல்லா
ரும் கீழ்ப்படிந்ததையும் நினைத்துக்கொண்டு, தன்
மனதிலே உங்கள்மேலே அதிக அன்புள்ளவனா
கிறான். — 16 ஆகையால் நான் எவ்விதத்திலே
யும் உங்களைக்குறித்துத் திடனாயிருக்கலாம் என்று
சந்தோஷப்படுகிறேன்.

## அ. அதிகாரம்.

பின்னும் சகோதரரே, மக்கேதோனியா தேசத்
துச் சபைகளுக்குப் பராபரன் அளித்த கிருபை
யை உங்களுக்கு அறிவிக்கிறோம். — 2 என்ன
வென்றால் அவர்கள் மிகுந்த உபத்திரவத்தினா
லே சோதிக்கப்படுகையில், கொடிய தரித்திரரா
யிருந்தும், தங்கள் பரிபூரணமான சந்தோஷத்தி
னாலே மிகுந்த உதாரமாய் (தருமத்தைக்) கொ
டுத்தார்கள். — 3 மேலும் அவர்கள் தங்களால்
ஆனமட்டும், தங்கள் பலத்திற்கு மேலாகவும்
கொடுக்கும்படிக்கு, தாங்களே மனதுள்ளவர்க
ளாய் இருந்தார்கள், அதற்கு நானே சாட்சியாய்
இருக்கிறேன்.—4 மேலும் அவர்கள் தங்களுக்கு
உபகாரத்தையும் பரிசுத்தவான்களுக்குச் செய்யப்
படும் தரும ஊழியத்தின் பங்கையும் ஏற்றுக்
கொள்ளவேண்டுமென்று எங்களை மிகவும் வே
ண்டிக்கொண்டு, — 5 எங்கள் நம்பிக்கைக்கு
மேலாகத் தங்களைத்தாமே முதலாவது கர்த்தருக்
கும், பின்பு பராபரனுடைய சித்தத்தினாலே எங்
களுக்கும் ஒப்புக்கொடுத்தார்கள்.—6 ஆனதால்
தீத்து தான் முன்னே தொடங்கின பிரகாரமாக
இந்தத் தருமகாரியத்தை உங்களிடத்திலே முடிக்
கவும் வேண்டுமென்று அவனிடத்தில் கேட்டுக்
கொண்டோம்.
7 அல்லாமலும் நீங்கள் விசுவாசத்திலேயும்
பேச்சிலேயும் அறிவிலேயும் எல்லாவித சாக்கிர
தையிலேயும் எங்கள்மேல் உள்ள உங்கள் அன்பி
லேயும் மற்றும் பலவித நன்மைகளிலேயும் பெரு
கியிருக்கிறதுபோல, இந்தத் தருமகாரியத்திலே
யும் பெருகவேண்டுமென்று விரும்புகிறோம்.—
8 இப்படி நான் கட்டளையாகச் சொல்லாமல்,
மற்றவர்களுடைய சாக்கிரதையின்நிமித்தமும் உங்
கள் அன்பின் உண்மையைச் சோதிக்கும்பொரு
ட்டாகவும், என்னுடைய யோசனையைமாத்திரம்
சொல்லியிருக்கிறேன்.—9 நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையை அறிந்
திருக்கிறீர்களே; அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்
தும், நீங்கள் அவருடைய தரித்திரத்தினாலே
ஐசுவரியவான்கள் ஆகும்படிக்கு, உங்கள்நிமித்த

மே தரித்திரர் ஆனாரே.—10 மேலும் (இந்தத்
தருமத்தைச்) செய்கிறதுமாத்திரமல்ல, ஒருவரு
ஷத்திற்குமுன்பு (அதை) ஆரம்பம்பண்ணும்படி
தோன்றின விருப்பமும் உங்களுக்குப் பிரயோச
னமாயிருக்கும். — 11 ஆகையால் செய்கிறதை
யும் இப்பொழுது நிறைவேற்றுங்கள்; கொடுக்க
வேண்டுமென்றும் ஆசை உண்டாயிருந்ததுபோ
ல, உங்களுக்கு உண்டானவைகளில் எடுத்து,
அதை நிறைவேற்றுதலும் உண்டாவதாக. —
12 ஒருவனுக்கு மன ஆசையாயிருந்தால், அவன்
தனக்கு இல்லாததின்படி அல்ல, தனக்கு உள்
ளதின்படி அங்கிகரிக்கப்படுவானே.—13 மற்ற
வர்களுக்குச் சந்தோஷமும் உங்களுக்கு உபத்தி
ரவமும் உண்டாயிருக்கும்பொருட்டாக அல்ல,
சமமான நிலைமை இருக்கும்பொருட்டாகவே
சொல்லுகிறேன்.–14 எப்படியெனில் (மற்றொ
ருகாலத்திலே) அவர்களுடைய பரிபூரணம் உங்
கள் வறுமையை நீக்கும்படிக்கு இக்காலத்திலே
உங்கள் பரிபூரணம் அவர்களுடைய வறுமையை
நீக்கக்கடவது.—15 இவ்விதமாய் மிகுதியாய்ச்
சேர்த்தவனுக்கு அதிகம் இருக்கவில்லை என்றும்
அற்பமாய்ச் சேர்த்தவனுக்குக் குறைவு இருக்க
வில்லைஎன்றும் எழுதியிருக்கிறபடி, சமமான நிலை
மை உண்டாயிருக்கும்.

16 அன்றியும் உங்களுக்காக இப்படிச் சாக்
கிரதையாயிருக்கும்படிக்குத் தீத்துவின் இருதயத்
திலே அருள்கொடுத்த பராபரனுக்குத் தோத்தி
ரம்.—17 நான் வேண்டிக்கொண்டதை ஏற்றுக்
கொண்டதுமல்லாமல் அவன் அதிக சாக்கிர
தையாயிருந்து, தன் சுயமனதினாலே உங்களிடத்
திற்கு வருகிறான். — 18 அவனோடேகூட ஒரு
சகோதரனை அனுப்பியிருக்கிறேன்; அவன் சுவி
சேஷஊழியத்திலே எல்லாச்சபைகளினாலும் புக
ழ்ச்சிபெற்றிருக்கிறவன்.–19 அதுமாத்திரமல்ல,
கர்த்தருக்கே துதியுண்டாகும்படியாகவும், உங்கள்
மன ஆசை விளங்கும்படியாகவும் எங்கள் ஊழி
யத்தினாலே சேர்க்கப்படுகிற தருமப்பணத்தைக்
(கொண்டுபோகையில்,) எங்களுக்கு வழித்து
ணையாயிருக்கும்படிக்கு அவனே சபைகளால் தெ
ரிந்து ஏற்படுத்தப்பட்டவனாகவும் இருக்கிறான்.–
20 எங்கள் ஊழியத்தினாலே சேர்க்கப்படும் மிகு
ந்த தருமப்பணத்தைக்குறித்து ஒருவனும் எங்க
ளைக் குற்றப்படுத்தாதபடிக்கு, நாங்கள் எச்சரிக்
கையாயிருந்து,—21 கர்த்தருக்குமுன்பாகமாத்தி
ரம் அல்ல, மனிதருக்கு முன்பாகவும் நலமான
வைகளை முன் யோசித்துக்கொண்டு (இந்தச்
சகோதரன் கூடவரும்படி செய்தேன்).–22 நம்
முடைய சகோதரனாகிய அவன் அநேகம் காரி
யங்களில் சாக்கிரதையுள்ளவன் என்றும், இப்
பொழுது உங்கள்மேலுள்ள மிகுந்த நம்பிக்கையி
னால் மிகவும் அதிக சாக்கிரதை உள்ளவனாயிருக்
கிறான் என்றும் நாங்கள் அடிக்கடி கண்டறிந்து,
அவனை இவர்களோடேகூட அனுப்பினோம். —
23 தீத்தைக்குறித்து (ஒருவன் விசாரித்தால்,)
அவன் எனக்குக் கூட்டாளியுமாய் உங்களுக்காக
என் உடன்வேலையாளுமாய் இருக்கிறானென்று
அறியக்கடவன்; எங்கள் சகோதரரைக்குறித்து
(ஒருவன் விசாரித்தால்,) அவர்கள் சபைகளால்
அனுப்பப்பட்டவர்களுமாய்க் கிறிஸ்துவுக்குப் புக
ழ்ச்சிவருதற்கு ஏதுவானவர்களுமாய் இருக்கி
றார்கள் என்று அறியக்கடவன். — 24 ஆனபடி
யினாலே உங்கள் அன்பையும், நாங்கள் உங்க
ளைக்குறித்துச் சொன்ன புகழ்ச்சியையும் அவர்
களுக்கும், சபைகளுக்கும் முன்பாக வெளிப்ப
டுத்துங்கள்.

## கூ. அதிகாரம்.

பரிசுத்தவான்களுக்குச் செய்யவேண்டிய ஊழி
யத்தைக்குறித்து நான் அதிகமாய் உங்களுக்கு
எழுதவேண்டுவது இல்லை.—2 உங்கள் மனப்
பூர்வத்தை அறிந்திருக்கிறேன்; அதைக்குறித்து
அகாயாவில் உள்ளவர்கள் ஒரு வருஷமாய்த் தரு
மப்பணத்தைச் சேர்க்க எத்தனமாயிருக்கிறார்கள்
என்று நான் மக்கேதோனியருடனே சொல்லி,
உங்களைப் புகழ்ந்தும் இருந்தேனே.—3 மேலும்
உங்களில் உண்டான சாக்கிரதை அநேகரை
எழுப்பியும் இருந்தது; அப்படியிருந்தும், உங்க
ளைக்குறித்து நாங்கள் சொன்ன புகழ்ச்சி இந்தச்
சங்கதியிலே வீணாய்ப் போகாமல், நான் சொன்
னபடி நீங்கள் எத்தனம்பண்ணுகிறவர்களாய்
இருப்பதற்கு இந்தச் சகோதரரை அனுப்பி
னேன்.—4 மக்கேதோனியர் என்னுடனேகூட
வரும்பொழுது, உங்களை எத்தனப்படாதவர்களா
கக் கண்டால், இத்தனை நிச்சயமாய்ப் புகழ்ந்த
தற்காக நீங்களென்று நான் சொல்லமாட்டாமல்
நாங்களே வெட்கப்படாதபடிக்கு, (எத்தனமா
யிருக்கவேண்டும்). — 5 ஆகையால் இந்தச்
சகோதரர் முன்னாக உங்களிடத்திற்குப் போகும்
படிக்கும், முன் அறிவிக்கப்பட்டிருக்கிற உங்கள்
தரும ஆசீர்வாதம் கட்டாயமாக அல்ல, தரும
ஆசீர்வாதமாகவே எத்தனமாயிருக்கப் பார்க்கும்
படிக்கும் அவர்களை வேண்டிக்கொள்ளவேண்டு
மென்று எண்ணி, அப்படிச் செய்தேன்.

6 பின்னும் நான் சொல்லுகிறது என்னவெ
னில், சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான்;
பரிபூரணமாய் விதைக்கிறவன் பரிபூரணமாய் அ
றுப்பான். — 7 அவனவன் விசனமாய் அல்ல,
கட்டாயமாயும் அல்ல, தான் மனதிலே விரும்பு
கிறபடியே கொடுக்கக்கடவன். — 8 சந்தோஷ
மாய்க் கொடுக்கிறவனிடத்தில் பராபரன் அன்
பாயிருக்கிறாரே, பராபரனும் நீங்கள் எல்லாவற்
றிலேயும் எப்பொழுதும் மிகுந்த திருத்தி உடை
யவர்களாய்ச் சகலவித நற்கிரியைகளுக்கும் சம்
பூரணமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு, உங்க

ளிடத்தில் சகலவித கிருபையும் சம்பூரணமாயி
ருக்கச்செய்ய வல்லவராயிருக்கிறார்.—9 அவன்
தெளித்தான்; ஏழைகளுக்குக் கொடுத்தான்; அவ
னுடைய நீதி என்றென்றைக்கும் நிற்குமென்று
எழுதியிருக்கிறவிதமாயிருக்கும்.—10 அந்தப்படி
விதைக்கிறவனுக்கு விதையையும் புசிக்கிறதற்கு
அப்பத்தையும் அளிக்கிறவர் உங்கள் விதையை
யும் அதிகமாய்ப் பெருகப்பண்ணி, உங்கள் நீதி
யின் விளைச்சல்களை வளரச்செய்வார்.—11 அதி
னாலே நீங்கள் மிகுந்த உதாரமுள்ளவர்களாய்
இருக்கும்படிக்கு, எவ்விதத்திலேயும் சம்பூரணம்
உள்ளவர்களாவீர்கள்; அதினாலே நாங்களும் பரா
பரனுக்குத் தோத்திரம் செலுத்ததற்கு எழுப்பப்
படுவோம்.—12 இந்தத் தருமநடத்தையின் ஊ
ழியம் பரிசுத்தவான்களுடைய குறைவுகளை நீக்கு
கிறதற்குமாத்திரம் அல்ல, அநேகர் பராபரனைத்
தோத்திரிக்கிறதற்கும் மிகுந்த பலனுள்ளதாய் இ
ருக்கின்றதே. — 13 அவர்கள் இவ்வூழியத்தின்
உத்தமத்தைக் கண்டு, நீங்கள் கிறிஸ்துவின் சுவி
சேஷத்தைக் கீழ்ப்படிதலோடே அறிக்கைபண்
ணுகிறதற்காகவும் தங்களுக்கும் மற்ற அனைவருக்
கும் உதாரமாய்த் தருமத்தைச் செய்கிறதற்காக
வும் பராபரனைத் துதித்து, — 14 உங்களுக்காக
வேண்டுதல்செய்து, பராபரன் உங்களுக்கு அ
ளித்த மிகவும் மேன்மையான கிருபையின் நிமித்
தம் உங்கள்மேல் வாஞ்சையாயிருக்கிறார்கள். —
15 பராபரன் அநுக்கிரகித்த சொல்லமுடியாத
ஈவுக்காக அவருக்குத் தோத்திரம் உண்டாவதாக.

## ய. அதிகாரம்.

மேலும் உங்களுக்கு முன்பாக இருக்கும்பொ
ழுது தாழ்மையாயும் தூரத்திலே இருக்கும்பொ
ழுது உங்கள்மேல் தயிரியமாயும் இருக்கிறபவுலா
கிய நான் கிறிஸ்துவின் சாந்தத்தினாலும் தயையி
னாலும் உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன். —
2 நான் கேட்டுக்கொள்ளுகிறது என்னவெனில்,
நான் உங்கள் முன்பாக இருக்கும்பொழுது, எங்
களைச் சரீரத்தின்படி நடக்கிறவர்கள் என்று எண்
ணுகிற சிலருக்கு நான் துணிவாயிருக்க நினைக்
கிறதால், அந்தத் துணிவோடே நான் தயிரிய
முள்ளவனாய் இராதபடிக்குச் செய்வீர்களாக.—
3 நாங்கள் சரீரத்தோடே நடந்து திரிந்தும், சரீ
ரத்தின்படி போராட்டம்பண்ணமாட்டோம். —
4 எங்களுடைய போர்ஆயுதங்கள் மாம்சத்திற்கு
ஏற்ற பலஈனமுள்ளவைகளாய் இராமல், அரண்க
ளை நிர்மூலமாக்குதற்குத் திவ்விய பெலனுள்ள
வைகளாய் இருக்கின்றனவே.—5 அவைகளால்
நாங்கள் அகந்தையான சிந்தனைகளையும், பராபர
னை அறிகிற அறிவுக்கு விரோதமாய் உயருகிற எல்
லாவித மேட்டிமையையும் நிர்மூலமாக்கி, எந்தப்
புத்தியையும் கிறிஸ்துவுக்குக்கீழ்ப்படியச் சிறைப்
படுத்துகிறவர்களாயிருந்து, — 6 நீங்கள் நிறை
வாய்க் கீழ்ப்படிந்திருக்கும்பொழுது எல்லாக்
கீழ்ப்படியாமைக்குந்தக்க நீதியுள்ள தண்டனை
யைச் செலுத்த எத்தனமாயிருக்கிறோம்.

7 முகத்திற்கு முன்னிருக்கிறவைகளை (மாத்
திரம்) பார்க்கிறீர்களா? ஒருவன் தன்னைக் கிறிஸ்
துவுக்கு உரியவன் என்று நம்பிக்கொண்டால்,
அவன் தான் கிறிஸ்துவுக்கு உரியவனாய் இருக்
கிறதுபோல, நாங்களும் கிறிஸ்துவுக்கு உரியவர்
கள் என்று தன்னாலேதானே சிந்திக்கக்கடவன்.—
8 அதுவுமல்லாமல் உங்களை நிர்மூலமாக்குதற்கு
அல்ல, எழுப்புதற்குக் கர்த்தர் எங்களுக்குக் கொ
டுத்த அதிகாரத்தைக்குறித்து நான் இன்னும்
சற்றே அதிகமாய் மேன்மைபாராட்டினாலும் நான்
வெட்கப்படுவதில்லை.—9 நான் நிருபங்களாலே
உங்களைப் பயமுறுத்துகிறவனாய்த் தோன்றாதப
டிக்குமாத்திரம் (அப்படி மேன்மைபாராட்ட
மாட்டேன்).—10 அவனுடைய நிருபங்கள் பார
மும் பெலனுமுள்ளவைகள்; ஆகிலும் சரீரத்தின்
தோற்றம் பெலஈனமுமாய் அவனுடைய வசனம்
அற்பமுமாயிருக்கிறது என்கிறார்களே.—11 அப்
படிச் சொல்லுகிறவன் நிருபங்களின் வசனத்தி
னாலே தூரத்தில் இருக்கிற நாங்கள் தோன்றுகி
றது எப்படியோ, அப்படி முகத்திற்கு முன்பாக
வும் கிரியையிலேயும் தோன்றுவோம் என்று சிந்
திக்கக்கடவன்.—12 ஆகிலும் தங்களைத்தாமே புக
ழுகிற சிலருக்கு நாங்கள் எங்களைச் சரியாக்கவும்
ஒப்பிடவும் துணியமாட்டோம்; அவர்கள் தங்க
ளாலே தங்களை அளந்துகொண்டு, தங்களுக்கே
தங்களை ஒப்பிட்டுக்கொண்டு, (தங்களை) அறியா
தவர்களாய் இருக்கிறார்கள். — 13 நாங்கள் (எங்
களுக்கு) அளந்துகொடாதவைகளைக் குறித்து
மேன்மைபாராட்டாமல், உங்கள் இடம்வரைக்
கும் எட்டத்தக்கதாக, பராபரன் எங்களுக்கு அ
ளந்துகொடுத்த அளவின்படியே மேன்மைபா
ராட்டுகிறோம். — 14 கிறிஸ்துவின் சுவிசேஷத்
தோடே நாங்கள் உங்கள் இடம்வரைக்கும்
சென்றோம்; ஆகையால் உங்களிடத்தில் வந்து
எட்டாதவர்களாய் நாங்கள் அளவுக்கு மிஞ்சிப்
போகிறதில்லை.—15 அளவுக்கு மிஞ்சி அந்நிய
ருடைய வேலைக்கு உட்பட்டு, மேன்மைபாராட்
டமாட்டோம்.—16 ஆகிலும் உங்கள் விசுவாசம்
வளர்ந்திருக்கும்பொழுது, உங்களுக்கு அப்புற
மான இடங்களில் சுவிசேஷத்தை அறிவிக்கவும்
அந்நிய எல்லைகளுக்குள்ளே செய்யப்பட்டவை
களை (நாங்கள் செய்ததாக) மேன்மைபாராட்டா
திருக்கவும்தக்கதாக, எங்கள் அளவு உங்களாலே
மிகவும் பெருகுமென்று நம்பிக்கையாயிருக்கி
றோம். — 17 மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தா
வைக்குறித்தே மேன்மைபாராட்டக்கடவன். —
18 தன்னைத்தான் புகழுகிறவன் அல்ல, கர்த்த
ராலே புகழப்படுகிறவன் எவனோ, அவன் உத்த
மனாயிருப்பானே.

# ௰க. அதிகாரம்.

ஆ நீங்கள் என் புத்தியீனத்திற்குச் சற்றே பொறுமையாயிருந்தால், நலமாயிருக்கும்; எனக்குப் பொறுத்தும் இருக்கிறீர்களே. — 2 நான் உங்களைக் கற்புள்ள கன்னியாஸ்திரியாகக் கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியால் உங்களுக்காகத் தேவ வைராக்கியமாய் வைராக்கியங்கொண்டிருக்கிறேன்.—3 ஆகிலும் அந்தப் பாம்பு தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல, உங்கள் மனதும் கிறிஸ்துவின்மேலுள்ள பத்தியின் உண்மையை விட்டு விலகக் கெடுக்கப்படுமோ என்று பயந்திருக்கிறேன். — 4 எப்படியெனில் (உங்களிடத்தில்) வந்திருக்கிறவன் நாங்கள் பிரசங்கியாத வேறொரு இயேசுவைப் பிரசங்கித்தானானால், அல்லது, நீங்கள் பெறாத வேறொரு ஆவியையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளாத வேறொரு சுவிசேஷத்தையும் (அவனாலே) பெற்றீர்களானால், அவனை நன்றாய் ஏற்பீர்கள்.

5 மிகவும் பெரிய அந்த அப்போஸ்தலருக்கு நான் எவ்வளவாகிலும், குறைவுள்ளவன் அல்ல என்று எண்ணுகிறேன். — 6 நான் பேச்சிலே கல்லாதவனாயிருந்தாலும், அறிவிலே கல்லாதவன் அல்ல, எப்பொழுதும் எல்லாவிதங்களிலேயும் உங்களுக்குள்ளே (அப்படியே) வெளிப்பட்டிருக்கிறோமே. — 7 அல்லது நீங்கள் உயர்த்தப்படும்படிக்கு நான் என்னைத்தானே தாழ்த்தி, பராபரனுடைய சுவிசேஷத்தை இலவசமாய் உங்களுக்கு அறிவித்ததினாலே குற்றம்செய்தேனோ?— 8 (இல்லையே,) உங்களுக்கே ஊழியம் செய்யும்படிக்கு மற்றச் சபைகள் கையிலே நான் சம்பளம் பற்றிக்கொண்டேன். — 9 நான் உங்களிடத்திலிருந்து குறைச்சல் அநுபவித்தபொழுதும் ஒருவனையும் நான் வருத்தப்படுத்தவில்லை; மக்கேதோனியாவிலிருந்து வந்த சகோதரர் என் குறைவை நீக்கினார்களே; எவ்விதத்திலேயும் உங்களுக்குப் பாரமாய் இராதபடிக்குப் பார்த்தேன்; இனிமேலும் அப்படியே பார்ப்பேன்.—10 அகாயாநாட்டின் திசைகளிலே இந்தப் புகழ்ச்சி என்னிடத்தில்நின்று நீங்குவதில்லையென்று என்னிலுள்ள கிறிஸ்துவினுடைய உண்மையைக்கொண்டு சொல்லுகிறேன். — 11 என்னத்தினாலே (அப்படிச் செய்வேன்)? நான் உங்களைச் சிநேகியாதபடியினாலோ (அப்படிச் செய்வேன்)? அதினால் அல்லவென்று பராபரனே அறிந்திருக்கிறார்.—12 மேலும் தங்களை மேன்மைபாராட்டுகிறதினாலே எங்களைப்போலக் காணப்படச் சமயம் தேடுகிறவர்களுக்குச் சமயம் அற்றுப்போகும்பொருட்டாக நான் இப்படிச்செய்கிறேன், பின்னும் இப்படிச்செய்வேன்.

13 அப்படிப்பட்டவர்கள் கள்ள அப்போஸ்தலர், கபடமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலரின் ரூபத்தை எடுத்து, நடக்கிறவர்களாய் இருக்கிறார்கள். — 14 அது அதிசயமல்ல, சாத்தானும் ஒளியையுடைய தூதனைப்போன்ற ரூபத்தை எடுப்பானே.—15 ஆகையால் அவனுடைய ஊழியக்காரரும் நீதியின் ஊழியக்காரரைப்போன்ற ரூபத்தை எடுத்தால், மிகுந்த அதிசயமாகமாட்டாது; அவர்களுடைய முடிவு அவர்களுடைய கிரியைகளுக்குத்தக்கதாயிருக்கும்.

16 பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், ஒருவனும் என்னைப் புத்தியீனன் என்று எண்ணாதிருப்பானாக; எண்ணினால் நானும் சற்றே மேன்மைபாராட்டுகிறபொழுது, நீங்கள் என்னைப் புத்தியீனனைப்போலாகிலும் சகிக்கக்கடவீர்கள். — 17 இப்படித் தயிரியமாய் மேன்மைபாராட்டுகையில், நான் சொல்லுகிறது கர்த்தரால் ஆனபடியே சொல்லாமல், புத்தியீனனைப்போலச் சொல்லுகிறேன்.—18 அநேகர் சரீரத்தின்படி மேன்மைபாராட்டிக்கொள்ளுகையில், நானும் மேன்மைபாராட்டுவேன்.—19 புத்தியுள்ள நீங்கள் புத்தியில்லாதவர்களைச் சந்தோஷமாய்ச் சகித்திருக்கிறீர்களே.—20 ஒருவன் உங்களைச் சிறையாக்கினாலும், ஒருவன் உங்களைப் பட்சித்தாலும், ஒருவன் (உங்கள் ஆஸ்திகளைப்) பிடித்துக்கொண்டாலும், ஒருவன் உங்களுக்கு முன்பாகத் தன்னை உயர்த்தினாலும், ஒருவன் உங்களை முகத்தில் அறைந்தாலும் சகித்திருக்கிறீர்களே. — 21 நாங்கள் பெலஈனராக எங்களுக்கு வந்த நிந்தையைக்குறித்து (இப்படிப்) பேசுகிறேன்; ஒருவன் துணிகிறது எதுவோ, அதிலே நானும் துணிவாயிருக்கிறேன்; இப்படிப் புத்தியீனமாய்ப் பேசுகிறேன்.—22 அவர்கள் எபிரேயரானால், நானும் எபிரேயன்; அவர்கள் இஸ்ரவேலரானால், நானும் இஸ்ரவேலன்; அவர்கள் ஆபிரகாமின் சந்ததியானால், நானும் ஆபிரகாமின் சந்ததியான்.—23 அவர்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரரானால், நான் அவர்களுக்கு மேற்பட்டவன்; (மறுபடியும்) புத்தியீனமாய்ப் பேசுகிறேன்; அவர்களிலும் நான் அதிக வேலைகளைச் செய்தேன்; அதிகமாய் அடிபட்டேன்; அதிகமாய்க் காவல்களில் வைக்கப்பட்டேன்; அநேகந்தரம் மரணத்திற்கு ஏதுவாயிருந்தேன். — 24 யூதர்களால் ஒன்றுகுறைய நாற்பது அடியாக ஐந்துதரம் பட்டேன்.—25 மூன்றுதரம் மிலாறுகளால் அடிபட்டேன்; ஒருதரம் கல்லெறியுண்டேன்; மூன்றுதரம் கப்பல் சேதமானதில் இருந்தேன்; ஓர் இராப்பகல் முழுவதும் ஆழத்திலே இருந்தேன்.— 26 அநேகந்தரம் பிரயாணமாய்ப் போனேன்; ஆறுகளால் வருகிற மோசங்களிலும், கள்ளரால் வருகிற மோசங்களிலும், என் செனன தேசத்தாரால் வந்த மோசங்களிலும், புறத்தேசத்தாரால்

வந்த மோசங்களிலும், ஊர்களில் உண்டான மோ
சங்களிலும், வனாந்தரத்தில் உண்டான மோசங்
களிலும், சமுத்திரத்தில் உண்டான மோசங்களி
லும், கள்ளச்சகோதரரால் வந்த மோசங்களிலும்,–
27 வேலையிலும் வருத்தத்திலும் அநேகந்தரம்
கண்விழிப்புகளிலும் பசியிலும் தாகத்திலும், அ
நேகந்தரம் உபவாசங்களிலும் குளிர்ச்சியிலும்
நிருவாணத்திலும் இருந்தேன். — 28 புறம்பே
உண்டான இவைகளைத்தவிர எல்லாச் சபைக
ளைக்குறித்தும் இருக்கிற கவலை என்னை நாள்தோ
றும் நெருக்குகின்றது.

29 பெலவீனம் அடைகிறவன் எவனோ,
அவனுக்கு நானும் பெலவீனனாயிருக்கிறதில்லை
யோ? வழுவுகிறவன் எவனோ, அவனுக்கு (உத
விசெய்ய) எரிச்சல் இல்லாமல் இருக்கிறேனோ?–
30 மேன்மைபாராட்டவேண்டியதால், என் பெ
லவீனத்திற்கு உரியவைகளைச் சொல்லி, மேன்
மைபாராட்டுவேன். — 31 என்றென்றைக்கும்
தோத்திரிக்கப்பட்ட பராபரனும், நம்முடைய கர்த்
தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமானவர்
நான் பொய்சொல்லுகிறதில்லை என்று அறிந்தி
ருக்கிறார்.–32 தமஸ்கு நகரியிலே அரேத்தா என்
னும் இராசாவினுடைய சேனைத்தலைவன் என்
னைப் பிடிக்கவேண்டும் என்று தமஸ்கருடைய
பட்டணத்தின் வாசல்களில் காவல்வைத்துக்
காத்தான்.–33 அப்பொழுது நான் கூடையிலே
வைக்கப்பட்டு, பலகணியிலிருந்து மதில்வழி
யாய் இறக்கிவிடப்பட்டு, அவனுடைய கைகளுக்
குத் தப்பிப்போனேன்.

## ௰உ. அதிகாரம்.

இப்படியிருக்க மேன்மைபாராட்டுகிறது எனக்
குத் தகாது; ஆகிலும் கர்த்தர் கொடுத்த தரிசனை
களையும் வெளிப்படுத்துதல்களையும் சொல்லிவரு
கிறேன்.

2 கிறிஸ்துவைப்பற்றிய ஒரு மனிதனை அறிந்
திருக்கிறேன்; அவன் பதினாலு வருஷத்திற்கு
முன்னே மூன்றாம் வானம்வரைக்கும் எடுக்கப்
பட்டான். (அவ்வேளையிலே) அவன் சரீரத்தில்
இருந்தானோ, அதற்குப் புறம்பே இருந்தானோ
அதை அறியமாட்டேன்; அது பராபரனுக்குத்
தெரியும்.–3 இப்படிப்பட்ட மனிதன் பரதீசுக்கு
உயர்த்தப்பட்டு, மனிதர் பேசக்கூடாத, வாக்
குக்கு எட்டாத வார்த்தைகளைக் கேட்டான்
என்று அறிந்திருக்கிறேன்.–4 (அவ்வேளையிலே)
அவன் சரீரத்தில் இருந்தானோ, அதற்குப் புறம்
பே இருந்தானோ, அதை அறியமாட்டேன்; பரா
பரனுக்கே தெரியும்.

5 இப்படிப்பட்டவனைக்குறித்து மேன்மை
பாராட்டுவேன்; என்னைக்குறித்து என் பலவீனங்
களினாலே அன்றி, வேறொன்றினாலும் மேன்மை
பாராட்டமாட்டேன்.—6 சத்தியமானதை நான்
பேசுகிறேன்; ஆதலால் மேன்மைபாராட்ட
மனதிருந்தாலும், நான் புத்தியீனன் அல்ல; ஒரு
வனும் என்னிடத்தில் காண்கிறதற்கும், அல்
லது என்னாலே கேட்கிறதற்கும் மேலாக
என்னை எண்ணாதபடிக்கு அதை நிறுத்துகி
றேன்.

7 அன்றியும் அதிக மேன்மையானவைகள்
எனக்கு வெளிப்படுத்தப்பட்டதினாலே நான்
என்னை உயர்த்தாதபடிக்கு, என் மாம்சதேகத்
திலே ஒரு முள் கொடுக்கப்பட்டிருக்கிறது;
என்னை நான் உயர்த்தாதபடிக்கு, என்னைக் குட்
டும் சாத்தானுடைய தூதனே இருக்கிறான். —
8 அது என்னைவிட்டு நீங்கும்படிக்கு நான் மூன்
றுதரம் கர்த்தரை வேண்டிக்கொண்டேன். —
9 அவர் என்னுடனே சொன்னது: எனது கிரு
பை உனக்குப் போதும், என்னுடைய வல்லமை
(உன்) பெலவீனத்திலே நிறைவாய்த் தோன்று
கின்றதே என்றார்; ஆகையால் கிறிஸ்துவின் வல்
லமை என்மேல் இறங்கியிருக்கும்படிக்கு, நான்
மிகவும் அதிக விருப்பமாய் என் பெலவீனங்க
ளைக்குறித்து மேன்மைபாராட்டுவேன்.–10 அந்
தப்படி, நான் பெலவீனமாய் இருக்கும்பொழுது
பெலனாய் இருக்கிறபடியால் கிறிஸ்துவின்நிமித்
தம் எனக்கு வரும் பெலவீனங்களிலும் நிந்தைக
ளிலும் வறுமைகளிலும் துன்பங்களிலும் இடுக்க
ண்களிலும் நான் பிரியமாயிருக்கிறேன்.

11 மேன்மைபாராட்டினதால் நான் புத்தியீ
னன் ஆனேன்; நீங்களே அதற்கு என்னைப் பல
வந்தப்படுத்தினீர்கள். நான் பிரயோசனம் இல்
லாதவனாய் இருந்தாலும், மிகவும் பிரதான அப்
போஸ்தலருக்கும் நான் எவ்வளவாகிலும் குறைந்
தவனாயிராததால், உங்களாலே நான் மெச்சிக்
கொள்ளப்பட நியாயமாயிருந்ததே.–12 அப்போ
ஸ்தலனுக்குரிய அடையாளங்கள் உங்களுக்குள்
ளே எல்லாவிதமான பொறுமையோடும் அதிச
யங்களாலும் அற்புதங்களாலும் வல்லமைகளா
லும் என்னாலே நடப்பிக்கப்பட்டன அல்லவா?
மற்றச் சபைகளுக்கு நீங்கள் எதிலே குறைவா
யிருக்கிறீர்கள்?—13 நான் உங்கள்மேலே சுமை
யை வையாதிருந்ததினாலே அன்றி வேறொன்றி
னாலும் இல்லையே; இந்த அநியாயத்தை நீங்கள்
எனக்கு மன்னிக்கவேண்டும்.

14 இப்பொழுது உங்களிடத்திற்கு வர மூன்
றுதரம் எத்தனமாயிருக்கிறேன்; (அப்பொழு
தும்) நான் உங்களுடையதை அல்ல, உங்களை
யே தேடுகிறபடியால் நான் உங்கள்மேல் சு
மையை வைப்பதில்லை; பெற்றாருக்குப் பிள்ளை
கள் அல்ல, பிள்ளைகளுக்குப் பெற்றார்களே பொக்
கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்டுமே. —
15 ஆனதால் நான் உங்களுக்குக் காட்டுகிற
அன்பு எவ்வளவோ, அவ்வளவு குறைவாய் உங்

களால் அன்புகூரப்பட்டிருந்தும், மிகவும் சந்தோஷமாய் நான் உங்கள் ஆத்துமாக்களுக்காக என்னைச் செலவுபண்ணவும், செலவுபண்ணப்படவும் விரும்புகிறேன்.

16 அப்படி ஆகட்டும், அவன் உங்களுக்குப் பாரமாய் இருக்கவில்லை; அது மெய்தான், ஆகிலும் தந்திரமுள்ளவனாய் இருந்து, உங்களைக் கபடத்தினாலே பிடித்தான் என்கிறார்கள்.—17 (அது எப்படி?) நான் உங்களிடத்திற்கு அனுப்பினவர்களில் யாராலே உங்களிடத்தில் பொழிவைத் தேடினேன்? — 18 தீத்து உங்களிடத்தில் போகவேண்டும் என்று நான் கேட்டுக்கொண்டு, அவனுடனேகூட ஒரு சகோதரனை அனுப்பினேன்; தீத்து உங்களிடத்தில் ஒரு பொழிவையாகிலும் தேடினானா? நாங்கள் ஒரே ஆவியோடே அல்லவா நடந்தோம்? ஒரே மார்க்கமாயல்லவோ நடந்தோம்?

19 உங்களுக்குமுன்பாகக் குற்றம் அடக்கும்படி பேசுகிறோம் என்று மறுபடியும் எண்ணுகிறீர்களா? பிரியமானவர்களே, பராபரனுடைய சந்நிதானத்திலே கிறிஸ்துவைப் பற்றிக்கொண்டு, இவைகளை எல்லாம் உங்களை எழுப்பும்படிக்கே பேசுகிறோம்.—20 ஆகிலும் நான் வந்து உங்களை என் மனதின்படி இருக்கிறவர்களாகக் காணாமலும், உங்களுக்கு நானும் உங்கள் மனதின்படி இருக்கிறவனாகக் காணப்படாமலும் இருப்பேனோ? விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், புறங்கூறுதல், கோள் சொல்லுதல், இறுமாப்பு, கலகங்களும், உங்களுக்குள்ளே உண்டாயிருக்குமோ?-21 மறுபடியும் நான் வருகிறபொழுது, என் பராபரன் உங்களிடத்தில் என்னைத் தாழ்மைப்படுத்தும்படிக்கு, முன் பாவம்செய்தவர்களாகிய அநேகர் தாங்கள் நடப்பித்த அசுத்தத்தையும், வேசித்தனத்தையும், காமவிகாரத்தையும் விட்டு மனம்திருப்பாமல் இருக்கிறதைக்குறித்து நான் துக்கப்படவேண்டியதாய் இருக்குமோ என்று இவைகளைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

## ீங. அதிகாரம்.

இந்த மூன்றாந்தரம் நான் உங்களிடத்திற்கு வருகிறேன்; சகல சங்கதிகளும் இரண்டுமூன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலைவரப்படும்.-2 நான் மறுபடியும் வரும்பொழுது, தப்பவிடமாட்டேன் என்று முன் பாவம்செய்தவர்களுக்கும் மற்ற எல்லாருக்கும் முன் சொன்னேனே; இப்பொழுது தூரமாயிருந்தும், உங்களிடத்தில் இருக்கிறவனாக நான் இரண்டாந்தரமும் அப்படியே முன்னறிவித்துச் சொல்லுகிறேன்.-3 என்னாலே கிறிஸ்து பேசுகிறதைக்குறித்துத் திருட்டாந்தத்தைக் காணத் தேடுகிறீர்களே; அவர் உங்களுக்குள்ளே பலஈனர் அல்ல, வல்லவராயிருக்கிறார்.-4 அல்லாமலும், அவர் பலஈனத்தால் சிலுவையில் அறையப்பட்டிருந்தும், பராபரனுடைய வல்லமையால் பிழைத்திருக்கிறார்; அப்படி நாங்களும் அவர்நிமித்தம் பெலஈனராயிருந்தும், அவருடனே கூடப் பராபரனுடைய வல்லமையால் உங்களுக்குள்ளே சீவனைக் காண்பிப்போம்.-5 உங்களுக்கு விசுவாசம் உண்டோ? அதைக்குறித்து உங்களைச் சோதியுங்கள்; உங்களைத்தாமே விசாரித்து அறியுங்கள்; அல்லது நீங்கள் உதாரணம் இல்லாதவர்களாயிராவிட்டால், இயேசுக்கிறிஸ்து உங்களிடத்தில் இருக்கிறார் என்று உங்களைத்தாமே அறிகிறதில்லையா?-6 நாங்கள் உதாரணம் இல்லாதவர்கள் அல்லவென்பதை அறிவீர்கள் என்று நம்புகிறேன்.—7 மேலும் நீங்கள் எவ்வளவாகிலும் பொல்லாங்கைச் செய்யாதிருக்கும்படியாக, பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன்; நாங்கள் உதாரணம் உள்ளவர்கள் என்று காணப்படும்பொருட்டு அல்ல, நீங்கள் நலமானதைச் செய்யும்பொருட்டே அப்படிச் செய்கிறேன். (அப்படி நீங்கள் செய்தால்,) நாங்கள் உதாரணம் இல்லாதவர்களாயிருக்கலாம்.-8 சத்தியத்திற்கு விரோதமாக நாங்கள் ஒன்றும் செய்யக்கூடாமல் சத்தியத்திற்கு நேராகச் செய்வோமே.-9 ஆகையால், நாங்கள் பலஈனராயிருந்தாலும் நீங்கள் பலமுள்ளவர்களானால் சந்தோஷப்படுவோம்; அந்தப்படி நீங்கள் நற்சீர் பொருந்தும்படிக்கே வேண்டுதல்பண்ணுகிறோம். — 10 அதினாலே நான் உங்களிடத்தில் வந்திருக்கும்பொழுது, இடிக்கிறதற்கு அல்ல, எழுப்பிக் கட்டுகிறதற்குக் கர்த்தர் எனக்குக் கொடுத்த அதிகாரத்தின்படியே நான் கண்டிதம்பண்ணுதபடிக்கு, இவைகளைத் தூரமாயிருந்து எழுதுகிறேன்.

11 கடைசியிலே சகோதரரே, சந்தோஷமாயிருங்கள்; நற்சீர் பொருந்துங்கள்; ஆறுதலை அடையுங்கள்; ஏகசிந்தையாயிருங்கள்; சமாதானமாயிருங்கள்; அப்பொழுது அன்புக்கும் சமாதானத்திற்கும் காரணராகிய பராபரன் உங்கள் பக்கில் இருப்பார்.—12 ஒருவரை ஒருவர் பரிசுத்த முத்தத்தினால் வாழ்த்துங்கள்.—13 பரிசுத்தவான்கள் எல்லாரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். — 14 கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையும் பராபரனுடைய அன்பும் பரிசுத்தஆவியோடே ஐக்கமும் உங்கள் அனைவருடனேயும் இருக்கக்கடவது.—ஆமன்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கலாத்தியருக்கு எழுதின

# நிருபம்.

## ௧. அதிகாரம்.

மனிதரில்நின்றும் அல்ல, ஒரு மனிதனாலும்
அல்ல, இயேசுக்கிறிஸ்துவினாலும் அவரை மரித்
தோரிலிருந்து எழுப்பின பிதாவாகிய பராபரனா
லும் அப்போஸ்தலனாயிருக்கிற பவுலும்,—2 என்
னுடனேகூட இருக்கிற எல்லாச் சகோதரரும்
கலாத்தியநாட்டிலுள்ள சபைகளுக்கு எழுதுகிற
தாவது:—3 இப்பொழுது இருக்கிற பொல்லாத
பிரபஞ்சத்தில் நின்று நம்மை நீக்கிவிடும்படிக்கு,
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து நம்மு
டைய பிதாவாகிய பராபரனுடைய சித்தத்தின்
படியே நம்முடைய பாவங்களுக்காகத் தம்மைத்
தாமே ஒப்புக்கொடுத்தாரே; அவராலும் பிதாவா
கிய பராபரனாலும்,— 4 உங்களுக்குக் கிருபை
யும் சமாதானமும் உண்டாகக்கடவது.—5 அவ
ருக்கு என்றென்றைக்கும் மகிமை உண்டாவ
தாக.—ஆமென்.
6 உங்களைக் கிறிஸ்துவின் கிருபைக்குள்
அழைத்தவனை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய்
விட்டு, வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்பின
தால் நான் ஆச்சரியப்படுகிறேன்.— 7 (இது
வன்றி,) வேறொரு சுவிசேஷமும் இல்லையே,
அப்படியிருந்தும் சிலர் உங்களைக் கலகப்படுத்தி,
கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை மாறுபாடாக்க
மனதாயிருக்கிறார்கள்.— 8 நாங்கள் உங்களுக்கு
அறிவித்த சுவிசேஷத்தைத்தவிர, நாங்களாவது
வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது வே
றொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால்,
சபிக்கப்பட்டவர்களாய் இருக்கக்கடவோம்.—
9 ஒருவன் நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்
தைத்தவிர, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்
கு அறிவித்தால், சபிக்கப்பட்டவனாகவே இருக்
கக்கடவன் என்று முன் சொன்னதுபோல, மறு
படியும் சொல்லுகிறேன்.— 10 இப்பொழுது
நான் மனிதரை நாடுகிறேனா? அல்லது பராபர
னை நாடுகிறேனா? அல்லது மனிதருக்குப் பிரிய
மாயிருக்கப் பார்க்கிறேனா? நான் மனிதருக்குப்
பிரியமானவனானால், நான் கிறிஸ்துவின் ஊழியக்
காரனாய் இருப்பதில்லை.
11 மேலும் சகோதரரே, நான் உங்களுக்கு
நிச்சயிக்கிறது என்னவெனில், என்னால் பிரசங்
கிக்கப்பட்ட சுவிசேஷம் மனிதருடைய இச்
சைக்கு ஏற்றதல்ல.–12 நான் அதை ஒரு மனித
னால் அடையவும் படிக்கவும் இல்லையே; இயே
சுக்கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தி
னார்.—13 நான் யூதமார்க்கத்திலே இருந்தபொ
ழுது, என்னுடைய நடக்கையைக்குறித்துக் கேள்
விப்பட்டிருப்பீர்கள்; பராபரனுடைய சபையை
நான் மிகவும் துன்பப்படுத்தி, அதைப் பா
ழாக்கி,— 14 என் தேசத்தாரில் என் வயதுள்ள
அநேகரிலும் யூதமார்க்கத்திலே தேறினவனாய்,
என் பிதாக்களுடைய பாரம்பரை நியாயங்களுக்
காக மிகுந்த பத்திவைராக்கியனாய் இருந்தேன்.
15 அப்படி இருக்கும் காலத்திலே, என்
தாயின் கருப்பமுதல் என்னைப் பிரித்தெடுத்துத்
தமது கிருபையினால் அழைத்த பராபரன்,—
16 தம்முடைய குமாரனை நான் புறத்தேசத்தாரி
டத்தில் சுவிசேஷமாய் அறிவிக்கும்பொருட்
டாக, அவரை எனக்குள் வெளிப்படுத்தப் பிரிய
சித்தமாய் இருந்தபொழுது, நான் எவ்வளவாகி
லும் மாம்ச இரத்தத்தோடே யோசனை பண்ணா
மலும்,—17 எனக்கு முன்னே அப்போஸ்தலரா
னவர்களிடத்திலே எருசலேமுக்குத் திரும்பாம
லும், அரபு தேசத்திற்குப் புறப்பட்டுப்போய்,
மறுபடியும் தமஸ்கு ஊருக்குத் திரும்பி வந்
தேன்.—18 அதின்பின்பு மூன்றுவருஷம் சென்
றபொழுது பேதுருவைப் பார்த்து அறியும்படிக்கு,
நான் எருசலேமுக்குப்போய், அவனிடத்தில்
பதினைந்துநாள் இருந்தேன்.—19 கர்த்தருடைய
சகோதரனாகிய யாக்கோபைத்தவிர, அப்போஸ்
தலரில் வேறொருவனையும் நான் காணவில்லை.—
20 நான் உங்களுக்கு எழுதுகிற இவைகள்
பொய்யல்ல என்று பராபரனுக்குமுன்பாக உங்க
ளுக்கு நிச்சயிக்கிறேன்.—21 பின்பு சீரியா, சிலி
சியா தேசங்களுடைய புறங்களில் வந்தேன்.—
22 மேலும் யூதேயா நாட்டிலே கிறிஸ்துவைப்
பற்றிய சபைகளுக்கு முகம் அறியாதவனாய் இருந்
தேன்.—23 முன்னே நம்மைத் துன்பப்படுத்தி
னவன்தானே அழிக்கத் தேடின சுவிசேஷத்தை
இப்பொழுது அறிவிக்கிறான் என்றுமாத்திரம்
அவர்கள் கேள்விப்பட்டிருந்து,— 24 என்னைக்
குறித்துப் பராபரனைத் துதித்தார்கள்.

## ௨. அதிகாரம்.

பின்பு பதினாலுவருஷம் சென்றபொழுது, நான்

தீத்தைக் கூட்டிக்கொண்டு, பர்னபாவுடனே
கூட மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்.—
2 அந்தப் பிரயாணத்தை நான் தேவ அறிவிப்பி
னாலே செய்து, நான் ஓடுகிறதும் அல்லது ஓடி
னதும் வீணாகாதபடிக்கு, புறத்தேசத்தாரிடத்தி
லே நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை அவர்க
ளுக்கும் விசேஷமாகப் பெரியோர்களுக்கும் விவ
ரித்துக் காண்பித்தேன்.—3 அப்பொழுது என்னு
டனேகூட இருந்த தீத்து கிரேக்கனாயிருந்தும்,
விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளும்படிக்குக்
கட்டாயம் பண்ணப்படவில்லை.—4 இயேசுக்கி
றிஸ்துவினால் நமக்கு உண்டான விடுதலையை
வேவுபார்த்து; நம்மை நியாயப்பிரமாணத்திற்கு
அடிமைகள் ஆக்கும்பொருட்டாக, பக்கவழியாய்
நுழைந்து உட்புகுந்த கள்ளச் சகோதரர்நிமித்த
மே அப்படி ஆயிற்று.—5 சுவிசேஷத்தின் சத்தி
யமும் உங்களிடத்திலே நிலைநிற்கும்படியாக,
நாங்கள் ஒருநாழிகையாகிலும் அவர்களுக்குக்
கீழ்ப்படியவில்லை.—6 அல்லாமலும் பெரியோர்
களென்று எண்ணப்பட்டவர்களாலும் (நான்
ஒன்றையும் அடையவில்லை); முன்னே அவர்
கள் எப்படிப்பட்டவர்களாய் இருந்தாலும் எனக்
குக் கவையில்லை. பராபரன் மனிதருடைய
முகத்தை நோக்கிப்பார்க்கிறவர் அல்லவே; அந்
தப் பெரியோர்கள் எனக்கு அதிகம் ஒன்றும்
போதியாமல்,—7 விருத்தசேதனம் உள்ளவர்க
ளுக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி, பேது
ருவைப் பலப்படுத்தினவர் புறத்தேசத்தாருக்கு
அப்போஸ்தலனாய் இருக்கும்படி என்னையும்
பலப்படுத்தினதால்,—8 விருத்தசேதனம் உள்
ளவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்
படி பேதுருவுக்கு ஒப்புவிக்கப்பட்டதுபோல,
விருத்தசேதனம் இல்லாதவர்களுக்கு அப்படியே
செய்யும்படி, எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கி
றது என்று அவர்கள் கண்டு, —9 அந்தப்படி
எனக்கு அளிக்கப்பட்ட கிருபையை அறிந்தபொ
ழுது, அவர்களில் தூண்களென்று எண்ணப்
பட்ட யாக்கோபும் கேபாவும் யோவானும் தாங்
கள் விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும், நாங்கள்
புறத்தேசத்தாருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்
கிக்கும்படிக்கு ஐக்கப்படுதற்கு அடையாளமாக
எனக்கும் பர்னபாவுக்கும் வலதுகைகளைக் கொ
டுத்து,—10 தரித்திரரை நினைத்துக்கொள்ளும்ப
டிக்குமாத்திரம் புத்திசொன்னார்கள்; நானும் அப்
படியே செய்யச் சாக்கிரதையாயிருந்தேன்.

11 மேலும் பேதுரு அந்தியோகியா ஊருக்கு
வந்தபொழுது, அவன் தப்பிதம்செய்ததினாலே
நான் முகமுகமாய் அவனோடு எதிர்த்தேன். —
12 எப்படியென்றால், யாக்கோபினிடத்திலி
ருந்து சிலர் வருகிறதற்குமுன்னே, அவன் புறத்
தேசத்தாருடனே சாப்பிட்டான்; அவர்கள் வந்த
பொழுது விருத்தசேதனம் உள்ளவர்களுக்குப்
பயந்து விலகிப் பிரிந்தான். —13 மற்ற யூதரும்
அப்படியே வஞ்சகம்பண்ணினார்கள்; அவர்களு
டைய வஞ்சகத்தினாலே பர்னபாவும்கூட இழுக்
கப்பட்டான். — 14 இப்படி அவர்கள் சுவிசே
ஷத்தின் சத்தியத்திற்குத்தக்கதாக நடவாததை
நான் கண்டபொழுது, எல்லாருக்கும் முன்பாக
நான் பேதுருவை நோக்கிச் சொன்னதாவது:
யூதனாயிருக்கிற நீர் யூதர்முறைமையாக அல்ல
புறத்தேசத்தார் முறைமையாக நடந்துகொண்டி
ருக்க, புறத்தேசத்தாரை யூதர் முறைமையாய்
நடக்கும்படி நீர் எப்படிக் கட்டாயம்பண்ண
லாம்.

15 ஒரு மனிதனும் நியாயப்பிரமாணத்திற்கு
ஏற்ற கிரியைகளினாலே நீதிமானாக்கப்படுவது
இல்லையே. — 16 ஆதலால் புறத்தேசத்தாரில்
பிறந்த பாவிகளாயிராமல், சுபாவப்படி யூதராயி
ருக்கிற நாமும், இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும்
விசுவாசத்தினாலே அன்றி, நியாயப்பிரமாணத்
திற்கு ஏற்ற கிரியைகளால் மனிதன் நீதிமானாகிற
தில்லை என்று அறிந்து, நியாயப்பிரமாணத்திற்கு
ஏற்ற கிரியைகளினால் அல்ல, கிறிஸ்துவைப் பற்
றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாகும்ப
டிக்கு, கிறிஸ்து இயேசுவின்மேல் விசுவாசிகளா
னோமே.—17 அந்தப்படி கிறிஸ்துவினாலே நீதி
மான்களாகப் பார்க்கையில் நாமும் பாவிகளாகக்
காணப்பட்டால் கிறிஸ்து பாவத்திற்கு ஊழியக்
காரர் ஆவாரா? அப்படி ஆகவேமாட்டார். —
18 நான் இடித்துப்போட்டவைகளை நானே மறு
படியும் கட்டினால், என்னை அக்கிரமக்காரன்
என்று காண்பிப்பேன். — 19 பராபரனுக்காகப்
பிழைக்கும்படிக்கு நியாயப்பிரமாணத்தின் வழி
யாய் நியாயப்பிரமாணத்திற்கு மரித்தேனே. —
20 கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையில் அறை
யப்பட்டேன்; அப்படியிருந்தும் பிழைத்திருக்கி
றேன்; நான்தானே அல்ல, கிறிஸ்துவே எனக்
குள்ளே பிழைத்திருக்கிறார்; அந்தப்படி இப்
பொழுது என் தேகத்திலுள்ள சீவன், என்னில்
அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்
கொடுத்த பராபரனுடைய குமாரனைப் பற்றும்
விசுவாசத்தினாலே பிழைக்கின்றது.—21 நீதியா
னது நியாயப்பிரமாணத்தினாலே வந்தால், கிறி
ஸ்து மரித்தது வீணாயிருக்குமே; ஆதலால் நான்
பராபரனுடைய கிருபையைத் தள்ளிவிடேன்
என்றேன்.

## ௩. அதிகாரம்.

ஆ புத்தியீனமுள்ள கலாத்தியரே, நீங்கள் சத்
தியத்திற்குக் கீழ்ப்படியாமல் போகத்தக்க வித
மாக யாவன் உங்களை மயக்கப்படுத்தினான்? உங்
களுக்குப் பிரத்தியட்சமாய் இயேசுக்கிறிஸ்து உங்
களுக்காகச் சிலுவையில் அறையப்பட்டவராய்க்
குறிக்கப்பட்டிருந்தாரே. — 2 ஆவியை நீங்கள்

நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினா
லோ, விசுவாசப் பிரசங்கத்தினாலோ, (எதினா
லே) பெற்றீர்கள்? இதைமாத்திரம் உங்களிடத்
தில் அறிய விரும்புகிறேன்.—3 ஆவியினாலே
ஆரம்பம்பண்ணின நீங்கள் இப்பொழுது மாம்
சத்தினாலே முடிவுசெய்ய இத்தனை புத்தியீனரா
யிருக்கிறீர்களா?—4 இத்தனை பாடுகளை வீணாய்ப்
பட்டீர்களா? ஆ வீணாயிருக்கமாட்டாதே.—
5 அன்றியும் உங்களுக்கு ஆவியை வரச்செய்கிற
வனும் உங்களுக்குள்ளே அற்புதங்களை நடப்பிக்
கிறவனுமானவன் அப்படி நியாயப்பிரமாணத்
திற்கு ஏற்ற கிரியைகளினாலோ, விசுவாசப் பிர
சங்கத்தினாலோ, (எதினாலே) செய்கிறான்?—
6 அப்படி ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான்;
அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்
டது.

7 ஆகையால் விசுவாசமார்க்கத்தாரே ஆபிரகா
மின் பிள்ளைகளாய் இருக்கிறார்கள் என்று அறிவீர்
களாக.—8 மேலும் பராபரன் விசுவாசத்தினாலே
உலகத்தாரை நீதிமான்களாக்குவார் என்று வே
தாகமம் முன் அறிந்து, உன்னாலே எல்லா உல
கத்தாரும் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று ஆபிர
காமுக்குச் சுவிசேஷமாய் முன் அறிவித்தது.—
9 அந்தப்படி விசுவாசமார்க்கத்தார் விசுவாச
முள்ள ஆபிரகாமுடனேகூட ஆசீர்வதிக்கப்படு
கிறார்கள்.

10 நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைக்
காரராகிய யாவரும் நியாயப்பிரமாண புத்தகத்
தில் எழுதப்பட்டவைகளை எல்லாம் செய்யத்தக்
கதாக அவைகளில் நிலைத்திராதவன் எவனோ,
அவன் சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிற
படியால், சாபத்திற்குக் கீழாயிருக்கிறார்கள்.—
11 மேலும் நியாயப்பிரமாணத்தினாலே ஒரு
வனும் பராபரனிடத்திலே நீதிமான் ஆகிற
தில்லை என்பது வெளியரங்கமாய் இருக்கின்றது;
எப்படியெனில், விசுவாசத்தால் நீதிமானானவன்
பிழைப்பான் என்று சொல்லியிருக்கிறதே.—
12 அன்றியும் நியாயப்பிரமாணமானது விசுவாசத்
தை ஏற்படுத்துகிறதில்லை; இவைகளைச் செய்
கிற மனிதன் இவைகளால் பிழைப்பான் என்று
ஏற்படுத்துகின்றது.—13 இப்படியிருக்க, மரத்தி
லே தூக்கப்பட்ட யாவனும் சபிக்கப்பட்டவன்
என்று எழுதியிருக்கிறபடி, கிறிஸ்து நமக்காகச்
சாபத்தை அடைந்து, நியாயப்பிரமாணத்தின்
சாபத்திற்கு நம்மை விலக்கி இரட்சித்தார்.—
14 ஆபிரகாமுக்கு உண்டான ஆசீர்வாதம் கிறி
ஸ்து இயேசுவினாலே புறத்தேசத்தாருக்கு வரும்
படியாகவும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ஆவி
யை நாம் விசுவாசத்தினாலே பெறும்படியாகவுமே
அப்படி ஆயிற்று.

15 சகோதரரே, மனிதர் முறைமையாகச் சொ
ல்லுகிறேன்; மனிதர்களுக்குள்ளே உறுதிபண்
ணப்பட்ட ஓர் உடம்படிக்கையை ஒருவனும்
தள்ளவும் அதினோடே எதையாகிலும் கூட்டவும்
மாட்டானே.—16 ஆபிரகாமுக்கும் அவனுடைய
சந்ததிக்கும் வாக்குத்தத்தங்கள் பண்ணப்பட்
டன; அப்பொழுது சந்ததிகளுக்கென்று அநே
கரைக்குறித்துச் சொல்லாமல், உன் சந்ததிக்
கென்று ஒருவனைக்குறித்துச் சொல்லியிருக்கிறார்;
அந்தச் சந்ததி கிறிஸ்துவே.—17 ஆனதால் நான்
சொல்லுகிறது என்னவெனில், கிறிஸ்துவுக்கு
நேராகப் பராபரனால் முன் உறுதிபண்ணப்
பட்ட உடம்படிக்கை உண்டே, அப்பொழுது
உண்டான வாக்குத்தத்தத்தைத் தள்ளத்தக்கதாக
அந்த உடம்படிக்கையை நானூற்றுமுப்பது வரு
ஷத்திற்குப்பின் உண்டான நியாயப்பிரமாணம்
நீக்கமாட்டாது.—18 அன்றியும் சுதந்தரமானது
நியாயப்பிரமாணத்தினாலே உண்டானால், அவ்
வாக்குத்தத்தத்தினால் உண்டாயிராதே; ஆபிரகா
முக்குப் பராபரன் அதை வாக்குத்தத்தத்தினாலே
அருளிச்செய்தார்.

19 அப்படியானால் நியாயப்பிரமாணம் என்
னத்துக்கு என்றால், அது வாக்குத்தத்தத்தைப்
பெற்ற சந்ததி வருமளவும் தேவதூதரைக்கொண்
டு மத்தியஸ்தன் கையில் கட்டளையிடப்பட்டு,
அக்கிரமங்களின் நிமித்தமாகக் கூட்டப்பட்டிருந்
தது.—20 மத்தியஸ்தன் ஒருவனுடையவன்
அல்ல, பராபரன் ஒருவரே இருக்கிறார்.

21 அப்படியானால் நியாயப்பிரமாணம் பரா
பரனுடைய வாக்குத்தத்தங்களுக்கு விரோதமாயி
ருக்கிறதா என்றால் அப்படியிருக்கிறதே இல்லை;
எப்படியெனில், உயிரைக் கொடுக்கத்தக்க நியா
யப்பிரமாணம் கொடுக்கப்பட்டிருந்ததானால், நீ
தியானது மெய்யாய் நியாயப்பிரமாணத்தினால்
உண்டாகும்.—22 அப்படி இராதபடியால், வே
தாகமம், இயேசுக்கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்
தினாலே வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட நீதி, வி
சுவாசம் உள்ளவர்களுக்கு அளிக்கப்படும்படிக்கு,
எல்லாரையும் ஏகமாய்ப் பாவத்தின்கீழ் அடைத்
துப்போட்டது.—23 ஆனதால் விசுவாசம் வரு
தற்குமுன்னே நாங்கள் வெளிப்படுவதாயிருந்த
விசுவாசத்திற்கு ஏதுவாக அடைக்கப்பட்டவர்க
ளாய் நியாயப்பிரமாணத்தின்கீழ் காக்கப்பட்டிருந்
தோம்.—24 இவ்விதமாய் நாம் விசுவாசத்தினாலே
நீதிமான்கள் ஆவதற்கு நியாயப்பிரமாணம் நம்
மைக் கிறிஸ்துவினிடத்திற்கு வழி நடத்துகிற
உவாத்தியாய் இருந்ததே.

25 விசுவாசம் வந்தபின்பு நாங்கள் பின்னும்
அந்த உவாத்திக்குக் கீழானவர்கள் அல்ல.—
26 நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவைப்பற்
றும் விசுவாசத்தினாலே பராபரனுடைய பிள்ளைக
ளாய் இருக்கிறீர்களே.—27 உங்களில் கிறிஸ்து
வுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்த
னைபேரோ அத்தனைபேரும் கிறிஸ்துவைத் தரித்

துக்கொண்டீர்களே. — 28 இப்படி நீங்களெல்
லாரும் கிறிஸ்து இயேசுவினாலே ஒன்றாயிருக்கிற
படியால், யூதன் என்றும், கிரேக்கன் என்றும்,
அடிமை என்றும், சுயாதீனன் என்றும், ஆண்
என்றும், பெண் என்றும், இவ்வேற்றுமை உங்க
ளுக்கு இல்லையே.—29 மேலும் நீங்கள் கிறிஸ்
துவைச் சேர்ந்தவர்களாயிருக்க, ஆபிரகாமின் சந்
ததியாராயும் வாக்குத்தத்தத்தின்படியே சுதந்தா
ராயும் இருக்கிறீர்கள்.

## ௪. அதிகாரம்.

பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில்,
சுதந்தரவாளியானவன் எல்லாவற்றிற்கும் எசமா
னாயிருந்தும், அவன் குழந்தையாயிருக்கிறகால
மளவும் அவனுக்கும் அடிமையானவனுக்கும் வித்
தியாசம் இல்லை. — 2 தகப்பன் குறித்தகாலம்வ
ரைக்கும் அவன் உவாத்திமாருக்கும் வீட்டு விசா
ரணைக்காரருக்கும் கீழாயிருக்கிறான்.-3 அப்படிப்
போல நாமும் குழந்தைகளாயிருந்தகாலத்திலே
இவ்வுலகத்தின் வழிபாடுகளுக்கு அடிமைப்பட்
டவர்களாய் இருந்தோம்.—4 காலம் நிறைவேறி
னபொழுது, பராபரன் தம்முடைய குமாரனை
அனுப்ப, அவர் நியாயப்பிரமாணத்தின் கீழானவர்
களாகிய நம்மை மீட்டுக்கொண்டு, புத்திரசுவி
காரம் நமக்கு உண்டாகும்படி செய்யும்படிக்கு,-
5 ஸ்திரியினிடத்தில் பிறந்து, நியாயப்பிரமாணத்
திற்குக் கீழானார்.—6 மேலும், நீங்கள் புத்திரரா
யிருக்கிறபடியினாலே அப்பா பிதாவே என்று
கூப்பிடத்தக்கதாக, பராபரன் தம்முடைய குமா
ரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில்
அனுப்பினார்.-7 ஆகையால் இனி நீ அடிமையா
யிராமல் புத்திரனாய் இருக்கிறாய்; மேலும் நீ புத்
திரனாயிருக்க, கிறிஸ்துவின் மூலமாய்ப் பராபரனு
டைய சுதந்தரனாயும் இருக்கிறாய்.

8 நீங்கள் பராபரனை அறியாமல் இருந்தபொ
ழுது சுபாவத்தின்படி தேவர்கள் அல்லாதவர்க
ளுக்கு அடிமைகளாய் இருந்தீர்கள்.-9 இப்பொ
ழுது நீங்கள் பராபரனை அறிந்துகொண்டபின்பு
அல்லது, பராபரனாலே அறிந்துகொள்ளப்பட்ட
பின்பு, எப்படி நீங்கள் பலஈனமும் வெறுமை
யுமான அவ்வழிபாடுகளுக்கு மறுபடியும் திரும்பி,
மறுபடியும் அவைகளுக்கு அடிமைப்பட்டிருக்க
விரும்புகிறீர்கள்?-10 நாட்களையும் மாதங்களையும்
மற்றக் காலங்களையும் வருஷங்களையும் நோக்கிப்
பார்க்கிறீர்களே.—11 ஆ நான் உங்களுக்காகப்
பிரயாசப்பட்டது வீணாய்ப்போகுமோ என்று
உங்களைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

12 சகோதரரே, நான் உங்களைப்போல ஆன
படியால் நீங்களும் என்னைப்போல ஆகுங்கள்
என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; என
க்கு நீங்கள் அநியாயம் ஒன்றும் செய்யவில்லை.-
13 உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, முதலாந்
தரம் நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைச் சரீர
பலஈனத்தோடே அறிவித்தேன்.-14 அப்படியி
ருந்தும் எனக்குச் சோதனையான அந்தச் சரீர பல
ஈனத்தை நீங்கள் அசட்டைபண்ணாமலும், அ
ரோசியாமலும் பராபரனுடைய தூதனைப்போல
வும் கிறிஸ்து இயேசுவைப்போலவும் என்னை ஏற்
றுக்கொண்டீர்கள்.-15 அப்பொழுது எவ்வளவு
பாக்கியமுள்ளவர்களாய் இருந்தீர்கள்; நீங்கள்
உங்கள் கண்களைப் பிடுங்கி, எனக்குக் கொடுக்
கக்கூடுமானால் அப்படியும் செய்வீர்களே என்று
உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன் -16 நான்
உங்களுக்குச் சத்தியத்தைச் சொன்னபடியினா
லே, உங்களுக்குச் சத்துருவானேனா?

17 அவர்கள் உங்களுக்கு வைராக்கியபட்சத்
தைக் காண்பிக்கிறார்கள்; ஆகிலும் நல்லமனதாய்
அப்படிச் செய்கிறதில்லை; அல்லாமலும், அவர்
கள் தங்களுக்கு நீங்கள் வைராக்கியபட்சத்தைக்
காண்பிக்கும்பொருட்டு, (என்னிலிருந்து) உங்
களை நீக்க விரும்புகிறார்கள் —18 நன்மையைக்
குறித்து வைராக்கியபட்சமாயிருக்கிறது நல்லது
தான்; அப்படியே நான் உங்களிடத்தில் இருக்
கும்பொழுதுமாத்திரம் அல்ல, எப்பொழுதும்
செய்யவேண்டும். — 19 ஆ என் பிள்ளைகளே,
கிறிஸ்து உங்களிடத்தில் வடிவுகொள்ளுமளவும்
உங்களுக்காக மறுபடியும் கருப்பவேதனைப்படுகி
றேன். — 20 மேலும், நான் உங்களைக்குறித்துச்
சந்தேகப்படுகிறபடியால், நான் இப்பொழுதே
உங்களிடத்திலிருந்து என் பேச்சை மாற்றிக்
கொள்ள ஆசையாயிருக்கிறேன்.

21 நியாயப்பிரமாணத்திற்குக் கீழாயிருக்கமன
துள்ள நீங்கள், நியாயப்பிரமாணத்தைக் கேட்க
வில்லையா? இதை எனக்குச் சொல்லுங்கள்?-
22 எப்படி எழுதியிருக்கிறதென்றால், ஆபிரகா
முக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்; ஒருவன்
அடிமையானவளிடத்தில் பிறந்தவன், ஒருவன்
சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன்.-23 அடி
மையானவளிடத்தில் பிறந்தவன் சரீர பலத்தினா
லே பிறந்தான்; சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்
தவன் வாக்குத்தத்தத்தினாலே பிறந்தான். —
24 இவைகள் ஞான அருத்தமுள்ளவைகள்; என்
னவெனில், அந்த ஸ்திரிகள் இரண்டு ஏற்பாடுக
ளேயாம். ஒன்று அடிமைத்தனத்திற்கு ஏதுவாகப்
பிள்ளைபெறுகிற சீனாய்ப்பர்வதத்தின் ஏற்பாடு; அ
தை ஆகார் என்பது குறிக்கின்றது.-25 ஆகாரெ
ன்பது அரபிதேசத்திலுள்ள சீனாய்ப்பர்வதத்திற்குப்
பேராயிருக்கிறதே;மேலும் அந்த ஆகாரென்பவள்
இப்பொழுது இருக்கிற எருசலேமுக்குச் சரியாய்
இருக்கிறாள்; அது தன் பிள்ளைகளோடேகூட
அடிமைப்பட்டிருக்கின்றதே.-26 மேலான எருச
லேமே சுயாதீனமான ஸ்திரியினாலே குறிக்கப்பட்
டது; அவள் நம்மெல்லாருக்கும் தாயானவள்.-
27 அந்தப்படி எழுதியிருக்கிறதாவது: புருஷனை

அடைந்தவளிலும் அவாந்தரமுள்ளவளுக்கே அதிக பிள்ளைகள் உண்டு; ஆகையால் பிள்ளைபெருத மலடியே, மகிழ்ந்திரு; கருப்பவேதனைப்படாதவளே, களிப்பாய் எழும்பிச் சத்தமிடு என்பதே.—28 ஆனதால் சகோதரரே, நாம் ஈசாக்கைப்போல வாக்குத்தத்தத்துப் பிள்ளைகளாயிருக்கிறோம்.—29 அல்லாமலும், அக்காலத்திலே சரீரபலத்தினலே பிறந்தவன் ஆவியின்படி பிறந்தவனைத் தன்பப்படுத்தினதுபோல, இப்பொழுதும் நடக்கின்றது.–30 அதைக்குறித்து வேத எழுத்து எப்படிச் சொல்லுகிறது என்றால், அடிமையானவளின் மகன் சுயாதீனமுள்ளவளுடைய குமாரனேடே சுதந்தரவாளியாய் இருக்கக்கூடாது; ஆகையால் அடிமையானவளையும் அவளுடைய குமாரனையும் புறம்பே தள்ளு என்றே சொல்லுகின்றது.—31 இப்படியிருக்கச் சகோதரரே, நாம் அடிமையானவளுக்கு அல்ல, சுயாதீனமுள்ளவளுக்கே பிள்ளைகளாய் இருக்கிறோம்.

## ரு. அதிகாரம்.

ஆனபடியினலே நீங்கள் மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்தடிக்கு உட்படாமல் கிறிஸ்து நமக்கு உண்டாக்கின சுயாதீன நிலைமையிலே நிலைகொண்டிருப்பீர்களாக.

2 பின்னும் கேளுங்கள்; பவுல் என்னும் நானே உங்களுக்குச் சொல்லுகிறதாவது: நீங்கள் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொண்டால், கிறிஸ்து உங்களுக்கு ஒரு பிரயோசனமும் ஆகமாட்டார்.–3 மேலும் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொள்ளுகிற எந்த மனிதனும் நியாயப்பிரமாணம் முழுவதையும் நிறைவேற்றக் கடனாளியாய் இருக்கிறன் என்று மறுபடியும் சாட்சியாக அறிவிக்கிறேன்.—4 நியாயப்பிரமாணத்தினல் நீதிமான்களாக விரும்புகிற நீங்கள் கிறிஸ்துவை விட்டு நீங்கி, அவருடைய கிருபைக்குப் புறம்பே விழுந்தீர்கள்.—5 நாங்கள் ஆவியைக்கொண்டு விசுவாசத்தினலே நீதி வருதற்கு நம்பிக்கையோடே காத்திருக்கிறோம்.—6 கிறிஸ்து இயேசுவினிடத்தில் விருத்தசேதனமும் விருத்தசேதனம் இல்லாமையும் ஒன்றுக்கும் உதவாதே; அன்பினல் கிரியைசெய்கிற விசுவாசமே உதவும்.—7 நீங்கள் நன்றாய் ஓடினீர்கள்; சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் போகத்தக்கதாக, யாவன் உங்களுக்குத் தடைசெய்தான்.—8 நீங்கள் அடைந்த இந்தப் போதனை உங்களை அழைத்தவனலே உண்டானதல்ல.–9 புளிப்புள்ள கொஞ்சமாகிய மா பிசைந்தமாவை எல்லாம் உப்பப்பண்ணுகிறது.—10 நீங்கள் வேறொரு சிந்தையாயிருப்பதும் இல்லை என்று நான் கர்த்தராலே உங்களைக்குறித்து நம்பிக்கையானேன்; உங்களைக் கலக்கப்படுத்துகிறவன் எப்படிப்பட்டவனயிருந்தாலும், ஆக்கினையைச் சுமந்துகொள்வான்.—11 சகோதரரே, இதுவரைக்கும் நான் விருத்தசேதனத்தைப் பிரசங்கிக்கிறவனயிருந்தால், இதுவரைக்கும் என்னத்திற்குத் துன்பப்படுகிறேன்? சிலுவையைப் (பிரசங்கிக்கிறதினலே) வருகிற இடறல் ஒழிந்திருக்குமே.—12 உங்களைக் கலகம்பண்ணுகிறவர்கள் தறிப்புண்டுபோனல் நலமாய் இருக்கும்.

13 சகோதரரே, நீங்கள் சுயாதீனத்திற்கு அழைக்கப்பட்டீர்களே; இந்தச் சுயாதீனத்தை நீங்கள் சரீரத்திற்கு ஏற்றதாக அநுசரியாமல், அன்பினலே ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்கள்.—14 பிறனிடத்தில் உன்னைப்போல அன்பாயிருப்பாயாக என்ற இந்த ஒரே வார்த்தையினலே நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுகின்றதே.—15 நீங்கள் ஒருவரை ஒருவர் கடித்துப் பட்சித்துவருகிறபடியினலே, ஒருவரால் ஒருவர் அழிக்கப்படாதபடிக்குப் பாருங்கள்.

16 பின்னும் நான் சொல்லுகிறது என்னவென்றால், சரீரத்தின் இச்சையை நிறைவேற்ருதிருந்து ஆவியின்படி நடந்துகொள்ளுங்கள்.—17 சரீரம் ஆவிக்கு விரோதமாகவும், ஆவி சரீரத்திற்கு விரோதமாகவும் இச்சிக்கிறதே; நீங்கள் செய்யவேண்டுமென்று இருக்கிறவைகளைச் செய்யாதபடிக்கு, இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றனவே.—18 ஆவியினல் ஏவப்படுவீர்களானல், நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்கள் அல்ல.—19 சரீரத்தின் கிரியைகள் வெளியரங்கமாயிருக்கின்றன; அவையாவன, விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம்,—20 விக்கிரகாராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பேதகங்கள், அவமார்க்கங்கள், பொருமைகள், கொலைகள்,—21 வெறிகள், பெருந்தீனிகள் முதலானவைகளே; இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை என்று முன்னே நான் சொன்னதுபோல, இப்பொழுதும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—22 ஆவியின் கனியோ அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியசாந்தம், தயவு, நற்குணம்,—23 உண்மை, பொறுமை, இச்சையடக்கம், இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்கு நியாயப்பிரமாணம் விரோதமாயிருக்கிறதில்லை.—24 மேலும், கிறிஸ்துவின் பாரிசமானவர்கள் தங்கள் சரீரத்தை அதின் பலவித இச்சைகளோடும்கூடச் சிலுவையில் அறைந்திருக்கிறர்கள்.—25 நாம் ஆவியைக்கொண்டு பிழைக்கிறபடியால், ஆவியின்படி நடக்கவும் கடவோம்.—26 வீண் புகழ்ச்சியை விரும்பாமலும், ஒருவருக்கொருவர் கோபமூட்டாமலும், ஒருவர்மேல் ஒருவர் பொருமை வையாமலும் இருக்கக்கடவோம்.

## ௬. அதிகாரம்.

சகோதரரே, ஒரு மனிதன் ஒரு தப்பிதத்தில் அகப்பட்டால், ஆவியையுடைய நீங்களும் தூண்டிவிடப்படாதபடிக்கு, உங்களைக்குறித்து எச்சரிக்கையாயிருந்து, அப்படிப்பட்டவனைச் சாந்தமுள்ள மனதோடே சீர்பொருந்தப்பண்ணுங்கள்.—2 ஒருவருக்கு உண்டான பாரத்தை ஒருவர் சுமந்துகொண்டு, இப்படியே கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுங்கள். —3 மேன்மையில்லாத ஒருவன் தன்னை மேன்மையுள்ளவன் என்று எண்ணினால் தன்னைத்தானே வஞ்சிப்பானே.—4 அவனவன் தன் தன் சுயகிரியையைச் சோதித்துப் பார்க்கக்கடவன்; அப்பொழுது மற்றவனைப் பார்க்கையில் அல்ல, தன்னையே பார்க்கையில் புகழ்ச்சியைப் பெறுவான்.—5 அவனவன் தன் தன் சுயபாரத்தைச் சுமப்பானே.—6 மேலும், சுவிசேஷவசனத்தைக் குறித்து உபதேசம் கேட்கிறவன் உபதேசிக்கிறவனுக்குச் சகல நன்மைகளிலும் பங்கைக் கொடுக்கக்கடவன்.—7 உங்களை வஞ்சியாதிருப்பீர்களாக; பராபரன் தம்மைப் பரியாசம்பண்ணவொட்டார்; ஆனதால், மனிதன் விதைக்கிறது எதுவோ, அதையே அறுப்பான். — 8 தன் தேக இச்சைகளுக்குத்தக்கதாக விதைக்கிறவன் அந்தத் தேக இச்சைகளினால் அழிவை அறுப்பான்; ஆவிக்குத்தக்கதாக விதைக்கிறவன் ஆவியினாலே நித்திய சீவனை அறுப்பான். — 9 ஆகையால் நன்மை செய்கிறதில் இளைப்படையாமல் இருப்போமாக; நாம் தளர்ந்துபோகாதிருந்தால் ஏற்றகாலத்திலே அறுப்போமே.— 10 இப்படியிருக்க, நமக்குக் காலம் நேரிடுகிறபடி யாவருக்கும், விசேஷமாக விசுவாசிகளாகிய குடும்பத்தாருக்கு நன்மைசெய்யக்கடவோம்.

11 பாருங்கள், இவ்வளவு என் கையெழுத்தோடே எழுதினேன்.—12 சரீரத்தின்படி நல்லவர்களாகத் தோன்ற விரும்புகிறபேர்கள் தாங்கள் கிறிஸ்துவினுடைய சிலுவையின்நிமித்தம் துன்பப்படாதபடிக்குமாத்திரமே உங்களை விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளக் சட்டாயம்பண்ணுகிறார்கள்.—13 விருத்தசேதனத்தை அடைந்திருக்கிறவர்களும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாமலிருக்கிறார்கள்; அப்படியிருந்தும், அவர்கள் உங்கள் சரீரத்தைக்குறித்து மேன்மைபாராட்டும்படிக்கு, நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்று இருக்கிறார்கள்.—14 நான் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் சிலுவையைக்குறித்தே அல்லாமல் வேறொன்றைக்குறித்தும் மேன்மைபாராட்டாதிருப்பேனாக; அவரால் உலகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறது; நானும் உலகத்திற்கு அப்படியே இருக்கிறேன்.—15 கிறிஸ்து இயேசுவினிடத்தில் விருத்தசேதனத்தாலாவது விருத்தசேதனம் இல்லாமையாலாவது பிரயோசனம் இல்லையே; புதிய சிருட்டியாகிறதினாலே பிரயோசனம் வரும். — 16 இந்தப் பிரமாணத்தின்படியே நடந்துவருகிறவர்கள் எவர்களோ, பராபரனுடைய இஸ்ரவேலராகிய அவர்களுக்கும் சமாதானமும்இரக்கமும்உண்டாயிருக்கக்கடவது.

17 கடைசியிலே கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய அச்சடையாளங்களை நான் என் சரீரத்திலே சுமந்துகொண்டிருக்கிறபடியால், ஒருவனும் எனக்கு அதிக வருத்தம் உண்டாக்காதிருப்பானாக. — 18 சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

# அப்போஸ்தலனாகிய பவுல்
# எபேசியருக்கு எழுதின
# நிருபம்.

## ௧. அதிகாரம்.

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுல், எபேசு ஊரிலே கிறிஸ்து இயேசுவினிடத்தில் விசுவாசமும் பரிசுத்தமும் உள்ளவர்களுக்கு எழுதுகிறதாவது :—2 நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக்கிருபையும் சமாதானமும்உண்டாகக்கடவது.

3 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய பிதாவுமாய்த் தேவனுமாயிருக்கிறவருக்குத் தோத்திரம் உண்டாவதாக; என்னத்தினாலெனில், அவர் தமக்குமுன்பாக நாம் பரிசுத்தராயும் பிழையில்லாதவர்களாயும் இருப்பதற்கு லோகத்தோற்றத்திற்குமுன்னே இயேசுக்கிறிஸ்துவின் மூலமாய் நம்மைத் தெரிந்துகொண்டபடியே,—4 அவர்மூலமாய்ப் பரமஸ்தலங்களிலே பலவித திவ்விய நன்மைகளால் நம்மை ஆசீர்வதித்தார்.—

5 அன்றியும் அவர் தமக்கு அன்பாயிருக்கிறவ
ருக்குள் நமதுமேல் வைத்தருளின தமது கிருபை
யின் மகிமைக்குப் புகழ்ச்சியாக,—6 தம்முடைய
தயையுள்ள சித்தத்தின்படி இயேசுக்கிறிஸ்துமூ
லமாக நம்மைத் தமக்குப் புத்திரசுவிகாரம் உள்ள
வர்களாக அன்பினாலே முன்குறித்திருக்கிறார்.—
7 அன்றியும் அவர் மிகுந்த விவேகத்தோடும் புத்
தியோடும் நமக்குச் சம்பூரணமாய்த் தெரியப்ப
டுத்தின ஐசுவரியமான கிருபையின்படியே,—
8 அந்த இயேசுக்கிறிஸ்து தமது திரு இரத்தத்
தைச் சிந்தினதினாலே நமக்குப் பாவமன்னிப்பா
கிய மீட்பு உண்டாயிருக்கின்றது.—9 மேலும்
காலங்கள் நிறைவேறும்பொழுது, உண்டாகும்
விசாரணையினாலே வானங்களிலும் பூமியிலும் உள்
ளவைகள் யாவும் தலையாகிய கிறிஸ்துவுக்குக் கீழா
கக் கூட்டப்படவேண்டுமென்று, — 10 தமக்
குள்ளே தீர்மானித்திருந்த சந்தோஷமான சித்தத்
தின் இரகசியத்தை எங்களுக்கு அறிவித்தார்.—
11 மேலும், தமது சித்தத்தினுடைய ஆலோச
னைக்குத்தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற
அவருடைய தீர்மானத்தின்படியே, —12 நாங்
கள் கிறிஸ்துவின்மேல் முன்னே நம்பிக்கையாயி
ருந்தவர்களாய் அவருடைய மகிமைக்குப் புகழ்ச்
சியாய் இருக்கும்படிக்கு, முன் குறிக்கப்பட்டு
அவராலே சுதந்தரத்தையும் அடைந்தோம் —
13 நீங்களும் அப்படியே (சுதந்தரராகும்படிக்
கு,) உங்கள் இரட்சிப்புக்கு ஏற்ற சுவிசேஷமா
கிய சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசித்து
வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட பரிசுத்த ஆவியோ
டே அவரால் முத்திரைப்படுத்தப்பட்டீர்கள்.—
14 சம்பாதிக்கப்பட்டவர்கள் அவருடைய மகி
மைக்குப் புகழ்ச்சியாக மீட்கப்படுமளவும் அந்த
ஆவியானவர் நம்முடைய சுதந்தரத்திற்கு அச்சா
ரமாயிருக்கிறார்.

15 ஆனபடியினாலே கர்த்தராகிய இயேசு
வின்மேலுள்ள உங்கள் விசுவாசத்தையும் எல்
லாப் பரிசுத்தவான்கள்மேல் உள்ள உங்கள் அன்
பையும் நான் கேள்விப்பட்டபின்பு,-16 இடை
விடாமல் உங்களுக்காகத் தோத்திரம்பண்ணி,
என் செபங்களில் உங்களை நினைத்து,-17 நம்மு
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் தேவ
னுமாய் மகிமையின் பிதாவுமாயிருக்கிறவர் அவ
ரை அறிந்துகொள்ளுதற்கு ஏற்ற ஞானத்தையும்
தெளிவையும் அளிக்கிற ஆவியை உங்களுக்குக்
கொடுக்கவேண்டும் என்றும்,—18 தாம் நம்மை
அழைத்ததினாலே நாம் நம்பத்தக்க பாக்கியம்
இன்னதென்றும், பரிசுத்தவான்களுக்குத் தாம்
கொடுக்கும் சுதந்தரத்தின் மகிமையின் பெரு
மை இன்னதென்றும்,—19 தாம் கிறிஸ்துவை
மரித்தோரிலிருந்து எழுப்பி, எல்லாத் துரைத்த
னங்களுக்கும் அதிகாரங்களுக்கும் வல்லமையுள்
ளவர்களுக்கும் கர்த்தாக்களுக்கும் இம்மையிலே
மாத்திரம் அல்ல, மறுமையிலேயும் மற்றும் பேர்
கொண்டிருக்கிற யாவற்றிற்குமேல் உயர்ந்திருக்
கத்தக்கதாக,—20 அவரைப் பரமண்டலங்களி
லே தமது வலதுபாரிசத்திலே உளுக்காரும்படி
செய்து, — 21 இப்படிச் சகலத்தையும் அவரு
டைய பாதங்களின் கீழ்ப்படுத்தி, (அவருடைய)
சபைக்காக அவரைச் சகலத்திற்கும் தலைவராக
ஏற்படுத்தி,—22 இப்படி அவரிடத்தில் வெளிப்
படுத்தின தமது பலத்த வல்லமையின் தத்துவத்
தின்படியே விசுவாசிகளாகிய நம்மிடத்திலே
தாம் காண்பிக்கும் வல்லமையின் மகா மேன்மை
இன்னதென்றும் நீங்கள் அறியும்படிக்கு, பிரகா
சமுள்ள புத்தியாகிய கண்களைக் கொடுக்கவேண்
டும் என்றும் (செபம்பண்ணுகிறேன்).-23 (அவ
ருடைய சபை) எல்லாவற்றையும் எல்லாவற்
றாலும் நிரப்புகிறவருடைய நிறைவான சரீரமாய்
இருக்கின்றது.

## உ. அதிகாரம்.

அக்கிரமங்களாலும் பாவங்களாலும் செத்தவர்
களாயிருந்த உங்களையும் உயிர்ப்பித்தார்.—2 முற்
காலத்திலே இப்பிரபஞ்சத்தின் வழக்கத்தின்படி
யேயும், கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகளிடத்தில்
இப்பொழுது கிரியைசெய்கிற ஆகாசத்தின் அதி
காரமுள்ள பிரபுவாகிய ஆவியின்படியேயும், அ
வைகளில் நடந்துகொண்டீர்கள். — 3 அவர்க
ளோடேகூட நாங்கள் எல்லாரும் முற்காலத்தி
லே எங்கள் மாம்சதேக இச்சைகளின்படியே
நடந்து, எங்கள் மாம்சதேகமும் சிந்தனைகளும்
இச்சித்தவைகளைச் செய்து, மற்றவர்களைப்போ
லக் கோபாக்கினைக்கு உள்ளானவர்களாயிருந்
தோம்.—4 இப்படி நாம் அக்கிரமங்களினாலே
செத்தவர்களாயிருக்கையில்,-5 இரக்கத்தில் ஐசு
வரியமுள்ள பராபரன் தாம் நமதுமேல் வைத்த
மிகுந்த அன்பினாலே நம்மைக் கிறிஸ்துவுடனே
கூட உயிர்ப்பித்தார்; கிருபையினாலே இரட்சிக்
கப்பட்டீர்கள்.—6 கிறிஸ்து இயேசுவுக்குள்ளே
அவர் நமதுமேல் வைத்த தயவினாலே தம்மு
டைய கிருபையின் மிகுந்த ஐசுவரியத்தை வருங்
காலங்களிலே திருட்டாந்தமாய்க் காண்பிப்பதற்
காக,—7 நம்மைக் கிறிஸ்து இயேசுவுடனேகூட
எழுப்பி, பரமண்டலங்களிலே இருக்கும்படி
செய்தார்.—8 கிருபையினாலே விசுவாசத்தைக்
கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்.—9 அது உங்
களாலும் அல்ல, கிரியைகளினாலும் அல்ல, ஒரு
வரும் மேன்மைபாராட்டாதபடிக்கு, அது பராபர
னுடைய ஈவாயிருக்கின்றது.—10 நற்கிரியைக
ளைச் செய்வதற்கு நாம் கிறிஸ்து இயேசுவினாலே
சிருட்டிக்கப்பட்டு, பராபரனுடைய செய்கையா
யிருக்கிறோமே; அவைகளை நாம் செய்து நடக்
கும்படிக்கு அவர் நம்மை முன்னாக எத்தனம்
பண்ணி இருக்கிறார்.

11 ஆனபடியினலே முன்னே சரீரத்தின்படி
புறத்தேசத்தாராயிருந்து, சரீரத்திலே கையினல்
செய்யப்படுகிற விருத்தசேதனம் உள்ளவர்களா
லே விருத்தசேதனம் இல்லாதவர்கள் என்னப்
பட்ட நீங்கள்,—12 அக்காலத்திலே கிறிஸ்து
வைச் சேராதவர்களுமாய், இஸ்ரவேலருடைய
காணியாட்சிக்குப் புறம்பானவர்களுமாய், வாக்
குத்தத்தத்தின் உடம்படிக்கைகளுக்கு அந்நியரு
மாய், நம்பிக்கையில்லாதவர்களுமாய், பராபரனை
இழந்தவர்களுமாய் இவ்வுலகத்திலே இருந்தீர்
கள் என்று நினைத்துக்கொள்வீர்களாக.—13 முன்
னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து
இயேசுவைச்சேர்ந்து, கிறிஸ்துவினுடைய இரத்
தத்தினலே சமீபமானீர்கள்.—14 எப்படியெனில்
அவரே நம்முடைய சமாதானத்திற்குக் காரண
ராகி, இருதிறத்தாரையும் ஒன்ருக்கி, பிரிவினை
யாகிய நடுச்சுவரைத் தகர்த்து,—15 சடங்குச்
சட்டங்களைக்குறித்து உண்டான சற்பனைகளா
கிய நியாயப்பிரமாணமாகிய பகையைத் தம்மு
டைய சரீரத்தினலே நீக்கிப்போட்டு, இப்படிச்
சமாதானம்பண்ணினதால், இருதிறத்தாரையும்
தமக்குள்ளாக ஒரே புதிய மனிதனுகச் சிருட்
டித்து,—16 பகைக்கு ஏதுவானதைத் தம்மாலே
அழித்ததால், சிலுவையினல் இருதிறத்தாரையும்
ஒரே சரீரமாகப் பராபரனுக்கு ஒப்புரவாக்கி
ஞர்.—17 அல்லாமலும் அவர் வந்து, தூரமா
யிருந்த உங்களுக்கும் சமீபமாயிருந்த அவர்களுக்
கும் சமாதானத்தைச் சுவிசேஷமாக அறிவித்
தார்.—18 அந்தப்படியே நாம் இருதிறத்தாரும்
ஒரே ஆவியோடே பிதாவினிடத்தில் சேருகிற
நிலைமையை அவராலே பெற்றிருக்கிறேம்.
19 ஆகையால் நீங்கள் இனிமேல் அந்நியரு
மாய், குடும்பத்தைச் சேராதவர்களுமாய் இரா
மல், பரிசுத்தவான்களோடே கூட்டப்பட்டவர்
களுமாய், பராபரனுடைய குடும்பத்தைச் சேர்ந்த
வர்களுமாய், — 20 அப்போஸ்தலர் தீர்க்கதரிசி
கள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின்மேல்
கட்டப்பட்டவர்களுமாய் இருக்கிறீர்கள்; அந்த
அஸ்திபாரத்திற்கு இயேசுக்கிறிஸ்து தாமே
மூலைக்கல்லாயிருக்கிருர்.—21 அவர்மேலே மா
ளிகை முழுவதும் இசைவாய் இணைக்கப்பட்டு,
கர்த்தருக்குப் பரிசுத்த ஆலயமாகப் பெருகுகின்
றது.—22 அவர்மேலே நீங்களும் ஆவியினலே
பராபரனுடைய வாசஸ்தலமாகக் கூட்டிக் கட்
டப்பட்டிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

இது முகாந்தரமாகப் பவுல் என்னும் நான் புறத்
தேசத்தாராய் இருக்கிற உங்களுக்காகக் கிறிஸ்து
இயேசுவின்நிமித்தம் காவலில் வைக்கப்பட்டவ
னுயிருக்கிறேன். — 2 உங்களுக்காக எனக்குக்
கொடுத்திருக்கிற தேவகிருபையைக் காட்டிய
உத்தியோகம் இன்னதென்று கேட்டிருப்பீர்க
ளே.—3 என்னவெனில், புறத்தேசத்தார் சுவி
சேஷத்தினலே உடன் சுதந்தரருமாய், அவர்க
ளுடனேகூட ஒரே சரீரமுமாய், கிறிஸ்துவின்
மேல் அவர் பண்ணின வாக்குத்தத்தத்திற்கு
உடன் பங்காளிகளுமாய் இருக்கிருர்கள் என்று
இந்த இரகசியத்தை அவர் எனக்கு வெளிப்
படுத்தி அறிவித்தார்.—4 முன்னே நான் இதைக்
குறித்துச் சுருக்கமாய் எழுதினேன்.—5 அதை
நீங்கள் வாசிக்கையில், கிறிஸ்துவின் இரகசியத்
தைக்குறித்து எனக்கு உண்டாயிருக்கிற அறிவை
அறிந்துகொள்வீர்கள்.—6 அந்த இரகசியம் இப்
பொழுது அவருடைய பரிசுத்த அப்போஸ்தல
ருக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் தேவ ஆவியினலே
வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல, முன்னி
ருந்த தலைமுறைகளின் மனிதர்களுக்கும் தெரி
யப்படுத்தப்பட்டிருக்கவில்லை.—7 இந்தச் சுவி
சேஷத்திற்கு நான் பராபரனுடைய பலத்த தத்து
வத்தால் எனக்கு அளிக்கப்பட்ட கைம்மாறில்லாத
கிருபையினலே ஊழியக்காரனுனேன்.—8 பரா
பரன் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசு
விஞல் செய்து முடித்த அநாதியான தீர்மானத்
தின்படியே,—9 அநேகவிதமான தமது ஞானம்
பரமண்டலங்களில் உள்ள துரைத்தனங்களுக்
கும் அதிகாரங்களுக்கும் சபையினலே தெரியவ
ரும்பொருட்டாக, — 10 கிறிஸ்துவினுடைய அ
ளவற்ற ஐசுவரியத்தைப் புறத்தேசத்தாரிடத்தில்
சுவிசேஷமாக அறிவிக்கிறதற்கும்,—11 இயேசுக்
கிறிஸ்துவைக்கொண்டு எல்லாவற்றையும் சிருட்
டித்த பராபரனுக்குள்ளே ஆதிகாலங்கள்முதல்
மறைந்திருந்த இரகசியத்தோடே ஐக்கப்படுதல்
இன்னதென்று எல்லாருக்கும் வெளிச்சமாகக்
காண்பிக்கிறதற்குமான அந்தக் கிருபையே,
எல்லாப் பரிசுத்தவான்களிலும் சிறியவனுகிய என
க்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.—12 அந்த
இயேசுக்கிறிஸ்துவினலே அவரைப்பற்றும் விசு
வாசத்தால் நமக்குத் தயிரியமும் திடநம்பிக்கை
யோடே பராபரனைச் சேருகிற நிலைமையும் உண்
டாயிருக்கிறது.—13 ஆகையால் உங்கள்நிமித்த
மாக நான் அநுபவிக்கிற உபத்திரவங்களினல்
நீங்கள் சோர்ந்துபோகாதிருக்க வேண்டிக்
கொள்ளுகிறேன்.
14 அவைகள் உங்களுக்கு மகிமையாயிருக்
கின்றனவே.—15 அதற்காக நான் பரமண்ட
லங்களிலும் பூமியிலும் உள்ள குடும்பத்தார் எல்
லாருக்கும் நாமத்தைக் கொடுத்தவராகிய நம்மு
டைய கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினு
டைய பிதாவைநோக்கி என் முழங்கால்களை
முடக்கி,—16 நீங்கள் உங்கள் உள்ளத்திலே
அவருடைய ஆவியினலே வல்லமையாய்ப் பல
ப்படுத்தப்படும்படியாகவும், — 17 விசுவாசத்தி
னலே கிறிஸ்து உங்கள் இருதயங்களில் வாசமா

யிருக்கும்படியாகவும்," நீங்கள் அன்பிலே வே
ரூன்றி, அஸ்திபாரப்பட்டவர்களாய்,—18 சகல
பரிசுத்தவான்களோடுங்கூடக் கிறிஸ்துவினு
டைய (அன்பின்) அகலமும் நீளமும் ஆழமும்
உயரமும் இன்னதென்று உணர்ந்துகொண்டு,—
19 அறிவுக்கு மேலான அவ்வன்பை அறிந்து
கொள்ளுதற்கு வல்லவர்களாகும்படியாகவும், (இ
ப்படி) பராபரனுடைய மிகுந்த பரிபூரணத்
தால் நிறையப்படும்படியாக, அவர் தம்முடைய
மகிமையின் ஐசுவரியத்தின்படியே, உங்களுக்கு
அநுக்கிரகம்பண்ணவேண்டும் என்று வேண்
டிக்கொள்ளுகிறேன்.
20 நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்
கிறதற்கும் மிகவும்அதிகமாய் நமக்குள்ளேகிரியை
செய்கிற வல்லமையின்படியே செய்யவல்லமை
யுள்ள அவருக்கு,—21 கிறிஸ்து இயேசுவைப்பற்
றிய சபையினாலே எல்லாத் தலைமுறைகளிலேயும்
என்றென்றைக்கும் துதியுண்டாவதாக.–ஆமன்.

## ௪. அதிகாரம்.

ஆனதால் கர்த்தர்நிமித்தம் காவலில் வைக்கப்
பட்டிருக்கிற நான் உங்களுக்குச் சொல்லுகிற
புத்தி என்னவெனில், அழைக்கப்பட்டிருக்கிற
நீங்கள் அந்த அழைப்புக்குப் பாத்திரராய்,—
2 மிகுந்த மனத்தாழ்மை, பொறுமை, நீடியசாந்
தத்தோடும் நடந்துகொண்டு, ஒருவரை ஒருவர்
அன்பாய்த் தாங்கிக்கொண்டு,–3 சமாதானக்கட்
டினாலே ஆவியின் ஒருமையைக் காத்துக்கொள்
ளச் சாக்கிரதையாய் இருப்பீர்களாக.—4 உங்க
ளுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள்
ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல,–
5 ஒரே சரீரமும் ஒரே ஆவியும் ஒரே கர்த்தரும்
ஒரே விசுவாசமும் ஒரே ஞானஸ்நானமும்,—
6 எல்லாருக்கும் ஒரேதேவனும் பிதாவும் உண்டு;
அவர் எல்லாவற்றின்மேலும் எல்லாவற்றின் வழி
யாயும் உங்கள் எல்லாருக்குள்ளும் இருக்கிறவர்.
7 இப்படியிருந்தும் கிறிஸ்துவினுடைய ஈவின்
அளவுக்குத்தக்கதாக நம்மில் அவனவனுக்குக்
கிருபை கொடுத்திருக்கிறது.–8 ஆனதால் அவர்
உன்னதத்திற்கு ஏறி, சிறையாக்கினவைகளைச்
சிறையாக்கிப்போட்டு, மனிதருக்கு ஈவுகளைக்
கொடுத்தார் என்று அவர் சொல்லியிருக்கிறார்.—
9 அவர் ஏறினதால் அதற்குமுன்னே மிகவும்
தாழ்ந்த பூதலங்களில் இறங்கினார் என்று விளங்
குகின்றது அல்லவா?—10 இறங்கிவந்த அவரே
எல்லாவற்றையும் நிரப்பத்தக்கதாக, எல்லா வா
னங்களின்மேலும் ஏறினவராயும் இருக்கிறார்.—
11 மேலும், நாம் அனைவரும் பராபரனுடைய
குமாரனைப்பற்றிய விசுவாசத்திலேயும் அறிவிலே
யும் ஒருமையுள்ளவர்களாகி, கிறிஸ்துவினுடைய
நிறைவான வளர்த்தியின் அளவுக்குத்தக்கதாகத்
தேறினவர்களாயிருக்கும்வரைக்கும்,—12 கிறிஸ்
துவினுடைய சரீரமாகிய சபையை எழுப்பிக் கட்
டுதற்கு ஏதுவான ஊழியத்தின் கிரியைக்குப் பரி
சுத்தவான்கள் நிறைவாக்கப்படும்பொருட்டாக,–
13 அவரே சிலரை அப்போஸ்தலராகவும் சில
ரைத் தீர்க்கதரிசிகளாகவும் சிலரைச் சுவிசேஷக
ராகவும் சிலரை மேய்ப்பராகவும் உபதேசிகளாக
வும் ஏற்படுத்தினார்.—14 மனிதருடைய சூதும்,
வஞ்சிக்கிறதற்கு ஏதுவான தந்திரமுமுள்ள போ
தகமாகிய பலவிதக் காற்றினாலே, நாம் இனி அ
டிக்கப்பட்டு அலைகிற பிள்ளைகளாயிராமல், —
15 அன்போடே உண்மையுள்ளவர்களாயிருந்து,
அவயவங்களாகிய எல்லாரையும் தலையாகிய கிறி
ஸ்துவினிடத்திலே வளர்க்கிறவர்களாயிருக்கும்
படிக்கு, (அப்படிச் செய்தார்).—16 அவராலே
சரீரம் முழுவதும் உதவியாயிருக்கிற சகல கணுக்
களினாலும் தகுதியாய்க் கூட்டி இணைக்கப்பட்ட
தாயிருக்க, அவயவந்தோறும் தன் தன் அளவுக்
குத்தக்கதாய்க் கிரியை செய்கிறபடியே, அது
அன்பினாலே தன்னை எழுப்பிக் கட்டுதற்கு ஏது
வாகச் சரீரவளர்த்தியை உண்டாக்குகிறார்.
17 ஆனதால், கர்த்தரைக்கொண்டு நான் உங்
களுக்குச் சாட்சியாகச் சொல்லுகிறது என்ன
வெனில், மற்றச் சனங்கள் தங்கள் வீணான மன
தின்படி நடக்கிறதுபோல, — 18 நீங்கள் இனி
மேல் நடவாமல் இருப்பீர்களாக; அவர்கள் அந்
தகாரப்பட்ட புத்தியுள்ளவர்களாய், தங்களிலுள்ள
அறியாமையினாலும் தங்கள் இருதயத்தின் கடி
னத்தினாலும் பராபரனுக்கு ஏற்ற சீவனுக்கு அந்
நியராயிருந்து,—19 மெய்யுணர்வு இல்லாதவர்க
ளாய், சகலவித அசுத்தங்களையும் ஆசையோடே
நடப்பிக்கும்படி, தங்களைக் காமவிகாரத்திற்கு ஒப்
புக்கொடுத்திருக்கிறார்கள். — 20 நீங்கள் இப்ப
டிக் கிறிஸ்துவைக் கற்றுக்கொள்ளவில்லை. —
21 இயேசுவினிடத்தில் சத்தியம் உண்டாயி
ருக்கிறபடியே நீங்கள் அவரிடத்தில் கேட்டறிந்
து, அவரால் உபதேசம் அடைந்தீர்கள்.–22 அந்
தப்படி நீங்கள் முன்னே நடந்தபிரகாரமாக வஞ்
சனையுள்ள இச்சைகளாலே கெடுதியான பழைய
மனிதத்துவத்தைக் களைந்துபோட்டு, — 23 உங்
கள் மனதிலே புதிதான ஆவியுள்ளவர்களாகி,—
24 நீதியிலும் மெய்யான பரிசுத்தத்திலும் பராபர
னுடைய சாயலாகச் சிருட்டிக்கப்பட்ட நவமான
மனிதனைத் தரித்துக்கொள்வீர்களாக.
25 அன்றியும் நாம் ஒருவருக்கொருவர் அவய
வங்களாயிருக்கிறபடியினாலே, பொய்யைக் களைந்
து, அவனவன் தனக்கு அடுத்த பிறனுடனே
மெய்யைப் பேசுங்கள்; மேலும் பாவமில்லாமல்
கோபங்கொள்ளுங்கள்.
26 உங்கள் எரிச்சலின்மேலே சூரியன் அஸ்த
மிக்கவொட்டாமலும், பிசாசுக்கு இடங்கொடா
மலும் இருங்கள்.
27 திருடனானவன் இனித் திருடாமல்,

குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதாக,–
28 தன் கைகளினால் நல்ல வேலையைச் செய்து,
பிரயாசப்படக்கடவன்.

29 கெட்டவார்த்தை ஒன்றும் உங்கள் வாயி
லிருந்து புறப்படக்கூடாது; மற்றவர்களை எழுப்பு
தற்கு ஏதுவான நல்லவார்த்தை உண்டானால்,
அதையே கேட்கிறவர்களுக்குப் பிரயோசனம்
உண்டாகும்படி பேசிக்கொள்ளுங்கள்.–30 அன்
றியும் நீங்கள் மீட்கப்படும் நாள்வரைக்கும் முத்
திரையாகப் பெற்ற பராபரனுடைய பரிசுத்த ஆவி
யைத் துக்கப்படுத்தாதிருப்பீர்களாக.

31 சகலவிதமான கசப்பும் மூர்க்கமும் கோப
மும் கூக்குரலும் தூஷணமும் மற்றெந்தத் தர்க்கு
ணமும் உங்களைவிட்டு நீங்கக்கடவது.–32 அதை
த்தவிர, நீங்கள் ஒருவருக்கொருவர் தயவாயும்
மன உருக்கமாயும் இருந்து, பராபரன் கிறிஸ்துவி
னாலே உங்களுக்கு மன்னித்ததுபோல, ஒருவ
ருக்கொருவர் மன்னியுங்கள்.

## ரு. அதிகாரம்.

இவ்விதமாய் நீங்கள் பிரியமான பிள்ளைகளைப்
போல, பராபரனைப் பின்பற்றுகிறவர்களாகி, —
2 கிறிஸ்துவானவர் நமக்காகத் தம்மைப் பராபர
னுக்குச் சுகந்த வாசனையான காணிக்கையாக
வும் பலியாகவும் ஒப்புக்கொடுத்து, நம்மிடத்தில்
அன்புகூர்ந்ததுபோல நீங்களும் அன்புள்ளவர்க
ளாய் நடந்துகொள்ளுங்கள்.

3 அன்றியும் பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி
யே, வேசித்தனமும் மற்றெந்த அசுத்தமும் அல்
லது பொருளாசையும் உங்களுக்குள்ளே சொல்
லப்படவும் கூடாது.—4 வம்பும் புத்தியீனமான
பேச்சும் பரியாசமும் அப்படியே இருக்கப்படா
து; அவைகள் தகாதவைகள்; தோத்திரம்செய்த
லே தகும். — 5 வேசித்தனக்காரன், அல்லது
அசுத்தவான் அல்லது விக்கிரக ஆராதனைக்கார
னாகிய பொருளாசைக்காரன் ஒருவனும் பராபர
னுடைய இராச்சியமாகிய கிறிஸ்துவின் இராச்சி
யத்திலே சுதந்தரத்தை அடைவதில்லை என்று
அறிந்திருக்கிறீர்களே.—6 இப்படிப்பட்டவைக
ளுக்காகக் கீழ்ப்படாமையுள்ள பிள்ளைகள்மேலே
பராபரனுடைய கோபாக்கினை வருவதால் ஒருவ
னும் உங்களை வீணான வார்த்தைகளால் வஞ்சியா
தபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,—7 அவர்களுக்
குப் பங்காளிகள் ஆகாதிருப்பீர்களாக.—8 முற்கா
லத்திலே அந்தகாரமுள்ளவர்களாய் இருந்தீர்கள்;
இப்பொழுது கர்த்தரைக்கொண்டு ஒளியுள்ளவர்
களாயிருக்கிறீர்கள்; ஒளியின் பிள்ளைகளுக்கு ஏற்
றதாய் நடந்துகொள்ளுங்கள்.—9 ஆவியின் கனி
சகலவித நற்குணமும் நீதியும் சத்தியமுமானது.–
10 கர்த்தருக்குப் பிரியமானது இன்னதென்று
நீங்கள் ஆராய்ந்துபார்த்து,—11 பலனற்ற அந்த
காரக் கிரியைகளுக்கு ஐக்கமாயிராமல், அவைக
ளைக் கடிந்துகொள்வீர்களாக.—12 அவர்களால்
ஒளிப்பிடமாய்ச் செய்யப்படும் கிரியைகளைச்
சொல்லுகிறதும் அவலட்சணமாயிருக்கிறதே.—
13 அவைகள் எல்லாம் ஒளியினால் கடிந்துகொள்
ளப்பட்டு, வெளியரங்கமாகும்; வெளியரங்கமாக்
குகின்றவை எல்லாம் ஒளியாய் இருக்கின்றது.—
14 ஆதலால் தூங்குகிற நீ விழித்து, மரித்தோரை
விட்டு எழுந்திரு; அப்பொழுது கிறிஸ்து உன்னைப்
பிரகாசிப்பிப்பார் என்று சொல்லியிருக்கின்றது.

15 ஆனபடியினாலே நீங்கள் ஞானம் அற்ற
வர்களைப்போல அல்ல, ஞானமுள்ளவர்களைப்போ
லவே எச்சரிக்கையாய் நடந்துகொள்ளப்பார்த்
து,—16 நாட்கள் பொல்லாங்குள்ளவைகளாயி
ருக்கிறபடியால், காலத்தை வாங்கிக்கொள்ளுங்
கள். — 17 ஆகையால் நீங்கள் மதியற்றவர்கள்
ஆகாமல், கர்த்தருடைய சித்தம் இன்னதென்று
அறிந்திருக்கிறவர்களாகி,—18 கெட்டமார்க்கத்
திற்கு ஏதுவாய்த் திராட்ச இரசத்தால் வெறிகொ
ள்ளாமல், ஆவியினாலே நிறையப்பட்டு,–19 சங்
கீதங்களாலும் கீர்த்தனங்களாலும் ஞானப்பாட்டு
களாலும் ஒருவருக்கொருவர் புத்திசொல்லிக்
கொண்டு, உங்கள் இருதயத்திலே கர்த்தரைப்
பாடிக் கீர்த்தனம்பண்ணி, — 20 நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே
எப்பொழுதும் எல்லாவற்றிற்காகவும் பிதாவாகிய
பராபரனைத் தோத்திரித்து,—21 தேவபயத்தோ
டே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்.

22 ஸ்திரிகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படுகிறது
போல, நீங்கள் உங்கள் சுயபுருஷருக்குக் கீழ்ப்
படுங்கள்.—23 கிறிஸ்து (தமது) சபையாகிய சரீ
ரத்திற்குத் தலையாயும் இரட்சகராயும் இருக்கிற
துபோல, புருஷனானவனும் (தன்) மனைவிக்குத்
தலையாயிருக்கிறான்.–24 ஆகையால் சபையானது
கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படுகிறதுபோல, மனைவிக
ளும் எக்காரியத்திலேயும் தங்கள் சொந்தப் புரு
ஷர்களுக்குக் கீழ்ப்படவேண்டும்.

25 புருஷர்களே, கிறிஸ்து தமது சபையில்
அன்புகூர்ந்து, அதற்காகத் தம்மைத்தாமே ஒப்
புக்கொடுத்ததுபோல, நீங்களும் உங்கள் மனைவி
களில் அன்புகூரக்கடவீர்கள்.—26 அவர் தமது
சபையை மாசு திரைமுதலானவைகளில் ஒன்றும்
இல்லாமல் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகி
மையுள்ளதாகத் தமக்குமுன் நிறுத்திக்கொள்ளும்
பொருட்டாக,–27 அதைப் பரிசுத்தமாக்கி, திவ்
விய வசனத்தோடே கூடிய தண்ணீர் முழுக்கி
னால் சுத்திகரிக்கும்படிக்கே அப்படிச் செய்தார்.–
28 அதுபோலப் புருஷர்களும் தங்கள் சொந்தச்
சரீரங்களைப்போல, தங்களுடைய மனைவிகளில்
அன்புகூரக் கடனாளிகளாய் இருக்கிறார்கள்; தன்
மனைவியில் அன்புகூருகிறவன் தன்னிலே அன்
புகூருகிறான். — 29 தன் சொந்த மாம்சத்தைப்
பகைத்தவன் ஒருவனும் இல்லையே; கர்த்தர்

(தமது) சபையைச் செய்கிறதுபோல, அதைப்
போஷித்துக் காப்பாற்றுகிறான்.—30 அவர் தமது
சரீரத்திற்கு நாம் அவயவங்களுமாய், தமது மாம்
சத்தையும் எலும்புகளையும் சேர்ந்தவர்களுமாய்
இருக்கிறபடியால் (அப்படியே செய்கிறார்).—
31 அதினாலே மனிதன் தன் தகப்பனையும் தா
யையும் விட்டு, தன் மனைவியுடனே இசைந்து,
இருவரும் ஒரே மாம்சமாய் இருப்பார்கள். —
32 இது மிகுந்த இரகசியப்பொருள் உள்ளது;
கிறிஸ்துவையும் சபையையும்குறித்தே இப்படிச்
சொல்லுகிறேன். — 33 அந்தப்படி நீங்களும்
அவனவன் தன்னில் அன்புகூருகிறதுபோல,
தன்தன் மனைவியினிடத்திலும் அன்புகூரக்கட
வீர்கள்; மனைவியானவள் புருஷனுக்குப் பயந்
திருக்கக்கடவள்.

## ௬. அதிகாரம்.

பிள்ளைகளே, கர்த்தருக்குள் உங்களைப் பெற்ற
வர்களுக்குக் கீழ்ப்படிங்கள்; அதுவே நியாயமா
யிருக்கிறது.—2 உனக்கு நன்மையுண்டாயிருக்
கும்படிக்கும், பூமியிலே உன் வாழ்நாள் மிகுதி
யாயிருக்கும்படிக்கும்,–3 உன் தகப்பனையும் உன்
தாயையும் கனம்பண்ணுவாயாக என்பதே வாக்
குத்தத்தமுள்ள முதலாம் கற்பனையாய் இருக்கிறது.
4 தகப்பன்மார்களே, நீங்களும் உங்கள் பிள்ளை
களுக்கு எரிச்சல் உண்டாக்காமல், கர்த்தருக்கு
ஏற்ற கண்டிப்போடும் போதகத்தோடும் அவர்
களை வளர்க்கக்கடவீர்கள்.
5 வேலைக்காரரே, நீங்கள் கிறிஸ்துவுக்குச்
செய்கிறதுபோல, மாம்சத்தின்படி உங்களுக்கு
எசமான்களானவர்களுக்குப் பயமும் நடுக்கமும்
கபடம் இல்லாமையும் உள்ள இருதயத்தோடே
கீழடங்குவீர்களாக.—6 மனிதருக்குப் பிரியமாயி
ருக்க விரும்புகிறவர்கள்போல, (எசமான்கள்)
காணும்பொழுதுமாத்திரம் ஊழியம்செய்யாமல்,–
7 கிறிஸ்துவின் ஊழியக்காரர்போல, மனப்பூர்வ
மாய்ப் பராபரனுடைய சித்தத்தை நிறைவேற்று
கிறவர்களாய் மனிதருக்கு அல்ல, கர்த்தாவுக்கே
ஊழியம்செய்கிறவர்களாய் நல்ல மனதோடே
அப்படிச் செய்து, — 8 அடிமையானவனா
லும், சுயாதீனம் உள்ளவனானாலும், அவனவன்
செய்கிற நன்மையின்படியே கர்த்தரிடத்தில்
பலனை அடைவான் என்று அறிவீர்களாக.
9 எசமான்களாகிய நீங்களும் அவர்களுக்கு
அப்படியே செய்து, உங்களுக்கும் பரமண்டலங்
களிலே எசமான் இருக்கிறார் என்றும் அவரிடத்
தில் பட்சபாதம் இல்லையென்றும் அறிந்து, மிரட்
டுதலை விட்டுவிடுவீர்களாக.
10 கடைசியிலே என் சகோதரரே, கர்த்த
ரைக்கொண்டும் அவருடைய மிகுந்த வல்லமை
யைக்கொண்டும் பலத்திருங்கள்.—11 அல்லா
மலும் இரத்தத்தோடும் மாம்சத்தோடும் அல்ல,
ஆகாசமண்டலத்திலுள்ள துரைத்தனங்களோ
டும் அதிகாரங்களோடும் இவ்வுலகத்தின் இருளை
ஆளுகிறவர்களோடும் மற்றப் பொல்லாத ஆவிக
ளோடும் நாம் போராடுகிறவர்களாய் இருக்கிறப
டியால்,—12 பிசாசினுடைய தந்திரமான வகை
பாடுகளைப் பலமாய் விரோதித்து நிற்கும்படிக்கு,
திவ்விய சர்வாயுதவருக்கத்தைத் தரித்துக்கொள்
ளுங்கள்.—13 பொல்லாத காலத்திலே நீங்கள்
அவைகளை விரோதித்திருக்கவும், சகலத்தையும்
முடித்துப்போட்டபின்பு நிலைநிற்கவும் திராணி
இருக்கும்படிக்கு, திவ்விய சர்வாயுதவருக்கத்தை
எடுத்துக்கொள்ளுங்கள். — 14 என்னவெனில்,
சத்தியம் என்னும் கச்சையை உங்கள் அரைக
ளில் சுற்றிக்கட்டி, நீதி என்னும் மார்பின் கவசத்
தை உடுத்தி,—15 சமாதானத்தை உண்டாக்கு
கிற சுவிசேஷத்தை அறிவிக்க எத்தனமாயிருக்கு
தலைப் (பாத இரட்சையைப்போல,) உங்கள்
கால்களிலே தொடுத்து, — 16 பொல்லாங்கன்
எய்யும் அக்கினி அம்புகளை எல்லாம் நீங்கள்
அவித்துப்போடத்தக்க விசுவாசம் என்னும் கேட
கத்தைப் பிரதான முக்கியமாய்ப் பிடித்துக்
கொண்டு நில்லுங்கள். — 17 மேலும் இரட்
சணியம் என்னும் தலையைக் காக்கும் முடி
யையும் தேவவசனமாகிய ஆவியின் கட்கத்தை
யும் நீங்கள் ஏற்றுக்கொண்டு, — 18 ஆவியினா
லே சம்பூரணமான செபமும் விண்ணப்பமும்
பண்ணி, எப்பொழுதும் வேண்டிக்கொண்டு,
இதற்காக மிகுந்த மன உறுதியோடும் சகல பரி
சுத்தவான்களுக்காகவும் விண்ணப்பம்பண்ணுத
லோடும் விழித்துக்கொள்வீர்களாக.—19 நான் தயி
ரியமாய் என் வாயைத் திறந்து சுவிசேஷத்தின்
இரகசியத்தை அறிவிக்கிறதற்கு வசனம் எனக்
குக் கொடுக்கப்படும்படியாயும், — 20 சுவிசே
ஷத்திற்காகச் சங்கிலியால் கட்டப்பட்டு, தானாதி
பதியாயிருக்கிற நான் அதைச் சொல்லவேண்டி
யபடி தயிரியமாய்ச் சொல்லும்படியாயும், எனக்
காகவும் விண்ணப்பம்பண்ணுவீர்களாக.
21 அன்றியும் எனக்குச் சம்பவித்தவைகளை
யும் என்னுடைய செய்கைகளையும் நீங்கள் அறி
யும்படிக்கு, அவைகளை எல்லாம் (நமக்குப்)
பிரிய சகோதரனுமாய்க் கர்த்தருக்கு உண்மை
யுள்ள ஊழியக்காரனுமாய் இருக்கிற தீகிக்கு என்
பவன் உங்களுக்கு அறிவிப்பான்.—22 நீங்கள்
எங்கள் செய்திகளை அறியும்படியாயும் அவன் உங்
கள் இருதயங்களுக்கு ஆறுதல்செய்யும்படியாயு
மே அவனை உங்களிடத்தில் அனுப்பினேன்.
23 பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவினாலும், சமாதானமும் விசுவா
சத்தோடே அன்பும் சகோதரருக்கு உண்டாகக்
கடவது.—24 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவினிடத்தில் உண்மையாய் அன்புகூரு
கிற யாவரோடும் கிருபை இருப்பதாக.—ஆமன்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலிப்பியருக்கு எழுதின

# நிருபம்.

## க. அதிகாரம்.

இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரராகிய பவு
லும் தீமோத்தேயும் பிலிப்புப் பட்டணத்திலே
கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்கள்
அனைவருக்கும் கண்காணிகளுக்கும் ஊழியக்கார
ருக்கும் எழுதுகிறதாவது:—2 நம்முடைய பிதா
வாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதா
னமும் உண்டாகக்கடவது.

3 சுவிசேஷம் அறிவிக்கப்பட்ட நாள்முதலாக
இதுவரைக்கும் நீங்கள் அதற்கு ஐக்கமானவர்
கள் ஆனபடியால்,—4 நான் உங்களை நினைத்து,
உங்கள் எல்லாருக்காகவும் விண்ணப்பம் பண்
ணும்பொழுதெல்லாம் என் பராபரனைத் தோத்
திரிக்கிறேன்.—5 நான் உங்களுக்காகச் சந்தோ
ஷத்தோடே விண்ணப்பம்பண்ணி,— 6 உங்க
ளிடத்தில் நற்கிரியையைத் தொடங்கினவர்
இயேசுக்கிறிஸ்துவினுடைய நாள்பரியந்தம் அ
தை முடிய நடத்திவருவார் என்று நம்பியிருக்கி
றேன்.—7 நான் கட்டப்பட்டுச் சுவிசேஷத்திற்
காக உத்தரவுசொல்லி, அதைத் திட்டப்படுத்
திக்கொண்டுவருகையில், நீங்கள் அனைவரும்
உங்கள் இருதயத்திலே என்னைத் தரித்துக்
கொண்டு, என்னோடேகூடக் கிருபையில் பங்
குள்ளவர்களாய் இருக்கிறபடியினாலே, உங்கள்
எல்லாரையுங்குறித்து நான் இப்படி நினைக்கிறது
நியாயமாயிருக்கின்றது.—8 அந்தப்படி இயேசுக்
கிறிஸ்துவினுடைய உருக்கமான அன்பைப்போல
உள்ள அன்பினாலே நான் உங்கள் எல்லார்மே
லும் மிகவும் வாஞ்சையாயிருக்கிறேன் என்பதைக்
குறித்துப் பராபரனே எனக்குச் சாட்சியாய் இருக்
கிறார்.–9 மேலும், வித்தியாசமானவைகளை வகை
யறுப்பதற்கு ஏதுவாக நீங்கள் அறிவினாலும் சகல
வித மெய்யுணர்வினாலும் அதிகம் அதிகமான
அன்புள்ளவர்களாயும்,— 10 கிறிஸ்துவின் நாள்
வரைக்கும் உண்மையும் வழுவில்லாமையும் உள்
ளவர்களாயும்,–11 பராபரனுக்குத் துதியும் புகழ்ச்
சியும் உண்டாக, இயேசுக்கிறிஸ்துவினாலே வரு
கிற நீதியாகிய கனியினால் நிறைந்தவர்களாயும்
இருக்கும்படிக்குச் செபம்பண்ணுகிறேன்.

12 அன்றியும் சகோதரரே, நான் உங்களுக்கு
அறிவிக்க விரும்புகிறது என்னவெனில், எனக்
குச் சம்பவித்தவைகள் சுவிசேஷம் அதிக பிரபல
மாகும்படிக்கு ஏதுவாய் இருந்தன.—13 எப்படி
யென்றால், நான் கிறிஸ்துவின் நிமித்தம் கட்டப்
பட்டிருக்கிறது இராச அரண்மனையில் எங்கும்
உள்ளவர்களுக்கும் மற்ற யாவருக்கும் வெளியரங்
கமானதும் அல்லாமல்,— 14 கர்த்தரைப்பற்றிய
சகோதரரில் அநேகமானவர்கள் நான் கட்டப்
பட்டிருந்ததினாலே திடன்கொண்டு, (திவ்
விய) வசனத்தைப் பயமில்லாமல் சொல்லும்
படி, அதிக துணிவுள்ளவர்கள் ஆனார்கள்.—
15 சிலர் பொறாமையினாலும் விரோதத்தினாலும்,
சிலர் நல்லமனதினாலும் கிறிஸ்துவைப் பிரசங்
கித்து வருகிறார்கள்.—16 இவர்கள் சுவிசேஷத்
திற்காக நான் நியாயம் பேசிக்கொள்ளும்படி
வைக்கப்பட்டிருக்கிறதை அறிந்து, அன்பினாலே
அப்படிச் செய்கிறார்கள். — 17 அவர்கள் நான்
கட்டப்பட்டதினால் இருக்கிற உபத்திரவத்தோ
டே உபத்திரவத்தைக் கூட்டலாம் என்று எண்
ணி உண்மையில்லாமல், விரோதத்தினாலே
கிறிஸ்துவை அறிவிக்கிறார்கள். — 18 இதினால்
என்ன ஆயிற்று? வஞ்சகத்தினாலாவது உண்மை
யினாலாவது பிரசங்கித்தாலும், கிறிஸ்துவே அறி
விக்கப்படுகிறார்; அதினாலே சந்தோஷப்படுகி
றேன்; இன்னும் சந்தோஷப்படுவேன்.—
19 நான் ஒன்றினாலும் வெட்கப்படாமல் மிகுந்த
தயிரியமாய் இருந்து, எப்பொழுதும்போல இப்
பொழுதும் சீவனாலாகிலும் சாவினாலாகிலும்
கிறிஸ்து என் சரீரத்தினாலே புகழப்படுவார் என்று
நான் மிகவும் ஆசைப்பட்டு நம்பிக்கொள்ளுகிற
படியே,—20 அந்தப் பிரசங்கம் உங்கள் வேண்
டுதலினாலும் இயேசுக்கிறிஸ்வினுடைய ஆவி
யின் உதவியினாலும் எனக்கு இரட்சிப்பாக முடி
யும் என்று அறிந்திருக்கிறபடியால் (அப்படிச்
சந்தோஷப்படுகிறேன்).

21 கிறிஸ்து எனக்குச் சீவனாயிருக்கிறாரே,
சாவும் எனக்கு ஆதாயமாயிருக்கும்.— 22 ஆகி
லும் தேகத்தில் பிழைக்கிறதினாலே என் கிரி
யைக்குப் பலன் உண்டாயிருப்பதால், நான் தெ
ரிந்துகொள்ளவேண்டியது இன்னதென்று எனக்
குத்தெரியாது.—23 அவ்விரண்டினாலும் நான்
நெருக்கப்படுகிறேன்; பிரிந்துபோய், கிறிஸ்துவி
னிடத்தில் இருக்கும்படி மிகவும் விரும்புகி
றேன்; அது மிகவும் அதிக நன்மையாயும் இருக்
குமே.—24 அப்படியிருந்தும், தேகத்தில் இங்
கே தரித்திருக்கிறது உங்களுக்காக அதிக அவசி

யமாய் இருக்கிறது. — 25 இதை நான் நிச்சய
மாய் அறிந்திருக்கிறபடியால், நான் மறுபடியும்
உங்களிடத்தில் வருகிறதினால், நீங்கள் என்னைக்
குறித்துக் கிறிஸ்து இயேசுவினாலே மேன்மைபா
ராட்டிக்கொள்ளுதல் பெருகும்பொருட்டாக,—
26 விசுவாசத்தில் நீங்கள் சம்பூரணமும் சந்தோ
ஷமும் உள்ளவர்கள் ஆகும்படிக்கு, நான் பின்னும்
(உயிர்) தரித்துக்கொண்டு, உங்கள் அனைவரோ
டுங்கூட இருப்பேன் என்று அறிந்திருக்கிறேன்.
27 எப்படியும் நான் வந்து, உங்களைக் கண்
டாலும், உங்களுக்குத் தூரமாய் இருந்தாலும்,
நீங்கள் ஒரே ஆவியினாலே உறுதியாய் நின்று,
ஒரே ஆத்துமாவினாலே சுவிசேஷத்தின் விசுவா
சத்திற்காகக் கூடப் போராட்டம்பண்ணி எதிர்க்
கிறவர்களால் ஒன்றிலும் மருளாதிருக்கிறீர்கள்
என்று உங்களைக்குறித்து நான் கேட்கும்படிக்கு,
நீங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்குப் பாத்திர
மாகமாத்திரம் நடந்துகொள்ளக்கடவீர்கள். —
28 அதுவே அவர்கள் கெட்டுப்போகுதற்கும்
நீங்கள் இரட்சிக்கப்படுதற்கும் அடையாளமாய்
இருக்கின்றது; அதுவும் பராபரனுடைய செயல்.—
29 அவராலே நீங்கள் கிறிஸ்துவின்மேலே விசு
வாசமாய் இருக்கிறதற்குமாத்திரமல்ல, முன்னே
என்னிடத்திலே நீங்கள் கண்டதுமாய் இப்பொ
ழுது எனக்கு உண்டென்று கேள்விப்படுகிறது
மாய் இருக்கிற போராட்டமே உங்களுக்கும்
உண்டாயிருக்கிறதால், — 30 அவர் நிமித்தம்
பாடுபடுகிறதற்கும் அருள்பெற்றீர்களே.

## ௨. அதிகாரம்.

ஆனதால், கிறிஸ்துவுக்குள் யாதொரு ஆறுத
லும், அன்பினாலே சந்தோஷப்படுதலும், ஆவி
யோடே ஐக்கமும், உருக்கமான பட்சமும் இரக்
கங்களும் உண்டானால், — 2 நீங்கள் ஒரேவித
மாய், சிந்தனைபண்ணிக்கொண்டு ஒரேவிதமான
அன்புள்ளவர்களாய் இசைந்த ஆத்துமாக்களாய்,
ஒன்றையே சிந்தித்துக்கொண்டு, இப்படி என்
சந்தோஷத்தை நிறைவேற்றுவீர்களாக.—3 ஒன்
றையும் நீங்கள் வாதத்தினாலே அல்லது வீண்
பெருமையினாலே செய்யாமல், மனத்தாழ்மையி
னாலே ஒருவனை ஒருவர் தங்களிலும் மேன்மை
யானவர்கள் என்று எண்ணிக்கொள்வீர்களாக.—
4 அவரவர்தங்களுக்கு ஆனவைகளைமாத்திரமல்ல,
பிறருக்கு ஆனவைகளையும் நோக்குவீர்களாக.
5 கிறிஸ்து இயேசுவில் இருந்த சிந்தையே,
உங்களிலும் இருக்கக்கடவது.—6 அவர் பராபர
னுடைய சாயலாயிருந்தும், பராபரனுக்கு ஒப்பா
யிருக்குதலைக் கொள்ளையிடப்பட்ட உடைமை
என்று எண்ணாமல், — 7 தம்மைத்தாமே வெறு
மையாக்கி, அடிமையின் உருவம் எடுத்து, மனி
தர் சாயலாகப் பிறந்ததும் அல்லாமல்,—8 அவர்
மனிதரூபமாகக் காணப்பட்டபின்பு, மரணத்திற்
குத் தம்மைத் தாழ்த்தி, சிலுவையின் மரணத்
திற்கே கீழ்ப்பட்டவர் ஆனார். — 9 அதினாலே
பராபரனும் அவரை மிகவும் உயர்த்தி, — 10 பர
மண்டலத்திலும் பூமண்டலத்திலும் கீழ்லோகத்
திலும் உள்ள யாவும் இயேசுவின் நாமத்
தைத் தொழுது, முழங்காற்படியிடும்படிக்கும்,—
11 பிதாவாகிய பராபரனுக்குத் துதியுண்டாக
இயேசுக்கிறிஸ்து கர்த்தர் என்று நாவுகள் யாவும்
அறிக்கையிடும்படிக்கும், சகல நாமங்களுக்கும்
மேலான நாமத்தை அவருக்குக் கொடுத்தார்.
12 ஆகையினாலே எனக்குப் பிரியமானவர்
களே, நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படுகிறபடி,
நான் உங்களுக்குச் சமீபமாய் இருக்கிறபொழுது
மாத்திரமல்ல, நான் தூரமாய் இருக்கிற இப்பொ
ழுதும், மிகவும் அதிகமாய்ப் பயத்தோடும் நடுக்
கத்தோடும் உங்கள் இரட்சிப்பை அடையப் பிர
யாசப்படுங்கள்.—13 விருப்பத்தையும் செய்கை
யையும் பராபரன் உவப்பாய் உங்களுக்குள்ளே
உண்டாக்குகிறவராய் இருக்கிறாரே.—14 கோண
லும் வழுவுமுள்ள சந்ததியாருக்குள்ளே நீங்கள்
குற்றமும் கபடமும் இல்லாதவர்களாயும் பராபர
னுடைய மாசில்லாத பிள்ளைகளாயும் இருப்ப
தற்கு, — 15 சகலத்தையும் மொறுமொறுப்பில்
லாமலும் தருக்கிப்பில்லாமலும் செய்வீர்களாக.—
16 நான் வீணாக ஓடினதும் வீணாய்ப் பிரயாசப்
பட்டதும் இல்லை என்கிற மகிழ்ச்சி கிறிஸ்துவின்
நாளிலே எனக்கு உண்டாயிருப்பதற்கு நீங்கள்
ஜீவவசனத்தைப் பிடித்துக்கொண்டு, உலகத்
திலே அவர்களுக்குள்ளே சுடர்களைப்போலப் பிர
காசியுங்கள்.
17 நான் உங்கள் விசுவாசமாகிய பலியின்மே
லும் ஊழியத்தின்மேலும் வார்க்கப்பட்டுப்போனா
லும், மகிழுவேன்; உங்கள் அனைவரோடுங்கூட
மகிழ்ச்சியாகவே இருப்பேன்.—18 இந்தப் பிர
காரமாக நீங்களும் மகிழுங்கள்; என்னோடேகூ
டவே மகிழ்ச்சியாய் இருங்கள்.
19 அன்றியும் நானும் உங்கள் செய்திகளை
அறிந்து, மனதிலே சந்தோஷம் அடையும்ப
டிக்கு, சீக்கிரமாய்த் தீமோத்தேயுவை உங்களி
டத்தில் அனுப்பலாம் என்று கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்துவின்மேல் நம்பிக்கையாய் இருக்கி
றேன்.—20 அவனையன்றி, உங்கள் காரியங்களை
உத்தமமாய் விசாரிக்கிறதற்குத் தகுதியான மன
துள்ள வேறொருவனும் என்னிடத்தில் இல்லை
யே.—21 மற்றவர்கள் எல்லாரும் கிறிஸ்து இயே
சுவுக்கு உரியவைகளை அல்ல, தங்களுக்கு உரிய
வைகளையே தேடுகிறார்கள்.—22 அவன்மாத்திரம்
தகப்பனோடே பிள்ளையிருக்கிறதுபோல, என்னு
டனேகூடச் சுவிசேஷத்திற்கு ஊழியம்செய்ததி
னாலே, அவனுடைய உத்தமகுணத்தை அறிந்தி
ருக்கிறீர்கள்.—23 ஆகையால், என் காரியங்கள்
இப்படி நடக்கும் என்று நான் அறிந்தவுடனே

அவனையே அனுப்ப நம்பியிருக்கிறேன்.-24 எப்
படியும் நான்தானே சீக்கிரமாய் வருவேன் என்று
கர்த்தராலே நினைத்திருக்கிறேன்.
25 அன்றியும் என் சகோதரனுமாய், உடன்
வேலையாளுமாய், உடன்சேவகனுமாய், உங்கள்
தானாதிபதியுமாய், என் குறைச்சல்களை நீக்க விசா
ரிக்கிறவனுமாயிருக்கிற எப்பாப்பிரோதீத்து என்
பவன்,—26 உங்கள் எல்லார்மேலும் வாஞ்சை
யுள்ளவனாய், தான் வியாதிப்பட்டதை நீங்கள்
கேள்விப்பட்டதினாலே மிகவும் கஸ்திப்பட்டிருக்
கிறபடியால், அவனை உடனே உங்களிடத்தில்
அனுப்பவேண்டும் என்று எண்ணினேன். —
27 அவன் மரணத்திற்குச் சமீபமாக வியாதிப்
பட்டிருந்தான்; பராபரன் அவனுக்கு இரங்கி
னார்; அதினாலே அவனுக்குமாத்திரமல்ல துக்கத்
தின்மேலே துக்கம் எனக்கு உண்டாகாதபடிக்கு
எனக்கும் இரங்கினார்.—28 ஆகையால், நீங்கள்
அவனை மறுபடியும் கண்டு, சந்தோஷப்படும்ப
டியாகவும், என் துக்கம் குறையும்படியாகவும்
அதிசீக்கிரமாய் அவனை அனுப்பினேன்.-29 ஆ
னபடியினாலே, கர்த்தருக்குள் அவனை மிகுந்த
சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு, இப்படிப்
பட்டவர்களைக் கனமாய் எண்ணுவீர்களாக. —
30 நீங்கள் இங்கே இல்லாததினாலே எனக்கு
இருக்கிற குறைச்சலை நீக்கி எனக்கு ஊழியம்
செய்யும்படிக்கு அவன் தன் பிராணனை எண்
ணாமல், கிறிஸ்துவின் வேலையின்நிமித்தம் மர
ணத்திற்குச் சமீபமாய் இருந்தபடியினாலே அப்
படிச் செய்யுங்கள்.

## ௩. அதிகாரம்.

மேலும் என் சகோதரரே, கர்த்தருக்குள் சந்
தோஷப்படுங்கள்; நான் ஒரேவிதமான காரியங்
களை உங்களுக்கு எழுதுகிறது எனக்கு வருத்தமல்
ல, உங்களுக்கு அது நிச்சயத்தை உண்டாக்கும்.
2 அந்த நாய்களைக்குறித்து எச்சரிக்கையாய்
இருங்கள், அந்தப் பொல்லாத வேலையாட்க
ளைக்குறித்து எச்சரிக்கையாய் இருங்கள்; அந்தச்
சேதக்காரரைக்குறித்து எச்சரிக்கையாய் இருங்
கள்.—3 சரீரத்தின்மேல், நம்பிக்கையாய் இரா
மல் ஆவியினாலே பராபரனுக்கு ஊழியம்செய்து,
கிறிஸ்து இயேசுவுக்குள் மேன்மைபாராட்டுகிற
நாமே விருத்தசேதனக்காரர். — 4 நானும் சரீரத்
தின்மேலே நம்பிக்கையாய் இருக்கத்தக்கவை
களை உடையவனாய் இருக்கிறேன்; அல்லாமலும்,
வேறொருவன் சரீரத்தின்மேல் நம்பிக்கையாய்
இருக்க நினைத்தால், அவனிலும் நான் அதிகமாய்
அப்படி இருக்கலாம்.-5 (எப்படியெனில்) நான்
எட்டாம்நாளிலே விருத்தசேதனம் அடைந்த
வன்; இஸ்ரவேலின் வம்சத்தில் பென்யமீன்
கோத்திரத்தில் பிறந்தவன்; எபிரேயரில் பிறந்த
எபிரேயன்; நியாயப்பிரமாணத்தைக் குறித்து
நான் பரிசேயன். — 6 பத்திவைராக்கியத்தைக்
குறித்து நான் (கிறிஸ்து) சபையைத் துன்பப்ப
டுத்தினவன்; நியாயப்பிரமாணத்தினால் வருகிற
நீதியைக்குறித்து நான் பிழையில்லாதவன். —
7 ஆகிலும், எனக்கு லாபமாயிருந்த இவைகளை
நான் கிறிஸ்துவுக்காக நஷ்டமென்று எண்ணி
னேன். — 8 நிச்சயமாகவே என் கர்த்தராகிய
கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்
மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்
ணிக்கொண்டிருக்கிறேன்; அவருக்காக நான்
அவைகளை எல்லாம் நஷ்டமாகத் தள்ளினேன்.-
9 நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக்கொள்ளும்
படிக்கும், நியாயப்பிரமாணத்தினால் வருகிற சுய
நீதியை அல்ல, கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்
தினாலே வருகிறதுமாய், விசுவாசமூலமாய்ப் பரா
பரனால் வருகிறதுமாய் இருக்கிற நீதியையே
உடையவனாய் இருந்து, இப்படிக் கிறிஸ்துவுக்
குள் இருக்கிறவனாகக் காணப்படும்படிக்கும், சக
லத்தையும் குப்பையைப்போல எண்ணியிருக்கி
றேன்.—10 இப்படி நான் அவரையும் அவர்
உயிரோடெழும்புதலின் பலத்தையும் அவரு
டைய பாடுகளோடே ஐக்கத்தையும் அறிந்திருக்
கிறதுமல்லாமல், — 11 எப்படியும் நானும் மரித்
தோரிலிருந்து உயிரோடெழுந்திருப்பதற்குத்
தகுதியாகும்படிக்கு, அவருடைய மரணத்திற்கு
ஒப்பான மரணத்திற்கு ஏதுவாய் இருக்கிறேன்.
12 (அதை) நான் இப்பொழுதே அடைந்தவ
னாக அல்லது இப்பொழுதே தேறினவனாகச் சொ
ல்லாமல் கிறிஸ்து இயேசுவினாலே நான் எதற்கா
கப் பிடிக்கப்பட்டேனோ, அதைப் பிடித்துக்
கொள்ளும்படி பின்தொடருகிறேன்.-13 சகோ
தரரே, நான் (அதைப்) பிடித்துக்கொண்டேன்
என்று எண்ணுகிறதில்லை; ஒன்று செய்கிறேன்;
பின்னானவைகளை நான் மறந்து, முன்னானவை
களைச் சாக்கிரதையாய் நாடி,-14 கிறிஸ்து இயே
சுவினாலே பராபரன் உயரத்திலிருந்து என்னை
அழைத்துவைத்த பந்தயப்பொருளுக்காகக் குறித்
திருக்கிற மார்க்கமாய்ப் பின்தொடருகிறேன்.
15 ஆகையால் நம்மில் தேறினவர்கள் யாவ
ரும் இப்படியே சிந்திக்கக்கடவோம்; எதையா
கிலும் நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்திப்பீர்களா
னால், அதையும் பராபரன் உங்களுக்கு வெளிப்
படுத்துவார்.—16 எப்படியும் நாம் எதுவரையில்
வந்திருந்தாலும், இந்தப் பிரமாணத்தின்படியே
நடந்துகொண்டு, ஒரேவிதமாய்ச் சிந்தனைபண்
ணக்கடவோம்.—17 சகோதரரே, நீங்கள் என்
னோடேகூடப் பின்பற்றுகிறவர்களாகி, நாங்கள்
உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை
நோக்குங்கள்.—18 அநேகர் கிறிஸ்துவின் சிலு
வைக்குப் பகைஞராக நடக்கிறார்கள்; அவர்க
ளைக்குறித்து முன்னே உங்களுக்கு அநேகந்தரம்
சொன்னேன்; இப்பொழுதே அழுதலோடேயும்

(அப்படிச்) சொல்லுகிறேன். — 19 அவர்களுடைய முடிவு அழிவு; அவர்களுடைய தேவன் வயிறு; அவர்களுடைய மகிமை அவர்கள் இலச்சையில் இருக்கிறது; பூமிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள்.—20 நம்முடைய இருப்பிடம் பரமண்டலங்களில் இருக்கின்றது; அங்கேயிருந்து கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து இரட்சகர் வரப் பார்த்துக்கொண்டு இருக்கிறோம்.–21 அவர் எல்லாவற்றையும் தமக்குக் கீழ்ப்படுத்தும்படிக்குமிகுந்த பலமுடையவர்; ஆகையால், நம்முடைய அற்பமான சரீரம் மகிமையுள்ள தமது சரீரத்திற்கு ஒப்பாய் இருக்கும்படி, அதை மறுரூபப்படுத்துவார்.

## ௪. அதிகாரம்.

ஆனபடியினாலே எனக்கு அன்பானவர்களுமாய், என்னாலே ஆசிக்கப்பட்டவர்களுமாய் எனக்குச் சந்தோஷமும் கிரீடமுமாய் இருக்கிற சகோதரரே, பிரியமானவர்களே, இந்தப்படியே கர்த்தரிடத்தில் நிலைகொண்டு இருப்பீர்களாக.

2 கர்த்தராலே ஒரேவிதமான சிந்தையாய் இருக்கும்படிக்கு, ஐயோதியாளுக்கும் சிந்திகேயாளுக்கும் புத்திசொல்லுகிறேன்.–3 அல்லாமலும், என் உத்தம கூட்டாளியே, அவர்களுக்கு உதவியாய் இருக்கும்படிக்கு, உன்னையும் வேண்டிக்கொள்ளுகிறேன்; அவர்கள் கிலேமெஞ்சோடும் மற்ற என் உடன் வேலையாட்களோடும்கூடச் சுவிசேஷத்தைக்குறித்து என்னோடேகூடிப் போராடினார்களே; அவர்களுடைய நாமங்கள் சீவ புஸ்தகத்தில் இருக்கின்றன.

4 கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாய் இருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன்.—5 உங்களிலுள்ள சாந்தகுணம் எல்லாச் சனங்களுக்கும் தெரியவரக்கடவது; கர்த்தர் சமீபமாய் இருக்கிறார் –6 நீங்கள் ஒன்றையுங்குறித்துக் கவலைப்படாமல் எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களைத் தோத்திரிப்புடனே கூடிய செபத்தினாலும் வேண்டுதலினாலும் பராபரனுக்கு அறிவிப்பீர்களாக. — 7 அப்பொழுது எல்லாப் புத்திக்கும் மேலானதேவசமாதானம், கிறிஸ்து இயேசுவினாலே உங்கள் இருதயங்களையும் சிந்தனைகளையும் காப்பாற்றும்.

8 சகோதரரே, கடைசியிலே சத்தியமுள்ளவைகள் எவைகளோ, இலக்கணமுள்ளவைகள் எவைகளோ, நீதியுள்ளவைகள் எவைகளோ, சற்புள்ளவைகள் எவைகளோ, சிநேகத்திற்கு ஏதுவானவைகள் எவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகள் எவைகளோ, மற்றப் புண்ணியம் எதுவோ, புகழ்ச்சியுள்ளது எதுவோ, அவைகளையேசிந்தித்துக்கொள்வீர்களாக.–9 நீங்கள் என்னிடத்தில்கற்றும், அடைந்தும், கேட்டும், கண்டும் இருக்கிறவைகளைச் செய்யுங்கள்; அப்பொழுது சமாதானம்பொருந்திய பராபரன் உங்கள் பங்கிலே இருப்பார்.

10 என்னை விசாரிக்கும்படிக்கு நீங்கள் இக்காலத்திலே மறுபடியும் மலர்ந்திருக்கிறபடியினாலே, கர்த்தராலே மிகவும் சந்தோஷப்பட்டேன்; (முனனேயும்) இப்படிச் செய்யச் சிந்தையாய் இருந்தீர்கள்; சமயம்மாத்திரம் உங்களுக்கு நேரிடவில்லை. — 11 என் குறைச்சலினாலே நான் இப்படிச் சொல்லவில்லை; எந்த நிலைமையில் இருந்தாலும், மனச்சந்தோஷமாய் இருக்கக் கற்றுக்கொண்டேன்.—12 தாழ்ந்திருக்கவும் எனக்குத் தெரியும்; பெருகியிருக்கவும் எனக்குத் தெரியும்; எவ்விடத்திலேயும் எல்லாவற்றிலேயும் திருத்தியாய் இருக்கவும் பசியாய் இருக்கவும் பரிபூரணப்படவும் குறைவுபடவும் படித்தேன். — 13 என்னைப் பலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே நான் எவற்றையும் செய்யத் திராணியுண்டு.

14 அப்படியிருந்தும் என் உபத்திரவத்திலே என்னுடனே ஐக்கப்பட்ட நீங்கள் நன்றாய்ச் செய்தீர்கள். — 15 பிலிப்பியரே, உங்களுககும் தெரிந்திருக்கிறபடி சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான் மக்கேதோனியா நாட்டுக்குப் புறப்பட்டபொழுது, நீங்கள்மாத்திரமே அல்லாமல், வேறொரு சபையும் கொடுக்கல் வாங்கல் என்பதைக்குறித்த உதவியாய் இருக்கவில்லை. — 16 நான் தெசலோனிக்கை ஊரில் இருந்தபொழுதும், நீங்களே என் குறைச்சலை நீக்கும்படிக்கு, இரண்டொருதரம் அனுப்பினீர்கள்.–17 காணிக்கையை நான் விரும்பாமல், உங்கள் கணக்குப் பெருகவேண்டும் என்று பலனை விரும்புகிறேன்.—18 இப்பொழுது வேண்டியவை எல்லாம் எனக்கு வநதிருக்கின்றன; பரிபூரணமும் உண்டாயிருக்கின்றது; உங்களால் அனுப்பப்பட்டவைகளையும், பராபரனுக்குச் சுகந்தவாசனையாயும், பிரியமும் சந்தோஷமுமான பலியாயும் இருக்கிறவைகளை, எப்பாப்பிரோதீத்துவின் கையில் வாங்கிக்கொண்டதால் நான் நிறைவாயிருக்கிறேன்.—19 அன்றியும் என் தேவனானவர் தமது மகிமையுள்ள ஐசுவரியத்தின்படி, உங்கள் குறைவுகள் யாவையும் கிறிஸ்து இயேசுவினாலே நீக்கி, நிறைவை அருளிச்செய்வார்.—20 நம்முடைய பராபரனும் பிதாவுமானவருக்கே என்றென்றைக்கும் மகிமை உண்டாகக்கடவது.—ஆமென்.

21 கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்கள் யாவருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்கள்; என்னுடனே இருக்கிற சகோதரர் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.–22 பரிசுத்தவான்கள் அனைவரும், விசேஷமாக இராசனுடைய அரண்மனையில் உள்ளவர்களும் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள். — 23 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் அனைவரோடும்கூட இருக்கக்கடவது.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொலோசியருக்கு எழுதின

# நிருபம்.

## ௧. அதிகாரம்.

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்
துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுலும் சகோ
தரனாகிய தீமோத்தேயும்,—2 கொலோசை ஊரி
லே கிறிஸ்துவுக்குள் இருக்கிற பரிசுத்தவான்களு
மாய், விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரருக்கு
எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய பராபர
னாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும்
உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டா
கக்கடவது.
3 நீங்கள் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசு
வாசமாயிருக்கிறதையும் சத்தியவசனமாகிய சுவி
சேஷத்தினாலே முன்பு கேட்டதுமாய், — 4 பர
மண்டலங்களில் உங்களுக்காக வைக்கப்பட்ட
துமாய் இருக்கிற (நித்திய சுதந்தரத்தை) நம்புகி
றதினாலே சகல பரிசுத்தவான்கள்மேலும் அன்பு
கூருகிறதையும் நாங்கள் கேள்விப்பட்டு, —
5 உங்களுக்காக எப்பொழுதும் செபம்பண்ணி,
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
பிதாவுமாய்த் தேவனுமாய் இருக்கிறவரைத் தோத்
திரம்செய்கிறோம்.—6 இந்தச் சுவிசேஷம் உல
கத்தில் எங்கும் வியாபித்து, பலனைக் கொடுக்கி
றதுபோல, (அது) உங்களிடத்திலும் சேர்ந்து,
நீங்கள் பராபரனுடைய கிருபையை உண்மை
யாய்க் கேட்டு அறிந்துகொண்ட நாள்முதல் உங்
களுக்குள்ளும் பலனைக் கொடுக்கிறதாய் இருக்
கின்றது. – 7 அதை நீங்கள் எங்களுக்குப் பிரிய
மான உடன்வேலைக்காரனுமாய், உங்களுக்காகக்
கிறிஸ்துவினுடைய உண்மையான ஊழியக்கார
னுமாய் இருக்கிற எப்பாப்பிராவினிடத்தில் கற்
றுக்கொண்டவர்களாயும் இருக்கிறீர்கள்.–8 ஆவி
க்கேற்ற உங்கள் அன்பை அவன் எங்களுக்கு
அறிவித்தவனாயும் இருக்கிறான்.
9 ஆகையால், அதைக் கேள்விப்பட்ட நாள்
முதல் நாங்கள் உங்களுக்காக விண்ணப்பம்பண்
ணி, நீங்கள் எல்லாவிதமான நற்கிரியைகளைச்
செய்கிறவர்களாயும், பராபரனை அறிகிற அறிவை
அதிகமதிகமாய் அடைகிறவர்களாயும்,—10 சந்
தோஷத்தோடே பொறுமையாயும், நீடிய சாந்த
மாயும் இருப்பதற்கு, அவருடைய மகிமைபொ
ருந்திய வல்லமையினாலே எல்லாவிதமான பெ
லத்தை உடையவர்களாயும்,—11 ஒளியிலுள்ள
பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்திற்குப் பங்கா
ளிகள் ஆவதற்கு நம்மைத் தகுதியானவர்களாக்கி,
இருளினுடைய அதிகாரத்தில் நின்று விடுதலை
பண்ணி, தமக்கு அன்பாயிருக்கிற குமாரனு
டைய இராச்சியத்திற்கு உட்படுத்திவைத்த பிதா
வைத் தோத்திரம்செய்கிறவர்களாயும் இருந்து,–
12 (இப்படிக்) கர்த்தாவுக்குப் பாத்திரமாயும்
மிகுந்த பிரியமாயும் நடக்கும்படிக்கு,–13 எல்லா
ஞானத்தோடும் பரிசுத்த ஆவிக்கேற்ற விவேகத்
தோடும் தமது திருச்சித்தத்தை அறிகிற அறிவினா
லே உங்களை நிரப்பவேண்டுமென்று ஓயாமல்
அவரை நோக்கி வேண்டிக்கொள்ளுகிறோம்.—
14 அவருடைய குமாரன் தம்முடைய திரு இரத்
தத்தைச் சிந்தினதினாலே, நமக்குப் பாவமன்னிப்
பாகிய மீட்பு உண்டாயிருக்கின்றது.—15 அவர்
அதரிசனமாயிருக்கிற பராபரனுடைய சாயலு
மாய்,—16 பரமண்டலங்களிலும் பூமியிலுமுள்ள
காணப்படுகிறவைகளும் காணப்படாதவைகளு
மாகிய யாவற்றையும், சிங்காசனங்களில் இருக்கி
றவர்களையும், கர்த்தத்துவமுடையவர்களையும், பிர
புக்களையும், அதிகாரிகளையும் உண்டாக்கினபடியி
னாலே, சிருட்டிகள் யாவுக்கும் முதன்மையுமாய்
இருக்கிறார்; சகலமும் அவராலும் அவருக்காக
வும் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றன. — 17 எல்
லாவற்றிற்கும் முன்னமே இருக்கிறார்; சகல வஸ்
துக்களும் அவராலே நிலையாயிருக்கின்றன. —
18 அவர் தமது சபையாகிய சரீரத்திற்குத் தலை
யாய் இருக்கிறதுமல்லாமல், எல்லாவற்றிற்கும்
அவர் முந்தினவராய் இருக்கும்படிக்கு, ஆதியும்,
மரித்தோரிலிருந்து எழுந்த முதற்பேறுமானவராய்
இருக்கிறார்.
19 சகல சம்பூரணமும் அவருக்குள்ளே வா
சமாயிருக்கும்படிக்கும்,—20 அவர் சிலுவைமரத்
திலே சிந்தின தமது இரத்தத்தினாலே சமாதா
னம் உண்டுபண்ணினபின் பூமியிலும் பரமண்ட
லங்களிலுமுள்ள வஸ்துக்கள் யாவையும் அவரா
லே தம்முடனே ஒப்புரவாக்கும்படிக்கும், பிதா
வானவர் பிரியமாயிருந்தார்.
21 முன்னே நீங்கள் பொல்லாத கிரியைகளி
னாலே (உங்கள்) மனதிலே சத்துருக்களுமாய்
அந்நியருமாய் இருந்தீர்கள்.—22 இப்பொழுது
உங்களைப் பரிசுத்தவான்களாகவும் மாசற்றவர்களா
கவும் குற்றம்சாற்றப்படாதவர்களாகவும் தமக்கு
முன்பாக நிறுத்தும்படிக்கு, அவர் தமது மாம்சதே
கத்தை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்ததினாலே

உங்களையும் ஒப்புரவாக்கினார்.-23 நீங்கள் கேட்
டதாயும், வானத்தின்கீழுள்ள சகலவித சனங்க
ளுக்கும் பிரசங்கம்பண்ணப்பட்டதாயும், பவுலெ
ன்னும் என்னாலே ஊழியம்செய்யப்படுகிறதாயும்
இருக்கிற சுவிசேஷத்தினாலே (தெரியவந்த இ
ரட்சிப்பை) நீங்கள் அசைவில்லாமல் நம்புகிற
வர்களுமாய், விசுவாசத்தினாலே ஸ்திரமும் உறுதி
யும் உள்ளவர்களுமாய் நிலைகொண்டு இருந்தீர்க
ளானால், (உங்களை) அப்படியே தமக்குமுன்பாக
நிறுத்துவார்.

24 இப்பொழுது நான் உங்களுக்காகப் படு
கிற பாடுகளினாலே சந்தோஷமடைந்து கிறிஸ்து
வினுடைய உபத்திரவங்களில் சேஷமான உபத்
திரவங்களை அவருடைய சரீரம் என்னும் சபைக்
காக என் மாம்சத்திலே நிறைவேற்றுகிறேன்.—
25 பராபரனுடைய நியமிப்பின்படியே நான் அந்
தச் சபைக்கு ஊழியக்காரன் ஆனேன்.-26 ஆதி
காலங்களுக்கும் தலைமுறைதலைமுறைகளுக்கும்
மறைவாயிருந்து, இப்பொழுது அவருடைய பரி
சுத்தவான்களுக்கு வெளியாக்கப்பட்ட மறை
பொருளாகிய தேவவசனத்தை நிறைவாய்ப் பிர
சங்கம்பண்ணும்படிக்கு அந்த நியமிப்பு உங்
களுக்காக எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்
றது. — 27 உலகத்தாரைக்குறித்து இந்த மறை
பொருளிலுள்ள சம்பூரணமான மகிமை இன்ன
தென்று அந்தப் பரிசுத்தவான்களுக்குத் தெரியப்
பண்ணச் சித்தமாயிருந்தார்; மகிமை உண்டா
கும் என்கிற நம்பிக்கைக்கு ஏதுவான கிறிஸ்து
உங்களில் இருக்கிறதே அந்தச் சம்பூரணமான
மகிமை.—28 எந்த மனிதனையும் கிறிஸ்து இயே
சுவினாலே தேறினவனாக நிறுத்தும்படிக்கு அவ
ரையே நாங்கள் அறிவித்து, எந்த மனிதனுக்கும்
புத்திசொல்லி, சகலவிதமான ஞானத்தோடும்
உபதேசிக்கிறோம்.—29 அதற்காக நான் எனக்
குள்ளே வல்லமையாயிருக்கிற அவருடைய பெ
லத்தின்படி போராடிப் பிரயாசப்படுகிறேன்.

## ௨. அதிகாரம்.

ஆகையால், ஞானம் அறிவு என்பவைகளாகிய
பொக்கிஷங்கள் எல்லாம் அடங்கியிருக்கிற கிறி
ஸ்துவுக்கும் பிதாவாகிய பராபரனுக்கும் உரிய
மறைபொருளை, — 2 நீங்கள் அறிக்கை இடும்ப
டிக்கான மிகவும் மிகுந்த நிச்சயமுள்ள விவேகத்
தை அடைந்து, அன்பினாலே இணைக்கப்பட்ட
வர்களாய் இருக்கத்தக்கதாக,—3 உங்கள் இருத
யங்களும், இலாவோதிக்கேயா ஊரிலுள்ளவர்க
ளுடைய இருதயங்களும், மற்றும் என் முகத்தை
மாம்சத்தில் காணாதிருக்கிற எல்லாருடைய இரு
தயங்களும் ஆறுதலை அடையும்படிக்கு, நான்
உங்களுக்காகவும் அவர்களுக்காகவும் பண்ணுகிற
மிகுந்த பிரயாசத்தை நீங்கள் அறியவேண்டும்
என்று விரும்புகிறேன். — 4 ஒருவனும் நயவச
னிப்பினாலே உங்களை வஞ்சியாதபடிக்கு இதைச்
சொல்லுகிறேன்.-5 என்னத்தினாலெனில், நான்
தேகத்தின்படி தூரமாயிருந்தும் என் ஆவியின்
படி உங்களுடனேகூட இருந்து, உங்கள் ஒழுங்
கையும் கிறிஸ்துவின்மேலுள்ள உங்கள் விசுவா
சத்தின் உறுதியையும் பார்த்துச் சந்தோஷப்படு
கிறேன்.—6 ஆனபடியினாலே நீங்கள் கர்த்தரா
கிய கிறிஸ்து இயேசுவை ஏற்றுக்கொண்டு இருக்
கிறபடியால்,-7 நீங்கள் போதனை அடைந்தபடி
அவருக்குள்ளே வேரூன்றி, அவர்மேலே கட்டப்
பட்டு, விசுவாசத்தில் உறுதியைப் பெற்று, இப்
படி அவருக்கு ஏற்றபடி நடந்துகொண்டு, தோத்
திரம்செய்து, அந்த விசுவாசத்தை அதிகமதிக
மாய் அடைவீர்களாக.

8 கிறிஸ்துவின்படியல்ல, மனிதருடைய பாரம்
பரை நியாயத்தின்படியேயும், உலகத்திலுள்ள
சிறுமையான வழிபாடுகளின்படியேயும் ஆன
வீணுமாய் வஞ்சனையுமாய் இருக்கிற கல்வியினா
லே ஒருவனும் உங்களைக் கொள்ளையிடாதபடிக்
குப் பாருங்கள்.—9 என்னத்தினாலெனில், தே
வத்துவத்தின் நிறைவெல்லாம் மெய்யாய்க் கிறி
ஸ்துவுக்குள்ளே வாசமாயிருக்கின்றன.—10 மே
லும், சகல துரைத்தனங்களுக்கும் அதிகாரங்க
ளுக்கும் தலைவராயிருக்கிற அவருக்குள் நீங்கள்
நிறைவுள்ளவர்களாய் இருக்கிறீர்கள்.—11 அவ
ரோடே நீங்கள் ஞானஸ்நானத்தினாலே அடக்
கம்பண்ணப்பட்டவர்கள் ஆனபொழுது, அவர்
பண்ணுகிற விருத்தசேதனத்தினாலே நீங்கள் பா
வங்களுள்ள மாம்சதேகத்தைக் கழற்றினபடியால்,
கையால் செய்யப்பட்டிராத விருத்தசேதனத்
தை அவருக்குள்ளும் பெற்றுக்கொண்டீர்கள்.—
12 மேலும், பராபரன் அவரை மரித்தோரிலி
ருந்து எழுப்பின பலத்த செய்கையை விசுவா
சிக்கிறதினாலே நீங்கள் அந்த ஞானஸ்நானத்தி
லே அவருடனேகூட எழுந்தும் இருக்கிறீர்கள்.-
13 எப்படியெனில் பாவங்களாலும் உங்கள் மாம்
சத்தின் நுனித்தோல் என்னும் (அஞ்ஞான மார்க்
கத்தாலும்) மரித்தவர்களாய் இருந்த உங்களை அவ
ரோடேகூடவும் அவர் உயிர்ப்பித்து, பாவங்களை
எல்லாம் உங்களுக்கு மன்னித்து,—14 நமக்கா
கச் செய்யப்பட்டதுமாய் நமக்கு விரோதமுமாய்
இருந்த கட்டளைகளின் கையெழுத்தைக் கொ
லைத்து, அதை நடுவில் இராதபடிக்கு எடுத்து,
அதைச் சிலுவைமரத்தில் சேர்த்து, ஆணி அடித்
துப்போட்டு,—15 துரைத்தனங்களையும் அதிகா
ரங்களையும் கொள்ளையிட்டு வெளியரங்கமாய்க்
காண்பித்து இவ்விதமாய் அவைகளைச் செயித்துக்
கெம்பீரம் அடைந்தார்.

16 ஆதலால் போசனத்தையும் பானத்தையும்
பண்டிகையையும் மாதப்பிறப்பையும் ஓய்வுநாள்
களையும் குறித்து எவனாலும் உங்களைக் குற்றவா
ளிகள் ஆக்காதிருப்பானாக.—17 அவைகள் பின்

வந்தவைகளுக்கு நிழலாயிருக்கின்றன; அவைக ளின் பொருள் கிறிஸ்துவினிடத்திலே உண்டாயி ருக்கின்றது.—18 (மாயமான) தாழ்மையின்மே லும், தேவதூதருக்குச் செய்யும் ஆராதனையின் மேலும் விருப்பமுற்றிருக்கிற யாவனானாலும் உங் கள் பந்தயப்பொருளை நீங்கள் இழந்துபோகும் படி செய்யாதிருப்பானாக; அப்படிப்பட்டவன் தான் காணாதவைகளைத் துணிவாய் நடத்துகிறவ னுமாய், தன் மாம்சசிந்தையினாலே வீணாய் இறு மாப்புக்கொண்டிருக்கிறவனுமாய்,—19 கணுக்க ளாலும் கட்டுதற்கானவைகளாலும் உதவிபெற்று இணைக்கப்பட்ட சரீரமெல்லாம் தேவ வளர்த்தி யாக வளரச்செய்கிற தலையைப் பற்றிக்கொள்ளா தவனுமாய் இருக்கிறான்.

20 அப்படியிருக்க கையாளுகிறதினாலே அழி வுக்கு ஏதுவான பதார்த்தங்களில் இதைச் சாப்பி டக்கூடாது. — 21 இதை ருசிபார்க்கக்கூடாது, இதைத் தீண்டக்கூடாது என்று சொல்லிய மனி தருடைய கற்பனைகளின்படியேயும் போதகங்க ளின்படியேயும் சிலர் கற்பிக்கிறார்களே.–22 அப் படிப்பட்ட கற்பனைகள் சுயசித்த ஆராதனையினா லும் தாழ்மையினாலும் சரீரத்திற்கு வேண்டிய கனம்செய்யாமல், அதை வருத்தப்படுத்துகையி னாலும் ஞானவேஷமுள்ளவைகளாய் இருக்கின் றது உள்ளதுதான். — 23 ஆனாலும் கிறிஸ்துவுட னேகூட நீங்கள் உலகத்திலுள்ள சிறுமையான வழிபாடுகளுக்கு மரித்தவர்களானபடியால், நீங் கள் உலகத்தின்படி பிழைக்கிறவர்கள்போல, அந்தக் கட்டளைகளைச் சுமந்துகொள்ளுகிறது என்ன?

## ௩. அதிகாரம்.

நீங்கள் கிறிஸ்துவுடனேகூட எழுப்பப்பட்டி ருந்தால், கிறிஸ்து பராபரனுடைய வலதுபாரிச த்தில் உட்காந்திருக்கிற இடத்திலுள்ள மேலா னவைகளைத் தேடிக்கொள்ளுங்கள்.—2 நீங்கள் மரித்தீர்களே, அல்லாமலும், கிறிஸ்துவுடனே கூட உங்கள் ஜீவன் பராபரனிடத்தில் மறைந் திருக்கின்றதே. — 3 ஆகையால், பூமியில் உள் ளவைகளை அல்ல, மேலானவைகளையே சிந் தித்துக்கொள்ளுங்கள். — 4 நமக்குச் ஜீவனாகிய கிறிஸ்து வெளிப்படும்பொழுது, அவருடனே கூட நீங்களும் மகிமையோடே வெளிப்படுவீர் கள்.

5 ஆகையால் பூமியிலே வேசித்தனமும் அ சுத்தமும் விரகதாபமும் துர்இச்சையும் விக்கிரக ஆராதனையான பொருளாசையுமாகிய உங்கள் அவயவங்களை அழித்துப்போடுங்கள்.—6 அவை களின்நிமித்தம் பராபரனுடைய கோபம் கீழ்ப்ப டியாமையுள்ள பிள்ளைகள்மேல் வருமே.–7 முற் காலத்திலே நீங்களும் அவர்களுடனேகூடச் ஜீவனம்பண்ணினபொழுது, அவைகளைச் செய் துகொண்டுவந்தீர்கள்.—8 இப்பொழுது கோப மும் மூர்க்கமும் துர்க்குணமும் தூஷணமும், நீங்கள் பேசின வம்புவார்த்தைகளுமாகிய அவை களையெல்லாம் விட்டுவிடுங்கள். — 9 பழைய மனிதனையும், அதினுடைய செய்கைகளையும் நீங்கள் கழற்றிப்போட்டு, தன்னைச் சிருட்டித்த வருடைய சாயலுக்கு ஏற்ற அறிவு உண்டாகும் படிக்கு, புதிதாக்கப்பட்ட புதியமனிதனைத் தரித் துக்கொண்டவர்களாய், — 10 ஒருவருக்கொரு வர் பொய்சொல்லாதிருங்கள். — 11 அங்கே கிரேக்கன் என்றும், யூதன் என்றும், விருத்தசே தனமுள்ளவன் என்றும், விருத்தசேதனமில்லா தவன் என்றும், புறத்தேசத்தான் என்றும், இஸ் கீத்தன் என்றும், அடிமையென்றும், சுயாதீனன் என்றும் (சொல்லப்பட்ட வேற்றுமை) இல்லை; கிறிஸ்துவே எல்லாருக்குள்ளும் எல்லாமுமாய் இருக்கிறார்.

12 அப்படியிருக்க, நீங்கள் பராபரனாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களாயும், பரிசுத்தரா யும், சிநேகிக்கப்பட்டவர்களாயும் இருக்கை யால், உருக்கமான இரக்கத்தையும் தயையையும் மனத்தாழ்மையையும் பொறுமையையும் நீடிய சாந்தத்தையும் தரித்துக்கொண்டு, — 13 ஒரு வரை ஒருவர் தாங்கி, ஒருவன் மற்றொருவன் மேல் விதனமாயிருந்தால், கிறிஸ்து உங்களுக்கு மன்னித்ததுபோல, நீங்களும் ஒருவருக்கு ஒரு வர் மன்னியுங்கள். — 14 அன்றியும் அவைகள் எல்லாவற்றின்மேலும் அன்பைத் தரித்துக்கொள் ளக்கடவீர்கள்; அதுவே பூரணசற்குணங்களை இணைக்கிற கச்சையாயிருக்கின்றது. — 15 அல் லாமலும் பராபரனுடைய சமாதானம் உங்கள் இருதயங்களுக்குள்ளே ஆளுகைசெய்யக்கட வது; நீங்கள் ஒரே சரீரமாய் இருக்கும்படிக்கு, அந்தச் சமாதானத்திற்கு அழைக்கப்பட்டீர்க ளே. நன்றியறிதல் உள்ளவர்களாயும் இருப்பீர்க ளாக.

16 கிறிஸ்துவினுடைய வசனம் உங்களுக் குள்ளே பரிபூரணமாய் வாசமாயிருக்கக்கடவது; சகல ஞானத்தோடும் சங்கீதங்களினாலும், கீர்த்த னங்களினாலும், மற்ற ஞானப்பாட்டுகளினாலும், ஒருவருக்கு ஒருவர் போதித்துப் புத்திசொல் லிக்கொண்டு, பராபரனை உங்கள் இருதயங்க ளிலே இனிதாய்ப் பாடி,—17 நீங்கள் வசனம் சொன்னாலும், கிரியைசெய்தாலும், எவைசெய் தாலும், அவைகளை எல்லாம் கர்த்தராகிய இயே சுவின் நாமத்தினாலே செய்து, அவர் முன் னிலையாய்ப் பிதாவாகிய பராபரனைத் தோத்திரி யுங்கள்.

18 ஸ்திரிகளே, கர்த்தருக்கு ஏற்கும்படி உங் கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்பட்டிருங் கள்.—19 புருஷர்களே, உங்கள் மனைவிகளில்

அன்புகூருங்கள்; அவர்களுக்குக் கசப்புக்கொ
டாதிருங்கள்.
20 பிள்ளைகளே, உங்களைப் பெற்றவர்களுக்கு
எவ்விதத்திலும் கீழ்ப்பட்டிருங்கள்; அதுவே
பராபரனுக்குப் பிரியமாயிருக்கிறது.—21 பிதாக்
களே, உங்கள் பிள்ளைகள் திடனற்றுப்போகாத
படி அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள்.

22 வேலைக்காரரே, சரீரத்தின்படி உங்க
ளுக்கு எசமான்களானவர்களுக்கு, நீங்கள் எவ்
விதத்திலும் கீழ்ப்படிந்து, மனிதருக்குப் பிரியமா
யிருக்க விரும்புகிறவர்கள்போல எசமான்கள்
காணும்பொழுதுமாத்திரம் ஊழியம்செய்கிறவர்க
ளாய் இராமல் பராபரனுக்குப் பயந்து, கபடமில்
லாத இருதயத்தோடே கீழ்ப்படியுங்கள். —
23 மேலும், நீங்கள் கர்த்தாவாயிருக்கிற கிறிஸ்து
வுக்கு ஊழியம்செய்கிறபடியால், சுதந்தரமென்
னும் பலனைப் பெறுவோம் என்று அறிந்தவர்க
ளாய்,—24 எவைகளைச் செய்தாலும் அவைகளை
எல்லாம் மனிதருக்காக அல்ல, கர்த்தருக்காகவே
மனச்சந்தோஷமாய்ச் செய்யுங்கள். — 25 அநி
யாயம் செய்கிறவன் தான் செய்த அநியாயத்
தால் வரும் பலனை அடைவான், பட்சபாதமே
இல்லை.

## ச. அதிகாரம்.

எசமான்களே, உங்களுக்கும் பரமண்டலங்க
ளில் எசமான் இருக்கிறார் என்று அறிந்தவர்க
ளாய் நீங்கள் வேலைக்காரருக்கு நீதியுமாய்ச்
செவ்வையுமாய் இருக்கிறதைக் கொடுங்கள்.
2 தோத்திரத்தோடே விண்ணப்பம்பண்ணு
தற்கு விழித்திருந்து, உறுதியாய் விண்ணப்பம்
பண்ணுங்கள். — 3 அவ்வேளையிலே கிறிஸ்து
வின் மறைபொருளின்நிமித்தம் கட்டப்பட்டிருக்
கிற நான் பேசவேண்டிய பிரகாரமாக அதை
வெளிப்படுத்திப் பேசும்படிக்கு,—4 பராபரன்
இந்த வசனத்திற்கு வாசலைத் திறக்கவேண்டும்
என்று, எங்களுக்காகவும் விண்ணப்பம்பண்
ணுங்கள்.

5 நீங்கள் காலத்தைப் பற்றிக்கொண்டு, புறம்
பானவர்களுக்கு முன்பாக ஞானமாய் நடந்து
கொள்வீர்களாக. — 6 நீங்கள் அவனவனுக்குத்
தகுதியான உத்தரவுசொல்லும் வகையை அறி
யும்படிக்கு, உங்கள் வசனம் எப்பொழுதும்
இனிதாயும், உப்பால் இரசம் ஏற்றுகிறதுபோல
வும் இருக்கக்கடவது.

7 பிரியமான சகோதரனுமாய், உண்மையுள்ள
ஊழியக்காரனுமாய், என்னுடனேகூடக் கர்த்த
ருக்கு வேலையாளுமாய் இருக்கிற தீகிக்கு என்ப
வன் என் செய்திகளை எல்லாம் உங்களுக்கு அறி
விப்பான்.—8 உங்கள் செய்திகளை அறிந்து, உங்
கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்ப
டிக்கு,—9 நான் அவனையும், உங்களில் ஒருவ
னாகிய உண்மையுள்ள பிரிய சகோதரனான ஒநே
சிமு என்பவனையும் உங்களிடத்திற்கு அனுப்பியி
ருக்கிறேன்; அவர்கள் இவ்விடத்துச் செய்திகளை
எல்லாம் உங்களுக்கு அறிவிப்பார்கள்.
10 என்னோடேகூடக் காவலில் வைக்கப்
பட்டிருக்கிறவனாகிய அரிஸ்தருக்கு என்பவ
னும், பருனபாவுக்கு இனத்தானாகிய மாற்கு என்
பவனும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்;
இந்த மாற்கைக்குறித்துக் கட்டளைகளை அடைந்
தீர்களே, அவன் உங்களிடத்தில் வரும்பொழுது
அவனை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.—11 இயு
ஸ்து என்னப்பட்ட இயேசுவும் உங்களுக்கு
வாழ்த்துதல்செய்கிறான்; விருத்தசேதனம் உள்
ளவர்களில் இவர்கள்மாத்திரம் பராபரனுடைய
இராச்சியத்திலே என்னுடனேகூட ஊழியக்கா
ரராய் எனக்கு ஆறுதல்செய்துகொண்டுவந்தார்
கள்.—12 உங்களில் ஒருவனாயிருக்கிற கிறிஸ்து
வின் ஊழியக்காரனாகிய எப்பாப்பிரா என்பவன்
உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான்; நீங்கள்
பராபரனுடைய சித்தமானது எல்லாவற்றிலேயும்
நிலைநின்று தேறினவர்களுமாய் நிறைவுள்ளவர்க
ளுமாய் இருக்கும்படிக்கு அவன் எப்பொழுதும்
உங்களுக்காக விண்ணப்பங்களினால் போராடுகி
றான். — 13 அப்படியே அவன் உங்களுக்காக
வும், இலாவோதிக்கையா இயேராப்பொலி என்
னும் ஊர்களில் உள்ளவர்களுக்காகவும் மிகுந்த
சாக்கிரதையுள்ளவனாய் இருக்கிறான் என்பதற்
குச் சாட்சியாயிருக்கிறேன். — 14 பிரியமான
வைத்தியனாகிய லூக்கா என்பவனும் தேமா
என்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்
கள்.
15 இலாவோதிக்கையாவில் இருக்கிற சகோ
தரர்களுக்கும் நிம்பா என்பவனுக்கும் அவன்
வீட்டிலே கூடுகிற சபையாருக்கும் வாழ்த்துத
லைச் சொல்லுங்கள்.—16 இந்த நிருபம் உங்க
ளிடத்தில் வாசிக்கப்பட்டபின், இது இலாவோ
திக்கையா சபையிலும் வாசிக்கப்படும்படிக்கும்,
இலாவோதிக்கையாவிலிருந்து வரும் நிருபத்தை
நீங்களும் வாசிக்கும்படிக்கும் செய்யுங்கள். —
17 அர்க்கிப்புவை நோக்கி நீ கர்த்தரிடத்தில்
பெற்ற ஊழியத்தை நிறைவேற்றப் பார்ப்பாயாக
என்று சொல்லுங்கள்.
18 பவுலாகிய நான் உங்களுக்கு வாழ்த்து
தல்செய்து, இதை என் கையினாலே எழுதி
னேன்; நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்
துக்கொள்ளுங்கள்; கிருபை உங்களுடனே
இருக்கக்கடவது.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு எழுதின முதலாம் நிருபம்.

## க. அதிகாரம்.

பவுலும் சில்வானும் தீமோத்தேயும், பிதாவாகிய பராபரனுக்குள்ளும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்கை ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

2 பராபரனாலே அன்புகூரப்படுகிற சகோதரரே, எங்கள் சுவிசேஷம் வசனத்தோடேமாத்திரமல்ல, வல்லமையோடும் பரிசுத்த ஆவியோடும் மிகுந்த நிச்சயத்தோடும் உங்களுக்குள்ளே பிரவேசித்ததினாலே,—3 நீங்கள் (அவராலே) தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் என்று நாங்கள் அறிந்து,–4 நம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு முன்பாக விசுவாசத்தினாலே நீங்கள் செய்கிற கிரியையையும், அன்பினாலே பண்ணுகிற பிரயாசத்தையும், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் உள்ள நம்பிக்கையினாலே காண்பிக்கிற பொறுமையையும், நாங்கள் இடைவிடாமல் நினைத்துக்கொண்டு,—5 எங்கள் செபங்களிலே உங்களைக்குறித்துப் பேசி, உங்கள் எல்லாருக்காகவும், எப்பொழுதும் பராபரனைத் தோத்திரம்செய்கிறோம்.—6 நாங்கள் உங்களுக்குள்ளே இருந்தபொழுது, உங்களுக்காக இப்படிப்பட்டவர்களாய் இருந்தோம் என்று அறிந்திருக்கிறீர்களே; அன்றியும், நீங்கள் மிகுந்த உபத்திரவத்திலே பரிசுத்தஆவியின் சந்தோஷத்தோடே வசனத்தை ஏற்றுக்கொண்டு, எங்களையும் கர்த்தரையும் பின்பற்றி,—7 இப்படி மக்கேதோனியா நாட்டிலும், அகாயா நாட்டிலும் உள்ள விசுவாசிகள் யாவருக்கும் மாதிரியை வைத்தீர்கள்.—8 எப்படியெனில், உங்களிடத்திலிருந்து கர்த்தருடைய வசனம் மக்கேதோனியா அகாயா நாடுகளில் பிரசித்தமானதுமல்லாமல், நாங்கள் அதைக்குறித்து எதையாகிலும் சொல்லவேண்டியிராதபடிக்கு, நீங்கள் பராபரனைப் பற்றின விசுவாசம் எவ்விடங்களிலேயும் வெளியரங்கமாயிற்று. —9 நாங்கள் உங்களிடத்தில் அடைந்த பிரவேசம் இப்படியிருந்ததென்றும், சீவனையுடைய மெய்யான தேவனுக்குப் பணிவிடை செய்யும்படிக்கும், அவர் மரித்தோரிலிருந்து எழுப்பினவருமாய், இனிவரும் கோபாக்கினையில்நின்று நம்மை இழுத்து இரட்சிக்கிறவருமாய் இருக்கிற அவருடைய குமாரனாகிய இயேசுவைப் பரமண்டலங்களிலிருந்து வரப்பார்த்துக்கொண்டிருக்கும்படிக்கும்,—10 நீங்கள் விக்கிரகங்களைவிட்டு, பராபரனிடத்திற்கு இவ்விதமாய் மனம்திருப்பினீர்கள் என்றும் அவர்கள் தாமே அறிவிக்கிறார்களே.

## உ. அதிகாரம்.

அன்றியும் சகோதரரே, உங்களிடத்திலே நாங்கள் அடைந்த பிரவேசம் வீணாயிருக்கவில்லை என்று நீங்களே அறிந்திருக்கிறீர்கள்.—2 அல்லாமலும் உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, முன்னே பிலிப்புப்பட்டணத்திலே நாங்கள் பாடுகளையும் நிந்தைகளையும் அடைந்திருந்தும், பராபரனுடைய சுவிசேஷத்தை அதிக போராட்டத்தோடே உங்களுக்குச் சொல்லும்படி, நம்முடைய பராபரனாலே தயிரியமுள்ளவர்களாய் இருந்தோம்.—3 அன்றியும் எங்கள் போதகம் வஞ்சகத்திலும், அசுத்தத்திலுமிருந்து தோன்றவில்லை; அது கபடமுள்ளதாயிருக்கவுமில்லை —4 சுவிசேஷத்தை எங்களுக்கு ஒப்புவிக்கத்தக்கதாக, பராபரன் எங்களை உத்தமரென்று எண்ணினபடியே நாங்கள் மனிதருக்கு அல்ல, எங்கள் இருதயங்களைச் சோதித்தறிகிற பராபரனுக்கே பிரியமாய்ச் சொல்லுகிறோம். — 5 ஆனதால் உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, நாங்கள் ஒருக்காலும் இச்சகமான வசனங்களைச் சொல்லவும் இல்லை; பொருளாசையை மூடிக்கொண்டு நடக்கவும் இல்லை; அதற்குப் பராபரனே சாட்சியாய் இருக்கிறார்.—6 உங்களிடத்திலாவது, மற்றவர்களிடத்திலாவது நாங்கள் மனிதர் மகிமையைத் தேடவும் இல்லை; நாங்கள் கிறிஸ்துவின் அப்போஸ்தலராய் இருக்கிறபடியால், (உங்கள்மேல்) பாரத்தை ஏற்றலாமே.—7 அப்படியிருந்தும், தாயானவள் தன் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல, உங்களுக்கு லகுஉண்டாக நடந்தோம்.—8 இப்படி நாங்கள் உங்கள்மேல் மிகவும் விருப்பமாயிருந்து, பராபரனுடைய சுவிசேஷத்தைமாத்திரமல்ல, நீங்கள் எங்களுக்குப் பிரியமானவர்களானபடியினாலே, எங்கள் சீவனையும் உங்களுக்குப் பகிர்ந்துகொடுக்க மனதாயிருந்தோம்.–9 அன்றியும் சகோதரரே, நாங்கள் பட்ட பிரயாசமும், வருத்தமும் உங்களுக்கு ஞாபகமாயிருக்கும்; உங்களில் ஒருவனுக்காகிலும் பாரமாயிராதபடிக்கு, இரவும்பக

லும் நாங்கள் வேலைசெய்து, பராபரனுடைய சுவிசேஷத்தை உங்களிடத்தில் பிரசங்கித்தோமே.—10 விசுவாசிகளாகிய உங்களுடனே நாங்கள் எவ்வளவு பரிசுத்தமாகவும், நீதியாகவும், பிழையில்லாமையாகவும் இருந்ததற்கு, நீங்களும் பராபரனேடேகூட சாட்சிகளாய் இருக்கிறீர்கள்.—11 மேலும் தம்முடைய இராச்சியத்திற்கும் மகிமைக்கும் உங்களை அழைத்திருக்கிற பராபரனுக்கு நீங்கள் பாத்திரமாய் நடக்கவேண்டும் என்று,–12 தகப்பன் தன் பிள்ளைகளுக்குச் செய்கிறதுபோல, நாங்கள் உங்களில் யாவருக்கும் புத்தியும் ஆறுதலும் சாட்சியும் சொன்னதை அறிந்திருக்கிறீர்கள்.

13 ஆகையால், நீங்கள் பராபரனுடைய வசனத்தை எங்களாலே கேள்விப்பட்டு ஏற்றுக்கொண்டபொழுது அதை மனிதர் வசனமென்று அல்ல, பராபரனுடைய வசனமென்றே ஏற்றுக்கொண்டதினலே, நாங்கள் இடைவிடாமல் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறேம்;அது மெய்யாய் அவருடைய வசனம்தான்; விசுவாசிக்கிற உங்களுக்குள்ளே அது பலனும் செய்கின்றது.—14 எப்படியெனில், சகோதரரே, நீங்கள் யூதேயா நாட்டிலே கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பராபரனுடைய சபைகளைப் பின்பற்றினவர்களாகி, அவர்கள் யூதராலே பாடுபட்டதுபோல நீங்களும் உங்கள் சுய கோத்திரத்தாராலே பாடுபட்டீர்கள்.–15 அந்த யூதர்கள் கர்த்தராகிய இயேசுவையும், தங்கள் தீர்க்கதரிசிகளையும் கொலைசெய்து, எங்களையும் துன்பப்படுத்தி, இப்படிப் பராபரனுக்குப் பிரியமாயிராதவர்களுமாய், மனிதர் யாவருக்கும் விரோதிகளுமாய் இருக்கிறார்கள்.—16 அவர்கள் தங்கள் பாவங்களை எப்பொழுதும் நிறைவாக்கத்தக்கதாக, புறத்தேசத்தார் இரட்சிக்கப்படுதெற்கு நாங்கள் அவர்களோடே பேசாதபடிக்குத் தடைபண்ணுகிறார்கள்; கோபாக்கினை அதிசீக்கிரமாய் அவர்களுக்கு வருகின்றது.

17 சகோதரரே, நாங்கள் இருதயத்தினல் அல்ல, முகமுகமாய் (மாத்திரம்) கொஞ்சக்காலம் உங்களைக் காணமல் பிரிந்திருந்தபடியினலே உங்கள் முகத்தைப் பார்க்கவேண்டும் என்று, மிகுந்த ஆசையோடே அதிகமாய்ப் பிரயத்தனம் பண்ணினேம்.—18 ஆனபடியினலே உங்களிடத்தில் வருகிறதற்கு நாங்கள் இரண்டொருதரம் மனதாய் இருந்தோம்; பவுலாகிய நான் விசேஷமாக அப்படியிருந்தேன்; சாத்தான்மாத்திரம் எங்களுக்குத் தடைபண்ணினன்.—19 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வரும்பொழுது, அவருடைய சந்நிதானத்திலே யார் எங்களுக்கு நம்பிக்கையும், சந்தோஷமும், புகழ்ச்சியாகிய கிரீடமும் வருவதற்கு எதுவாய் இருப்பார்கள், நீங்களல்லவோ அப்படியிருப்பீர்கள்.—20 நீங்கள் எங்களுக்கு மகிமையுமாய்ச் சந்தோஷமுமாய் இருக்கிறீர்களே.

## ௩. அதிகாரம்.

ஆகையால், நாங்கள் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல் அத்தேனே பட்டணத்திலே தனித்துவிடப்பட விரும்பி,—2 இந்த உபத்திரவங்களினலே ஒருவரும் அசைக்கப்படாதபடிக்கு, உங்கள் விசுவாசத்தைக்குறித்து உங்களை ஸ்திரப்படுத்தும்பொருட்டாக, நம்முடைய சகோதரனுமாய், பராபரனுடைய ஊழியக்காரனுமாய், கிறிஸ்துவின் சுவிசேஷத்தில் எங்கள் உடன்வேலையாளாய் இருக்கிற தீமோத்தேயுவை அனுப்பினேம்.—3 நீங்களே அறிந்திருக்கிறபடி இப்படிப்பட்டதைச் சகிக்கிறதற்கு நாம் வைக்கப்பட்டிருக்கிறேமே.—4 மேலும் நமக்கு உபத்திரவம் வருமென்று நாங்கள் உங்களிடத்தில் இருந்தபொழுது, உங்களுக்கு முன்னறிவித்தோமே; அப்படியும் நடந்தது; அதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.—5 ஆனபடியினலே நான் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல், எங்கள் வேலை வீணய்ப் போகத்தக்கதாகச் சோதனைக்காரன் உங்களைச் சோதனைக்கு உட்படுத்தினது உண்டோ என்று உங்கள் விசுவாசத்தை அறியும்படிக்கு அவனை அனுப்பினேன்.

6 சகோதரரே, இப்பொழுது தீமோத்தேயு உங்களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்து, நீங்கள் விசுவாசமாயும் அன்பாயும் இருந்து, எப்பொழுதும் எங்களை நன்றய் நினைத்துக்கொண்டு, —7 நாங்கள் உங்களைக் காண மிகுந்த ஆசையாய் இருக்கிறதுபோல, நீங்களும் எங்களைக் காண ஆசையாய் இருக்கிறீர்கள் என்று எங்களுக்கு நற்செய்தியைச் சொன்னவுடனே எங்களுடைய உபத்திரவம் இடுக்கண் யாவற்றிலேயும், உங்கள் விசுவாசத்தினலே உங்களைக்குறித்து ஆறுதல் அடைந்தோம்.—8 நீங்கள் கர்த்தரிடத்தில் நிலைநிற்கிறதால் இப்பொழுது பிழைக்கிறேம்.—9 அல்லாமலும் நாங்கள் உங்களைக்குறித்து நம்முடைய பராபரனுடைய சந்நிதானத்திலே அடைந்திருக்கிற மிகுந்த சந்தோஷத்திற்காகப் பராபரனுக்கு எந்தத் தோத்திரம் செலுத்துவோம்?—10 உங்கள் முகத்தைக் கண்டு உங்கள் விசுவாசத்தின் குறைவுகளை நீக்கி, நிறைவு உண்டாக்கும்பொருட்டாக, இரவும்பகலும் மிகவும் வேண்டுதல் செய்கிறேம்.

11 அந்தப்படியே நம்முடைய பிதாவாகிய பராபரனும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும், எங்கள் வழியை உங்களிடத்திற்கு (நேராக்கக்கடவர்). — 12 அல்லாமலும் நாங்கள் உங்கள்மேல் வைத்திருக்கிற அன்புக்கு ஒப்பாய், நீங்களும் ஒருவரிடத்தில் ஒருவரும், மற்றெந்த மனிதரிடத்திலும் அதிகமாய் நிறைந்த அன்புள்ளவர்கள்

ஆகும்படி கர்த்தர் செய்து, — 13 இவ்விதமாய் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து தம்முடைய பரிசுத்தவான்கள் அனைவரோடும்கூட வரும்பொழுது, நீங்கள் நம்முடைய பிதாவாகிய பராபரனுக்குமுன்பாகப் பிழையில்லாத பரிசுத்தமுள்ளவர்களாய் இருக்கும்படி, உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ச. அதிகாரம்.

மேலும் சகோதரரே, நீங்கள் இன்ன இன்ன பிரகாரமாக நடக்கவும் பராபரனுக்குப் பிரியமாய் இருக்கவும் வேண்டுமென்று எங்களால் ஏற்றுக்கொண்டபடியே அதிகமதிகமாய்ப் பெருகும்படிக்குக் கர்த்தராகிய இயேசுவினாலே உங்களை வேண்டிக்கொண்டு புத்திசொல்லுகிறோம். — 2 கர்த்தராகிய இயேசுவினால் நாங்கள் உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளை அறிந்திருக்கிறீர்களே.—3 நீங்கள் பரிசுத்தமுள்ளவர்கள் ஆகிறதே பராபரனுடைய சித்தமாயிருக்கிறது; அந்தப்படி நீங்கள் வேசிமார்க்கத்திற்கு விலகி,-4 பராபரனை அறியாத அஞ்ஞானிகளைப்போல விரகதாபமாகிய இச்சைக்கு உள்ளாகவல்ல, — 5 பரிசுத்தத்திற்கும், கனத்திற்கும் உள்ளாகவே உங்களில் அவனவன் தன்தன் சரீரபாண்டத்தைக் காத்துக்கொள்ளுதற்கு வகையை அறிந்து,—6 இந்தச் செய்கையினாலே தன் சகோதரனை ஒடுக்காமலும், வஞ்சியாமலும் இருக்கவேண்டும்; முன்னேயும் நாங்கள் உங்களுக்குச் சொல்லிச் சாட்சிகொடுத்தபடி, இப்படிப்பட்ட எல்லாவற்றையும்குறித்து கர்த்தர் நீதியாய்ப் பழிவாங்குகிறவராய் இருக்கிறாரே.-7 பராபரன் நம்மை அசுத்தத்திற்கு அல்ல, பரிசுத்தத்திற்கு அழைத்தாரே. — 8 ஆனதால் அசட்டைபண்ணுகிறவன் மனிதனை அல்ல, தமது பரிசுத்தஆவியை எங்களுக்குக் கொடுத்த பராபரனையே அசட்டைபண்ணுகிறான்.

9 சகோதர சிநேகத்தைக்குறித்து நான் உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை; நீங்கள்தாமே ஒருவரிடத்தில் ஒருவர் அன்பாயிருக்கும்படிக்குப் பராபரனால் போதிக்கப்பட்டவர்களாய் இருக்கிறீர்களே.-10 அந்தப்படியேயும் நீங்கள் மக்கேதோனியா நாட்டில் எங்குமுள்ள சகோதரர் எல்லாருக்கும் செய்துவருகிறீர்கள். — 11 இன்னும் சகோதரரே, அதிலே நீங்கள் அதிகமாய்ப் பெருகவும், புறம்பே இருக்கிறவர்களுக்கு நீங்கள் யோக்கியமாய் நடந்து, — 12 ஒரு குறைவையும் அடையாதபடிக்கு, நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டபடி அமைதலாயிருக்க மிகுதியாய் விரும்பவும், உங்களுடைய சொந்த அலுவலைப் பார்த்துக்கொள்ளவும், உங்கள் சொந்தக் கைகளினால் வேலைசெய்யவும் வேண்டும் என்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறோம்.

13 அல்லாமலும் சகோதரரே, நம்பிக்கை அற்றவர்களைப்போல நீங்களும் துக்கப்படாதபடிக்கு, நித்திரை அடைந்தவர்களைக்குறித்து நீங்கள் அறியாமல் இருக்கிறது எனக்கு விருப்பமில்லை.—14 என்னத்தினாலெனில், இயேசுவானவர் மரித்துப் பின்பு எழுந்திருக்கிறார் என்று நாம் விசுவாசிக்கிறதுபோல, இயேசுவைப்பற்றி நித்திரை அடைந்தவர்களையும் பராபரன் அவரோடேகூடப் புறப்படப்பண்ணுவார்.—15 மேலும் கர்த்தருடைய வார்த்தையின்படி நாங்கள் உங்களுக்கு அறிவிக்கிறது என்னவென்றால், கர்த்தர் வரும்பொழுது உயிரோடே மீதியாயிருக்கும் நாம் நித்திரை அடைந்தவர்களுக்கு முந்திக்கொள்வதில்லை.-16 அதெப்படியெனில், கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதன் இடும் சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கிவருவார்; அப்பொழுது கிறிஸ்துவிலிருந்து மரித்தவர்கள் முதலாவது எழும்புவார்கள்.—17 பின்பு உயிரோடே மீதியான நாமும் ஆகாயத்தில் வருகிற கர்த்தாவுக்கு நேராக அவர்களோடும்கூட மேகங்களில் எடுத்துக்கொண்டு போகப்பட்டு, இப்படி எப்பொழுதும் கர்த்தருடனேகூட இருப்போம்.—18 ஆகையால் இந்த வார்த்தைகளினாலே நீங்கள் ஒருவருக்கு ஒருவர் ஆறுதல் செய்யுங்கள்.

## ரு. அதிகாரம்.

இவைகள் நடக்கும் காலங்களையும் நேரங்களையும்குறித்துச் சகோதரரே நான் உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை.—2 இரவிலே திருடன்வருகிறவிதமாய், கர்த்தருடைய நாள் வரும் என்று நீங்களே நன்றாய் அறிந்திருக்கிறீர்கள்.—3 சமாதானமும், சவுக்கியமும் உண்டென்று அவர்கள் சொல்லும்பொழுது, கர்ப்பவதியானவளுக்கு வேதனை வருகிறதுபோல, அழிவு சடுதியாய் அவர்கள்மேல் வரும்; அவர்கள் தப்பிப்போவதே இல்லை.

4 சகோதரரே, அந்த நாள் திருடனைப்போல உங்களையும் பிடித்துக்கொள்ளத்தக்கதாக, நீங்கள் அந்தகாரத்தில் இருக்கிறவர்கள் அல்ல.—5 நீங்கள் எல்லாரும் ஒளியின் பிள்ளைகளுமாய், பகலின் பிள்ளைகளுமாய் இருக்கிறீர்களே; நாம் இரவுக்கும், அந்தகாரத்திற்கும் உள்ளானவர்கள் அல்ல.—6 ஆகையால் மற்றவர்களைப்போல நாம் தூங்காமல் விழித்துக்கொண்டு தெளிவாய் இருக்கக்கடவோம். — 7 தூங்குகிறவர்கள் இராத்திரியில் தூங்குவார்களே; வெறிகொள்ளுகிறவர்கள் இராத்திரியில் வெறிகொள்ளுவார்களே.-8 பகல் மனிதராகிய நாம், விசுவாசம் அன்பு என்னும் மார்பின் கவசத்தையும், இரட்சிப்பின் நம்பிக்கை என்னும் தலைச்சீராவையும் தரித்துக்கொண்டு தெளிவாயிருக்கக்கடவோம். — 9 பராபரன் நம்மைக் கோபாக்கினைக்கு அல்ல, நம்முடைய கர்த்

தராகிய இயேசுக்கிறிஸ்து மூலமாய் இரட்சிப்பை
அடைந்துகொள்ளுதற்கு ஏற்படுத்தினாரே. —
10 நாம் விழித்திருப்பவர்களானாலும், நித்திரை
அடைந்தவர்களானாலும் தம்முடனேகூட உயி
ரோடிருக்கும்படிக்கு, அவர் நமக்காக மரித்
தாரே.—11 ஆகையால், நீங்கள் செய்துவருகி
றதுபோல ஒருவருக்கு ஒருவர் ஆறுதல் சொல்
லி, ஒருவரை ஒருவர் ஊன்றக்கடவீர்கள்.
12 அன்றியும், சகோதரரே உங்களுக்குள்ளே
பிரயாசப்பட்டு, கர்த்தருக்குள்ளாக உங்களுக்கு
முதலாளிகளாய் இருந்து, உங்களுக்குப் புத்தி
சொல்லுகிற பேர்களை நீங்கள் அறிந்துகொண்டு,–
13 அவர்களுடைய கிரியையின் நிமித்தம் அ
வர்களை மிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்
படிக்கு உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்;
உங்களுக்குள்ளே சமாதானமாய் இருப்பீர்களாக.
14 அன்றியும் சகோதரரே, நாங்கள் உங்க
ளுக்கு எச்சரிக்கையாகச் சொல்லுகிறது என்ன
வென்றால், ஒழுங்கில்லாதவர்களுக்குப் புத்தி
சொல்லுங்கள்; திடனற்றவர்களுக்கு ஆறுதல்
செய்யுங்கள்; பெலஈனரைத் தாங்குங்கள்; எல்
லாருக்கும் நீடியசாந்தமாய் இருங்கள்.
15 எவனும் மற்றொருவன் செய்யும் தீமைக்
குத் தீமையைச் செய்யாமல், எப்பொழுதும்
உங்களுக்குள்ளும் மற்ற யாவருக்குள்ளும் நன்
மைசெய்யப் பின்தொடரும்படி எச்சரிக்கையாய்
இருப்பீர்களாக.
16 எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; இ
டைவிடாமல் செபம்பண்ணுங்கள்.—17 எல்லா
வற்றிலேயும் தோத்திரம்செய்யுங்கள்.—18 அப்
படிச் செய்கிறதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்
களைக்குறித்துப் பராபரனுடைய சித்தமாய் இருக்
கின்றது.
19 ஆவியை அடக்கிப்போடாதிருப்பீர்க
ளாக.—20 தீர்க்கதரிசனங்களை அசட்டைபண்
ணாதிருங்கள்.—21 யாவற்றையும் ஆராய்ந்து
பார்த்து, நலமானதைப் பிடித்துக்கொள்ளுங்
கள்.—22 பொல்லாங்காய்த் தோன்றுகிற யாவற்
றையும்விட்டு விலகுவீர்களாக.
23 சமாதானத்தின் பராபரனே முழுவதும் உங்
களைப் பரிசுத்தமாக்குவாராக; இப்படி உங்கள்
முழு ஆவியும், ஆத்துமாவும், சரீரமும் நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வருகையில் பிழை
யில்லாதவைகளாய் இருக்கும்படி காக்கப்படக்
கடவது.—24 உங்களை அழைக்கிறவர் உண்மை
யுள்ளவர்; அவரும் அப்படியே செய்வார்.
25 சகோதரரே, எங்களுக்காக விண்ணப்பம்
பண்ணுங்கள்.—26 எல்லாச் சகோதரரையும்
பரிசுத்த முத்தத்தோடே வாழ்த்துதல்செய்யுங்
கள்.—27 இந்த நிருபத்தைப் பரிசுத்தமான
சகோதரர் யாவரும் படித்து அறியும்படி செய்ய
வேண்டும் என்று கர்த்தர்மேல் ஆணையிட்டு உங்
களிடத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.
28 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வினுடைய கிருபை உங்களுடனே இருக்கக்கட
வது.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

பவுலும் சில்வானும் தீமோத்தேயும், நம்முடைய
பிதாவாகிய பராபரனையும் கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவையும் பற்றியிருக்கிற தெசலோனிக்
கை ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது:—
2 நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக்
கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.
3 சகோதரரே, நாங்கள் எப்பொழுதும் உங்க
ளுக்காகப் பராபரனைத் தோத்திரிக்கக் கடனாளிக
ளாய் இருக்கிறோம்; உங்கள் விசுவாசம் மிகவும்
வளருகிறபடியினாலும், நீங்கள் எல்லாரும் ஒருவ
ருக்கு ஒருவர் காட்டுகிற அன்பு அதிகமாகிறபடி
யினாலும் நாங்கள் அப்படியே செய்யத்தக்கது.—
4 ஆதலால் நீங்கள் சகிக்கிற சகல துன்பங்களி
லேயும், உபத்திரவங்களிலேயும் பொறுமையை
யும் விசுவாசத்தையும் காண்பிக்கிறபடியினாலே,
உங்களைக்குறித்து நாங்களே பராபரனுடைய
சபைகளில் மேன்மைபாராட்டுகிறோம்.—5 பரா
பரனுடைய இராச்சியத்தின் நிமித்தம் நீங்கள்
(இப்படிப்) பாடுபடுகிறவர்களாயிருக்க, அவ்வி
ராச்சியத்திற்குப் பாத்திரர் என்று எண்ணப்படு
வதற்கு ஏதுவாகப் பராபரன் நியாயமான தீர்ப்புச்
செய்வார் என்பதற்கு அவைகள் அத்தாட்சியாய்
இருக்கின்றன.—6 அல்லாமலும், கர்த்தராகிய
இயேசு தமது வல்லமையுள்ள தூதரோடும், சுவா
லையாய் எரிகிற அக்கினியோடும் வானத்திலி

ருந்து வெளிப்படும்பொழுது,—7 உங்களை உபத்
திரவப்படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும்,
உபத்திரவப்படுகிற உங்களுக்கு எங்களோடே
கூட ஆறுதலையும் பதில்கொடுக்கிறது பராபர
னுக்கு முன்பாக நீதியாய் இருக்கின்றது.—
8 அப்பொழுது பராபரனை அறியாதவர்களுக்கும்,
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும்
நீதியுள்ள ஆக்கினையைச் செலுத்துவார்.—9 அ
வர்கள் கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்தும்,
அவருடைய வல்லமையின் மகிமையில்நின்றும்
நீங்கி, நித்தியமான அழிவாகிய தண்டனையை
அடைவார்கள்.—10 அவருடைய மகிமை அவ
ருடைய பரிசுத்தவான்களிடத்தில் விளங்கும்படி
யாயும், அவர் விசுவாசிகள் எல்லாரிடத்திலும்
ஆச்சரியப்படுத்தப்படும்படியாயும் வரும்பொ
ழுது, (அப்படியே நடக்கும்;) நீங்கள் எங்களு
டைய சாட்சியை விசுவாசித்தபடியினாலே,
(உங்களிடத்திலும்) அப்படியே அந்நாளிலே
(ஆச்சரியப்படுத்தப்படுவார்).
11 ஆகையால் நம்முடைய தேவனுமாய்க்
கர்த்தருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவினு
டைய கிருபையின்படியே, நம்முடைய கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமம் உங்களிடத்
திலும், நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படுத்தப்
படும்பொருட்டாக,—12 நம்முடைய பராபரன்
உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்திரராகவும்,
(தமது) தயையுள்ள சித்தம் முழுவதையும் விசுவா
சத்தின் கிரியையையும் பலமாய் (உங்களிடத்தி
ல்) நிறைவேற்றவும்வேண்டும் என்று எப்பொழு
தும் உங்களுக்காக விண்ணப்பம்பண்ணுகிறோம்.

## உ. அதிகாரம்.

அன்றியும் சகோதரரே, நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்து வருவதையும், நாம் அவரி
டத்தில் சேர்க்கப்படுவதையும் குறித்து நாங்கள்
உங்களை வேண்டிக்கொள்ளுகிறது என்னவென்
றால்,–2 கிறிஸ்துவினுடைய நாள் சமீபமாயிருக்
கிறதாகச் சொல்லுகிற ஆவியினாலாவது, வாயினா
லாவது, எங்களிடத்திலிருந்து வந்ததாகக் காட்
டுகிற நிருபத்தினாலாவது, நீங்கள் சீக்கிரமாய் உங்
கள் மனதிலே அசைவுபடாமலும் கலங்காமலும்
இருப்பீர்களாக.–3 உங்களை வஞ்சிக்கும்படி வரு
கிற எவனுக்கும், எவ்விதத்தினாலும் இடங்கொ
டாதிருங்கள்; என்னத்தினாலெனில், அந்த நாள்
வருதற்குமுன்னே சுவிசேஷத்தைவிட்டு வில
குதல் உண்டாகவேண்டும்; அல்லாமலும் கேட்
டின் மகனாகிய பாவமனிதனும் வெளிப்பட
வேண்டும்.—4 அவன் தேவன் என்னப்பட்ட
யாவர்க்கும், தேவ ஆராதனை அடைகிற யாவர்க்
கும் விரோதமாய்த் தன்னை உயர்த்தி, இப்படிப்
பராபரனுடைய ஆலயத்திலே தேவன்போல
உளுக்காந்து, தானே தேவன் என்று தன்னைக்
காண்பிப்பான்.
5 நான் உங்களிடத்தில் இருந்தபொழுது, இ
வைகளை உங்களுக்குச் சொன்னேன் என்று உங்
களுக்கு ஞாபகமில்லையா? — 6 அவன் தனது
காலத்திலே வெளியாகும்வரைக்கும், இப்பொ
ழுது அவனுக்குத் தடையாயிருக்கிறது இன்ன
தென்றும் அறிந்திருக்கிறீர்கள்.–7 அக்கிரமமுள்ள
அந்த இரகசியம் இப்பொழுதே கிரியைசெய்
கின்றது; இக்காலத்தில் (அதற்குத்) தடையாய்
இருக்கிறவன் நீக்கப்படுவதுமாத்திரம் வேண்
டும். — 8 அப்பொழுது அந்த அக்கிரமக்காரன்
வெளிப்படுவான்; அவனைக் கர்த்தராகிய இயேசு
தம்முடைய வாயின் சுவாசத்தினாலே அழித்து,
தமது வருகையின் பிரகாசத்தினாலே நாசம்பண்
ணுவார்.—9 அவன் எப்படித் தோன்றுவானெ
னில், சாத்தானுடைய நடத்தையின் விதமாய்,
பொய்யான அற்புதங்களோடும், அடையாளங்க
ளோடும், மிகுந்த வல்லமையோடும்,–10 அநீதி
யினால் உண்டாகும் எல்லாவித வஞ்சகத்தோ
டும், கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே தோன்று
வான்; இரட்சிக்கப்படும்படிக்கு ஏதுவான சத்தி
யத்தின்மேலுள்ள அன்பை அவர்கள் தரித்துக்
கொள்ளாமல் இருப்பதால், அப்படி நடக்கும்.–
11 அதினாலே சத்தியத்தை நம்பாமல், அநீதி
யில் பிரியமான யாவரும் ஆக்கினைக்கு உள்ளாக்
கப்படும்படிக்கு,—12 அவர்கள் பொய்யானதை
நம்புதற்கு ஏதுவாக வஞ்சகத்தை நடப்பிக்கிற
தைப் பராபரன் அவர்களுக்கு அனுப்புவார்.
13 கர்த்தராலே அன்புகூரப்பட்ட சகோதர
ராகிய நீங்கள், ஆவியினால் பரிசுத்தமாக்கப்படுகி
றதினாலும், சத்தியத்தை விசுவாசிக்கிறதினாலும்,
இரட்சிப்பு அடையும்படிக்கு ஆதிமுதல் பரா
பரன் உங்களைத் தெரிந்துகொண்டபடியினாலே,
நாங்கள் உங்களைக்குறித்து எப்பொழுதும் பரா
பரனைத் தோத்திரிக்கக் கடனாளிகளாய் இருக்கி
றோம். — 14 நீங்கள் நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் மகிமையை அ
டையும்பொருட்டாக, எங்கள் சுவிசேஷத்தி
னாலே அந்த இரட்சிப்புக்கு அவர் உங்களை
அழைத்தார்.
15 ஆனபடியினாலே சகோதரரே, நீங்கள்
நிலைகொண்டு, எங்கள் வார்த்தையினாலாவது நிரு
பத்தினாலாவது நாங்கள் உங்களுக்கு உபதேசித்த
முறைமைகளைப் பற்றிக்கொள்வீர்களாக.–16 நம்
மிடத்தில் அன்புகூர்ந்து, நித்திய ஆறுதலையும்
நல்ல நம்பிக்கையையும், கிருபையாய் நமக்குக்
கொடுத்திருக்கிற நம்முடைய பிதாவாகிய பரா
பரனும், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவும் உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல்
செய்து,—17 எல்லாவித நல்வசனத்திலும், நற்
கிரியையிலும் உங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௩. அதிகாரம்.

சகோதரரே, கடைசியிலே உங்களிடத்திலே
நடக்கிறதுபோல, கர்த்தருடைய வசனம் ஓடி
மகிமைப்படும்படிக்கும், — 2 துர்க்குணராகிய
பொல்லாத மனிதர் கையில் நின்று நாங்கள் இ
ரட்சிக்கப்படும்படிக்கும் எங்களுக்காக விண்ணப்
பம்பண்ணுவீர்களாக; விசுவாசம் எல்லாரிடத்தி
லும் இல்லையே.–3 கர்த்தரே உண்மையுள்ளவர்;
அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, பொல்லாங்கனுக்
கு விலக்கிக் காத்துக்கொள்வார்.–4 மேலும் நாங்
கள் உங்களுக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்
கிறீர்கள் என்றும், இனிமேலும் செய்வீர்கள் என்
றும், உங்களைக்குறித்துக் கர்த்தரிடத்தில் நம்பிக்
கையாய் இருக்கிறோம்.—5 கர்த்தர் உங்கள் இரு
தயங்களைப் பராபரனுடைய அன்புக்கும், கிறிஸ்
துவின் பொறுமைக்கும் நேராக நடத்தக்கடவர்.
6 பின்னும் சகோதரரே, நம்முடைய கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே நாங்
கள் உங்களுக்குக் கட்டளையிடுகிறது என்னவெ
னில், நீங்கள் எங்களிடத்தில் கேட்டு ஏற்றுக்
கொண்ட முறைமையின்படி நடவாமல், ஒழுங்
கில்லாமையாய் நடக்கிற எந்தச் சகோதரனையும்
விட்டு விலகவேண்டும். — 7 எங்களை இன்ன
இன்னவிதமாய்ப் பின்பற்றவேண்டும் என்று
நீங்கள் அறிந்திருக்கிறீர்களே; நாங்கள் உங்களுக்
குள்ளே ஒழுங்கில்லாமையாய் நடவாமல், —
8 ஒருவனுடைய அப்பத்தையும் கைம்மாறில்லா
மல் சாப்பிடாமல் உங்களில் ஒருவனுக்கும் பார
மாய் இராதபடிக்கு, இரவும்பகலும் பிரயாசத்தோ
டும் வருத்தத்தோடும் வேலைசெய்து (சாப்பிட்
டோம்). — 9 (அப்படிப் பாரத்தை வைப்பதற்
கான) அதிகாரம் எங்களுக்கு இல்லை என்றல்ல,
நீங்கள் எங்களைப் பின்பற்றும்படிக்கான திருஷ்
டாந்தமாக எங்களை உங்களுக்குக் காண்பிக்க மன
தாயிருந்தபடியினாலே அப்படிச் செய்தோம்.—
10 ஒருவன் வேலைசெய்ய மனதில்லாதிருந்
தால் அவன் சாப்பிடவும்கூடாது என்று நாங்கள்
உங்களிடத்தில் இருந்தபொழுது உங்களுக்குக்
கட்டளையிட்டோம். — 11 இப்பொழுது உங்க
ளில் சிலர் வேலையொன்றும் செய்யாமல் வீண்
அலுவலாய் நடந்து, ஒழுங்கில்லாமையாய்த்
திரிகிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். —
12 இப்படிப்பட்டவர்கள் அமைதலோடே வே
லைசெய்து, தங்கள் அன்னத்தைச் சாப்பிடவேண்
டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவினாலே அவர்களுக்குப் புத்தியாகக் கட்
டளையிடுகிறோம்.—13 சகோதரரே, நீங்கள் நன்
மைசெய்கிறதிலே இளைப்படையாமல் இருப்பீர்
களாக.—14 மேலும் ஒருவன் இந்த நிருபத்தின்
படி எங்கள் வசனத்திற்குக் கீழ்ப்படியாமற்போ
னால் அவனைக் குறித்துக்கொண்டு, அவன் வெட்
கப்படும்படிக்கு அவனுடனே கலவாதிருப்பீர்க
ளாக. — 15 அப்பொழுதும் அவனைச் சத்துரு
வைப்போல எண்ணாமல், சகோதரன் என்று
எண்ணி, அவனுக்குப் புத்திசொல்லுங்கள். —
16 சமாதானத்தின் கர்த்தர் எப்பொழுதும் சகல
விதத்திலும் உங்களுக்குச் சமாதானத்தை அநுக்
கிரகிக்கக்கடவர்; கர்த்தர் உங்கள் எல்லாரோடும்
கூட இருப்பாராக.
17 பவுலாகிய நான் என் கையெழுத்தோடே
வாழ்த்துதலை எழுதினேன்; நிருபங்கள்தோறும்
இதுவே அடையாளம்; அப்படி எழுதுகிறேன்.–
18 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வின் கிருபை உங்கள் அனைவரோடும்கூட
இருக்கக்கடவது.—ஆமன்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீமோத்தேயுவுக்கு எழுதின

## முதலாம் நிருபம்.

## க. அதிகாரம்.

நம்முடைய இரட்சகராயிருக்கிற பராபரனும்,
நமது நம்பிக்கைக்குரித்தான கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்துவும் கொடுத்த கட்டளையினாலே, இ
யேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற
பவுல், — 2 விசுவாசத்தினாலே உத்தம குமாரனா
கிய தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதாவது: நம்மு
டைய பிதாவாகிய பராபரனாலும், நம்முடைய
கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலும் கிருபையும்
இரக்கமும் சமாதானமும் உண்டாகக்கடவது.
3 வேற்றுமையாய்ப் போதகம்பண்ணாதபடிக்
கும், விசுவாசத்தினால் வருகிற திவ்விய எழுப்பு
தலை அல்ல, தருக்கங்களை உண்டாக்குகிற முடி
யாத வம்ச அட்டவணைகளையும் கட்டுக்கதைகளை
யும் பற்றிக்கொள்ளாதபடிக்கும் நீ சிலருக்குக்
கட்டளையிடும்பொருட்டாக, — 4 நான் மக்கே
தோனியாவுக்குப் போனபொழுது, உன்னை எபே

சுபட்டணத்தில் இருக்க வேண்டிக்கொண்ட
தின்படி (நீ செய்வாயாக).
5 கட்டளையின் கடைசிப்பொருள் என்னவெ
னில், சுத்தமான இருதயத்தினாலும், நல்மனச்
சாட்சியினாலும், வஞ்சனையில்லாத விசுவாசத்தி
னாலும் பிறக்கிற அன்பே. — 6 சிலர் அந்தப்
பொருளைவிட்டு விலகி, வீணான பேச்சைப் பே
சிவருகிறார்கள்.—7 அவர்கள் தாங்கள் சொல்லு
கிறது இன்னதென்றும், தாங்கள் திருட்டாந்தப்
படுத்துகிறது இன்னதென்றும் அறியாதிருந்தும்,
நியாயசாஸ்திரிகளாய் இருக்க விரும்புகிறார்கள்.—
8 நியாயப்பிரமாணத்தை ஒருவன் நியாயப்படி
அநுசரித்தால் அது (அவனுக்கு) நன்மையாய்
இருக்கும் என்று அறிந்திருக்கிறோம்.—9 அன்றி
யும் எங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி நியாயப்பிர
மாணம் நீதிமான்களுக்கு அல்ல, அக்கிரமக்கார
ருக்கும், கீழ்ப்படியாதவர்களுக்கும், தேவபத்தி
இல்லாதவர்களுக்கும், பாவிகளுக்கும், அசுத்த
ருக்கும், லவுகீக நடக்கையுடையவர்களுக்கும்,
தாய்தகப்பன்மாரைக் கொலைசெய்கிறவர்களுக்
கும், மற்ற மனிதரைக் கொலைசெய்கிறவர்களுக்
கும், — 10 வேசிமார்க்கருக்கும், ஆண்புணர்ச்
சிக்காரருக்கும், மனிதரைத் திருடுகிறவர்களுக்
கும், பொய்க்காரருக்கும், பொய்யாணை இடுகிற
வர்களுக்கும்,-11 பாக்கியமுள்ள பராபரனுடைய
மகிமையான சுவிசேஷத்தின்படி இருக்கிற ஆ
ரோக்கியமான உபதேசத்திற்கு விரோதமாயிருக்
கிற மற்றெந்தப் பொல்லாங்கைச் செய்கிறவர்க
ளுக்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றது.—12 அந்
தச் சுவிசேஷம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டது;
என்னைப் பலப்படுத்துகிற நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்து என்னை உண்மையுள்ள
வன் என்றெண்ணி, இந்த ஊழியத்திற்கு ஏற்ப
டுத்தினபடியால், அவருக்குத் தோத்திரம்செய்கி
றேன். — 13 முன்னே நான் தூஷணிக்கிறவனு
மாய், துன்பப்படுத்துகிறவனுமாய், நிந்திக்கிறவ
னுமாய் இருந்தேன்; அப்படியிருந்தும், நான்
அறியாமல் அவிசுவாசத்தினால் அப்படிச் செய்த
படியினாலே இரக்கம்பெற்றேன்.
14 மேலும் நம்முடைய கர்த்தாவின் கிருபை
கிறிஸ்து இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தோ
டும் அன்போடும்கூட எனக்கு மிகவும் சம்பூரண
மாய் உண்டாயிற்று. — 15 பாவிகளை இரட்சிக்
கும்படிக்குக் கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்
தார் என்கிறது உண்மையும் எல்லா அங்கிகரிப்
புக்குப் பாத்திரமுமான வார்த்தையாய் இருக்கின்
றது; பாவிகளில் நான் பிரதானமானவன். —
16 அப்படியிருந்தும் நித்தியசீவனை அடையும்
படி இனிமேல் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில்
விசுவாசமாய் இருப்பவர்களுக்குத் திருட்டாந்தத்
தைக் கொடுக்கும்பொருட்டாக, பிரதான பாவி
யாகிய என்னிடத்திலே எல்லா நீடியபொறுமை
யைக் காண்பிக்கும்படிக்கு இரக்கம்பெற்றேன்.—
17 நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமு
முள்ள இராசனுமாய், ஒருவராகிய ஞானமுள்ள
பராபரனுமாய் இருக்கிற அவருக்குக் கனமும் துதி
யும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.—
ஆமென்.
18 என் குமாரனாகிய தீமோத்தேயுவே, உன்
னைக்குறித்து முன்னுண்டான தீர்க்கதரிசனங்க
ளின்படியே நான் இந்தக் கட்டளையை உனக்கு
ஒப்புக்கொடுக்கிறேன்.—19 அந்தப்படி நீ விசு
வாசமும், நற்சாட்சியையுடைய மனதும் உள்ள
வனாய் அவைகளாலே நல்ல போராட்டம்பண்
ணுவாயாக; அப்படிப்பட்ட மனதைச் சிலர்
தள்ளி, விசுவாசமாகிய கப்பலைச் சேதப்படுத்தி
னார்கள்.—20 அவர்களில் இமெனேயும், அலெக்
குசந்தரும் இருக்கிறார்கள்; அவர்கள் தூஷணியா
தபடிக்குக் கற்றுக்கொள்ளும்பொருட்டாய் அவர்
களைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுத்தேன்.

## உ. அதிகாரம்.

பின்னும் நான் பிரதானமாய்ப் புத்திசொல்லுகி
றது என்னவெனில், எல்லா மனிதருக்காகவும்
விண்ணப்பங்களையும், செபங்களையும், வேண்டு
தலையும், தோத்திரங்களையும் பண்ணவேண்டும்.—
2 நாம் எல்லாப் பத்தியோடும் யோக்கியத்தோ
டும் கலகமில்லாமல் அமைதலுள்ள சீவனம்பண்
ணும்படிக்கு, இராசாக்களுக்காகவும் அதிகார
முள்ள யாவருக்காகவும் அப்படியே செய்யவேண்
டும்.—3 நம்முடைய இரட்சகராகிய பராபரனுக்
குமுன்பாக அது நன்மையாயும் பிரியமாயும் இருக்
கின்றது.—4 எல்லா மனிதரும் இரட்சிக்கப்பட
வும், சத்தியத்தை அறிகிற அறிவுக்கு வரவும் அவ
ரே சித்தமாய் இருக்கிறார்.—5 ஏனெனில், பரா
பரன் ஒருவரே; பராபரனுக்கும் மனிதருக்கும்
மத்தியஸ்தரும் ஒருவரே.—6 எல்லாரையும் மீட்
கும்பொருளாகத் தம்மை ஒப்புக்கொடுத்த மனி
தனாகிய கிறிஸ்து இயேசு அவரே; (அந்த மீட்பு)
தகுதியான காலங்களில் சாட்சிசொல்லப்பட்டு
வருகின்றது.—7 அதற்காக நான் புறத்தேசத்தா
ருக்கு விசுவாசத்தையும் சத்தியத்தையும் விளங்
கப்பண்ணுகிற போதகனாகவும், பிரசங்கியாக
வும், அப்போஸ்தலனாகவும், ஏற்படுத்தப்பட்டி
ருக்கிறேன்; நான் பொய்சொல்லாமல் உண்மை
யே சொல்லுகிறேன்.
8 அல்லாமலும் என்னுடைய சித்தம் என்ன
வென்றால், எல்லா இடங்களிலேயும், புருஷர்
கள் கோபமும் தருக்கமும் இல்லாமல் பரிசுத்த
மான கைகளை உயர்த்திச் செபம்பண்ணவேண்
டும்.—9 அந்தப்படி ஸ்திரிகளும் மயிரைப்பின்னு
தலாலாவது, பொன்னாலாவது, முத்துக்களாலா
வது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது, தங்
களை அலங்கரியாமல் தேவபத்தியைக் காண்பிக்

கிற பெண்பிள்ளைகளுக்கு ஏற்றபடியே,—10 கற்புக்குரிய வஸ்திரத்தாலும், நாணத்தாலும், தெளிவான புத்தியினாலும், நற்கிரியைகளாலும் தங்களை அலங்கரிக்கவேண்டும்.

11 ஸ்திரியானவள் அமைதலோடே படித்துக்கொண்டு, இப்படி எவ்விதத்திலும் கீழ்ப்படிதலைக் காண்பிக்கக்கடவள்.—12 உபதேசம்பண்ணும்படியாயும், புருஷன்மேலே அதிகாரத்தைச் செலுத்தும்படியாயும், நான் ஸ்திரியானவளுக்கு உத்தரவுகொடுக்கிறதில்லை.—13 அவள் அமைதலாய் இருக்கவேண்டும்; என்னத்தினாலெனில், முதலாவது ஆதாமும், இரண்டாவது ஏவாளும், உருவாக்கப்பட்டார்கள். — 14 மேலும் ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை; ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்கு உட்பட்டாள்.–15 அப்படியிருந்தும், அவர்கள் தெளிவானபுத்தியோடே விசுவாசத்திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால் பிள்ளையைப் பெறுகிறதினாலே இரட்சிக்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

கண்காணிப்பை விரும்புகிறவன் நல்ல வேலையை விரும்புகிறான்; இது மெய்யான வார்த்தை.–2 ஆகையால் கண்காணியானவன் குற்றமில்லாதவனுமாய், ஒரே மனைவியையுடைய புருஷனுமாய், தெளிந்தபுத்தியுள்ளவனுமாய், விவேகியுமாய், நல்லொழுக்கமுள்ளவனுமாய், அந்நியரை உபசாரம்செய்கிறவனுமாய், போதிக்கிறதற்குத் தகுதியானவனுமாய் இருக்கவேண்டும்.–3 அவன் திராட்ச இரசத்தில் பிரியனுமாய், அடிக்கிறவனுமாய், அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாய் இராமல், சாந்தனுமாய், சண்டைபண்ணாதவனுமாய், பணத்தின்மேல் பிரியம் இல்லாதவனுமாய், — 4 தன் சொந்தக் குடும்பத்தை நன்றாய் நடத்துகிறவனுமாய், தன் பிள்ளைகளை எவ்விதத்திலும் யோக்கியமாய்க் கீழ்ப்படியப்பண்ணிக்கொள்ளுகிறவனுமாய் இருக்கவேண்டும்.—5 ஒருவன் தன் சொந்தக் குடும்பத்தை நடத்த அறியாதிருந்தால், பராபரனுடைய சபையை எப்படி விசாரிப்பான்?—6 மேலும் அவன் இறுமாப்பை அடைந்து, பிசாசு விழுந்த ஆக்கினையிலே விழாதபடிக்கு நூதனமான கிறிஸ்தவனாயிருக்கக்கூடாது. — 7 மேலும் அவன் நிந்தனையிலும், பிசாசின் கண்ணியிலும் விழாதபடிக்கு, புறம்பானவர்களால் நற்சாட்சியைப் பெற்றவனாயும் இருக்கவேண்டும்.

8 அந்தப்படியே உதவிக்காரரும், இருநாக்குள்ளவர்களாயும், திராட்ச இரசத்தில் பிரியராயும், அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவர்களாயும் இராமல்,–9 யோக்கியருமாய், விசுவாசத்தின் இரகசியத்தைச் சுத்தமான மனதிலே காத்துக்கொள்ளுகிறவர்களுமாய் இருக்கவேண்டும். — 10 அல்லாமலும் முன்பு அவர்களும் சோதிக்கப்படவேண்டும்; அப்பொழுது குற்றமில்லாதவர்களானால் அவர்கள் உதவிக்காரருடைய உத்தியோகத்தைச் செய்யலாம். — 11 அப்படிப்போல அவர்களுடைய ஸ்திரிகளும் யோக்கியருமாய், தூஷணியாதவர்களுமாய், தெளிந்த புத்தியுள்ளவர்களுமாய், எவ்விதத்திலேயும் உண்மையுள்ளவர்களுமாய் இருக்கவேண்டும். —12 மேலும் உதவிக்காரரானவர்கள் ஒவ்வொரு மனைவிக்குப் புருஷருமாய், (தங்கள்) பிள்ளைகளையும் சொந்தக் குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாய் இருக்கவேண்டும். — 13 இப்படி உதவிக்காரருடைய உத்தியோகத்தை நன்றாய்ச் செய்கிறவர்கள் தங்களுக்கு நல்ல பதவியையும், கிறிஸ்து இயேசுவினிடத்திலுள்ள விசுவாசத்தின்மேல் மிகுந்த தயிரியத்தையும் சம்பாதிக்கிறார்கள்.

14 நான் உன்னிடத்திற்குச் சீக்கிரமாய் வருவேன் என்று நம்பியிருக்கிறேன். — 15 நான் தாமதித்தால் சத்தியத்தைத் தாங்கிற தூணுமாய் அஸ்திபாரமுமாய் இருக்கிற சீவனுள்ள பராபரனுடைய சபையாகிய தேவாலயத்திலே நடக்கவேண்டிய வகையை நீ அறியும்படிக்கு இவைகளை உனக்கு எழுதினேன்.—16 அன்றியும் பராபரன் மாம்சமுள்ளவராக வெளிப்பட்டும் ஆவியினாலே நீதியுள்ளவர் என்று ஏற்படுத்தப்பட்டும், தேவதூதர்களால் காணப்பட்டும், புறத்தேசத்தாருக்குள்ளே பிரசங்கிக்கப்பட்டும், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டும், மகிமையிலே உயர்த்தப்பட்டும் இருக்கிறார் என்று சொல்லிய மெய்த்தேவபத்திக்குரிய இந்த இரகசியம் யாவராலும் அறிக்கையிடப்பட்டபடி மேன்மையாய் இருக்கிறது.

## ௪. அதிகாரம்.

ஆகிலும் தேவ ஆவியானவர் தெளிவாய்ச் சொல்லுகிறபடி பிற்காலங்களிலே பொய்யருடைய வஞ்சகத்தினாலே சிலர் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், தேமோன்களைக்குறித்துச் சொல்லுகிற உபதேசங்களுக்கும் செவிகொடுத்து, அந்த விசுவாசத்தைத் தள்ளி நடப்பார்கள். — 2 அந்தப் பொய்யர் சூடுண்ட மனதுள்ளவர்களாய் விவாகம் பண்ணக்கூடாதென்றும், போசனபதார்த்தங்களை விலக்கவேண்டுமென்றும் கட்டளையிடுவார்கள். — 3 பராபரன் அவைகளை, விசுவாசிகளாலும் சத்தியத்தை அறிந்தவர்களாலும் தோத்திரத்தோடே அநுபவிக்கும்படிக்குப் படைத்தாரே.–4 ஆனதால் பராபரன் படைத்தவை எல்லாம் நல்லவைகளாய் இருக்கின்றன; தோத்திரத்தோடே அவை ஏற்றுக்கொள்ளப்படுகையில் ஒன்றையும் தள்ளவேண்டுவதில்லை.—5 அவை தேவவசனத்தினாலும் செபத்தினாலும் பரிசுத்தமாக்கப்படுகின்றனவே.

6 இவைகளைச் சகோதரருக்குப் போதித்தால், நீ அறிந்து பற்றிக்கொண்டிருக்கிற நற்போதகத்திற்கும் விசுவாசத்திற்கும் உரிய வார்த்தைகளில் வளர்ந்தவனாகி, இயேசுக்கிறிஸ்துவுக்கு நல்ல ஊழியக்காரனாய் இருப்பாய். — 7 லவுகீக நடக்கைக்குரியவைகளுமாய்க் கிழவிகளுடைய பேச்சுமாயிருக்கிற கட்டுக்கதைகளைமாத்திரம் தள்ளி, மெய்த்தேவபத்தியை முயற்சிபண்ணிக்கொள்வாயாக.—8 சரீரத்திற்கேற்ற முயற்சி கொஞ்சப் பிரயோசனமுள்ளதே; இந்தச் சீவனுக்கும் இதற்குப் பின்வரும் சீவனுக்கும் வாக்குத்தத்தமுள்ளதாகிய தேவபத்தி எவ்விதத்திலும் பிரயோசனமுள்ளதாய் இருக்கின்றதே.—9 இந்த வார்த்தை உண்மையாயும் மிகவும் அங்கிகரிக்கப்படுவதற்குப் பாத்திரமாயும் இருக்கின்றது. — 10 இதற்காக நாங்களும், எல்லா மனிதருக்கும், விசேஷமாக விசுவாசிகளுக்கும் இரட்சகராகிய சீவனுள்ள பராபரன்மேல் நம்பிக்கையை வைத்திருக்கிறபடியால், பிரயாசப்பட்டும் நிந்திக்கப்பட்டும் இருக்கிறோம். — 11 இவைகளை நீ கட்டளையிட்டுப் போதிப்பாயாக.

12 உன் வாலிபவயதைக்குறித்து எவனாகிலும் உன்னை அசட்டைபண்ணத்தக்கதாக நீ செய்யாமல், வார்த்தையிலேயும் நடக்கையிலேயும் அன்பிலேயும் ஆவியிலேயும் விசுவாசத்திலேயும் கற்பிலேயும் உன்னை விசுவாசிகளுக்குச் சட்டமாகக் காண்பிப்பாயாக.—13 நான் வருமளவும் வாசிக்கிறதற்கும் புத்திசொல்லுகிறதற்கும் போதிக்கிறதற்கும் சாக்கிரதையாய் இரு.—14 மூப்பர்கள் கூட்டம் உன்மேல் கைகளை வைத்தபொழுது தீர்க்கதரிசனத்தினாலே உனக்குக் கொடுக்கப்பட்ட வரத்திற்காக அசதியாய் இராதிருப்பாயாக. — 15 நீ தேறுகிறது யாவருக்கும் தோன்றும்படிக்கு இவைகளையே சிந்தித்துக்கொண்டு இவைகளிலே சாக்கிரதையாய் இருப்பாயாக. — 16 உனக்காகவும் உபதேசத்திற்காகவும் எச்சரிக்கையாய் இரு; இவைகளில் நிலைகொண்டிரு; அப்படிச் செய்தால் உன்னையும் உன்னிடத்தில் கேட்கிறவர்களையும் இரட்சித்துக்கொள்வாய்.

## ரு. அதிகாரம்.

மூப்பனை நீ கடினமாய்க் கடிந்துகொள்ளாமல் தகப்பனைப்போலவும், வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளுக்குச் சகோதரனைப்போலவும்,-2 பெரிய ஸ்திரிகளுக்குத் தாய்களைப்போலவும், வாலிபவயதுள்ள பெண்பிள்ளைகளுக்குச் சகோதரிகளைப்போலவும் மிகுந்த கற்போடே புத்திசொல்லுவாயாக.

3 மெய்யாய்க் கைம்பெண்களானவர்களைக் கனம்பண்ணு. — 4 ஒரு கைம்பெண்ணுக்குப் பிள்ளைகள் அல்லது பேரன் பேத்திகள் இருந்தால், அவர்கள் முதலாவது தங்கள் சொந்தக் குடும்பத்தைத் தேவபத்தியாய் விசாரித்து, பின்பு தங்கள் தாய்தகப்பன்மாருக்குப் பதில் நன்மைகளைச் செய்ய வழக்கம்பண்ணக்கடவர்கள்; அதுவே பராபரனுக்குமுன்பாக நன்மையாயும் பிரியமுள்ளதாயும் இருக்கின்றது.—5 தனித்திருக்கிற மெய்யான கைம்பெண் பராபரனை நம்பிக்கொண்டு, இரவும் பகலும் வேண்டுதல்களிலும் செபங்களிலும் தரித்திருப்பாள். — 6 சிற்றின்பத்தோடே வாழ்கிறவள் உயிரோடே செத்தவளாயிருக்கிறாள்.—7 அவர்கள் குற்றம் சாற்றப்படாதவர்களாய் இருக்கும்படிக்கு இவைகளைக் கட்டளையிடுவாயாக. — 8 தன்னைச் சேர்ந்தவர்களையும் விசேஷமாகத் தன் சமுசாரத்தையும் விசாரியாதிருக்கிறவனே விசுவாசத்தை மறுதலித்தவனும் அவிசுவாசியிலும் கெட்டவனும் இருக்கிறான்.

9 மேலும் எப்படிப்பட்ட கைம்பெண்ணைத் தெரிந்துகொண்டு வைக்கவேண்டுமென்றால், அறுபது வருஷத்துக்குக் கீழான வயதில்லாதவள், ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்தவள்.-10 பிள்ளைகளை வளர்த்தாள் என்றும், அந்நியரை உபசாரம்செய்தாள் என்றும், பரிசுத்தவான்களுடைய கால்களைக் கழுவினாள் என்றும், உபத்திரவப்படுகிறவர்களுக்கு உதவிசெய்தாள் என்றும், சகலவிதமான நற்கிரியைகளையும் நடப்பித்தாள் என்றும், இப்படிப்பட்ட நற்கிரியைகளைக்குறித்து நற்சாட்சிபெற்றிருக்கிறவள்: இப்படிப்பட்ட கைம்பெண்ணைத் தெரிந்துகொள்ளவேண்டும்.-11 வாலிபவயதுள்ள கைம்பெண்களைத் தெரிந்துகொள்ளாதிருப்பாயாக; என்னத்தினாலெனில், அவர்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய் லவுகீக ஆசைகொள்ளும்பொழுது விவாகம்பண்ண மனதாகி,—12 முதலில் இருந்த உண்மையைத் தள்ளினதால் குற்றத்தில் அகப்படுவார்கள்.—13 அதுவுமல்லாமல், அவர்கள் சோம்பற்காரிகளாகி, வீடுகள்தோறும் திரிய வழக்கம்பண்ணுவார்கள்; சோம்பற்காரிகளாய்மாத்திரமல்ல, பிதற்றுகிறவர்களாயும் தகாதகாரியங்களைப் பேசுகிற வீண் அலுவல்காரிகளாயும் இருப்பார்கள்.—14 இப்படிச் சிலர் இதற்குமுன்னே சாத்தானிடத்திற்குத் திரும்பினார்களே.—15 ஆகையால், வாலிபவயதுள்ள கைம்பெண்கள் விவாகம்பண்ணவும் பிள்ளைகளைப் பெறவும் வீட்டை விசாரிக்கவும் விரோதக்காரன் தூஷணிக்கிறதற்கு இடம் உண்டாக்காமலிருக்கவும் வேண்டுமென்று இருக்கிறேன். — 16 விசுவாசியாகிய ஒருவனுக்கு அல்லது ஒருத்திக்குக் கைம்பெண்கள் இருந்தால், அவர்கள் இவர்களுக்கு உதவிசெய்யக்கடவர்கள்; சபையார் மெய்யான கைம்பெண்களுக்கு உதவியாயிருக்கும்படிக்கு அந்தப் பாரம் அவர்கள்மேல் வைக்கக்கூடாது.

17 போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டா திருப்பாயாக என்றும், வேலையாள் கூலிக்குப் பாத்திரனாயிருக்கிறன் என்றும், வேதவாக்கியம் சொல்லுகிறபடியே,—18 (சபையை) நன்றாய் நடத்துகிற மூப்பர்களை, விசேஷமாகத் திவ்விய வசனத்தை உபதேசிக்கிறதில் பிரயாசப்படுகிற வர்களை இரட்டிப்பான கனத்திற்குப் பாத்திரராக எண்ணிக்கொள்ளவேண்டும்.

19 மூப்பனுக்கு விரோதமாக ஒருவன் பிராது பண்ணவந்தால், இரண்டு மூன்று சாட்சிகள் கூட இராவிட்டால், — 20 நீ அதை ஏற்றுக் கொள்ளக்கூடாது; மற்ற யாவருக்கும் பயம் உண்டாகும்படிக்கு, பாவம்செய்தவர்களை எல்லாச் சபையாருக்கும் முன்பாகக் கடிந்துகொள்வாயாக. — 21 நீ பட்சபாதத்தோடே ஒன்றும் செய்யாமல், மனதிலே தகாத தீர்ப்பில்லாமல் இவைகளைக் காத்து நடக்கும்படிக்குப் பராபரனுக்கும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கும் தெரிந்துகொள்ளப்பட்ட தூதருக்கும் முன்பாகக் கெட்டியாய்க் கட்டளையிடுகிறேன்.

22 எவன்மேலாகிலும் உன் கைகளை நீ சீக்கிரமாய் வைக்கக்கூடாது; மற்றவர்கள் செய்யும் பாவங்களுக்கு ஐக்கப்படாதிருப்பாயாக; உன்னைக் கற்புள்ளவனாகக் காத்துக்கொள்வாயாக.— 23 உன் இரைக்குடலுக்காகவும் உனக்கு அடிக்கடி வருகிற பலஈனங்களுக்காகவும், நீ இனிமேல் தண்ணீர் பானம்பண்ணமல், கொஞ்சம் திராட்சஇரசத்தைப் பானம்பண்.

24 சில மனிதருடைய பாவங்கள் தீர்ப்புச் செய்கிறதற்குமுன்னே வெளியரங்கமாயிருக்கும்; சிலருடைய (பாவங்கள்) பின்னே விளங்கும்.— 25 அதுபோல, சிலருடைய நற்கிரியைகளும் (உடனே) வெளியரங்கமாயிருக்கும்; அப்படி இராதவைகளும் (நெடுக) மறைந்திருக்கமாட்டாது.

## சூ. அதிகாரம்.

பராபரனுடைய நாமமும் உபதேசமும் தூஷணிக்கப்படாதபடிக்கு அடிமைத்தனத்திற்கு உட்பட்டிருக்கிற வேலைக்காரர் தங்கள் எசமான்களைச் சகலமான கனத்திற்கும் பாத்திரரென்று எண்ணிக்கொள்ளக்கடவர்கள்.—2 விசுவாசிகளாகிய நாயன்மார்களை உடையவர்களும் அவர்கள் சகோதரரானதினாலே, அவர்களை அசட்டைபண்ணாமல், வேலையின் நன்மைகளைப் பெற்றுக்கொள்ளுகிற அவர்கள் விசுவாசிகளுமாய்; அன்புள்ளவர்களுமாய் இருக்கிறதினாலே அவர்களுக்கு அதிகமாய் ஊழியம்செய்யக்கடவர்கள்; இந்தப்படியே போதித்துப் புத்திசொல்வாயாக.

3 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் ஆரோக்கியமான வசனங்களுக்கும் மெய்த்தேவபத்திக்கு ஏற்ற உபதேசத்திற்கும் இசைவாயிராமல், — 4 வேறுவிதமாய்ப் போதிக்கிறவன் இறுமாப்புள்ளவனுமாய், ஒன்றையும் அறியாதவனுமாய், தருக்கங்களும் வாக்குவாதங்களுமாகிய நோய்கொண்டவனுமாய் இருக்கிறன்; அவைகளாலே பொறுமையும், சண்டையும், தூஷணங்களும், பொல்லாத சமுசயங்களும்,—5 கெட்ட சிந்தையுள்ளவர்களாயும் சத்தியமில்லாதவர்களாயும் மெய்த்தேவபத்தி இலாபத்தை வருவிக்கிறதென்று எண்ணுகிறவர்களாயும் இருக்கிற மனிதர்களாலே பிறக்கப்படும் மாறுபாடான தர்க்கங்களும் வருகின்றன; அவர்களுக்கு விலகுவாயாக.

6 போதுமென்கிற மனதுடனேகூட மெய்த்தேவபத்தியே மிகுந்த இலாபமுள்ளது.—7 உலகத்திலே நாம் ஒன்றையும் கொண்டுவந்ததும் இல்லை; இதினின்று நாம் ஒன்றையும் கொண்டு போவதும் இல்லை என்று வெளியரங்கமாய் இருக்கின்றது.—8 அப்படியிருக்க, அன்னவஸ்திரம் நமக்கு உண்டாயிருக்கையில், அது போதுமென்று எண்ணிக்கொள்ளக்கடவோம்.—9 ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்களே, சோதனையிலேயும் கண்ணியிலேயும், மனிதரை மிகவும் கெடுத்து அழிக்கிறதற்கு ஏதுவாயிருக்கிற அநேக புத்தியீனமும் சேதமுமான இச்சைகளிலேயும் விழுகிறார்கள்.—10 பண இச்சை தீமை யாவற்றிற்கும் வேராயிருக்கின்றது; சிலர் அதை இச்சித்து விசுவாசமார்க்கத்தைவிட்டு வழுவி, அநேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்தியிருக்கிறார்கள்.

11 பராபரனுடைய மனிதனாகிய நீ இவைகளுக்கு விலகியோடி, நீதியையும் மெய்த்தேவபத்தியையும் விசுவாசத்தையும் அன்பையும் பொறுமையையும் சாந்தத்தையும் தொடர்ந்துகொள்வாயாக. — 12 விசுவாசத்தின் நற்போராட்டம் பண், நித்தியசீவனைப் பிடித்துக்கொள்; அதற்காகவே நீ அழைக்கப்பட்டிருக்கிறதுமல்லாமல் அநேக சாட்சிகளுக்குமுன்பாக நல்ல அறிக்கையைப்பண்ணியும் இருக்கிறாய்.—13 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து பிரசன்னமாகும்வரைக்கும், நீ இந்தக் கற்பனையை மாசில்லாமலும் குற்றமில்லாமலும் கைக்கொள்ளும்படிக்கு, — 14 எல்லாவற்றையும் உயிரோடிருக்கச்செய்கிற பராபரனுடைய சந்நிதானத்திலேயும், பொந்தியு பிலாத்துவின்முன் நின்று நல்ல அறிக்கையைச் சாட்சியாகப்பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலேயும் உனக்குக் கட்டளையிடுகிறேன்.—15 அந்தப் பிரசன்னத்தைப் பாக்கியமுள்ள ஒருவரேயான சுயாதிபதியுமாய், இராசாக்களின் இராசனுமாய், கர்த்தாக்களின் கர்த்தாவுமாய், — 16 ஒருவராய், சாவாமையுள்ளவருமாய், ஒருவராலும் சேரக்கூடாத ஒளியிலே வாசமாயிருக்கிறவருமாய், மனிதரில் ஒருவராலும் காணப்படாமலும் ஒருக்காலும் காணப்படக்கூடா

மலும் இருக்கிறவர் தம்முடைய காலங்களில் காண்பிப்பார்; அவருக்கே கனமும் வல்லமை யும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.— ஆமன்.
17 அன்றியும் இவ்வுலகத்திலே ஐசுவரிய முள்ளவர்கள் இறுமாப்பான சிந்தையுள்ளவர்க ளாய் இராமலும், நிச்சயமில்லாத ஐசுவரியத்தின் மேல் நம்பிக்கையாயிராமலும், நாம் அநுபவிக்கி றதற்குச் சகலவித நன்மைகளையும் நமக்குச் சம் பூரணமாய்க் கொடுக்கிற சீவனையுடைய பரா பரன்மேலே நம்பிக்கையாயிருக்கும்படியாயும், —
18 நன்மைகளைச்செய்து நற்கிரியைகளில் ஐசு வரியவான்களாகும்படியாயும் மற்றவர்களுக்குக் கொடுக்க மனப்பூர்வமாயிருந்து உதாரகுணமுள் ளவர்களாய், — 19 நித்தியசீவனைப் பிடித்துக் கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல அஸ்திபாரத்தைப் பொக்கிஷமாக வைக் கும்படியாயும் அவர்களுக்குக் கட்டளையிடுவா யாக.
20 ஓ தீமோத்தேயுவே, உனக்கு ஒப்புவிக் கப்பட்டதை நீ காத்துக்கொண்டு, லவுகீகமும் வீணுமான பேச்சுகளுக்கும், கல்வியென்று பொய்யாய்ச் சொல்லப்பட்டிருக்கிற தர்க்கத்திற் கும் விலகுவாயாக.–21 சிலர் அதைப் பாராட்டி, விசுவாசத்தைவிட்டு வழுவிப்போனார்கள்; கிரு பை உன்னோடே இருக்கக்கடவது.—ஆமன்.

---

## அப்போஸ்தலனாகிய பவுல்

# தீமோத்தேயுவுக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

கிறிஸ்து இயேசுவினால் வருகிற சீவனைக்குறித் துச் சொல்லிய வாக்குத்தத்தத்தின்படியே பரா பரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்து வின் அப்போஸ்தலனாகிய பவுல்,—2 அன்புள்ள குமாரனாகிய தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதா வது: பிதாவாகிய பராபரனாலும் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலும் கிருபை யும் இரக்கமும் சமாதானமும் உனக்கு உண்டா கக்கடவது.
3 என் முன்னோர்கள் முதற்கொண்டு சுத்த மான மனதோடே பராபரனுக்கு ஆராதனைசெய் கிற நான் இரவும்பகலும் இடைவிடாமல் என் செபங்களில் உன்னை நினைத்து, — 4 உன் கண் ணீரை ஞாபகம்பண்ணிச் சந்தோஷத்தால் நிறை யப்படும்படிக்கு உன்னைக் காணவேண்டுமென்று மிகவும் விரும்பி, — 5 உன்னிலுள்ள உண்மை யான விசுவாசத்தை ஞாபகப்படுத்தி, பராபர னுக்குத் தோத்திரம்செலுத்துகிறேன்; அப்படிப் பட்ட விசுவாசம் முற்காலத்தில் உன் பாட்டியா கிய லோவிசாளுக்குள்ளும் உன் தாயாகிய ஐனீக் கேயாளுக்குள்ளும் வாசமாயிருந்தது; உனக்குள் ளும் அப்படியே வாசமாயிருக்கிறதென்று நிச்சய மாய் அறிந்திருக்கிறேன்.
6 இதுநிமித்தமாக நான் உன்மேல் என் கை களை வைத்ததினாலே உனக்கு உண்டான திவ் விய வரத்தை நீ தீபவளர்ச்சியைப்போல எழுப் பும்படிக்கு உனக்கு ஞாபகப்படுத்துகிறேன்.–
7 பயமுள்ள ஆவியையல்ல, பெலனும் அன்பும் சொஸ்தபுத்தியுமுள்ள ஆவியைப் பராபரன் நமக் குக் கொடுத்தாரே.
8 ஆகையால் நம்முடைய கர்த்தரைக்குறித் துச் சொல்லவேண்டிய சாட்சிக்காகவும், அவர் நிமித்தம் கட்டப்பட்டிருகிற எனக்காகவும் நீ வெட்கப்படாமல், தேவபெலனாலே சுவிசேஷத் திற்காக, (என்னோடே) கூடத் தீமையை அநு பவித்துக்கொள்வாயாக. — 9 அவர் நம்முடைய கிரியைகளின்நிமித்தமல்ல, தம்முடைய முதல் யோசனையின்நிமித்தமும், லோகத்தோற்றத்திற்கு முன்னே கிறிஸ்து இயேசுவின்மூலமாய் நமக்குக் கொடுத்த கிருபையின்நிமித்தமும், நமக்கு இரட் சிப்பை உண்டாக்கி, (அதினாலே) பரிசுத்தவா ன்களாக நம்மை அழைத்தார்.—10 நம்முடைய இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்து பிரசன்னமான தினாலே அந்தக் கிருபை இப்பொழுது வெளிப் படுத்தப்பட்டிருக்கின்றது; அவர் மரணத்தை நிவிர்த்திசெய்து, (தமது) சுவிசேஷத்தினாலே சீவனையும் அழியாமையையும் தெரியப்படுத்தி னார். — 11 அதைப் புறத்தேசத்தாருக்கு (அறி விக்கும்படி) பிரசங்கியாகவும் அப்போஸ்தலனாக வும் போதகனாகவும் வைக்கப்பட்டேன்.–12 அத ற்காக இந்தப் பாடுகளையும் அநுபவிக்கிறேன்; அப்படியிருந்தும், இன்னாரை விசுவாசித்திருக்கி றேனென்று அறிந்திருக்கிறதால் நான் வெட் கப்படுகிறதில்லை; மேலும், எனக்கு ஒப்புவிக்கப்

பட்டதை அவர் அந்த நாள்வரையில் காத்துக் கொள்ள வல்லமையுள்ளவராய் இருக்கிறாரென்று நிச்சயமாயிருக்கிறேன்.

13 நீ என்னிடத்தில் கேட்டறிந்த ஆரோக்கியமான வசனங்களின் சட்டத்தை இயேசுக்கிறிஸ்துவிலுள்ள விசுவாசத்தோடும் அன்போடும் பற்றிக்கொள்வாயாக.—14 உனக்கு ஒப்புவிக்கப்பட்ட நன்மையை நம்மிடத்தில் வாசமாயிருக்கிற பரிசுத்த ஆவியினாலே காத்துக்கொள்வாயாக; நீ அறிந்திருக்கிறபடி ஆசியா நாட்டிலுள்ள யாவரும் என்னைவிட்டு விலகிப்போனார்கள்.

15 அவர்களில் புகெல்லும், எற்மோகெனேயும் இருக்கிறார்கள். — 16 ஒனேசிப்போருவின் குடும்பத்திற்குக் கர்த்தர் இரக்கத்தை அளிக்கக்கடவர்; என்னத்திற்காகவென்றால், அவன் அடிக்கடி என்னைச் சவுக்கியப்படுத்தினதுமல்லாமல், என் சங்கிலியைக்குறித்து வெட்கப்படாமல்,—17 நான் உரோமையில் வந்திருந்தபொழுது மிகவும் சாக்கிரதையாய் என்னைத் தேடிக் கண்டான்.–18 அந்தநாளிலே அவன் கர்த்தரிடத்தில் இரக்கம் கண்டு அடையும்படி கர்த்தர் அவனுக்கு அநுக்கிரகம்செய்வாராக; மேலும், எபேசி ஊரிலேயும் அவன் எனக்கு மிகவும் ஊழியம் செய்தானென்று நீ நன்றாய் அறிந்திருக்கிறாய்.

## உ. அதிகாரம்.

ஆனபடியினாலே என் குமாரனே, நீ கிறிஸ்து இயேசுவிலுள்ள கிருபையினாலே பலத்துக்கொண்டு, — 2 அநேக சாட்சிகளுக்குமுன்பாக நீ என்னிடத்தில் கேட்டவைகளை மற்றவர்களுக்கு உபதேசம்பண்ணத் தகுதியான உண்மையுள்ள மனிதருக்கு ஒப்புவிப்பாயாக.—3 அந்தப்படி நீயும் இயேசுக்கிறிஸ்துவுக்கு நற்சேவகனாய்த் தன்பத்தைச் சகித்துக்கொள். — 4 போர்ச்சேவகம் பண்ணுகிற எவனும் தன்னைச் சேவகம் எழுதிக்கொண்டவனுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கு, இச்சீவனுக்கு ஏற்ற (வேறு) தொழில்களில் சிக்கிக்கொள்ளமாட்டானே.–5 அன்றியும், போர்ச்சாலையிலே ஒருவன் போராடினாலும், நியாயமானபடி போராடாவிட்டால் கிரீடத்தைத் தரிக்கமாட்டானே.–6 (அன்றியும்) பயிர்செய்கிறவன் பலன் அடைகிறதற்குமுன்னே பிரயாசப்படவேண்டுமே.—7 நான் சொல்லுகிற இவைகளைச் சிந்தித்துக்கொள்வாயாக; கர்த்தர் எல்லாவற்றிலும் உனக்குப் புத்திதரக்கடவர்.

8 என் சுவிசேஷத்தின்படியே தாவீதின் சந்ததியாய் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிற இயேசுக்கிறிஸ்துவை நினைத்துக்கொள்ளக்கடவாய்.— 9 இந்தச் சுவிசேஷத்திற்காக நான் பாதகனைப்போலக் கட்டப்பட்டுத் துன்பத்தைச் சகிக்கிறேன். — 10 பராபரனுடைய வசனம்மாத்திரம் கட்டப்படமாட்டாது; இதின்நிமித்தமாகத் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும் கிறிஸ்து இயேசுவினால் வருகிற இரட்சிப்பையும் நித்திய மகிமையையும் அடையும்படிக்குச் சகலத்தையும் அவர்களுக்காகச் சகித்துக்கொண்டுவருகிறேன்; இந்த வார்த்தை உண்மையுள்ளது. — 11 எப்படியெனில் நாம் (அவரோடேகூட) மரித்தால் (அவரோடேகூடப்) பிழைத்தும் இருப்போம். — 12 நாம் (அவரோடேகூடப்) பொறுமையாய்ப் பாடுபட்டால் (அவரோடேகூட) இராசரீகம் பண்ணியும் இருப்போம்; அவரை நாம் மறுதலித்தால் நம்மை அவரும் மறுதலிப்பார்.–13 நாம் விசுவாசியாமல் இருந்தாலும் அவர் உண்மையுள்ளவராயிருப்பார்; அவர் தம்மைத்தாமே மறுதலிக்கமாட்டார்.

14 இவைகளை நீ அவர்களுக்கு ஞாபகப்படுத்தி, எவ்வளவாகிலும் பிரயோசனம் அல்லாததுமாய்க் கேட்கிறவர்களைக் கவிழ்க்கிறதற்கு ஏதுவுமாய் இருக்கிற வாக்குவாதம்பண்ணுதிருக்கும்படிக்கு, கர்த்தருக்குமுன்பாக அவர்களுக்கு ஸ்திரமான சாட்சியாய் எச்சரிப்பாயாக.—15 நீ வெட்கப்படாமல் சத்திய வசனத்தை நிதானமாய்ப் பகுத்துப் போதிக்கிற உத்தம ஊழியக்காரனாக உன்னைப் பராபரனுக்குமுன்பாக நிறுத்தும்படி சாக்கிரதையாய் இருப்பாயாக. — 16 லவுகீக வீணான பேச்சுகளுக்கே தடைசெய், (அவைகளால்) அவர்கள் அதிசமாய் அவபத்தியுள்ளவர்கள் ஆகிறார்களே. — 17 அவர்களுடைய பேச்சுப் பிளவையைப்போலத் தின்னும்; உமனேயும், பிலேத்தும் அப்படிப்பட்டவர்கள்.–18 அவர்கள் சத்தியத்தைவிட்டு விலகி, உயிரோடெழுப்புதல் சம்பவித்தாயிற்றென்று போதித்து, சிலருடைய விசுவாசத்தைக் கவிழ்த்துப்போட்டார்கள்.

19 ஆகிலும் பராபரனுடைய ஸ்திரமான அஸ்திபாரம் நிலைநிற்கின்றது; கர்த்தர் தம்முடையவர்களை அறிவிப்பாரென்றும், கிறிஸ்துவின் நாமத்தைச் சொல்லுகிறவன் எவனோ, அவன் அநியாயத்தைவிட்டு விலகக்கடவன் என்றும் அதற்கு முத்திரையாயிருக்கிறது.–20 ஒரு பெரிய வீட்டிலே பொன் வெள்ளிப் பாத்திரங்கள்மாத்திரமல்ல, மரமும் மண்ணுமான பாத்திரங்களும் உண்டு, அவைகளில் சில கனத்திற்கும் சில கனஈனத்திற்கும் ஆனவைகளாயிருக்கின்றன.–21 ஆகையால் ஒருவன் மேற்சொல்லியவைகளை விட்டுத் தன்னைச் சுத்திகரித்தால் அவன் கனத்திற்கு ஏற்றதாயும் பரிசுத்தமாக்கப்பட்டதாயும் எசமானுக்கு மிகுந்த பிரயோசனமாயும் எந்த நற்கிரியைக்கும் எத்தனமாக்கப்பட்டதாயும் இருக்கிற பாத்திரமாயிருப்பான்.

22 ஆதலால் வாலிபவயதுக்குரிய இச்சைகளுக்கு நீ விலகி ஓடி, சுத்தமான இருதயத்தோடே கர்த்தாவைத் தொழுதுகொள்ளுகிறவர்களுடனேகூட நீதியையும், விசுவாசத்தையும், அன்

பையும், சமாதானத்தையும், பின்தொடர்ந்து கொள்.–23 அன்றியும் புத்தியீனமும் அறிவீனமுமான தர்க்கங்கள், சண்டைகளைப் பிறப்பிக்கிறவைகள் என்று நீ அறிந்து அவைகளை அகற்றுவாயாக.—24 கர்த்தருடைய ஊழியக்காரன் சண்டைபண்ணுமல் எல்லாருக்கும் சாந்தமுள்ளவனும், போதிக்கத் தகுதியானவனும், தீமையைப் பொறுமையாய்ச் சகிக்கிறவனும் இருந்து,—25 எதிர்பேசுகிறவர்களுக்குச் சாந்தமாய்ப் புத்திசொல்லவேண்டுமே; அப்பொழுது தன்னுடைய இஷ்டப்படி செய்யப் பிசாசினுல் பிடிக்கப்பட்டிருக்கிற அவர்கள் சத்தியத்தை அறிக்கையிடுதற்கு ஏற்ற மனஸ்தாபகுணத்தை அடைந்து,–26 அவனுடைய வலையில்நின்று நீங்கி, தெளிந்த புத்தியுள்ளவர்களாகும்படிக்கு, பராபரன் ஒருவேளை அவர்களுக்கு அநுக்கிரகம் செய்வார்.

## ௩. அதிகாரம்.

மேலும் கடைசி நாட்களிலே கொடிய காலங்கள் வருமென்று அறிவாயாக.—2 எப்படியெனில், மனிதர்கள் தங்களை (மாத்திரம்) சிநேகிக்கிறவர்களாயும், பணத்தில் பிரியராயும், வீம்புக்காரராயும், அகந்தையுள்ளவர்களாயும், தூஷணிக்கிறவர்களாயும், தாய்தகப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களாயும், நன்றியறியாதவர்களாயும், பரிசுத்தம் இல்லாதவர்களாயும்,—3 சுபாவ அன்பில்லாதவர்களாயும், ஒப்புரவாக மனதில்லாதவர்களாயும், பொய்யாய்க் குற்றஞ்சாற்றுகிறவர்களாயும், இச்சையை அடக்காதவர்களாயும், குரூரராயும், நல்லோருக்குப் பகைஞராயும்,–4 துரோகிகளாயும், துணிவுக்காரராயும், இறுமாப்புள்ளவர்களாயும், பராபரனிலும் செல்வத்தை விரும்புகிறவர்களாயும், தேவபத்தியின் ரூபத்தைத் தரித்து,—5 அதின் பலனை மறுதலிக்கிறவர்களாயும் இருப்பார்கள்.–6 இப்படிப்பட்டவர்களுக்கு விலகுவாயாக; இப்படிப்பட்டவர்களே பாவங்களால் நிறைந்தும், பலபல இச்சைகளால் இழுக்கப்பட்டும்,—7 எப்பொழுதும் படித்தாலும், ஒருக்காலும் சத்தியத்தை அறியாமலும் இருக்கிற புத்தியீனமுள்ள பெண்பிள்ளைகளுடைய வீடுகளில் நுழைந்து, அவர்களைச் சிறையாக்குவார்கள்.—8 இயன்னேயும் இயம்பிரேயும் மோசேயுக்கு விரோதமாய் நின்றதுபோல, இவர்களும் சத்தியத்திற்கு விரோதமாயிருக்கிருர்கள்; அவர்கள் முழுவதும் கெட்டபுத்தியை உடையவர்களாயும் விசுவாசத்தை வகையறுக்கத் தகுதியில்லாதவர்களாயும் இருக்கிறவர்கள்.—9 அவர்கள், அதிகமாய்ப் பெருகுவதில்லை; அவ்விருவருடைய புத்தியீனமும் வெளிப்பட்டதுபோல, இவர்களுடையதும் எல்லாருக்கும் வெளியரங்கமாகுமே.

10 நீயே என்னுடைய போதகத்தையும், நடக்கையையும், மனயோசனையையும், விசுவாசத்தையும், நீடிய சாந்தத்தையும், அன்பையும், பொறுமையையும், — 11 அந்தியோகூர், இக்கோனியூர், லிஸ்திராஊர், இவ்விடங்களிலே எனக்கு உண்டான துன்பங்களையும் பாடுகளையும் நன்றுய் அறிந்துகொண்டிருக்கிறுய்; இப்படிப்பட்ட துன்பங்களைச் சகித்தேன்; அவைகள் எல்லாவற்றில்நின்றும் கர்த்தர் என்னை இழுத்து இரட்சித்தார் —12 அன்றியும், கிறிஸ்து இயேசுவைப் பற்றித் தேவபத்தியாய்ச் சீவனம்பண்ண மனதாயிருக்கிற யாவரும் துன்பப்படுவார்கள். —13 பொல்லாத மனிதரும் வஞ்சகருமானவர்கள் மாத்திரம் (மற்றவர்களை) வஞ்சித்தும் வஞ்சிக்கப்பட்டும் இருந்தும், மேன்மேலும் கேடுள்ளவர்களாவார்கள்.

14 நீ கற்றுக்கொண்டது எதுவோ, நீ நிச்சயிக்கப்பட்டது எதுவோ, அதிலே நிலைநிற்பாயாக; உனக்குப் போதகம் செய்தவன் இன்னுனென்று நீ அறிந்திருக்கிறதுமல்லாமல்,—15 இயேசுக்கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினுலே இரட்சிப்புக்கு ஏற்ற ஞானத்தை உனக்குக் கொடுக்கத் தகுதியான வேத எழுத்துக்களை நீ சிறுவயதுமுதற்கொண்டு அறிந்தவனென்றும் அறிந்திருக்கிறுயே. — 16 வேதவாக்கியங்கள் எல்லாம் தேவ ஆவியினுல் உண்டானவைகளுமாய், பராபரனுடைய மனிதன் நிறைந்த நன்மையுள்ளவனும் எந்த நற்கிரியையும் செய்ய மிகுந்த தகுதியுள்ளவனும் ஆகும்பொருட்டாய்,–17 உபதேசம் பண்ணுதற்கும், கடிந்துகொள்ளுதற்கும், செம்மையாக்குதற்கும், நீதியைப் படிப்பிக்கிறதற்கும், பிரயோசனமானவைகளுமாய் இருக்கின்றன.

## ௪. அதிகாரம்.

ஆனபடியினுலே பராபரனுக்கு முன்பாகவும், தாம் பிரசன்னமாகித் தமது இராச்சியத்தின் (மகிமையை) வெளிப்படுத்தும் காலத்திலே உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தவர்களுக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குமுன்பாகவும்,—2 நான் உனக்குச் சாட்சியாய்க் கட்டளையிடுகிறது என்னவெனில், சாவகாசமாயிருந்தாலும் இல்லாதிருந்தாலும் அந்த வசனத்தை இடைவிடாமல் பிரசங்கம்பண்ணி, எல்லாவிதமான நீடிய சாந்தமாயும் உபதேசத்திற்கு ஏற்றவிதமாயும் மெய்யை விளங்கச்செய்து, கடிந்துகொண்டு புத்திசொல்லுவாயாக.–3 என்னத்தினுலெனில் அவர்கள் ஆரோக்கியமான உபதேசத்தைப் பொறுக்க மனதில்லாமல், செவிக்கு இன்பமானதை விரும்பி, தங்கள் சுய இச்சைகளுக்குத்தக்கதாக,—4 தங்களுக்குப் போதகரைக் கூட்டிவைத்துச் சத்தியத்திற்குச் செவியை விலக்கி, கட்டுக்கதைகளைச் சாரும் காலம் வரும். — 5 நீமாத்திரம் எல்லாவற்றிலே

யும் தெளிந்த புத்தியுள்ளவனுயிருந்து, தீமையைச் சகித்துச் சுவிசேஷனுடைய வேலையைச் செய்து, உன் ஊழியத்தை நிறைவேற்றுவாயாக.

6 நானே பானபலியாக வார்க்கப்பட எத்தனமாயிருக்கிறேன்; நான் இதைவிட்டுப் போகிறதற்குக் காலம் சமீபமாயிருக்கின்றது.—7 நல்ல போராட்டத்தைப் பண்ணியிருக்கிறேன்; ஓட்டத்தை முடித்திருக்கிறேன்; விசுவாசத்தைக் காத்துக்கொண்டிருக்கிறேன்.–8 இதுமுதல் நீதியென்னும் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது; நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளில் அதை எனக்குமாத்திரம் அல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பின யாவருக்கும் தந்தருளுவார்.

9 நீ சீக்கிரமாய் என்னிடத்தில் வரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக. — 10 தேமா என்பவன் இப்பிரபஞ்சத்தின்மேல் ஆசைவைத்து, என்னைவிட்டுத் தெசலோனிக்கே ஊருக்குப் போனுன்; கிரேஸ்கே என்பவன் கலாத்திநாட்டிற்கும், தீத்து என்பவன் தலுமாத்திநாட்டிற்கும் போனுர்கள். — 11 லூக்கா என்பவன்மாத்திரம் என்னேடே இருக்கிறுன்; மாற்கு என்பவன் என் ஊழியத்திலே எனக்குப் பிரயோசனமாய் இருக்கிறபடியினுலே அவனைக் கூட்டிக்கொண்டுவா. — 12 தீகிக்கு என்பவனை நான் எபேசுஊருக்கு அனுப்பினேன்.—13 துரோயா பட்டணத்திலுள்ள கற்பென்பவனிடத்திலே நான் வைத்துவந்த மேல்அங்கியையும் புஸ்தகங்களையும் விசேஷமாகத் தோற்காகிதங்களையும் நீ வருகிறபொழுது எடுத்துக்கொண்டுவா.

14 கன்னுனுகிய அலேக்சந்தர் எனக்கு மிகுந்த தீமைகளைச் செய்தான்; அவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாகக் கர்த்தர் அவனுக்குப் பதில் கொடுக்கக்கடவர்.—15 நம்முடைய வார்த்தைகளுக்கு அவன் மிகவும் விரோதித்தபடியால், நீயும் அவனைக்குறித்து எச்சரிக்கையாய் இருப்பாயாக.

16 நான் முதலிலே எனக்காக உத்தரவுசொல்லி நின்றபொழுது, ஒருவனும் என் பங்கில் இராமல் யாவரும் என்னை விட்டார்கள்; அது அவர்களுக்குக் (குற்றமாக) எண்ணப்படாதிருப்பதாக.—17 (திவ்விய வசனம்) என்னுலே சம்பூரணமாய்ப் பிரசங்கிக்கப்படத்தக்கதாகவும், புறத்தேசத்தார் யாவரும் அதைக் கேட்கத்தக்கதாகவும் கர்த்தர்மாத்திரம் என் பங்கிலிருந்து என்னைப் பலப்படுத்தினுர்; இப்படி நான் சிங்கத்தின் வாயிலிருந்து இழுக்கப்பட்டேன். — 18 மேலும் மற்றெந்தப் பொல்லாத கிரியையில்நின்றும் கர்த்தர் என்னை இழுத்துத் தமது பரமஇராச்சியத்தில் பிரவேசிக்கப்பண்ணி இரட்சிப்பார்; அவருக்கு என்றென்றைக்கும் துதியுண்டாவதாக.—ஆமென்.

19 பிரிஸ்காளுக்கும், அக்கில்லாவுக்கும், ஒனேசிப்போருவின் குடும்பத்தாருக்கும் வாழ்த்துதல் செய்கிறேன். — 20 எரஸ்து என்பவன் கொரிந்துபட்டணத்திலே தரித்திருந்தான்; திரோப்பிமு என்பவனை மீலேத்துப் பட்டணத்திலே வியாதிப்பட்டவனுக விட்டுவந்தேன். — 21 மாரிகாலத்திற்கு முன்னே நீ இங்கே வந்து சேரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக; ஐபூலுவும், புதேஞ்சும், இலீனுவும், கல்வுதியாளும், மற்றெல்லாச் சகோதரரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறுர்கள்.

22 கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உன் ஆவியுடனே இருக்கக்கடவர்; கிருபை உங்களோடே இருப்பதாக.—ஆமென்.

---

## அப்போஸ்தலனுகிய பவுல்

# தீத்துவுக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

பொய்யுரையாத பராபரன் இவ்வுலக காலங்களுக்குமுன்னே நித்தியசீவனைக்குறித்து வாக்குத்தத்தம்பண்ணி, — 2 ஏற்ற காலங்களிலே நம்முடைய தேவனுகிய இரட்சகருடைய கட்டளையின்படி எனக்கு ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கத்தினுலே தமது வார்த்தையை வெளிப்படுத்தினுரே.—3 அந்த நித்தியசீவனைக்குறித்து நம்பிக்கை உண்டாக்கத்தக்கதாகத் தேவபத்திக்கு ஏதுவான சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும் தேவனுல் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு உண்டாகும்படிக்கு ஏதுவாய்ப் பராபரனுடைய ஊழியக்காரனுமாய் இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனுமாய் இருக்கிற பவுல்,—4 பொதுவான விசுவாசத்தினுலே எனக்கு உத்தம குமாரனுகிய தீத்துவுக்கு எழுதுகிறதாவது: பிதாவாகிய பராபரனும், நம்முடைய இரட்சகரும் கர்த்தரு

மாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உனக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.

5 நான் உனக்குக் கட்டளையிட்டபடி நீ கிரேத்தைத்தீவிலே இதுவரைக்கும் குறைவாய் இருக்கிறவைகளைச் செம்மைப்படுத்திப் பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கு உன்னை விட்டுவந்தேனே. — 6 குற்றமில்லாதவனுமாய், ஒரே மனைவிக்குப் புருஷனுமாய்க் கெட்டமார்க்கரென்னும் குற்றமில்லாமையும், கீழ்ப்படிதலும், விசுவாசமும் உள்ள பிள்ளைகளை உடையவனுமாய் ஒருவன் இருந்தால், (அவனை வைக்கலாம்). கண்காணியானவன் பராபரனுடைய உக்கிராணக்காரனுக்கு ஏற்றதாகக் குற்றஞ் சாற்றப்படாதவனுமாய், — 7 தன் இஷ்டப்படி (மாத்திரம்) செய்ய மனதில்லாதவனுமாய், கடுஞ்சினமில்லாதவனுமாய், பழஇரசத்தை மிகவும் விரும்பாதவனுமாய், அடிக்கிறவனுயிராதவனுமாய், அவலட்சணமானவிதமாய் ஆதாயத்தைத் தேடாதவனுமாய், — 8 அந்நியருக்கு உபசாரஞ்செய்கிறவனுமாய், நல்லோர்மேல் பிரியமுள்ளவனுமாய், விவேகமும் நீதியும் பரிசுத்தமும் இச்சையடக்கமும் உள்ளவனுமாய், — 9 ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்தி சொல்லி எதிர்பேசுகிறவர்களுக்கு மெய்யறிவைக்கொடுக்கத் திராணியுள்ளவனாய் இருக்கும்படிக்குத் தான் போதிக்கப்பட்டதற்கேற்ற உண்மையான உபதேசத்தை நன்றாய்ப் பற்றிக்கொள்ளுகிறவனுமாய் இருக்கவேண்டுமே.

10 என்னத்திற்காகவென்றால் அநேகர், விசேஷமாக விருத்தசேதனத்தையுடையவர்கள், (சத்தியத்திற்குக்) கீழ்ப்படியாதவர்களுமாய், வீணானவைகளைப் பேசுகிறவர்களுமாய் மனதை வஞ்சிக்கிறவர்களுமாய் இருக்கிறார்கள்.–11 அவர்களுடைய வாயை அடக்கிப்போடவேண்டுமே; அவர்கள் அவலட்சணமான ஆதாயத்திற்காகத் தகாதவைகளை உபதேசித்து, முழுக்குடும்பங்களையும் கவிழ்க்கிறார்கள்.—12 அவர்களில் ஒருவனாகிய தீர்க்கதரிசியானவன்தானே, கிரேத்தைத்தீவார் எப்பொழுதும் பொய்யருமாய், துஷ்டமிருகங்களுமாய், சோம்பலுள்ள தேகிகளுமாய் இருக்கிறார்கள் என்று சொன்னான்.–13 அந்தச் சாட்சி மெய்தான்; அது முகாந்தரமாக, அவர்கள் விசுவாசத்திலே ஆரோக்கியம் அடையும்படிக்கும், யூதருடைய கட்டுக்கதைகளுக்கும் சத்தியத்தை விட்டு விலகுகிற மனிதருடைய கற்பனைகளுக்கும் செவிகொடாதிருக்கும்படிக்கும், — 14 நீ அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்துகொள்வாயாக.—15 சுத்தமுள்ளவர்களுக்குச் சகலமும் சுத்தமாயிருக்கும்; அழுக்கும் அவிசுவாசமும் உள்ளவர்களுக்குமாத்திரம் ஒன்றும் சுத்தமாயிருக்கமாட்டாது; அவர்களுடைய புத்தியும், மனச்சாட்சியும் அழுக்காயிருக்கிறதே. — 16 அவர்கள் பராபரனை அறிகிறோமென்று சொல்லியும், தங்கள் கிரியைகளால் அதை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களாயும், கீழ்ப்படியாதவர்களாயும், எந்த நற்கிரியையையும் வகையறுக்கத் தெரியாதவர்களாயும் இருக்கிறார்களே.

## உ. அதிகாரம்.

நீயே ஆரோக்கியமான உபதேசத்திற்கு ஏற்றவைகளைப் பேசிக்கொள்வாயாக. — 2 முதிர்ந்த வயதுள்ள புருஷர்கள் தெளிந்த புத்தியுள்ளவர்களாயும், யோக்கியராயும், விவேகிகளாயும், விசுவாசத்திலும் அன்பிலும் பொறுமையிலும் ஆரோக்கியமுள்ளவர்களாயும் இருக்கும்படி (போதிப்பாயாக).—3 அப்படிப்போல முதிர்ந்தவயதுள்ள ஸ்திரிகளும் பரிசுத்தருக்கு ஏற்றவிதமாய் நடக்கிறவர்களாயும், பொய்யாய்க் குற்றஞ்சாற்றாதவர்களாயும் மிகுந்த திராட்சஇரசத்தைக் குடியாதவர்களாயும்,—4 பராபரனுடைய வசனம் தூஷணிக்கப்படாதபடிக்கு வாலிபஸ்திரிகள் தங்கள் புருஷரையும் பிள்ளைகளையும் சிநேகிக்கிறவர்களுமாய்,– 5 விவேகிகளுமாய், கற்புள்ளவர்களுமாய், வீட்டில் தரித்திருக்கிறவர்களுமாய், நல்லவர்களுமாய், தங்கள் புருஷருக்குக் கீழ்ப்படிகிறவர்களுமாய் இருக்கும்படி அவர்களுக்குப் புத்திசொல்லத்தக்க நற்போதகிகளாயும் இருக்கும்படிக்குப் (போதிப்பாயாக). — 6 அப்படிப்போல, வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளும் விவேகமாய் இருக்கும்படி நீ புத்திசொல்லி, — 7 நற்கிரியைகளுக்கு ஏற்ற மார்க்கத்தை நீதானே எல்லாவற்றினாலும் (மற்றவர்களுக்குத்) திருட்டாந்தப்படுத்துவாயாக.–8 அந்தப்படி எதிராளியானவன் உங்களைக் குறித்துப் பொல்லாங்கைச் சொல்லுதற்கு ஒன்றுமில்லாமல் வெட்கப்படத்தக்கதாக நீ உபதேசத்திலே விகற்பமில்லாதவனுமாய், யோக்கியமுள்ளவனுமாய், குற்றம்பிடிக்கப்படக்கூடாத ஆரோக்கியமுள்ள வசனத்தைப் பேசுகிறவனுமாய் இருப்பாயாக.

9 அன்றியும், வேலைக்காரர் நம்முடைய இரட்சகராகிய பராபரனுடைய உபதேசத்தை எல்லாவற்றினாலும் அலங்கரிக்கத்தக்கதாக,—10 தங்கள் எசமான்களுக்குக் கீழ்ப்படியவும், எதிர்பேசாமல் எல்லாவற்றினாலும் பிரியமாய் நடக்கவும், திருட்டுத்தனமாய் நடவாமல் சகலவிதமாயும் நல்லுண்மையைக் காண்பிக்கவும் புத்திசொல்லுவாயாக.

11 என்னத்தினாலெனில், இரட்சிப்பைக் கொடுக்கிற தேவ கிருபை எல்லாவிதமான மனிதருக்கும் பிரசன்னமாகி, — 12 நாம் அவபத்தியையும் லவுகீக இச்சைகளையும் வெறுத்து நற்புத்தியும், நீதியும், மெய்த்தேவபத்தியும் உள்ளவர்களாயும்,—13 நாம் நம்பிக்கொள்ளுகிற பாக்கியம் வருமென்றும், நமக்கு மகா தேவனும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் மகிமை பிரசன்ன

மாகும் என்றும் காத்துக்கொண்டிருக்கிறவர்களாயும், இவ்வுலகத்திலே சீவனம்பண்ணும்படி நமக்குப் போதிக்கின்றது —14 அந்த இயேசுக்கிறிஸ்து நம்மைச் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டுக்கொண்டு, தமக்குச் சொந்தமாயும், நற்கிரியைகளைச் செய்ய மிகுந்த விருப்பமாயும் இருக்கிற சனங்களாகச் சுத்திசரிக்கும்படிக்கு, நமக்காகத் தம்மையே (மரணத்திற்கு) ஒப்புக்கொடுத்தார்.—15 இவைகளை நீ மிகுந்த அதிகாரத்தோடே போதித்துப் புத்திசொல்லிக் கடிந்துகொள்வாயாக; ஒருவனும் உன்னை அசட்டைபண்ணாதிருக்கக்கடவன்.

## ௩. அதிகாரம்.

துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படிந்து அடக்கமாயிருக்கும்படிக்கும், எல்லாவிதமான நற்கிரியைகளையும் செய்ய எத்தனமாயிருக்கும்படிக்கும், — 2 ஒருவனையும் தூஷணியாமலும், சண்டைபண்ண விரும்பாமலும், சாதுவான மனதுள்ளவர்களாய் எல்லா மனிதருக்கும் எல்லாவிதத்திலும் சாந்தத்தைக் காண்பிக்கும்படிக்கும் அவர்களுக்கு ஞாபகப்படுத்துவாயாக.— 3 என்னத்தினாலெனில், முற்காலத்திலே நாமும் புத்தியீனருமாய், கீழ்ப்படியாதவர்களுமாய், வஞ்சிக்கப்பட்டவர்களுமாய், பலவிதமான இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைகளுமாய், துர்ப்புத்தியோடும் பொறாமையோடும் சீவனம்பண்ணுகிறவர்களுமாய், அருவருக்கப்படத்தக்கவர்களுமாய், ஒருவரை ஒருவர் பகைக்கிறவர்களுமாய் இருந்தோம்.

4 நம்முடைய இரட்சகராகிய பராபரனுடைய தயையும் மனிதர்மேல் உள்ள அன்பும் பிரசன்னமானபொழுது,—5 நாம் செய்த நீதிக்கேற்ற கிரியைகளின்நிமித்தமல்ல, மறுபிறப்பாகிய முழுக்கினாலும் பரிசுத்தஆவி செய்கிற புதிதாக்குதலினாலுமே அவர் தமது சுய இரக்கத்தினாலே நம்மை இரட்சித்தார். — 6 தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு நித்தியசீவனைக்குறித்து உண்டாயிருந்த நம்பிக்கையின்படி சுதந்தரராகும்படிக்கு,—7 அவர் நம்முடைய இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவின்மூலமாய் அந்தப் பரிசுத்த ஆவியை நமக்குச் சம்பூரணமாய்க் கொடுத்தருளினார்.

8 இந்த வார்த்தை உண்மையுள்ளது; பராபரனிடத்தில் விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்ய எச்சரிக்கையாய் இருக்கும்படிக்கு, நீ அந்தச் (சுதந்தரரைக்) குறித்துக் கெட்டியாய்ப் போதிக்கவேண்டுமென்று விரும்புகிறேன்; இவைகளே நன்மையானவைகளாயும் மனிதருக்குப் பிரயோசனமானவைகளாயும் இருக்கின்றன.—9 புத்தியீனமான தருக்கங்களும், வம்சவரிசைகளை ஆராய்தலும், வாக்குவாதங்களும், நியாயப்பிரமாணத்தைக்குறித்து உண்டாகிற சண்டைகளும், அபிரயோசனமும் அபத்தமுமுள்ளவைகள்; ஆகையால் அவைகளுக்கு இடங்கொடாதிருப்பாயாக.—10 சத்தியத்தைப் புரட்டுகிறவனாயிருக்கிற ஒருவனுக்கு நீ இரண்டொருதரம் புத்திசொன்ன பின்பு, (அவன் செவிகொடாவிட்டால்) அவனைவிட்டு விலகுவாயாக.— 11 அப்படிப்பட்டவன் தாறுமாறுபட்டு, தன்னிலே ஆக்கினைத்தீர்ப்புள்ளவனாய்ப் பாவம்செய்கிறவன் என்று அறிந்துகொள்வாயாக.

12 நான் அருத்தேமாவை அல்லது தீகிக்குவை உன்னிடத்தில் அனுப்பும்பொழுது நீ சாக்கிரதையாய் நிக்கோப்போலி ஊருக்கு என்னிடத்தில் வருவாயாக; மாரிகாலத்திலே அங்கே தங்கயோசனையாய் இருக்கிறேன்.—13 நியாயசாஸ்திரியாகிய சேனாவும் அப்பொல்லோவும் பிரயாணமாய் வரும்பொழுது, அவர்களுக்குக் குறைச்சல் ஒன்றும் இராதபடிக்கு விசாரித்துச் சாக்கிரதையாய் அவர்களை அனுப்பிவிடுவாயாக. — 14 (கிரேத்தைத் தீவிலே) நம்மைச் சேர்ந்தவர்களும் கனியற்றவர்களாயிராமல் குறைச்சல்களை நீக்குதற்கு ஏற்ற நல்ல தொழில்களை நடத்திக்கொள்ளப் படிக்கக்கடவர்கள்.—15 என்னோடிருக்கிற யாவரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்; விசுவாசத்தைப் பற்றிக்கொண்டு நம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு நான் வாழ்த்துதல் செய்கிறேன்; கிருபை உங்கள் அனைவரோடும்கூட இருக்கக்கடவது.—ஆமன்.

---

# அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலேமோனுக்கு எழுதின

# நிருபம்.

---

கிறிஸ்து இயேசுவின் நிமித்தம் கட்டப்பட்டிருக்கிறவனாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயுவும், எங்களுக்குப் பிரியனுமாய் உடன்வேலையாளுமாய் இருக்கிற பிலேமோனுக்கும், எங்களுக்குப் பிரியமான அப்பியாளுக்கும்,—2 எங்களுடனேகூடப் போர்ச்சேவகனாகிய அர்கிப்புக்

கும், உமது வீட்டிலே கூடிவருகிற சபைக்கும்
எழுதுகிறதாவது: — 3 நம்முடைய பிதாவாகிய
பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவி
னாலும் உங்களுக்குக் கிருபையும், சமாதானமும்
உண்டாகக்கடவது.

4 கர்த்தராகிய இயேசுவின்மேலும், எல்லாப்
பரிசுத்தவான்கள்மேலும் உள்ள உம்முடைய
அன்பையும் உமது விசுவாசத்தையும் நான் கேள்
விப்பட்டு,–5 என் செபங்களில் உம்மை நினைத்
துக்கொண்டு, எப்பொழுதும் என் பராபரனுக்குத்
தோத்திரம்செய்து,—6 உங்களிலுள்ள சகலவித
நன்மைகளையும் (மற்றவர்களும்) அறிந்துகொள்
ளுகிறதினாலே உமது விசுவாசத்திற்குரிய தரும
குணம் கிறிஸ்து இயேசுவுக்காகப் பெலனைக்
காண்பிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளு
கிறேன்.–7 சகோதரனே, பரிசுத்தவான்களுடை
ய இருதயங்கள் உம்மாலே சவுக்கியப்பட்டதால்
உம்முடைய அன்பினாலே மிகுந்த சந்தோஷமும்
ஆறுதலும் அடைந்திருக்கிறோம்.

8 ஆகையால் விருத்தாப்பியமுள்ளவனுமாய்
இயேசுக்கிறிஸ்துவின் நிமித்தம் இப்பொழுது
கட்டப்பட்டவனுமாயிருக்கிற பவுலாகிய நான்,–
9 தகுதியான காரியத்தைக்குறித்து உமக்குக் கட்
டளையிடும்படிக்குக் கிறிஸ்துவினாலே மிகுந்த தயி
ரியமுள்ளவனாயிருந்தும், (அப்படிச் செய்யாமல்)
அன்பினாலே உம்மை வேண்டிக்கொள்ளுகி
றேன்.–10 என்னவென்றால், நான் கட்டப்பட்
டிருக்கையில் பெற்றவனாயும், — 11 முன்னே
உமக்குப் பிரயோசனமில்லாதவனாயும், இப்பொ
ழுது உமக்கும் எனக்கும் நல்ல பிரயோசனமுள்
ளவனாயும் இருக்கிற என் மகனாகிய ஒனேசி
முக்காகவே உம்மை வேண்டிக்கொள்ளுகி
றேன்; அவனைத் திரும்ப அனுப்பினேன். —
12 அவனை நீர் என் உள்ளம்போல ஏற்றுக்கொள்
வீராக.—13 சுவிசேஷத்தின் நிமித்தம் கட்டப்
பட்டிருக்கிற எனக்கு ஊழியம்செய்யும்படிக்கு
உமக்குப் பதிலாக அவனை என்னிடத்தில் வைத்
துக்கொள்ளவேண்டும் என்று இருந்தேன். —
14 ஆனாலும் உம்முடைய நன்மை கட்டாயத்தி
னால் அல்ல, மனப்பூர்வத்தால் இருக்கத்தக்கதாக
நான் உமது சம்மதியில்லாமல் ஒன்றும் செய்ய
மனதில்லை. — 15 இனிமேல் அவன் உமக்கு
அடிமையானவனாக அல்ல, அடிமையானவனுக்
கு மேலாகப் பிரியமான சகோதரனாகவும், என்
றென்றைக்கும் உம்முடையவனாகவும் இருக்கும்
படிக்கு,–16 அவன் கொஞ்சக்காலமாய் உம்மை
விட்டுப் பிரிக்கப்பட்டான் என்று தோன்றுகின்
றது; எனக்கும் அவன் பிரியமான சகோதரன்
தான்; உமக்குச் சரீரத்தின்படியேயும் கர்த்தர்
நிமித்தமும் மிகவும் அதிகமாய் அப்படி இருக்கி
றான் அல்லவா? — 17 ஆதலால் நீர் என்னை
உமக்கு ஐக்கமானவன் என்று எண்ணினால்,
அவனை என்னைப்போல ஏற்றுக்கொள்ளவேண்
டும்.—18 அவன் உமக்கு யாதொரு அநியாயம்
செய்ததும் அல்லது கடன்பட்டதும் உண்டா
னால், அதை என் கணக்கிலே எழுதுவீராக. —
19 பவுலாகிய நான் என் கையெழுத்துப்போட்
டேன்; நானே செலுத்தித் தீர்ப்பேன், நீர் உம்
மைத்தாமே எனக்குக் கடனாகச் செலுத்தவேண்
டும் என்று நான் உமக்குச் சொல்லாதபடிக்கு
அப்படிச் செய்கிறேன்.—20 ஆ என் சகோதர
னே, கர்த்தர்நிமித்தம் உம்மாலே இந்தப் பிரயோ
சனம் எனக்கு உண்டாகக்கடவது; கர்த்தர்நிமித்
தம் என் இருதயத்தை ஆறுதல்செய்வீராக. —
21 நீர் கீழ்ப்படிவீரென்று நான் நிச்சயமாய்
அறிந்து, இப்படி உமக்கு எழுதினேன்; நான்
கேட்டதற்கு மேலாகவும் செய்வீரென்றும் அறிந்
திருக்கிறேன்.—22 அல்லாமலும் உங்கள் விண்
ணப்பங்களினாலே உங்களுக்குத் (திரும்பக்)
கொடுக்கப்படுவேன் என்று நான் நம்பியிருக்கி
றபடியால், நான் இருக்கும்படிக்கு ஓரிடத்தை
எனக்காக எத்தனம்பண்ணுவீராக.

23 கிறிஸ்து இயேசுவின்நிமித்தம் என்னோ
டேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிற எப்
பாப்பிராவும், — 24 என் உடன்வேலையாள்களா
கிய மாற்குவும், அரிஸ்தர்குவும், தேமாவும், லூக்
காவும் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். —
25 நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வின் கிருபை உங்கள் ஆவியுடனே இருக்கக்
கடவது.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# எபிரேயருக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

பூர்வீகத்திலே பலகாலங்களிலும் பலவிதமாய்ப்
பராபரன் (நம்முடைய) முன்னோர்களுடனே
தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் திருவுளம்பற்றின
தும் அன்றி,—2 இந்தக் கடைசிக் காலத்திலே
குமாரன்மூலமாய் நம்முடனே திருவுளம்பற்றி
னார்; அவரைச் சகலத்திற்கும் சுதந்தரவாளியாக

வைத்தார்; அவராலே உலகங்களையும் உண்டாக்
கினார்.—3 அவர் பராபரனுடைய மகிமையின் பிர
காசமாயும், அவருடைய தன்மையின் சொரூப
மாயும், எல்லாவற்றையும் தமது வல்லமையுள்ள
வசனத்தினாலே தாங்குகிறவராயும் இருந்து,
பின்பு தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை
நிவிர்த்திசெய்து, உன்னதத்திலுள்ள மகத்துவரு
டைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.—
4 இப்படி அவர் தேவதூதரிலும் அதிக விசேஷ
மாகச் சுதந்தரித்துக்கொண்ட நாமம் எவ்வள
வோ, அவ்வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்
மையுள்ளவராயிருக்கிறார்.

5 எப்படியெனில் நீர் என்னுடைய குமாரன்
என்றும், இன்று நான் உம்மைச் செனிப்பித்
தேன் என்றும், அவருக்குப் பிதாவாயிருப்பேன்,
அவர் எனக்குக் குமாரனாயிருப்பார் என்றும் பரா
பரன் ஒருகாலத்திலாகிலும் தூதர்களில் ஒருவ
னுக்குச் சொன்னாரா?—6 மறுபடியும் தமது
முதற்பேறானவரை இவ்வுலகத்தில் பிரவேசிக்
கச் செய்தபொழுது, தேவதூதர் யாவரும் அவ
ரைத் தொழுதுகொள்ளக்கடவர்கள் என்றார்.—
7 அன்றியும் தேவதூதரைக்குறித்துச் சொல்லியி
ருக்கிறதாவது: தம்முடைய தூதர்களைக் காற்றுக்க
ளாகவும், தம்முடைய ஊழியக்காரரை அக்கினிச்
சுவாலைகளாகவும் செய்தாரென்று சொல்லியிருக்
கிறது.—8 குமாரனைக்குறித்து எப்படிச் சொல்
லியிருக்கிறதென்றால், பராபரனே, உமது சிங்
காசனம் என்றென்றைக்கும் உள்ளதாயிருக்கும்;
உம்முடைய இராச்சியத்திலுள்ள செங்கோல்
செம்மையான செங்கோலாயிருக்கின்றது.—
9 நீதியில் அன்புகூர்ந்து அக்கிரமத்தைப் பகைத்
திருக்கிறீர்; ஆதலால் பராபரனே உம்முடைய
பராபரன் உம்முடைய தோழரிலும் உம்மை
மகிழ்ச்சி என்னும் எண்ணெயினாலே அபிஷே
கம்பண்ணினார் என்றும்,—10 கர்த்தாவே, ஆதி
யிலே நீர் பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வா
னங்கள் உம்முடைய கைகளின் கிரியைகளாயி
ருக்கின்றன.—11 அவைகள் அழிந்துபோம்; நீர்
மாத்திரம் நிலைநிற்பீர்; அவைகளெல்லாம் வஸ்தி
ரம்போலப் பழமையாய்ப்போம்.—12 ஒரு சால்
வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர்; அப்
பொழுது மாறிப்போம்; நீர்மாத்திரம் (எப்பொ
ழுதும்) ஒரேவிதமாய் இருப்பீர்; உம்முடைய
ஆண்டுகள் முடிந்துபோவதில்லை என்றும் சொல்
லியிருக்கின்றது.

13 மேலும் நான் உம்முடைய சத்துருக்களை
உம்முடைய பாதப்படியாக்கிப்போடுமளவும் என்
வலதுபாரிசத்தில் உளுக்காரும் என்று இப்படி
அவர் ஒரு காலத்திலாகிலும் தூதர்களில் ஒருவ
னுக்குச் சொன்னாரா?—14 இரட்சிப்பைச் சுதந்
தரிப்பவர்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்
களெல்லாரும், அனுப்பப்படுகிற பணிவிடை
ஆவிகளாய் இருக்கிறார்களல்லவா?

## ௨. அதிகாரம்.

ஆகையால், நாம் கேட்டறிந்தவைகளை விட்டு
விலகாதபடிக்கு அதிக எச்சரிக்கையாயிருக்க
வேண்டும்.—2 என்னத்தினாலெனில், தேவதூ
தரால் சொல்லப்பட்ட வசனத்திற்கு விரோத
மான எந்தச் செய்கைக்கும், கீழ்ப்படியாமைக்
கும் நீதியான தண்டனை வரத்தக்கதாக அவர்க
ளுடைய வசனம் உறுதிப்பட்டிருந்ததாயிருக்க,—
3 முதலாவது கர்த்தராலே அறிவிக்கப்பட்டுப்
பின்பு அவரிடத்தில் கேட்டவர்களால் நமக்கு
உறுதியாக்கப்பட்டதுமாய்,—4 அடையாளங்களி
னாலும் அற்புதங்களினாலும் பலவிதமான பலத்த
செய்கையினாலும், பரிசுத்தஆவியைத் தம்மு
டைய சித்தத்தின்படி (நமக்குப்) பகிர்ந்து
கொடுத்ததினாலும் பராபரன் சாட்சி கொடுக்கப்
பட்டதுமாய் இருக்கிற இவ்வளவு பெரிதான
இரட்சிப்பைக்குறித்து நாம் கவலையில்லாமல்
போனால் (தண்டனைக்கு) எப்படித் தப்பிப்போ
வோம்?

5 அன்றியும் இனிமேல் வரும் உலகத்தைக்
குறித்துப் பேசுகிறோமே, அதை அவர் தூதர்க
ளுக்குக் கீழ்ப்படுத்தவில்லை; ஒரு இடத்திலே
ஒருவன் சாட்சியாகச் சொன்னது:—6 மனிதனை
நீர் நினைத்துக்கொள்ளுகிறதற்கும், அல்லது மனி
தனுடைய புத்திரனை நீர் விசாரித்துக்கொள்ளுதற்
கும் அவன் எம்மாத்திரம்.—7 கொஞ்சக்கால
மாய் அவனைத் தேவதூதரிலும் சிறியவன் ஆக்கி
னீர்; பின்பு மகிமையோடும் கனத்தோடும் அவ
னுக்கு முடிசூட்டி, உம்முடைய கைகளின் கிரி
யைகளுக்கு அதிகாரியாக வைத்துச் சகலத்தை
யும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி
னீர் என்றான்.—8 இந்தப்படி அவர் சகலத்தை
யும் அவனுக்குக் கீழ்ப்படுத்துகையில் அவனுக்
குக் கீழ்ப்பட்டிராதபடிக்குத் தாம் ஒரு பொருளை
யும் வைத்துக்கொள்ளவில்லை; இப்பொழுது சக
லமும் அவனுக்குக் கீழ்ப்படக் காணோம்.—
9 இயேசுவானவர்மாத்திரம் பராபரனுடைய கிரு
பையினாலே யாவருக்காகவும் மரணத்தை அநுப
விக்கும்பொருட்டாகக் கொஞ்சக்காலமாய்த் தே
வதூதரிலும் சிறியவர் ஆக்கப்பட்டுப் பின்பு மர
ணத்தைச் சகித்ததினாலே மகிமையோடும் கனத்
தோடும் முடிசூட்டப்படக் காண்கிறோம்.—
10 மேலும் தமக்காகச் சகலத்தையும் உண்டாக்
கினவர் அநேகம் பிள்ளைகளை மகிமையில் கொண்
டுபோகையில் அவர்களுக்கு இரட்சண்ணியத்
தை உண்டாக்கின அதிபதியை உபத்திரவங்க
ளின் வழியாய்த் தேறினவர் ஆக்குகிறது அவருக்
குத் தகுதியாயிருந்தது.

11 எப்படியெனில் பரிசுத்தம்செய்கிறவரும்

பரிசுத்தம் செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் ஒருவரிலிருந்து வருகிறார்கள்; அதினாலேதானே அவர்களைச் சகோதரரென்று அழைக்க வெட்கப் படாமல், — 12 உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்துச் சபையாருக்குள்ளே உமக்குத் துதியாகப் பாடுவேன் என்றும், நான் அவரிடத்தில் நம்பிக்கையாயிருப்பேன் என்றும்,—13 இதோ, நானும் பராபரன் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும் என்றும் சொல்லியிருக்கிறார்.—14 ஆனதால் பிள்ளைகள் மாம்ச இரத்ததேகமுள்ளவர்களாயிருக்க அவரும் மரணத்தை வருவிக்க வல்லமையுடையவனாகிய பிசாசானவனைத் (தமது) மரணத்தினாலே அழிக்கும்படிக்கும்,— 15 ஜீவகாலமளவும் மரணத்திற்குப் பயந்து அடிமையாயிருந்த யாவரையும் விடுதலைபண்ணும்படிக்கும் அவர்களைப்போல மாம்சஇரத்ததேகமுள்ளவரானார்.—16 ஆதலால் அவர் தேவதூதரின் சுபாவத்தை எடுத்துக்கொள்ளாமல், ஆபிரகாமின் சந்ததியிலே (மனித சுபாவத்தை) எடுத்திருக்கிறார்.—17 அன்றியும் அவர் (தம்முடைய) சனங்களின் பாவங்களை நிவிர்த்திசெய்வதற்கு ஏதுவாக இரக்கமுள்ளவராயும், பராபரனுக்கு உரியவைகளைக்குறித்து உண்மையான பிரதான ஆசாரியராயும் இருக்கும்படிக்கு எவ்விதத்திலும் (தம்முடைய) சகோதரருக்கு ஒப்பாகவேண்டியதாய் இருந்தது.—18 ஆதலால் அவர்தாமே சோதிக்கப்பட்டுப் பாடு அநுபவித்ததினாலே, சோதிக்கப்படுகிறவர்களுக்குச் சகாயஞ்செய்யத் திராணியுள்ளவராய் இருக்கிறார்.

## ௩. அதிகாரம்.

இப்படியிருக்கப் பரம அழைப்பை அடைந்தவர்களாகிய பரிசுத்த சகோதரரே, நாம் அறிக்கைபண்ணுகிற அப்போஸ்தலருமாய்ப் பிரதான ஆசாரியருமாய் இருக்கிற கிறிஸ்து இயேசுவை உற்றுப்பாருங்கள்.—2 மோசே என்பவன் தேவ ஆலயமெங்கும் உண்மையாயிருந்ததுபோல, அவரும் தம்மை ஏற்படுத்தினவருக்கு உண்மையுள்ளவராய் இருந்தார்.

3 எந்த ஆலயமும் மனிதனாலே உண்டாக்கப்பட்டிருக்கின்றது, பராபரன் சகலத்தையும் உண்டாக்கினவர்.–4 ஆகையால் ஆலயத்திலும் ஆலயத்தை உண்டாக்கினவருக்கு உண்டாயிருக்கிற கனம் எவ்வளவோ, அவ்வளவாய் மோசேயிலும் இயேசுவானவர் அதிக மகிமைக்குப் பாத்திரராய் இருக்கிறார்.

5 அந்தப்படி சொல்லவேண்டியிருந்தவைகளுக்குச் சாட்சியாக மோசே ஊழியக்காரனாய் அவருடைய ஆலயம் எங்கும் உண்மையுள்ளவனாய் இருந்தான்.—6 ஆகிலும் கிறிஸ்துவானவர் அவருடைய ஆலயத்திற்கு மேலான குமாரனாய் (உண்மையாய்) இருக்கிறார்; (நித்திய ஜீவன்மேலுள்ள) நம்பிக்கைக்கு ஏற்ற தயிரியத்தையும் மேன்மைபாராட்டலையும் முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண்டால், நாமே அவருடைய ஆலயமாய் இருப்போம்.

7 ஆகையால் பரிசுத்தஆவியானவர் சொல்லுகிறபடியே, இன்று நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையில், வனாந்தரத்திலே,—8 உங்கள் முன்னோர்கள் என்னைச் சோதித்து எனக்குக் கோபமூட்டின நாளிலே நடந்ததுபோல,— 9 உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள்; அவர்கள் நாற்பது வருஷமாய் என்னுடைய கிரியைகளைக் கண்டிருந்தும் என்னைச் சோதித்து என்னை நிதானித்தார்கள்.—10 ஆனதால் நான் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்பொழுதும் வழிதப்பிநடக்கிற மனதுள்ளவர்களாய் என்னுடைய நெறிகளை அறியாதிருக்கிறார்கள் என்று சொல்லி,—11 இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில் அவர்கள் பிரவேசியாமல் இருக்கக்கடவர்கள் என்று எனது கோபத்தினால் ஆணையிட்டேன் என்றார்.—12 அந்தப்படி சகோதரரே, ஜீவனையுடைய பராபரனைவிட்டு விலகுதற்கு ஏதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களில் ஒருவனிடத்திலும் இராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருந்து,— 13 உங்களில் ஒருவனாகிலும் பாவத்தின் வஞ்சனையினாலே கடினப்பட்டுப்போகாதபடிக்கு, இன்று என்னப்படுமளவும் ஒருவருக்கொருவர் நாடோறும் புத்திசொல்லிவருவீர்களாக. — 14 நாம் நம்பிக்கையை அடைந்ததுமுதல் முடிவுபரியந்தம் அதை உறுதியாய்ப் பற்றிக்கொண்டால் நாம் கிறிஸ்துவினிடத்தில் பங்குள்ளவர்களாய் இருப்போமே.

15 இன்றைக்கு நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையில் கோபமூட்டுதலுள்ள நாளிலே நடந்ததுபோல உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்று சொல்லியிருக்கிறபடியால், (அப்படியே பற்றிக்கொள்ளவேண்டும்). — 16 அதெப்படியெனில் கேட்டவர்களில் சிலர் கோபமூட்டினார்கள்; அப்படிச் செய்தவர்கள் மோசேயினாலே எகிப்திலிருந்து புறப்பட்ட யாவரும் அல்ல, மேலும் அவர் நாற்பது வருஷமாய் எவர்களை அரோசித்தார்?–17 பாவம் செய்தவர்களை அல்லவா? அவர்களுடைய சரீரங்கள் வனாந்தரத்திலே விழுந்துபோயின.–18 பின்னும் இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திலே பிரவேசியாதிருக்கக்கடவர்கள் என்று அவர் யாரைக்குறித்து ஆணையிட்டார்? விசுவாசியாதவர்களைக்குறித்து அல்லவா? — 19 ஆனதால், அவிசுவாசத்தினாலே அவர்கள் அதில் பிரவேசிக்கக்கூடாமல்போனார்கள் என்று பார்க்கிறோமே.

## ச. அதிகாரம்.

ஆனபடியினாலே இளைப்பாறுதற்கான அவருடைய இடத்திலே பிரவேசிக்கும்படிக்கு ஏற்ற வாக்குத்தத்தம் பின்னும் நமக்கு உண்டாயிருக்க நம்மில் ஒருவனாகிலும் (அதை அடையாதபடி) தாமதமாயிருக்கிறவனாகத் தோன்றுதபடிக்குப் பயந்திருக்கக்கடவோம்.–2 எப்படியெனில் சுவிசேஷம் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டதுபோல, நமக்கும் அறிவிக்கப்பட்டது; அந்த வசனத்தைக் கேட்டும் அவர்களுக்குள்ளே விசுவாசம் இல்லாதபடியால், அந்தக் கேள்வி அவர்களுக்குப் பிரயோசனமாய் இருக்கவில்லை.—3 விசுவாசிகளாகிய நாம் இளைப்பாறுதற்கான இடத்தில் பிரவேசிப்போம்; அதற்குத் திருட்டாந்தமாக உலகம் சிருட்டிக்கப்பட்டபொழுது தம்முடைய கிரிகைகளைச் செய்து முடித்து இளைப்பாறினபின்பு அவர் சொன்னது: இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திலே அவர்கள் பிரவேசிப்பதில்லை என்று நான் ஆணையிட்டேன் என்று சொன்னார்.—4 அதற்குத் திருட்டாந்தமாக ஓரிடத்திலே ஏழாம் நாளைக்குறித்துச் சொல்லியிருக்கிறது என்னவெனில், பராபரன் ஏழாம் நாளிலே தம்முடைய கிரியைகளை எல்லாம் முடித்து, ஆசோதையாய் இருந்தார் என்று சொல்லியிருக்கிறது.–5 மறுபடியும் மேற்சொல்லிய இடத்திலே அவர்கள் இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில் பிரவேசியாமலிருக்கக்கடவர்கள் என்றும் சொல்லியிருக்கிறார். — 6 ஆகையால் பின்னும் சிலர் அதில் பிரவேசிக்கிறதற்கு ஏதவுண்டாயிருந்தபடியினாலும், முதலாவது சுவிசேஷத்தைக் கேட்டவர்களும் அவிசுவாசத்தினாலே அதில் பிரவேசியாமல்போனபடியினாலும்,

7 இன்று அவருடைய சத்தத்தைக் கேட்கையில் உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்று அநேககாலத்திற்குப்பின்பு தாவீதின் புத்தகத்திலே சொல்லியிருக்கிறபடி, இன்றைக்கு என்பதினாலே (பராபரன்) பின்னும் ஒருநாளைக் குறித்திருக்கிறார்.—8 யோசுவா என்பவன் அவர்களை இளைப்பாறச்செய்தானானால் பின்பு அவர் வேறொரு நாளைக்குறித்துப் பேசமாட்டாரே. — 9 ஆனபடியால், இளைப்பாறும்படிக்கான காலம் பின்னும் பராபரனுடைய சனங்களுக்கு வருகிறதாயிருக்கின்றது. — 10 அந்தப்படி பராபரன் தம்முடைய கிரியைகளை முடித்து ஓய்ந்திருந்ததுபோல, இளைப்பாறுதற்கான அவருடைய இடத்தில் பிரவேசித்தவனும் தன் கிரியைகளை முடித்து ஓய்ந்திருப்பான்.

11 ஆகையால், அந்தத் திருட்டாந்தத்தின்படி ஒருவனாகிலும் அவிசுவாசத்தினாலே விழாதபடிக்கு, நாம் மேற்சொல்லிய இளைப்பாறுதற்கான இடத்தில் பிரவேசிக்கச் சாக்கிரதையாய் இருக்கக்கடவோம்.—12 பராபரனுடைய வார்த்தை உயிர்ப்பிக்கிறதுமாய், பலமுள்ளதுமாய், இருபுறமும் கருக்குள்ள எந்தக் கத்தியிலும் கருக்கானதுமாய் ஆத்துமாவையும்,ஆவியையும், (சரீர) மொழிகளையும், ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக் குத்துகிறதுமாய், இருதயத்தின் சிந்தனைகளையும் யோசனைகளையும் வகையறுத்துத் தீர்க்கிறதுமாய் இருக்கிறதே; அவருக்குமுன்பாகத் தோன்றுதிருக்கிற சிருட்டி ஒன்றுமில்லை.—13 சகலமும் அவருடைய கண்களுக்குமுன்பாக நிருவாணமாயும், வெளியரங்கமாயும் இருக்கின்றன; அவருக்கே நாம் கணக்கு ஒப்புவிக்கவேண்டும்.

14 ஆகையால், வானங்களின் வழியாய்ப் (பரமண்டலத்திற்குப்) போன தேவகுமாரனாகிய இயேசுவென்னும் மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறபடியினாலே, (அவரை) அறிக்கையிடுகிறதில் உறுதியாயிருக்கக்கடவோம். — 15 அவர் நம்முடைய பலஈனங்களைக்குறித்து நமக்கு இரங்கத் திராணியில்லாத பிரதான ஆசாரியர் அல்லவே; பாவத்தைத்தவிர மற்றெந்தவிதத்தினாலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டாரே.–16 ஆதலால் நாம் இரக்கத்தைப் பெற்றுக்கொள்ளும்படிக்கும், காலத்திற்குத் தகுதியான உதவியாகிய கிருபையை அடைந்துகொள்ளும்படிக்கும் தயிரியமாய்க் கிருபாசனத்தினிடத்திலே சேரக்கடவோம்.

## ரு. அதிகாரம்.

அன்றியும் மனிதரில் எடுக்கப்பட்ட பிரதான ஆசாரியன் யாவனும் பாவங்களுக்காகக் காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்தி, இப்படி மனிதருக்காகத் தேவகாரியங்களை நடப்பிக்கும்படிக்கு வைக்கப்படுவான். — 2 அல்லாமலும் அவன் தானும் பலஈனமுள்ளவனானபடியினாலே, அறியாதவர்களுக்கும் வழுவிப்போனவர்களுக்கும் மன உருக்கமாய் இருக்கத்தக்கவனாய் இருப்பான். — 3 அந்த முகாந்தரத்தினாலே அவன் சனங்களுடைய பாவங்களுக்காகப் பலியிடுகிறதுபோலத் தன்னுடைய பாவங்களுக்காகவும் பலியிடவேண்டியதாயிருக்கிறது.

4 மேலும் ஒருவனாயினும் அந்தக் கனமான உத்தியோகத்தைத் தன்னாலே ஏற்றுக்கொள்ளாமல், ஆரோன் அழைக்கப்பட்டதுபோலப் பராபரனாலே அதற்கு அழைக்கப்படுவான்.–5 அந்தப்படி கிறிஸ்தவும் பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்மைத்தாமே உயர்த்தவில்லை; நீர் என்னுடைய குமாரன், இன்று நான் உம்மைச் செனிப்பித்தேன் என்று அவரோடே (சொன்னவரே அவரை உயர்த்தினார்).—6 அப்படி வேறொரு இடத்திலேயும், நீர் மெல்கிசேதேக்கின் முறைமையாய் என்றென்றைக்கும் ஆசாரியரானவர் என்று சொல்லியிருக்கிறது.

7 (அன்றியும்) அவர் மனிதனாகப் பூமியிலே
சஞ்சரிக்கையில் தம்மை மரணத்தில் நின்று இரட்
சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்
தத்தோடும் அழுகையோடும் விண்ணப்பம்பண்
ணி மிகவும் வேண்டிக்கொண்டு, தமக்குண்டா
ன பயத்தினின்று விடுதலையாக்கப்பட்டு,—8 குமா
ரனாயிருந்தும் தாம் பட்ட பாடுகளாலே கீழ்ப்படி
தலைக் கற்றுக்கொண்டு,—9 தாம் தேறினவரான
பின்பு தமக்குக் கீழ்ப்படிகிற யாவரும் நித்திய
மான இரட்சிப்பை அடைவதற்குக் காரண
ராகி,—10 (இப்படிப்) பராபரனால் மெல்கிசே
தேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசா
ரியர் என்று வாழ்த்தப்பட்டார்.

11 இந்தச் சங்கதியைக்குறித்து நான் விஸ்தார
மாய்ப் பேசலாம்; நீங்கள் தாமதமாய் அறிகிறவர்
களானபடியால் அதை விவரித்துக் காண்பிக்கி
றது அரிதாய் இருக்கின்றது.—12 காலத்தைப்
பார்க்கிறபொழுது போதகராயிருக்கவேண்டிய
உங்களுக்குப் பராபரனுடைய வாக்கியங்களின்
முதல் நியாயங்களை மறுபடியும் உபதேசிக்க
வேண்டியதாய் இருக்கின்றது; உணவை அல்ல
பாலைச் சாப்பிடத்தக்கவர்கள் ஆனீர்களே.—
13 பால் உண்கிறவன் குழந்தையாய் இருக்கிற
படியினாலே, நீதிக்குரிய வசனத்தை அறிந்து
கொள்ளத் திராணியுள்ளவன் அல்லவே.—
14 கெட்டியான உணவு நிறைவாய் வளர்ந்தவர்
களாயும், நன்மையையும் தீமையையும் வகைய
றுக்கிறதற்கு முயற்சியினாலே தகுதியாக்கப்பட்ட
புத்தியுள்ளவர்களாயும் இருக்கிறவர்களுக்கே ஏற்
றதாயிருக்கின்றது.

## ௬. அதிகாரம்.

ஆகையால் மரணத்திற்கு ஏதுவான கிரியைகளை
விட்டு மனந்திரும்புகிறதற்கும், பராபரனை விசு
வாசிக்கிறதற்கும், —2 ஸ்நானங்களுக்கு அடுத்த
உபதேசத்திற்கும், கைகளை வைக்கிறதற்கும்,
மரித்தோரிலிருந்து உயிரோடு எழும்புதற்கும் நித்
தியமான நியாயத்தீர்ப்புக்கும் ஏதுவான உபதே
சங்களினாலே நாம் மறுபடியும் அஸ்திபாரம் போ
டாதபடிக்கு, கிறிஸ்துவுக்குரிய முதல் நியாயங்க
ளைச் சொல்லுகிற உபதேசத்தை நாம் இப்பொ
ழுது நிறுத்தி, உயர்ந்த உபதேசங்களைக்குறித்துப்
பேசிக்கொள்வோமாக.—3 பராபரனுக்குச் சித்த
மானால் அப்படியே செய்வோம்.—4 என்னத்திற்
காகவெனில், ஒரு காலத்திலே பிரகாசமாக்கப்
பட்டும் பரம ஈவை ருசிபார்த்தும் பரிசுத்தஆவி
யைப் பெற்றும்,—5 பராபரனுடைய நல்வார்த்தை
யையும் இனிமேல் வரும் யுகத்தின் பெலன்களை
யும் ருசிபார்த்தும் இருக்கிறவர்கள் மறுதலித்து
விழுந்தபின்பு,—6 பராபரனுடைய குமாரனைத்
தங்களுக்குள்ளே மறுபடியும் சிலுவையில் அ
றைந்து அபகீர்த்தி செய்தபடியால் மனந்திரும்
புகிறதற்கு ஏதுவாய் அவர்களை மறுபடியும் புதி
தாக்கக்கூடாத காரியமாயிருக்கின்றது.

7 இதற்குத் திருட்டாந்தமாகப் பூமியானது
தனக்கு அடிக்கடி வருகிற மழையை உட்
கொண்டு தன்னிடத்தில் பயிரிடுகிறவர்களுக்கு
ஏற்ற பயிரை முளைப்பிக்கும்பொழுது, பராபரனால்
ஆசீர்வதிக்கப்படுகின்றது.—8 முட்செடிகளையும்
முட்பூண்டுகளையும் முளைப்பிக்கிற நிலம் தகாததா
யும், சபிக்கப்படுதற்குச் சமீபமாயும் இருக்கின்
றது; கடைசியிலே அது முழுவதும் காய்ந்து
போம்.

9 பிரியமானவர்களே, நாங்கள் இப்படிச்
சொல்லியும், இரட்சிப்புக்கு ஏற்ற நன்மையான
யோசனைகள் உங்களுக்கு உண்டாயிருக்கின்றன
என்று நம்பிக்கையாயிருக்கிறோம்.—10 பராபர
னும் உங்கள் கிரியையையும் பரிசுத்தவான்களுக்
கு நீங்கள் ஊழியம் செய்ததினாலும் செய்துவரு
கிறதினாலும் தமது நாமத்திற்காகக் காண்பித்த
அன்புள்ள பிரயாசத்தையும் மறக்கத்தக்கதாக அநி
யாயமுள்ளவர் அல்லவே.

11 ஆகையால் நீங்கள் தாமதமாய் இராமல்,
வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தி
னாலும் நீடிய பொறுமையினாலும் சுதந்தரித்துக்
கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாய் இ
ருக்கும்படிக்கு,—12 நீங்கள் யாவரும் (எங்கள்)
நம்பிக்கை பரிபூரணமுள்ளதாகும்படி முடிவுபரி
யந்தம் சாக்கிரதையையே காண்பிக்கவேண்டு
மென்று ஆசையாயிருக்கிறோம்.—13 ஆபிரகா
முக்குப் பராபரன் வாக்குத்தத்தம்பண்ணினபொ
ழுது, ஆணையிடும்படி தம்மிலும் பெரியவர் ஒரு
வரும் இல்லாதபடியினாலே தமதுபேரிலே ஆணை
யிட்டு,—14 நான் உன்னை மிகவும் ஆசீர்வதித்து,
உன்னை மிகவும் பெருகப்பண்ணுவேன் என்
றார்.—15 அவனும் அந்தப்படியே பொறுமை
யாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம்பண்ணப்பட்
டதைப் பெற்றான்.—16 அது எப்படியெனில்,
மனிதர்கள் தங்களிலும் பெரியவன்பேரில் ஆணை
யிடுவார்கள்; உறுதிபண்ணும்படிக்கு ஏற்ற ஆ
ணையே அவர்களுக்குள்ளே சகல வியாச்சியங்க
ளையும் நிறைவேற்றும்.—17 அந்தப்படி பரா
பரனும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைச்
சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது யோ
சனையின் மாறாத நிச்சயத்தைக் காண்பிக்கும்படி
அதிக சித்தமுள்ளவராய் ஓர் ஆணையினாலே
அவைகளை ஸ்திரப்படுத்தினார்.—18 பராபரன்
பொய்பேசக்கூடாததாயிருக்க, நாம் நம்பிக்கொ
ள்ளும்படி நமக்குமுன் வைக்கப்பட்டதைப்
பிடிக்கிறதற்கு ஓடிவந்த நாம் மாறாத இரண்டு
பொருள்களினாலே பலத்த ஆறுதலுள்ளவர்கள்
ஆகும்பொருட்டாக அப்படிச் செய்தார்.—
19 அந்த நம்பிக்கை நம்முடைய ஆத்துமா
வுக்கு நிலையும் உறுதியுமான நங்கூரம்போலாகித்

திரைச்சீலைக்குள் போகிறதாயிருக்கின்றது. —
20 நமக்குமுன் ஓடினவராகிய இயேசு மெல்கி
சேதேக்கின் முறைமையின்படி நித்தியமான பிர
தான ஆசாரியராய் நமக்காக அந்தத் திரைச்சீலைக்
குள் பிரவேசித்திருக்கிறார்.

## எ. அதிகாரம்.

அந்த மெல்கிசேதேக்கு என்பவன் இராசாக்
களை அடித்துத் திரும்பிவந்த ஆபிரகாமுக்கு எதிர்
கொண்டு, அவனை ஆசீர்வதித்து, அவனாலே பத்
தில் ஒருபாகத்தைப் பெற்றுக்கொண்டவன்.—
2 அவன் சாலேமின் இராசா, உன்னதமான தே
வனுக்குமுன்பாக ஆசாரியனாயிருந்தவன்; முதற்
பேராகிய மெல்கிசேதேக்கு என்பதற்கு நீதி
யுள்ள இராசா என்று அருத்தமாம்; பின்பு சாலே
மின் இராசா என்பதற்குச் சமாதானமுள்ள இரா
சா என்று அருத்தமாம். — 3 அவன், தகப்பனும்
தாயும் வம்ச அட்டவணையும் இல்லாதவன்; அவ
னுடைய (உத்தியோக) நாள்களின் ஆரம்பமும்
சீவனின் முடிவும் சொல்லப்பட்டிராததினாலே
அவன் பராபரனுடைய குமாரனுக்கு ஒப்பாக்கப்
பட்டவனாய்த் தன் முழுச் சீவகாலமளவும் ஆசா
ரியனாய் இருக்கிறான்.

4 அவனுடைய மேன்மையைப் பார்ப்பீர்க
ளாக; கோத்திரத்தலைவனாகிய ஆபிரகாமும் கொள்
ளையிடப்பட்டவைகளில் பத்தில் ஒருபாகத்தை
அவனுக்குக் கொடுத்தானே. — 5 இலேவியின்
புத்திரரில் ஆசாரியபட்டத்தை அடைகிறவர்க
ளும், ஆபிரகாமின் சந்ததியாராகவே இருக்கிற
தங்கள் சகோதரராகிய சனங்களின் கையிலே
நியாயப்பிரமாணத்தின்படி பத்தில் ஒன்றை வாங்
குகிறதற்குக் கட்டளைபெற்றிருக்கிறார்கள்.–6 அது
மெய்தான், ஆகிலும், அவர்களுடைய வம்சத்தில்
இராதவனாகிய (மெல்கிசேதேக்கு என்பவன்)
பத்தில் ஒன்றை ஆபிரகாமின் கையிலே வாங்கி
வாக்குத்தத்தங்களைப் பெற்றவனையே ஆசீர்வதித்
தான். – 7 சிறியவன் பெரியவனாலே ஆசீர்வதிக்
கப்படுவான்.

8 அதற்குச் சந்தேகமில்லையே; அன்றியும்,
இவ்விடத்திலே மரிக்கத்தக்க மனிதர் பத்தில்
ஒன்றை வாங்குவார்கள்; அவ்விடத்திலே பி
ழைத்திருக்கிறார் என்று சாட்சிபெற்றவன் வாங்
கினான்.—9 அன்றியும், மெல்கிசேதேக்கு என்
பவன் ஆபிரகாமுக்கு எதிர்கொண்டுபோனபொ
ழுது, இலேவியானவன் தன் தகப்பனுடைய
அரையில் இருந்தபடியால்,–10 பத்தில் ஒன்றை
வாங்குகிற இலேவியும் ஆபிரகாமினாலே பத்தில்
ஒன்றைக் கொடுத்தான் என்று சொல்லலாம்.

11 அல்லாமலும் (இஸ்ரவேல்) சனங்கள்
இலேவிகோத்திர ஆசாரிய முறைமைக்குள்ளாய்
அல்லவோ நியாயப்பிரமாணத்தைப் பெற்றார்
கள்? அந்த இலேவிகோத்திர ஆசாரிய முறை
மையினாலே நிறைவுள்ள ஆசீர்வாதம் மெய்யாய்
வந்தால் ஆரோனுடைய முறைமையின்படி
அல்ல, மெல்கிசேதேக்கினுடைய முறைமையின்
படியே அழைக்கப்பட்ட வேறொரு ஆசாரியன்
எழும்பவேண்டுவதென்ன? — 12 ஆகையால்
ஆசாரிய முறைமை மாற்றப்பட்டிருக்க, நியா
யப்பிரமாணமும் மாற்றப்படவேண்டியதாயிருந்
தது.—13 இவைகளால் சொல்லப்பட்டிருக்கிற
வர் எவரோ, அவர் வேறொரு கோத்திரத்தைச்
சேர்ந்தவராயிருக்கிறாரே; அந்தக் கோத்திரத்தில்
ஒருவனாயினும் பலிபீடத்திலே ஆராதனைசெய்
யவும் இல்லையே.—14 நம்முடைய கர்த்தரான
வர் யூதாவின் கோத்திரத்தில் பிறந்தார் என்ப
தும் நிச்சயமாயிருக்கிறதே, அந்தக் கோத்திரத்தா
ருக்கு மோசே என்பவன் ஆசாரியபட்டத்தைக்
குறித்து ஒன்றும் சொல்லவில்லையே.—15 அல்
லாமலும் மெல்கிசேதேக்குக்கு ஒப்பாய் வே
றொரு ஆசாரியர் எழும்புகிறார் என்பதினாலே
அது மிகவும் அதிக தெளிவாயிருக்கின்றது.—
16 அவர் சரீரத்துக்கு ஏற்ற கட்டளையாகிய நியா
யப்பிரமாணத்தின்படி அல்ல,—17 மெல்கிசே
தேக்கின் முறைமையாய், நீர் என்றென்றைக்கும்
உள்ள ஆசாரியராய் இருப்பீர் என்று சொன்ன
சாட்சிக்குத்தக்கதாக நீங்காத சீவனுக்குரிய வல்
லமையின்படியே ஆசாரியரானார்.

18 ஆகையால் முன் கொடுக்கப்பட்ட கட்
டளை பலஈனமாயும் அபிரயோசனமாயும் இருந்த
படியால் அது நீக்கப்பட்டது —19 நியாயப்பிர
மாணம் ஒன்றையும் நிறைவாக்கவில்லை; அதிக
நன்மையான நம்பிக்கைக்கு ஏதுவானது (பின்
னாலே) உண்டாக்கப்பட்டு நிறைவாக்குகிறது;
அதினாலே நாம் பராபரனிடத்தில் சேருகி
றோம்.

20 அன்றியும் முந்தினவர்கள் ஆணையில்லா
மல் ஆசாரியரானார்கள்; பிந்தினவர் மெல்கிசே
தேக்கின் முறைமையின்படி, நீர் என்றென்றைக்
குமுள்ள ஆசாரியர் என்று துக்கமில்லாமல் ஆணை
யிட்டுத் தம்முடனே சொன்ன கர்த்தராலே
ஆணையோடே அப்படியானார். — 21 ஆனதால்
இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்
கப்பட்டு,—22 (அவர்களுக்கு அதிகமாயிருக்க)
அதிக நன்மையான உடம்படிக்கைக்கு ஏற்ற
பிணையாளியானார்.

23 அன்றியும், அந்த ஆசாரியர் எப்பொழுதும்
இருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடி
யால் அநேகராய் இருந்தார்கள்.—24 அவர் என்
றென்றைக்கும் இருக்கிறவரானதினாலே நீங்காத
ஆசாரியபட்டம் உள்ளவராயிருக்கிறார்.–25 அன்
றியும், தம்மாலே பராபரனைச் சேருகிறவர்களுக்
காக வேண்டுதல் செய்யும்படிக்கு எப்பொழுதும்
உயிரோடு இருக்கிறவரானதால், அவர்களை முற்
றும்இரட்சிக்கவல்லமையுள்ளவராயும்இருக்கிறார்.

26 பரிசுத்தராயும், தீமைசெய்யாதவராயும், அ
சுத்தம் இல்லாதவராயும், பாவிகளைவிட்டுப் பிரிந்த
வராயும், வானங்களுக்குமேல் உயர்ந்தவராயும்
இருக்கிற இப்படிப்பட்ட பிரதான ஆசாரியரே
நமக்கு வேண்டும்.—27 அவர் முந்தின ஆசாரி
யர்களைப்போல முதலாவது தன்னுடைய சொந்
தப் பாவங்களுக்காகவும், பின்பு சனங்களுடைய
பாவங்களுக்காகவும், நாடோறும் பலியிடவேண்
டுவதில்லை; அவர்களுக்காக அவர் ஒரேதரம் தம்
மைப் பலியிட்டாரே.—28 நியாயப்பிரமாணமா
னது பலஈனத்தையுடைய மனிதர்களை ஆசாரிய
ராக ஏற்படுத்துகின்றது; நியாயப்பிரமாணத்திற்
குப்பின்பு ஆணையோடே இருந்த வசனம் என்
றென்றைக்கும் பூரணராகிய குமாரனையே ஏற்ப
டுத்துகின்றது.

## அ. அதிகாரம்.

மேற்சொல்லியவைகளில் பிரதானமானது என்
னவெனில், பரமண்டலங்களிலுள்ள மகத்துவ
ஆசனத்தின் வலதுபாரிசத்திலே உளுக்காந்திருக்
கிறவருமாய்,—2 மனிதர்களாலே அல்ல, கர்த்த
ராலே வைக்கப்பட்ட மெய்யான கூடாரமாகிய
பரிசுத்த இடத்திலே ஆராதனை செய்கிறவருமாய்
இருக்கிற பிரதான ஆசாரியரே நமக்கு உண்டு.
3 ஆசாரியர் யாவரும் காணிக்கைகளையும் பலி
களையும் செலுத்துதற்கு வைக்கப்பட்டிருக்கிற
தால் அவரும் (பரமண்டலத்திலே) சிலவற்
றைப் பலியிடவேண்டுவதாயிருந்தது. — 4 பூமி
யிலே அவர் இருப்பாரானால் ஆசாரியராய் இருக்
கமாட்டார்; அங்கே நியாயப்பிரமாணத்தின்படி
காணிக்கைகளைச் செலுத்துகிறவர்கள் ஆசாரியர்க
ளாய் இருக்கிறார்களே. — 5 மோசே அந்தக்
கூடாரத்தை உண்டுபண்ணப் போனபொழுது,
மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட சாய
லின்படியே நீ சகலத்தையும் செய்ய எச்சரிக்
கையாயிரு என்று பராபரன் அவனுக்குக் கட்ட
ளையிட்டபடியே, அந்த ஆசாரியர்கள் பரமண்ட
லத்திற்குரியவைகளுக்கு அடையாளமும் நிழ
லாட்டமுமானவைகள் உள்ள (இடத்திலே)
ஆராதனை செய்கிறார்கள்.—6 அவர் அதிக மேன்
மையான வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்கப்
பட்டிருக்கிற அதிக மேன்மையான உடம்படிக்
கைக்கு ஏற்ற மத்தியஸ்தராய் இருக்கிறதால்,
அதிக விசேஷமான ஆராதனை செய்தலைப் பெற்
றுக்கொண்டிருக்கிறார்.
7 அந்த முதலாம் உடம்படிக்கை பிழையில்
லாததாயிருந்ததானால் இரண்டாவதற்கு இடம்
தேடப்படுவதில்லையே. — 8 அவர்களைக் குற்ற
வாளிகள் என்று சொல்லி, அவர்களுடனே திரு
வுளம்பற்றினதாவது: கர்த்தர் சொல்லுகிறது என்
னவெனில், இஸ்ரவேல் குடும்பத்தாரோடும்
யூதர் குடும்பத்தாரோடும் நான் புதிய உடம்ப
டிக்கையை ஏற்படுத்தும்படிக்கான காலம் வரு
கின்றது.-9 அவர்களுடைய முன்னோர்களை எகிப்
துதேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு, நான்
அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்ட
நாளிலே, அவர்களுடனே பண்ணின உடம்ப
டிக்கையைப்போல இது இருப்பதில்லை; அந்த
உடம்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லை
யே; நானும் அவர்களை அரோசித்தேன்.-10 அந்த
நாட்களுக்குப்பின்பு, நான் இஸ்ரவேல் குடும்பத்
தாரோடே பண்ணும் உடம்படிக்கை என்னவெ
ன்றால், என்னுடைய பிரமாணங்களை அவர்களு
டைய மனதிலே வைப்பேன்; அவைகளை அவர்
களுடைய இருதயங்களின்மேலே எழுதி, அவர்
களுக்குத் தேவனாய் இருப்பேன்; அவர்கள்
எனக்குச் சனங்களாய் இருப்பார்கள்.—11 அப்
பொழுது சிறியவன் முதற்கொண்டு பெரியவன்
வரைக்கும் எல்லாரும் என்னை அறிந்துகொள்வ
தால், கர்த்தாவை அறிந்துகொள் என்று ஒருவன்
தனக்கடுத்த பிறனுக்கும், வேறொருவன் தன்
சகோதரனுக்கும் போதிக்கவேண்டுவதில்லை. —
12 நான் அவர்களுடைய அநியாயங்களை (நீக்
கி), அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்க
ளையும் இனி நினையாமல் அவர்களுக்கு இரங்குவ
தால் அப்படி ஆகுமென்று கர்த்தர் திருவுளம்பற்
றுகிறார் என்பதே.
13 புதிதான உடம்படிக்கை என்று அவர்
சொல்லுகையில், முதலாவதைப் பழமை ஆக்கி
னார்; பழமையும் குறைவுமுள்ளதே ஒழிந்துபோ
கிறதற்குச் சமீபமாயிருக்கின்றது.

## கூ. அதிகாரம்.

அன்றியும் முதலாம் உடம்படிக்கை ஆராத
னைக்கு ஏற்ற நியாயங்களும், பூமிக்குரிய பரிசுத்த
ஸ்தலமும் உள்ளதாயிருந்தது. — 2 எப்படியெ
னில், பரிசுத்த ஸ்தலம் என்னப்பட்ட முதற்
கூடாரம் எத்தனமாக்கப்பட்டு இருந்தது; அதி
லே விளக்குத்தண்டும், பலகையும், திவ்விய
சமுகத்தப்பங்களும் இருந்தன.—3 அல்லாமலும்,
இரண்டாம் திரைச்சீலைக்குப் பின்னாலே மிகவும்
பரிசுத்த ஸ்தலம் என்னப்பட்ட கூடாரம் இருந்
தது.—4 அதிலே பொன்னால் செய்த கலசமும்,
முழுவதும் பொன்தகடு பொதியப்பட்ட உடம்
படிக்கையின் பெட்டியும் இருந்தன; அந்தப்
பெட்டியிலே மன்னா என்பதை உடைய பொன்
பானையும், தளிர்கொண்ட ஆரோனுடைய கம்
பும், உடம்படிக்கையின் பலகைகளும் இருந்
தன.—5 அதற்குமேலே மகிமையுள்ள கேருபீம்
வைக்கப்பட்டுக் கிருபாசனத்திற்கு நிழலிட்டி
ருந்தன; இவைகளைக்குறித்து நான் இப்பொழுது
விவரம் சொல்லக்கூடாது.
6 அவைகள் இவ்விதமாய் எத்தனமாக்கப்பட்
டிருந்தபின்பு, ஆசாரியரானவர்கள் ஆராதனைகளை

நிறைவேற்றும்படிக்கு, எக்காலத்திலேயும் முதற்
கூடாரத்திலே பிரவேசிப்பார்கள். — 7 இரண்
டாம் கூடாரத்திலே பிரதான ஆசாரியன்மாத்தி
ரம் வருஷத்தில் ஒரேதரம் இரத்தத்தோடே பிர
வேசித்து, அந்த இரத்தத்தைத் தனக்காகவும்
சனங்களுடைய தப்பிதங்களுக்காகவும் செலுத்து
வான்.—8 அதினாலே முதலாம் கூடாரம் நிற்கை
யில் பரிசுத்தமான இடங்களுக்குப்போகிற மார்க்
கம் வெளியாக்கப்படவில்லை என்று பரிசுத்த ஆவி
யானவர் குறித்திருக்கிறார்.—9 அந்தக் கூடாரம்
இந்தக் காலம்வரைக்கும் உவமையாயிருந்தது;
அதிலே காணிக்கைகளும் பலிகளும் செலுத்தப்
பட்டு வருகின்றன.—10 அவைகள் செம்மை
யாக்குதலுள்ள காலமளவும் (இஸ்ரவேலருக்குக்)
கட்டளையிடப்பட்ட போசனபானங்களாலும்,
பல ஸ்நானங்களாலும், சரீரத்திற்கு ஏற்ற (மற்றச்)
சடங்குகளாலும்மாத்திரம் ஆராதனைசெய்கிறவ
னுடைய மனதிற்கு நிறைவுண்டாக்கக்கூடாத
வைகளாய் இருக்கின்றன.

11 கிறிஸ்துவானவர் (உலகத்தில்) வந்து
இவ்வுலகப் பொருளாய் இராமலும் கையால் செய்
யப்படாமலும் அதிக மேன்மையாயும் அதிக
நிறைவாயும் இருக்கிற கூடாரத்தின் வழியாய்
வருகிறவைகளாகிய நன்மைகளைக்குறித்து ஆசாரி
யராய், — 12 வெள்ளாட்டுக்கடா இளங்காளை
இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, தமது
சொந்த இரத்தத்தினாலே நமக்காக நித்தியமீட்பு
உண்டாக்கி, எல்லாக் காலங்களுக்காகவும் ஒரே
தரம் பரிசுத்தமான தலங்களில் பிரவேசித்தார்.—
13 அது எப்படியெனில் காளை வெள்ளாட்டுக்
கடா இவைகளின் இரத்தமும் கடாரியின் சாம்ப
லும் அசுசிப்பட்டவன்மேல் தெளிக்கப்பட்டு,
அவனுடைய சரீர அசுசியை நீக்கத்தக்கதாக
அவனைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்க,—14 நித்
திய ஆவியினாலே தம்மைப் பிழையில்லாத பலி
யாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுத்த கிறிஸ்துவி
னுடைய திரு இரத்தம் மிகவும் அதிகமாய் மர
ணத்திற்கு ஏதுவான கிரியைகளை நீக்கிச் சீவனை
யுடைய பராபரனுக்கு நாம் ஊழியம்செய்வதற்கு
நம்முடைய மனதைச் சுத்தமாக்கும் அல்லவா?

15 இதினாலே முதல் உடம்படிக்கையின்
காலத்திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்திசெய்
வதற்கு ஏதுவாக அவர் மரித்தபின்பு, அழைக்
கப்பட்டவர்கள் வாக்குத்தத்தமான நித்திய சுதந்
தரத்தை அடைந்துகொள்ளும்படிக்கே அவர்
புதிய உடம்படிக்கையின் மத்தியஸ்தராய் இருக்
கிறார்.—16 அது எப்படியென்றால், ஒரு உடம்
படிக்கை (பலிகளுடைய மரணத்தினாலே) உறு
தியாக்கப்படுமே.—17 ஏற்படுத்தப்பட்ட (பலி)
உயிரோடிருக்குமளவும், உடம்படிக்கை பலனு
யிருக்கமாட்டாதே; ஆகையால், ஒரு உடம்படிக்
கை செய்யப்படும்பொழுது, ஏற்படுத்தப்பட்ட ப
லியினுடைய மரணமும் தோற்றப்படவேண்டும்.

18 அந்தப்படி முதலாம் உடம்படிக்கையும்
இரத்தமில்லாமல் பிரதிஷ்டையாக்கப்படவில்
லை.—19 எப்படியெனில், மோசே என்பவன்
வேதப்பிரமாணத்தின்படி சகல சனங்களுக்கும்
எல்லாப் பிரமாணங்களையும் சொன்னபின்பு ஆடு
மாடுகளின் இரத்தத்தைத் தண்ணீரோடும், சிவப்
பான பஞ்சியோடும், ஈசோப்பென்னும் செடி
யோடும்கூட எடுத்து, வேதபுத்தகத்தின்மேலும்
சனங்கள் எல்லார்மேலும் தெளித்து, — 20 பரா
பரன் உங்களுடனே (செய்யக்) கட்டளையிட்ட
உடம்படிக்கைக்கு ஏற்ற இரத்தம் இதுவே என்று
சொன்னான்.—21 இவ்விதமாய்க் கூடாரத்தின்
மேலும் ஆராதனைக்கு ஏற்ற தட்டுமுட்டுகளின்
மேலும் இரத்தத்தைத் தெளித்தான். — 22 நியா
யப்பிரமாணத்தின்படி சிலகுறைய மற்றெல்
லாப் பதார்த்தங்களும் இரத்தத்தினாலே சுத்தமாக்
கப்பட்டு வருகின்றன; இரத்தம் சிந்துதல் இல்
லாமல் மன்னிப்பும் இல்லை.

23 ஆனதால் பரமண்டலங்களில் உள்ளவை
களுக்கு உவமையானவைகள் இப்படிப்பட்ட
(பலிகளினாலே) சுத்தமாக்கப்படவேண்டியதாய்
இருக்கிறபடியால் பரமண்டலங்களில் உள்ள
வைகள் தாமே அவைகளிலும் அதிக தகுதியான
(பலிகளாலே) சுத்தமாக்கப்படவேண்டுமே.—
24 அந்தப்படி கிறிஸ்துவானவர் இப்பொழுது
நமக்காகப் பராபரனுடைய சந்நிதானத்திலே
தோன்றியிருக்கும்படிக்கு மெய்யானவைகளுக்
குத் திருட்டாந்தங்களாகிய கையால் செய்யப்
பட்ட பரிசுத்த ஸ்தலங்களில் அல்ல, பரமண்ட
லத்திலேதானே பிரவேசித்திருக்கிறார்.-25 அந்
தப் பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தை
எடுத்து, வருஷந்தோறும் பரிசுத்தஸ்தலங்களிலே
பிரவேசித்ததுபோல அவர் தம்மை அடிக்கடி
பலியிடும்படிக்கு (அப்படிப் பிரவேசிக்கவில்
லை) —26 அதற்காகவானால் அவர் உலகம் உண்
டானது முதற்கொண்டு அடிக்கடி பாடுபடவே
ண்டியிருக்குமே; அப்படி அல்ல, அவர் தம்
மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்
கும்பொருட்டாக (முந்தின) யுகத்தின் முடி
விலே ஒரேதரம் வெளிப்பட்டார்.—27 அன்றி
யும் மனிதர்கள் ஒரேதரம் மரிக்கிறதும், பின்பு
நியாயத்தீர்ப்பு அடைகிறதும் தீர்மானிக்கப்பட்
டிருக்கிறதால்,—28 அதுபோலக் கிறிஸ்துவும், அ
நேகருடைய பாவங்களைச் சுமந்துகொண்டுபோ
கும்படிக்கு ஒரேதரம் பலியிடப்பட்டுத் தமக்கா
கக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்
சிப்பைக் கொடுப்பதற்கு இரண்டாந்தரம் பாவ
ப்பலியில்லாமல் தோன்றுவார்.

## ௰. அதிகாரம்.

இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது வருகி

றவைகளாகிய நன்மைகளின் பொருளுள்ளதாய் இராமல், அவைகளின் நிழலைமாத்திரம் காண்பிக்கிறதாயிருக்கிறதால் வருஷந்தோறும் இடைவிடாமல் செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான பலிகளினாலே அவைகளைச் செலுத்துகிறவர்களுக்கு நிறைவான (ஆசீர்வாதத்தை) ஒருக்காலும் கொடுக்கமாட்டாது.—2 கொடுத்ததானால், ஆராதனைசெய்தவர்கள் ஒருதரம் சுத்தமாக்கப்பட்டபின், இன்னும் பாவங்கள் உண்டென்று தங்கள் மனதிலே அதிகமாய் நினையாதிருப்பதால், அந்தப் பலிகளைச் செலுத்துகிறது நிறுத்தப்படும் அல்லவா?—3 அப்படி இராதபடியால் பாவங்கள் உண்டென்று அவைகளினாலே வருஷந்தோறும் நினைவுகூர்தல் உண்டாயிருக்கிறதே.

4 அல்லாமலும் ஆடுமாடுகளுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.—5 ஆனதால் அவர் உலகத்தில் பிரவேசித்திருக்கிறபொழுது, பலியையும் காணிக்கையையும் நீர் விரும்புகிறதில்லை, ஒரு சரீரத்தை எனக்கு எத்தனமாக்கினீர்.–6 தகனபலிகளும் பாவப்பலிகளும் உமக்குப் பிரியமல்லாதபொழுது,— 7 நான் சொன்னது: பராபரனே, என்னைக்குறித்து வேதபுத்தகத்திலே எழுதியிருக்கிறபடி உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேன் என்று சொன்னேன் என்றார்.—8 நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டுவருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்லியபடி பலியையும், காணிக்கையையும், தகனபலிகளையும், பாவப்பலிகளையும் விரும்பமாட்டீர்; அவைகள் உமக்குப் பிரியமானவைகள் அல்லவென்று சொன்னபின்பு,—9 பராபரனே, உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேன் என்று சொன்னதால், இரண்டாம் (ஏற்பாட்டை) ஸ்தாபிக்கும்படிக்கு முதலானதை எடுத்துப்போட்டார்.–10 அந்தச் சித்தத்தின்படி எல்லாக் காலங்களுக்காகவும் ஒரேதரம் இயேசுக்கிறிஸ்துவினுடைய சரீரம் பலியிடப்பட்டதினாலே நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

11 அன்றியும், எந்த ஆசாரியனும் நாள்தோறும் ஆராதனை செய்கிறவனாய்ப் பாவங்களை ஒருக்காலும் நிவிர்த்திசெய்யமாட்டாத ஒரேவித பலிகளை அடிக்கடி செலுத்திவருவான்.—12 அவர் மாத்திரம் என்றென்றைக்கும் பாவங்களை நீக்கும்படிக்கான ஒரே பலியைச் செலுத்திப் பராபரனுடைய வலதுபாரிசத்திலே உளுக்காந்து,— 13 அதுமுதல் தம்முடைய சத்துருக்கள் தம்முடைய பாதங்களின்படியாக்கப்படுமளவும் காத்துக்கொண்டிருக்கிறார்.—14 ஆகையால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களை அவர் ஒரே பலியினாலே என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்கள் ஆக்கினார்.

15 இதைக்குறித்துப் பரிசுத்தஆவியானவரும் நமக்குச் சாட்சிசொல்லுகிறார்.—16 எப்படியெனில், அந்த நாள்களுக்குப்பின் நான் அவர்களுடனே இந்த உடம்படிக்கைபண்ணுவேன் என்று சொன்னபின்பு சர்த்தர் திருவுளம்பற்றினது: நான் என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய இருதயங்களிலே கொடுப்பேன்; அவைகளை அவர்களுடைய மனதின்மேலே எழுதுவேன்.— 17 அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் நான் ஒரு காலத்திலாகிலும் நினைத்துக்கொள்வதில்லை என்றார்.—18 அந்தப்படி அவைகள் மன்னிக்கப்பட்டபடியால் பாவப்பலி இனிச் செலுத்தப்படவேண்டுவதில்லையே.

19 ஆகையால் சகோதரரே, பரிசுத்தமான இடங்களுக்குப் போகிற மார்க்கத்தை இயேசுவானவர் தமது சரீரமாகிய திரைச்சீலையின் வழியாய்ப் புதிதும் சீவனுமான மார்க்கமாக நமக்கு உண்டுபண்ணி வைத்ததால்,—20 அந்த மார்க்கத்தில் பிரவேசிக்கிறதற்கு அவருடைய திரு இரத்தத்தினாலே நமக்குத் தயிரியம் உண்டாயிருக்கிறபடியினாலும்,— 21 பராபரனுடைய ஆலயத்திலே நமக்குப் பெரிய ஆசாரியர் உண்டாயிருக்கிறபடியினாலும்,—22 நாம் குற்றத்தைச் சாற்றுகிற மனது நீங்கத் தெளிக்கப்பெற்ற இருதயம் உள்ளவர்களாய் உண்மையுள்ள இருதயத்தோடும், விசுவாசத்தினால் ஆகிற நிச்சயத்தோடும் பராபரனைச் சேரக்கடவோம்.—23 அல்லாமலும் சுத்தமான சலத்தால் கழுவப்பட்ட சரீரமுள்ளவர்களாய், நம்முடைய நம்பிக்கையை அறிக்கையிடுகிறதில் அசைவில்லாமல் உறுதியாய் இருக்கக்கடவோம்; வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவராய் இருக்கிறாரே.—24 மேலும் அன்புகூருதற்கும் நற்கிரியைகளைச் செய்கிறதற்கும் எழுப்புதல் உண்டாயிருக்கும்படிக்கு ஒருவரை ஒருவர் நோக்கிப்பார்த்து,—25 சபை கூடிவருதலைச் சிலர் விட்டுப்போகிறதுபோல நாம் அப்படிச் செய்யாமல், ஒருவருக்கொருவர் புத்தி சொல்லக்கடவோம்; அந்த நாள் சமீபமாகிறதை நீங்கள் அறிந்திருக்கிறதால், அதிகமாய் அப்படியே செய்யவேண்டும்.

26 சத்தியத்தை அறிந்துகொண்டபின் நாம் மனப்பூர்வமாய்ப் பாவம்செய்தால், வேறொருபாவப்பலி நமக்கு மீதியாயிருப்பதில்லை.–27 விரோதம்செய்கிறவர்களைப் பட்சிக்கும் அக்கினியுள்ள உக்கிரமும் நியாயத்தீர்ப்பும் வருமென்று பயத்தோடே காத்திருக்குதலே நமக்கு உண்டாயிருக்கும்.—28 மோசேயினுடைய பிரமாணத்தைத் தள்ளினவன் எவனோ, அவன் இரண்டுமூன்றுபேர் சாட்சிசொன்னபின்பு இரக்கமில்லாமல் கொலைசெய்யப்பட்டானே.–29 பராபரனுடைய குமாரனைக் காலினால் மிதித்துப்போட்டுத் தன்னைப் பரிசுத்தம்செய்த உடம்படிக்கையின் திரு இரத்தத்தை அசுத்தமென்று எண்ணிக் கிருபையின் ஆவியை அசட்டைபண்ணினவன் எவ்வ

ளவு அதிக ஆக்கினைக்குப் பாத்திரவானாயிருப்பான். — 30 நீங்களே யோசனைபண்ணுங்கள்; பழிவாங்குதல் எனக்கு உரியது; நானே பதில் செய்வேன் என்று சொன்ன கர்த்தரை அறிந்திருக்கிறோமே; அன்றியும் கர்த்தர் தம்முடைய சனங்களுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுப்பார் என்றும் சொல்லியிருக்கிறதே.—31 ஆ சீவனுள்ள பராபரனுடைய கைகளில் விழுகிறது பயங்கரமாயிருக்கிறது.

32 நீங்கள் முந்தின நாள்களை ஞாபகப்படுத்துங்கள்; அவைகளில் நீங்கள் பிரகாசமாக்கப்பட்டிருந்தபொழுது பாடுகளால் மிகுந்த போராட்டத்தைச் சகித்துக்கொண்டீர்களே. — 33 நீங்கள் நிந்தைகளாலும் உபத்திரவங்களாலும் மற்றவர்களுக்கு வேடிக்கைக்கு ஏதுவானவர்களாயும் அப்படியான மற்றவர்களுக்குத் தோழராயும் இருந்தீர்கள்.—34 கட்டப்பட்டிருந்த என்னோடேகூட நீங்கள் பாடுபெட்டீர்களே; பரமண்டலங்களில் அதிக மேன்மையும், உறுதியுமான ஆஸ்தி உங்களுக்கு உண்டென்று நீங்கள் அறிந்து, உங்கள் (லவுகீக) ஆஸ்திகளை (மற்றவர்கள்) கொள்ளையிட்டதற்குச் சந்தோஷமாய் இடங்கொடுத்தீர்கள்.–35 ஆகையால் மிகுந்த பலனுக்கு ஏதுவான உங்கள் தயிரியத்தை எறிந்துவிடாதிருப்பீர்களாக.

36 நீங்கள் பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவர்களாய் வாக்குத்தத்தத்தின் நன்மையைப் பெறும்படிக்குப் பொறுமை உங்களுக்கு வேண்டும்.—37 வருகிறவர் அதிககாலம் தாமதமாய் இராமல் சீக்கிரமாய் வருவார் என்றும்,—38 விசுவாசத்தினாலே நீதிமானானவன் பிழைப்பான், அவன் பின்வாங்கிப்போனால் அவன் மேல் என்னுடைய ஆத்துமா பிரியமாயிராதென்றும் (எழுதியிருக்கின்றது).—39 நாம் கெட்டுப்போகிறதற்கு ஏதுவாகப் பின்வாங்குகிறவர்களாய் இராமல் (நமது) ஆத்துமாவைக் காக்கிறதற்கு ஏதுவாக விசுவாசமுள்ளவர்களாய் இருக்கிறோம்.

## ௰௧. அதிகாரம்.

விசுவாசமானது நம்பப்படுகிறவைகளில் உறுதியும் காணப்படாதவைகளை வெளிப்படுத்துகிறதுமாய் இருக்கின்றது.—2 அதினாலே பூர்வீகத்தார் நற்சாட்சியைப் பெற்றார்கள்.

3 உலகம் பராபரனுடைய வார்த்தையால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய்க் காணப்படுகிறவைகள் தோறறப்படாத பொருள்களால் உண்டாயினவென்றும் விசுவாசத்தினாலே அறிந்திருக்கிறோம்.

4 விசுவாசத்தினாலே ஆபேல் என்பவன் காயீனுடைய பலியிலும் அதிகமான பலியைப் பராபரனுக்குச் செலுத்தினான்; அதினாலே அவன் நீதிமான் என்று சாட்சிபெற்றான்; அவனுடைய காணிக்கைகளைக்குறித்துப் பராபரனே சாட்சிகொடுத்தார்; அவன் மரித்தும் அதினாலே இப்பொழுதும் பேசுகிறான்.

5 விசுவாசத்தினாலே ஏனோக்கு என்பவன் மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டான்; பராபரன் அவனை எடுத்துக்கொண்டபடியினாலே அவன் காணப்படாமற்போனான்; அவன் எடுத்துக்கொள்ளப்படுகிறதற்குமுன்னே அவன் பராபரனுக்குப் பிரியமானவன் என்று சாட்சிபெற்றுக்கொண்டிருந்தான்.–6 பராபரனைச்சேருகிறவன், அவர் உண்டென்றும் அவர் தம்மைச் சாக்கிரதையாய்த் தேடுகிறவர்களுக்குப் பலனை அளிக்கிறவர் என்றும், விசுவாசிப்பானே; ஆகையால் விசுவாசம் இல்லாதவன் அவருக்குப் பிரியமாயிருக்கமாட்டான்.

7 நோவா என்பவனும் தற்காலத்திலே காணாதவைகளைக்குறித்துத் தேவ எத்தனமாய் எச்சரிக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே பயந்து, தன் குடும்பத்தை இரட்சிப்பதற்குப் பேழையை உண்டுபண்ணி, இதினாலே உலகம் ஆக்கினைக்கு உள்ளாயிற்று என்று தீர்ப்புக்காண்பித்து, விசுவாசத்தால் வருகிற நீதிக்குச் சுதந்தரவாளியானான்.

8 ஆபிரகாமும் பின்பு சுதந்தரமாகப் பெற்றுக்கொள்ளும்படிக்கான இடத்திற்குப் புறப்பட்டுப்போக அழைக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே கீழ்ப்படிந்து, தான் போகவேண்டிய இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப்போனான்.—9 தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட அந்நியதேசத்திலே அவன் அந்த வாக்குத்தத்தத்திற்கு உடன் சுதந்தரராகிய ஈசாக்கோடும் யாக்கோபோடும்கூட விசுவாசத்தினாலே சஞ்சரித்துக் கூடாரங்களிலே குடியிருந்தான்.–10 பராபரனாலே உண்டாக்கப்பட்டும் ஆளப்பட்டும் இருக்கிற அஸ்திபாரங்களுள்ள பட்டணத்திற்குப் போகக் காத்துக்கொண்டிருந்தபடியால் அப்படியிருந்தான்.—11 சாராளும் வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவரென்று எண்ணி, விசுவாசத்தினாலே கருப்பம் தரிக்கும்படி பெலன் அடைந்து, வயதுசென்றவளாய் இருந்தும் பிள்ளைபெற்றாள்.—12 ஆனபடியால் இந்தச் சங்கதியில் செத்தவனைப்போன்ற ஒருவனாலே வானத்திலுள்ள பெருக்கமான நட்சத்திரங்களைப்போலவும் எண்ணிறந்த கடற்கரை மணலைப்போலவும் மிகுந்த சனங்கள் உண்டானார்கள்.

13 அவர்கள் எல்லாரும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளை அடையாமல், தூரத்திலே அவைகளைக் கண்டு வாழ்த்துதலோடே விரும்பிப் பூமியின்மேலே தாங்கள் அந்நியராயும் வழிப்போக்கராயும் இருந்ததை அறிக்கைபண்ணி, விசுவாசத்தோடே இறந்துபோனார்கள்.–14 அப்படி அறிக்கைபண்ணுகிறவர்கள் சென்மதேசத்தை நாடிப்போகிறோம் என்று தெரியப்படுத்துகிறார்

கள்.—15 அவர்கள் தாங்கள் விட்டுவந்த தேசத்
தை நினைத்தார்களானால், அதற்குத் திரும்பும்படி
இடமுண்டே. — 16 அதையல்ல, அதிலும்
மேன்மையான பரமண்டலத்தில் உள்ளதையே
விரும்பினார்கள்; ஆகையால் பராபரனும் அவர்
களுடைய தேவன் என்று அழைக்கப்படுகிறதி
னாலே வெட்கப்படுகிறதில்லை; அவர்களுக்கு
ஒரு பட்டணத்தை எத்தனம்பண்ணினாரே.

17 மேலும், ஆபிரகாமானவன் தான் சோ
திக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே ஈசாக்
கைப் பலியாக ஒப்புக்கொடுத்தான்.—18 ஈசாக்
கினாலே உனக்குச் சந்ததி உண்டாகும் என்று
அவனோடே சொல்லப்பட்டிருந்ததே.-19 இப்
படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப் பெற்றவன்,
இவனை மரித்தோரிலிருந்து எழுந்திருக்கப்பண்
ணப் பராபரன் வல்லவராய் இருக்கிறார் என்று
எண்ணித் தனக்கு ஒரேபேறானவனையே பலி
யாக ஒப்புக்கொடுத்தான்; ஆனதால் உவமையா
கும்படியே அவனைத் திரும்பப் பெற்றுக்கொண்
டான்.

20 ஈசாக்கு என்பவனும் பிற்காலத்திற்கு
உரியவைகளின்மேல் உள்ள விசுவாசத்தினாலே
யாக்கோபையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான்.-
21 இயாக்கோபு என்பவனும் மரணகாலத்தில்
விசுவாசத்தினாலே யோசேப்பினுடைய குமா
ரர் இருவரையும் ஆசீர்வதித்து, தன் கோலின்
முனையிலே (சாய்ந்து) தொழுதுகொண்டான்.-
22 யோசேப்பு என்பவனும் இஸ்ரவேல் சந்
ததியார் (எகிப்து தேசத்தை) விட்டுப் புறப்படு
வார்கள் என்று தன் சீவகாலத்தின் முடிவில்
விசுவாசத்தினாலே அறிவித்து, தன் எலும்புகளைக்
குறித்துக் கட்டளைகொடுத்தான்.

23 மோசே என்பவன் பிறந்தபொழுது அவ
னுடைய தாய்தகப்பன்மாரும் பிள்ளை அழகுள்
ளது என்று கண்டு, விசுவாசத்தினாலே இராசா
வினுடைய கட்டளைக்குப் பயப்படாமல், அந்
தப் பிள்ளையை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்
கள்.—24 மோசே என்பவனும் பெரிய வயதுள்
ளவனானபொழுது பார்வோனுடைய குமாரத்தி
மகனென்று அழைக்கப்படுகிறதை விசுவாசத்தி
னாலே வெறுத்து,—25 அநித்தியமான பாவசந்
தோஷங்களை அநுபவிப்பதை அல்ல, பராபரனு
டைய சனங்களோடேகூடத் துன்பத்தை அநு
பவிப்பதையே அதிகமாய்த் தெரிந்துகொண்
டான். — 26 இனிமேல் வரும் பலனை அவன்
நோக்கிப்பார்த்து, எகிப்திலுள்ள பொக்கிஷங்க
ளிலும் கிறிஸ்துவின்நிமித்தம் வருகிற நிந்தை
யை அதிக ஐசுவரியமென்று எண்ணினான்.—
27 காணப்படாதவரைக் கண்டாற்போல உறு
தியாய்ப் பற்றிக்கொண்டதால் அவன் விசுவா
சத்தினாலே இராசாவினுடைய மூர்க்கத்திற்குப்
பயப்படாமல் எகிப்தைவிட்டுப் போனான். —
28 தலைப்பிள்ளைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவே
லரைத் தொடாதபடிக்கு அவன் விசுவாசத்தி
னாலே பஷ்காவையும் இரத்தம் பூசுதலையும் ஏற்
படுத்தினான்.

29 விசுவாசத்தினாலே அவர்கள் சிவந்த சமுத்
திரத்தை உலர்ந்த தரையைப்போலக் கடந்து
போனார்கள்; எகிப்தார் அப்படிச்செய்யத் தேடி
னபொழுது அமிழ்ந்துபோனார்கள்.

30 (இஸ்ரவேலருடைய) விசுவாசத்தினாலே
இயெரிகோபட்டணத்தின் மதில்கள் (அவர்க
ளால்) ஏழுநாளுக்குள்ளே சூழப்பட்டு விழுந்
தன.

31 வேசியாயிருந்த இராகாப் என்பவள் விசு
வாசத்தினாலே வேவுகாரரைச் சமாதானத்தோ
டே ஏற்றுக்கொண்டு, அவிசுவாசிகளோடே
அழிக்கப்படாதிருந்தாள்.

32 பின்னும் யாரைக்குறித்துச் சொல்லலாம்;
கிதேயோனையும் பாராக்கையும் சமுசோனையும்,
இயெப்பத்தாவையும், தாவீதையும், சாமுவேலை
யும், தீர்க்கதரிசிகளையுங்குறித்து நான் விவரம்
சொல்லவேண்டுமானால் காலம் போதாது. —
33 அவர்களும் விசுவாசத்தினாலே இராச்சியங்
களைச் செயித்துக்கொண்டு, நீதியை நடப்பித்து,
வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைப் பெற்
றுக்கொண்டு, சிங்கங்களுடைய வாய்களை அ
டைத்து, அக்கினியின் பலத்தை அவித்து,—
34 கட்கங்களின் கூர்மைக்குத் தப்பிப் பலஈனத்
திலே பலன்கொண்டு, யுத்தகாலத்தில் வல்லவர்
களாகி, அந்நியருடைய பாளயங்களைக் கவிழ்த்துப்
போனார்கள்.—35 (விசுவாசத்தினாலே) ஸ்திரிக
ளும் செத்துப்போன தங்களுக்கு உரியவர்களை
உயிரோடு எழுந்திருக்கப் பெற்றார்கள்; (விசு
வாசத்தினாலே) வேறுசிலர் அதிக மகிமையாய்
உயிரோடே எழும்பும்படிக்கு மீட்பை அங்கிக
ரியாமல் இழுப்புண்டு வாதிக்கப்பட்டார்கள்.—
36 (விசுவாசத்தினாலே) வேறுசிலர் நிந்தைக
ளையும், அடிகளையும், சங்கிலிகளையும், காவலை
யும் சகித்துக்கொண்டார்கள். — 37 கல் எறி
யப்பட்டார்கள்; வாளால் அறுக்கப்பட்டார்கள்;
சோதிக்கப்பட்டார்கள்; கட்சத்தினாலே வெட்
டப்பட்டு மரித்தார்கள்; செம்மறியாட்டுத் தோல்
களையும் வெள்ளாட்டுத் தோல்களையும் போர்த்துக்
கொண்டு, குறைச்சலையும் உபத்திரவத்தையும்
துன்பத்தையும் சகித்துத் திரிந்து,—38 வனாந்த
ரங்களிலேயும் மலைகளிலேயும் குகைகளிலேயும்
பூமியின் வெடிப்புகளிலேயும் சிதறி நடந்தார்கள்;
உலகம் அவர்களுக்கு அபாத்திரமாய் இருந்தது.

39 அவர்கள் எல்லாரும் விசுவாசத்தைக்குறி
த்து நற்சாட்சிபெற்றிருந்தும், வாக்குத்தத்தம்
பண்ணப்பட்டதை அடையாமல்போனார்கள்.—
40 பராபரன் நம்மைக்குறித்து அதிக நன்மையா
னதை ஏற்படுத்தினதால் அவர்கள் நம்மையன்றி

நிறைவுள்ள ஆசீர்வாதத்தை அடையாதபடிக்கு (அப்படியே போனார்கள்).

## ௰௨. அதிகாரம்.

ஆகையால் மேகம்போல இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, நாம் பாரமான யாவற்றையும் நம்மைச் சுற்றிநிற்கிற பாவத்தையும் தள்ளிப்போட்டு, விசுவாசத்தை ஆரம்பமாய் நடத்துகிறவராயும் முடிக்கிறவராயும் இருக்கிற இயேசுவை நோக்கி, நமக்குமுன் வைக்கப்பட்ட போராட்டச் சாலையிலே பொறுமையோடே ஓடக்கடவோம்.—2 அவர் தமக்குமுன்பாக வைத்திருந்த சந்தோஷத்திற்காக அவலட்சணப்படுதலை எண்ணாமல், சிலுவையில் (மரணத்தைச்) சகித்துப் பின்பு பராபரனுடைய ஆசனத்தின் வலதுபாரிசத்தில் உளுக்காந்திருக்கிறார்.

3 ஆனதால் உங்கள் ஆத்துமாக்கள் இளைப்புள்ளவைகளாய் இருக்கும்பொழுது நீங்கள் தயிரியம் அற்றவர்களாய்ப் போகாதபடிக்குப் பாவிகளால் இப்படிப்பட்ட விரோதத்தைச் சகித்த அவரையே நன்றாய்த் தியானித்துக்கொள்வீர்களாக. — 4 அந்தப் பாவத்திற்கு விரோதமாய்ப் போராட்டம்செய்கிற நீங்கள் இதுவரைக்கும் இரத்தம் சிந்தப்படத்தக்கதாக எதிர்நிற்கவில்லையே.—5 அன்றியும், என் மகனே, கர்த்தருடைய தண்டனையை அற்பமாக எண்ணாமலும் அவரால் கடிந்துகொள்ளப்படுகையில் தயிரியமற்றவனாகாமலும் இருப்பாயாக என்றும், — 6 கர்த்தராலே அன்புகூரப்பட்டவன் எவனோ அவனை அவர் தண்டித்துத் தாம் சேர்த்துக்கொள்ளுகிற எந்த மகனையானாலும் அடித்துவருவாரே என்றும், பிள்ளைகளாகிய உங்களுக்குச் சொல்லியிருக்கிற ஆறுதலுள்ள வசனத்தை மறந்தீர்கள்.— 7 நீங்கள் (அவருடைய) தண்டிப்புக்கு உட்பட்டிருக்கிறபடியால் பராபரன் உங்களைத் (தம்முடைய) பிள்ளைகள்போல எண்ணி நடப்பிக்கிறாரே; தகப்பனால் தண்டிக்கப்படாத பிள்ளை ஒன்று உண்டா? — 8 எல்லாப் (பிள்ளைகளும்) தண்டிக்கப்பட்டதுபோல நீங்களும் தண்டிக்கப்படாவிட்டால் பிள்ளைகளாயிராமல் வேசிப்பிள்ளைகளாய் இருப்பீர்களே.

9 அன்றியும், நம்முடைய சரீரத்திற்குத் தகப்பன்மாரானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொழுது நாம் அவர்களுக்கு வந்தனம்செய்திருக்க, ஆவிகளுக்குப் பிதாவானவருக்கு நாம் பிழைக்கும்படி மிகவும் அதிகமாய்க் கீழ்ப்படியவேண்டுமல்லவா?— 10 அந்தத் தகப்பன்மார்கள் தங்களுக்குத் தோன்றினபடி கொஞ்சக்காலமாய் நம்மைத் தண்டித்தார்கள்; அவர் தம்மைப்போல நாம் பரிசுத்தராகுதற்கு ஏதுவான பிரயோசனம் வரும்பொருட்டே அப்படிச் செய்கிறார். — 11 தண்டனை உண்டாயிருக்கும்பொழுது அது (நமக்குச்) சந்தோஷமாக அல்ல, துக்கமாகத் தோன்றுகின்றது; பின்பு அதினாலே முயற்சிப்பட்டவர்களுக்கு அது நீதியென்னும் பாக்கிய பலனைக் கொடுக்கின்றது.

12 ஆகையால், தளர்ச்சியாயிருக்கிற (உங்கள்) கைகளையும் இளைப்புள்ள (உங்கள்) கால்களையும் செம்மைப்படுத்துவீர்களாக.—13 முடமுள்ள (அவயவம்) புரண்டுபோகாமல் சொஸ்தமாகும்படிக்கு உங்கள் கால்களுக்காகச் சரியான பாதைகளைச் செய்வீர்களாக.—14 யாவருடனேயும் சமாதானமாயிருக்கவும் பரிசுத்தராயிருக்கவும் சாக்கிரதையாய் இருப்பீர்களாக; பரிசுத்தமில்லாதவன் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.—15 ஒருவரும் பராபரனுடைய கிருபையை இழந்துபோகாதபடிக்கும், மற்றநேகரும் அசுசிப்படத்தக்கதாக கசப்புள்ள வேர் உங்களுக்குள்ளே தோன்றிக் கலக்கம் உண்டாக்காதபடிக்கும்,—16 ஒருவரும் வேசிமார்க்கராயும், ஏசா என்பவன்போல லவுகீக நடத்தை உள்ளவர்களாயும் இராதபடிக்கும் எச்சரிக்கையாய் இருப்பீர்களாக; அவன் ஒரேவேளைச் சாப்பாட்டுக்காக முதற்பேறானவனுக்கு உரிய சுதந்தரங்களை விட்டுவிட்டானே.— 17 பின்பு உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, அவன் (தன் தகப்பனுடைய) ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ள விரும்பியும் தள்ளப்பட்டான்; அதைக் கண்ணீரோடே மிகவும் தேடியும் (தகப்பனிடத்தில்) மாறுதலைக் காணாமல்போனானே.

18 அன்றியும், தொடப்பட்டு அக்கினி பற்றி எரிகிற மலையினிடத்திலும், மந்தாரத்தினிடத்திலும் இருளினிடத்திலும், — 19 பெருங்காற்றினிடத்திலும், எக்காளத்தின் முழக்கத்தினிடத்திலும், வார்த்தைகளின் தொனியினிடத்திலும் நீங்கள் வரவேண்டியவர்கள் அல்லவே; அந்தத் தொனியைக் கேட்டவர்கள் பின்னும் வசனம் தங்களுக்குத் தோன்றாதபடிக்கு வேண்டிக்கொண்டார்கள்.—20 என்னத்தினாலெனில், இந்த மலையை ஒரு மிருகம் தொட்டால், அதின்மேலே கல்லெறியவேண்டும், அல்லது அதை அம்பினாலே எய்து கொலைசெய்யவேண்டும் என்று சொல்லப்பட்ட கட்டளையை அவர்கள் சகிக்கமாட்டாதிருந்தார்கள். — 21 அந்தத் தரிசனை இவ்வளவு பயங்கரமாய் இருந்தது; அதினாலே மோசேயும், நான் மிகவும் அதிகமாய்ப் பயப்பட்டு நடுங்குகிறேன் என்றான்.—22 நீங்கள் மலையாகிய சீயோனிடத்திற்கும் சீவனுள்ள தேவனுடைய பட்டணமாகிய பரம எருசலேமினிடத்திற்கும், அநேகம் பதினாயிரமாகிய தூதர்களின் விசேஷமான சங்கத்தினிடத்திற்கும்,—23 பரமண்டலத்திலே பேர் எழுதியிருக்கிற முதற்பேறானவர்களின் சபையினிடத்திற்கும், யாவருக்கும் தேவனாகிய நியாயாதிபதியினிடத்திற்கும்,

நிறைந்த பாக்கியமுள்ளவர்களாகிய நீதிமான்களின் ஆவிகளினிடத்திற்கும், — 24 புதிதான உடம்படிக்கைக்கு ஏற்ற மத்தியஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய இரத்தம் கூப்பிட்டதுபோல அல்ல, அதிக நன்மையானவைகளை அறிவித்துத் தெளிக்கப்படுகிற இரத்தத்தினிடத்திற்கும் சேருகிறவர்களாய் இருக்கிறீர்கள்.

25 திருவுளம்பற்றுகிறவரை நீங்கள் அசட்டைபண்ணுதபடிக்குப் பாருங்கள்; என்னத்தினுலெனில், பூமியிலே பேசினவனை அசட்டைபண்ணின அவர்கள் (ஆக்கினைக்குத்) தப்பாமல் இருக்க, பரமண்டலத்திலிருந்து பேசுகிறவரை நாம் விட்டு விலகினுல் (ஆக்கினைக்குத்) தப்பிப் போவோமா?—26 அவருடைய சத்தம் முற்காலத்திலே பூமியை அசையப்பண்ணிற்று; அன்றியும், இனிமேல் ஒருகாலத்திலே பூமியை மாத்திரமல்ல, வானத்தையும் அசையப்பண்ணுவேன் என்று இப்பொழுது வாக்குத்தத்தம்செய்திருக்கிருர். — 27 இனிமேல் ஒருகாலத்திலே என்று சொன்ன வசனம் அசைவில்லாதவைகள் நிலையாய் இருக்கத்தக்கதாக (அற்பமாய்ச்) செய்யப்பட்டவைகளாகிய அசைவுள்ளவைகள் நீக்கப்படும் என்று குறிக்கின்றது.—28 ஆனதால், அசைவில்லாத இராச்சியத்தை நாம் பெற்றுக்கொண்டிருக்க, நம்முடைய பராபரன் (பொல்லாதவர்களைப்) பட்சிக்கும் அக்கினியாய் இருக்கிறபடியினுலே, — 29 நாம் வணக்கத்தோடும் மெய்த்தேவபத்தியோடும் பராபரனுக்குப் பிரியமாய் ஆராதனை செய்யத்தக்க கிருபையுள்ள ஈவைப் பற்றிக்கொள்ளக்கடவோம்.

## ௰௩. அதிகாரம்.

சகோதரசிநேகம் நிலையாய் இருக்கக்கடவது.—2 அந்நியரை உபசாரம்செய்கிற குணத்தினுலே சிலர் (தங்களுக்குத்) தெரியாதபடிக்குத் தேவதூதரை உபசரித்தால் நீங்கள் அந்நியரை உபசாரம்செய்ய மறவாதிருப்பீர்களாக.—3 கட்டப்பட்டிருக்கிறவர்களோடேகூடக் கட்டப்பட்டவர்கள்போல நீங்கள் அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்; உங்களையும் சரீரத்தோடிருக்கிறவர்களென்று அறிந்து, பாடுபடுகிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள். —4 விவாகம்பண்ணுதல் யாவருக்குள்ளும் கனம்பொருந்தியதாய் இருக்கக்கடவது; சமுசாரமார்க்கத்தாருடைய படுக்கை (விபசாரத்தினுலே) அசுசிப்படாதிருப்பதாக; வேசிமார்க்கருக்கும் விபசாரக்காரருக்கும் பராபரன் நியாயத்தீர்ப்புக் கொடுப்பாரே.—5 உங்களுக்கு உண்டானவைகள் போதும் என்கிற மனதுள்ளவர்களாய்ப் பணத்தின்மேலுள்ள ஆசையில்லாமல் நடந்துகொள்வீர்களாக; நான் உன்னை ஒருக்காலும் விட்டு விலகுவதும் இல்லை, உன்னை ஒருக்காலும் கைவிடுவதும் இல்லை என்று அவர் அருளிச்செய்தாரே.—6 அதினுலே நான் தயிரியங்கொண்டு கர்த்தர் எனக்குச் சகாயராய் இருக்கிருர்; மனிதனுனவன் எனக்கு என்னசெய்வானே என்று நான் பயப்படவேண்டுவதில்லை என்று சொல்லலாமே.

7 தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்திப்போனவர்களை நீங்கள் ஞாபகப்படுத்தி, அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றுய்ப் பார்த்து, (அவர்களுடைய) விசுவாசத்தைப் பின்பற்றுங்கள். — 8 இயேசுக்கிறிஸ்துவானவர் நேற்றும் இன்றைக்கும் என்றென்றைக்கும் ஒரேவிதமாய் இருக்கிறவர். — 9 பலவிதமாயும் அந்நியமாயும் இருக்கிற போதனைகளால் நீங்கள் சிதற அடிக்கப்படாதிருப்பீர்களாக; போசனபதார்த்தங்களாலே அல்ல, (தேவ) கிருபையினுலே (உங்கள்) மனது உறுதியாகிறதே நன்மையாயிருக்கின்றது; போசனபதார்த்தங்களுக்கு நித்த முயற்சியாய் இருக்கிறவர்கள் அதினுலே பிரயோசனம் அடையவில்லையே.—10 நமக்கு உண்டாயிருக்கிற பலிபீடத்தில் உள்ளவைகளைக் கூடாரத்தில் ஆராதனைசெய்கிறவர்கள் புசிக்கிறதற்கு அதிகாரமில்லை.

11 அது எப்படித் தெரியுமெனில், பிரதான ஆசாரியன் பாவப்பலிக்காக மிருகங்களின் இரத்தத்தைப் பரிசுத்த ஸ்தலங்களில் கொண்டுவருகிறபொழுது அந்த மிருகங்களுடைய உடல்கள் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்ச் சுட்டெரிக்கப்படுமே.–12 அந்தப்படி இயேசுவானவரும், தமது திரு இரத்தத்தினுலே சனங்களைப் பரிசுத்தம் செய்யும்படிக்குப் பட்டணத்துக்குப் புறம்பே பாடுபட்டார். — 13 ஆனதால் நாம் அவருடனேகூட நிந்தையைச் சகிக்கிறவர்களாய் அவரோடேகூடப் பாளயத்திற்குப் புறம்பே புறப்படக்கடவோம்; நிலைமையான பட்டணம் இங்கே நமக்கு இல்லையே.—14 மறுலோகத்தில் உள்ளதை மிகவும் தேடுகிறுேமே.–15 மேலும் அவருடைய திருநாமத்திற்குத் துதியை அறிக்கையிடுகிற உதடுகளின் கனியாகிய தோத்திரப்பலியை நாம் அவர்மூலமாய் எப்பொழுதும் பராபரனுக்குச் செலுத்தக்கடவோம்.

16 அன்றியும் நன்மைசெய்தலையும், (எளியவர்களுக்குக்) கொடுத்தலையும் மறவாதிருப்பீர்களாக; அப்படிப்பட்ட பலிகள்மேல் பராபரன் மிகவும் பிரியமாயிருக்கிருரே.–17 உங்களை நடத்துகிறவர்கள் (கர்த்தாவுக்குக்) கணக்கு ஒப்புவிக்கிறவர்களாய் உங்கள் ஆத்துமாக்களுக்காக விழித்துக்கொள்ளுகிருர்களே; ஆகையால் அவர்கள் துக்கமாய் அல்ல, சந்தோஷமாய் அப்படிச் செய்யும்படிக்கு நீங்கள் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடங்குவீர்களாக; (அவர்கள் துக்கமாய் அப்படிச் செய்தால்) அது உங்களுக்குப் பிரயோசனமாய் இருக்கமாட்டாதே. — 18 நாங்கள் எவ்

விதத்தினாலும் நன்றாய் நடக்க விரும்பிக்கொ
ண்டு நற்சாட்சிசொல்லுகிற மனது எங்களுக்கு
உண்டென்று நாங்கள் நிச்சயமாயிருக்கிறபடி
யால் எங்களுக்காகச் செபம்பண்ணுவீர்களாக.—
19 நான் அதிசீக்கிரமாய் உங்களுக்குத் திரும்
பக் கொடுக்கப்படும்படிக்கு நீங்கள் அப்படிச்
செய்யவேண்டுமென்று அதிகமாய்க் கேட்டுக்
கொள்ளுகிறேன்.

20 அன்றியும் நம்முடைய கர்த்தருமாய் ஆடு
களின் பெரிய மேய்ப்பருமாய் இருக்கிற இயே
சுவை நித்திய உடம்படிக்கைக்கு ஏற்ற இரத்
தத்தினாலே மரித்தோரிலிருந்து புறப்படப்பண்
ணின சமாதானத்திற்குக் காரணராகிய பரா
பரன்,—21 தமது சித்தத்தின்படி நீங்கள் செய்
கிறதற்கு ஏதுவாக எவ்விதமான நற்கிரியைக்கும்
உங்களைத் தகுதியானவர்களாக்கி, இயேசுக்கி
றிஸ்துவின்மூலமாய்த் தமது சன்னிதானத்திலே
பிரியமானதை உங்களுக்குள்ளே நடப்பிக்கக்கட
வர்; அவருக்கு என்றைக்கும் துதி உண்டாவ
தாக.—ஆமென்.

22 சகோதரரே, நான் சுருக்கமாய் உங்க
ளுக்கு எழுதின இந்தப் புத்திகளை அங்கிகரிக்கும்
படிககு வேண்டிக்கொள்ளுகிறேன்.

23 சகோதரனாகிய தீமோத்தேயு விடுதலையாக்
கப்பட்டான் என்று அறிவீர்களாக; அவன் சீக்
கிரமாய் வந்தால் அவனுடனேகூட உங்களைக்
காண்பேன்.—24 உங்களை நடத்துகிறவர்களுக்
கும் மற்றப் பரிசுத்தவான்கள் யாவருக்கும் (என்
னாலே) வாழ்த்துதல்செய்யுங்கள்.—25 இத்தாலி
தேசத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்துதல்
செய்கிறார்கள்; தேவகிருபை உங்கள் அனைவ
ரோடும் இருக்கக்கடவது.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய

# யாக்கோபு எழுதின

## பொதுவான நிருபம்.

### க. அதிகாரம்.

பராபரனுக்கும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வுக்கும் ஊழியக்காரனாகிய யாக்கோபு அங்கங்கே
சிதறியிருக்கிற பன்னிரண்டு கோத்திரங்களுக்
கும் எழுதுகிறதாவது:

2 நீங்கள் வாழ்க; என் சகோதரரே, உங்கள்
விசுவாசத்தைப் பரிட்சைபார்த்தல் பொறுமையை
உண்டாக்கும் என்று அறிந்திருக்கிறபடியால்,—
3 தூண்டுகிற பல துன்பங்களில் நீங்கள் அகப்
படும்பொழுது அதை மிகுந்த சந்தோஷத்திற்கு
ஏதுவாக எண்ணிக்கொள்ளுங்கள்.—4 நீங்கள்
ஒன்றிலும் குறைவுள்ளவர்களாய் இராமல் நிறை
வுள்ளவர்களாயும் தேறினவர்களாயும் இருக்கத்
தக்கதாக அந்தப் பொறுமை நிறைந்த கிரியை
யையே செய்யக்கடவது.

5 உங்களில் ஒருவன் நற்புத்தியில் குறைவுள்
ளவனானால், யாவருக்கும் சம்பூரணமாய்க் கொ
டுக்கிறவருமாய் ஒருவனையும் அதட்டாதவருமா
யிருக்கிற பராபரனிடத்தில் அவன் கேட்கக்கட
வன், அப்பொழுது அவனுக்குக் கொடுக்கப்
படும்.—6 அவன் எவ்வளவாகிலும் சந்தேகப்
படாமல் விசுவாசத்தோடே கேட்கக்கடவன்;
சந்தேகப்படுகிறவன் காற்றினால் அடிக்கப்பட்டு
அசைகிற கடலின் அலைக்கு ஒப்பாயிருப்பா
னே.—7 அப்படிப்பட்ட மனிதன் கர்த்தரிடத்தி
லே எதையாகிலும் பெற்றுக்கொள்வேன் என்று
நினையாதிருப்பானாக.—8 இருமனம் உள்ளவன்
தன் வழிகள் யாவிலேயும் நிலையற்றவனாய் இருக்
கிறான்.

9 (அன்றியும்) தாழ்மைப்படுகிற சகோதரன்
தான் உயர்த்தப்படுவதைக்குறித்து மேன்மைபா
ராட்டக்கடவன்.—10 ஐசுவரியவான் தான்
புல்லின் பூவைப்போல ஒழிந்துபோவதால், தாழ்
மைப்படுவதைக்குறித்து மேன்மைபாராட்டக்கட
வன்.—11 சூரியன் உதயமாகி வெய்யிலைக்
கொடுக்கும்பொழுது, புல் உலர்ந்து, அதின் பூ
உதிர்ந்து, அதின் அழகான வடிவு அழிந்துபோ
மே; அப்படிப்போல ஐசுவரியவானும் தன் மார்க்
கங்களிலே அழிந்துபோவான்.

12 சோதனையைச் சகிக்கிற மனிதன் பாக்கிய
முள்ளவன்; ஏனென்றால், அவன் உத்தமனாக்கப்
பட்டபின்பு கர்த்தர் தம்மிடத்தில் அன்புகூரு
கிறவர்களுக்கு வாக்குத்தத்தம்பண்ணின சீவ
கிரீடத்தைப் பெறுவான்.—13 தூண்டிவிடப்
படுகிற எவனும் பராபரனால் தூண்டிவிடப்படு
கிறேன் என்று சொல்லாதிருப்பானாக; பரா
பரன் பொல்லாங்குகளால் தூண்டிவிடப்பட
வும், பாவத்திற்கு ஏதுவாக ஒருவனையும் தூண்டி
விடவுமாட்டாரே.—14 அவனவன் தன் தன்
சுய இச்சையினாலே தூண்டி இழுக்கப்பட்டுச்
சோதிக்கப்படுகிறான்.—15 பின்பு இச்சையா

னது கருப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும்;
பாவம் நிறைவேறினபொழுது அது மரணத்தை
உண்டாக்கும்.
16 எனக்குப் பிரியமான சகோதரரே, வஞ்சிக்
கப்படாதிருப்பீர்களாக.—17 எந்த நல்ல ஈவும்
நிறைவுள்ள எந்த வரமும் உயரத்தினின்று சுடர்
களின் பிதாவினாலே வருகின்றன; அவருக்கு
எவ்வளவாகிலும் மாறுதலும் வேற்றுமையின் நிழ
லும் இல்லை. — 18 அவர் சித்தமானபடியால்
தம்முடைய சிருட்டிகளில் நாம் முதற்பலன்களா
கும்படிக்கு நம்மைச் சத்தியத்தின் வசனத்தினா
லே ஜெனிப்பித்தார்.
19 ஆகையால், எனக்குப் பிரியமான சகோ
தரரே, யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும்,
பேசுகிறதற்குத் தாமதமாயும்,—20 பராபரனுக்கு
ஏற்ற நீதியை மனிதருடைய கோபம் நடப்பிக்க
மாட்டாதபடியினாலே கோபிக்கிறதற்குத் தாமத
மாயும் இருக்கக்கடவர்கள். — 21 ஆகையால்
அழுக்கு யாவையும் மிகுதியான பொல்லாங்கு
களையும் நீங்கள் தள்ளிவிட்டு, நடப்பட்டதாயும்
உங்கள் ஆத்துமாக்களை இரட்சிக்கத்தக்கதாயும்
இருக்கிற வசனத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்
ளுங்கள்.
22 அல்லாமலும் நீங்கள் தப்பான யோசனை
யினாலே உங்களை வஞ்சியாதபடிக்கு வசனத்
தைக் கேட்கிறவர்களாய்மாத்திரம் அல்ல, அதின்
படி செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக. —
23 என்னத்தினாலெனில் ஒருவன் வசனத்தைக்
கேட்டும் அதின்படி செய்யாதவனானால், கண்
ணாடியிலே தன் சுபாவமுகத்தைப் பார்க்கிற
மனிதனுக்கு ஒப்பாயிருப்பான். — 24 அவன்
தன்னைத்தானே பார்த்தபின்பு புறப்பட்டுப்போ
னவுடனே தான் இருந்த விதத்தை மறப்பான்.–
25 சுயாதீனத்திற்கு ஏதுவான நிறைவுள்ள பிர
மாணத்தை உற்றுப்பார்த்து அதிலே நிலையாயி
ருக்கிறவனே (அதை) மறந்துபோகத்தக்கதாகக்
கேட்கிறவனாயிராமல், அதற்கு ஏற்ற கிரியை
செய்கிறவனாயும் இருந்து, தன் செய்கையில்
பாக்கியவானாயிருப்பான். — 26 உங்களில் ஒரு
வன் தன் நாவை அடக்காமல், தன் இருதயத்
தை வஞ்சித்துத் தன்னைத் தேவபத்தியுள்ளவன்
என்று நினைத்தால், அவனுடைய தேவபத்தி
வீணானதாயிருக்கும். — 27 திக்கற்ற பிள்ளைக
ளும் கைம்பெண்களும் படுகிற உபத்திரவத்தி
லே அவர்களை விசாரிக்கிறதும், உலகத்தால் அசு
சிப்படாதபடிக்குத் தன்னைக் காத்துக்கொள்ளு
கிறதுமே, பிதாவாகிய பராபரனுக்குமுன்பாக
மாசில்லாத சுத்தமான பத்தியாய் இருக்கின்றது.

## உ. அதிகாரம்.

என் சகோதரரே, மகிமையுள்ள நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் உள்ள
விசுவாசம் உங்களுக்குள்ளே பட்சபாதத்தோ
டே இராதபடிக்குப் பாருங்கள். — 2 அது எப்
படியெனில், பொன்மோதிரத்தையும் பிரகாச
முள்ள வஸ்திரத்தையும் தரித்திருக்கிற ஒரு மனி
தனும், சந்தையான வஸ்திரத்தைத் தரித்திருக்கிற
ஒரு தரித்திரனும் உங்கள் ஜெபஆலயத்தில் பிர
வேசிக்கும்பொழுது, — 3 பிரகாசமுள்ள வஸ்தி
ரத்தைத் தரித்தவனை வணக்கமாய் நோக்கி, நீர்
கனமாய் இவ்விடத்தில் உளுக்காரும் என்றும்,
தரித்திரனை, நீ அங்கே நில்லு, அல்லது, இங்
கே என் பாதப்படியினிடத்திலே உளுக்காரு
என்றும் நீங்கள் சொன்னால்,—4 உங்களுக்குள்
ளே பேதகம்பண்ணித் துர்ச்சிந்தனைகளோடே
நியாயாதிபதிகளானீர்கள் அல்லவா? — 5 எனக்
குப் பிரியமான சகோதரரே கேளுங்கள், விசுவா
சத்தில் ஐசுவரியவான்களாகவும், தம்மிடத்தில்
அன்புகூருகிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்
பண்ணின இராச்சியத்தைச் சுதந்தரிக்கிறவர்க
ளாகவும், இவ்வுலகத்தின் தரித்திரரைப் பரா
பரன் தெரிந்துகொள்ளவில்லையா?—6 அப்படி
யிருந்தும் நீங்கள் தரித்திரனைக் கனஈனம்பண்ணி
வருகிறீர்கள்; ஐசுவரியவான்கள் அல்லவோ உங்
களை ஒடுக்குகிறார்கள்? அவர்கள் அல்லவோ உங்
களை நியாயாசனங்களுக்குமுன்பாக இழுக்கிறார்
கள்? — 7 அவர்கள் அல்லவோ உங்களுக்குக்
கொடுக்கப்பட்ட நல்ல நாமத்தைத் தூஷணிக்கி
றார்கள்?–8 உன்மேல் அன்பாயிருக்கிறதுபோலப்
பிறனிடத்திலேயும் அன்புகூருவாயாக என்று
வேதவாக்கியம் சொல்லுகிற இராசரீகமான பிர
மாணத்தை நீங்கள் நிறைவேற்றினால் நன்மை
செய்வீர்கள்; பட்சபாதமாய் இருப்பீர்களானால்
பாவத்தை நடப்பித்து,—9 அக்கிரமக்காரரென்று
நியாயப்பிரமாணத்தால் கண்டிக்கப்படுவீர்களே.
10 எப்படியெனில், ஒருவன் வேதநூல் முழு
வதையும் கைக்கொண்டாலும், ஒரே பிரமாணத்
திற்குத் தப்பிநடந்தால், எல்லாப் பிரமாணங்க
ளுக்கும் விரோதமாய்க் குற்றவாளியாயிருப்பான்.–
11 என்னத்தினாலென்றால், விபசாரம்பண்ணாதி
ருப்பாயாக என்று சொன்னவர் கொலைசெய்யா
திருப்பாயாக என்றும் சொன்னார்; ஆனதால், நீ
விபசாரம்பண்ணாமல் இருந்தாலும் கொலைசெய்
தாயானால் வேதநூலை மீறி நடந்திருப்பாயே.
12 சுயாதீனத்திற்கு ஏதுவான வேதநூலின்
படி நியாயத்தீர்ப்பு அடையப்போகிறவர்களாய்ப்
பேசியும் செய்தும் இருப்பீர்களாக. — 13 என்
னத்திற்காக என்றால், இரக்கம் செய்யாதவனுக்கு
இரக்கமில்லாமல் நியாயத்தீர்ப்புக் கிடைக்கும்;
நியாயத்தீர்ப்புக்குமுன்பாக இரக்கம் மேன்மைபா
ராட்டும்.
14 என் சகோதரரே, ஒருவன் தனக்கு விசு
வாசம் உண்டென்று சொல்லியும் கிரியைகள்
இல்லாதவனானால், அவனுக்கு என்ன பிரயோச

னம் வரும்? விசுவாசம் அவனை இரட்சிக்குமா?–
15 சகோதரன் அல்லது சகோதரி வஸ்திரம் இல்
லாதவர்களாயும், நாடோறும் வேண்டிய பிழைப்
பில்லாதவர்களாயும் இருக்கும்பொழுது,–16 உங்
களில் ஒருவன் அவர்களை நோக்கி, நீங்கள் சமா
தானத்தோடே போய்க் குளிர்காய்ந்து பசியாறுங்
கள் என்று சொல்லிச் சரீரத்திற்கு வேண்டிய
வைகளை அவர்களுக்குக் கொடாவிட்டால், அதி
னால் என்ன பிரயோசனம் இருக்கும்?–17 அப்
படிப்போல விசுவாசமும் கிரியைகள் இல்
லாதிருந்தால், — 18 தனியே இருப்பதினாலே
செத்ததாயிருக்கும்; ஒருவன் வந்து உனக்கு விசு
வாசம் உண்டு, எனக்குக் கிரியைகள் உண்டு,
கிரியைகளில்லாமல் உன் விசுவாசத்தை எனக்
குக் காண்பி; நான் என் விசுவாசத்தை என் கிரி
யைகளினாலே காண்பிக்கிறேன் என்பான். —
19 பராபரன் ஒருவர் உண்டென்று விசுவாசிக்
கிறாய்; அப்படிச் செய்கிறது சரிதான்; பிசாசுக
ளும் அப்படி விசுவாசித்து நடுங்குகின்றன. —
20 ஆ வீணான மனிதனே, கிரியைகள் இல்
லாத விசுவாசம் செத்ததென்று அறிய விரும்புகி
றாயா?—21 நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம்
தன் குமாரன் ஈசாக்கைப் பலிபீடத்தின்மேல்
ஏற்றிவைத்தபொழுது, கிரியைகளினாலே அல்ல
வோ நீதிமானாக்கப்பட்டான்.—22 அவனுடைய
விசுவாசம் அவனுடைய கிரியைகளோடேகூட
முயற்சிசெய்து அந்தக் கிரியைகளினாலே முடிக்
கப்பட்டதையும்,—23 ஆபிரகாம் பராபரனை விசு
வாசித்தான்; (அது) அவனுக்கு நீதியாக எண்
ணப்பட்டது என்கிற வேதவாக்கியம் நிறைவேற்
றப்பட்டதையும், அவன் பராபரனுடைய சிநே
கிதன் என்னப்பட்டதையும் பார்த்திருக்கிறாயே.–
24 ஆனதால் ஒரு மனிதன் விசுவாசத்தினாலே
மாத்திரம் அல்ல, கிரியைகளினாலேயும் நீதிமான்
ஆக்கப்படுகிறானென்று அறிவீர்களாக.—25 அப்
படிப்போல வேசியாயிருந்த இராகாப் என்பவள்
தூதர்களை ஏற்றுக்கொண்டு வேறுவழியாய் அனுப்
பிவிட்டபொழுது, கிரியைகளினாலே அல்லவோ
நீதியுள்ளவளாக்கப்பட்டாள். — 26 ஆகையால்
ஆவி இல்லாத சரீரம் செத்ததாயிருக்கிறதுபோ
லக் கிரியைகள் இல்லாத விசுவாசமும் செத்த
தாய் இருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

என் சகோதரரே, அதிக ஆக்கினையை அடை
வோம் என்று நாம் அறிந்திருக்க, (உங்களில்)
அநேகர் போதகராகாதிருப்பீர்களாக.–2 நாம் எல்
லாரும் அநேகவிதமாய்த் தவறுகிறோம்; சொல்
தவறாமல் இருக்கிறவனே தேறினவனும் தன்
சரீரம் அனைத்தையும் (ஞானக்) கலினத்தினாலே
அடக்கிக்கொள்ளுகிறவனும் இருக்கிறான். —
3 குதிரைகளைப் பாருங்கள், அவைகள் நமக்குக்
கீழ்ப்படியும்படிக்கு வாய்களில் கலினங்களைப்
போட்டு, அவைகளுடைய முழுச் சரீரத்தையும்
நடத்துகிறோம். — 4 கப்பல்களையும் பாருங்கள்;
அவைகள் இவ்வளவு பெரியவைகளாய்க் கடுங்
காற்றுக்களால் அடிக்கப்பட்டாலும், அவைகளை
நடத்துகிறவன் போகும்படி யோசிக்கும் இடம்
எவ்விடமோ அவ்விடத்திற்கு மிகவும் சிறிதான
சுக்கானாலே திருப்பப்படும்.—5 அப்படிப்போல
நாவானதும் சிறிய அவயவமாய் இருந்தும் பெரு
மையானவைகளைச் செய்யும்; கொஞ்ச நெருப்
பைப் பாருங்கள்; அது எத்தனை பெரிய காட்
டைக் கொளுத்துகின்றது; நாவே நெருப்பு. —
6 அது அநீதியினால் நிறைந்த லோகம்; அந்தப்
படி நாவு நம்முடைய அவயவங்களுக்குள் இரு
ந்து, முழுச் சரீரத்தையும் கறைப்படுத்துகிறதா
யும், சுபாவமுறைமையைக் கொளுத்துகிறதாயும்,
நரக அக்கினியினால் கொளுத்தப்படுகிறதாயும் இ
ருக்கின்றது.–7 எல்லாக் காட்டு மிருகங்களுக்கும்,
பறவைகளுக்கும், ஊர்வனவைகளுக்கும், நீரி
லுள்ள செந்துக்களுக்கும் உண்டாயிருக்கிற சுபா
வம் கீழ்ப்படியப்பண்ணப்படும்; அப்படி மனித
ருடைய சுபாவத்தால் கீழ்ப்படியப்பண்ணப்பட்
டதும் உண்டு. – 8 நாவைமாத்திரம் ஒரு மனித
னும் கீழ்ப்படுத்தமாட்டான்; அது அடங்காத
பொல்லாங்குள்ளதுமாய் சாவுக்கேற்ற விஷத்தால்
நிறைந்ததுமாய் இருக்கிறது.–9 பிதாவாகிய பரா
பரனை நாம் அதினாலே தோத்திரிக்கிறோம்; பரா
பரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட
மனிதரை அதினாலே சபிக்கிறோம்.–10 ஆசீர்வ
தித்தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்ப
டுகின்றன; என் சகோதரரே, இப்படி இருக்கக்
கூடாது.—11 நீரூற்றில் ஒரே துவாரத்திலிருந்து
தித்திப்பும் கசப்புமுள்ள தண்ணீர் சுரக்குமா?—
12 என் சகோதரரே, அத்திமரம் ஒலிவபபழங்க
ளையும், அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களை
யும் கொடுக்குமா? அப்படிப்போல உவர்ப்பான
நீரூற்றுத் தித்திப்பான சலத்தைக் கொடுக்கவும்
மாட்டாது.

13 உங்களில் ஞானியுமாய் அறிவுள்ளவனுமாய்
இருக்கிறவன் எவனோ, அவன் ஞானத்திற்குரிய
சாந்தத்தோடே தன் கிரியைகளை நல்ல நடக்
கையினாலே காண்பிக்கக்கடவன்.—14 உங்கள்
இருதயத்திலே கசப்பான வயிராக்கியத்தையும்
விரோதத்தையும் வைத்துக்கொண்டால், நீங்கள்
மேன்மைபாராட்டாமலும் சத்தியத்திற்கு விரோ
தமாய்ப் பொய்ப்பேச் சொல்லாமலும் இருப்பீர்
களாக.—15 அப்படிச் செய்கிறது உயரத்திலி
ருந்து வருகிற ஞானமல்ல, அது இந்தப் பூமிக்
கும் மிருகசீவனுக்கும் பேய்க்கும் உரித்தானது.–
16 வயிராக்கியமும் விரோதமும் எங்கேயோ
அங்கே கலக்கமும் சகலவிதமான துர்ச்செய்கை
களும் உண்டே. —17 உயரத்திலிருந்து வருகிற

ஞானம் முதலாவது, கற்புள்ளதுமாய், பின்பு சமா
தானமும் சாந்தமும் இணக்கமும் உள்ளதுமாய்,
இரக்கத்தாலும் நற்கிரியைகளாலும் நிறைந்தது
மாய், பட்சபாதம் இல்லாததுமாய், வஞ்சனை இல்
லாததுமாய் இருக்கின்றது.—18 இப்படிச் சமா
தானத்தை நடப்பிக்கிறவர்களாலே சமாதானத்
தோடே நீதியாகிய கனி விதைக்கப்படுகின்றது.

## ௪. அதிகாரம்.

உங்களுக்குள்ளே யுத்தங்களும் சண்டைகளும்
எதினாலே வருகின்றன; உங்கள் அவயவங்க
ளில் போர்செய்கிற செல்வத்திற்கு ஏற்ற இச்சை
களால் அல்லவோ வருகின்றன? — 2 நீங்கள்
இச்சித்தும் உங்களுக்கு அகப்படுகிறதில்லை; நீங்
கள் கொலைசெய்தும் துணிவுள்ளவர்களாயிருந்
தும் (இஷ்டப்படி) அடையாமற்போகிறீர்கள்;
நீங்கள் சண்டையும் யுத்தமும் பண்ணியும், விண
ணப்பம்பண்ணாமல் இருக்கிறதால் உங்களுக்குச்
சித்திக்கிறதில்லை. — 3 உங்கள் இச்சைகளுக்கு
ஏற்றதாகச் செலவழிக்கும்படிக்குத் துர்க்குண
மாய் விண்ணப்பம்பண்ணுகிறதால் நீங்கள் விண்
ணப்பம்பண்ணியும் பெற்றுக்கொள்ளாமல் இருக்
கிறீர்கள்.
4 ஆ விபசாரரே, விபசாரிகளே, உலகத்தோ
டே சிநேகமாயிருக்குதல் பராபரனுக்கு விரோத
மான பகையாய் இருக்கின்றதென்று நீங்கள் அ
றியவில்லையா? ஆகையால் உலகத்திற்குச் சிநே
கமாயிருக்க விரும்புகிறவன் பராபரனுக்குப் பகை
ஞனாயிருக்கிறான்.—5 அல்லது வேதநூல் வீணா
ய்ச் சொல்லுகிறதென்றும், நம்மிடத்தில் வாசமா
யிருக்கிற ஆவியானவர் பொறாமைக்கு ஏதுவாக
இச்சிக்கிறார் என்றுமா நினைக்கிறீர்கள்.—6 அவர்
அதிக தயவை அநுக்கிரகம் செய்கிறாரே, ஆனப
டியால் அகந்தையுள்ளவர்களுக்குப் பராபரன் வி
ரோதித்து, மனத்தாழ்மையுள்ளவர்களுக்குக் கிரு
பையை அளிக்கிறாரென்று சொல்லுகிறார். —
7 ஆகையால் பராபரனுக்குக் கீழ்ப்படியுங்கள்;
பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள்; அப்பொழுது
அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்.–8 பரா
பரனைச் சேருங்கள், அப்பொழுது அவரும் உங்க
ளைச் சேர்வார்; ஆ பாவிகளே, உங்கள் கைகளைச்
சுத்தமாக்குங்கள்; இருமனமுள்ளவர்களே, உங்
கள் இருதயங்களைப் பரிசுத்தம்செய்யுங்கள். —
9 நீஙகள் உபத்திரவப்பட்டுத் துக்கமடைந்து அ
ழுங்கள்; உங்கள் நகைப்பு துக்கப்படுதலாகவும்
உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்கட
வது.–10 கர்த்தருக்குமுன்பாகத் தாழ்மைப்படுங்
கள், அப்பொழுது உங்களை உயர்த்துவார்.
11 சகோதரரே, ஒருவருக்கொருவர் விரோத
மாய்ப் பேசாதிருப்பீர்களாக; சகோதரனுக்கு வி
ரோதமாய்ப் பேசித் தன் சகோதரனைக் குற்றப்ப
டுத்துகிறவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோத
மாய்ப் பேசி நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படு
த்துகிறான்; நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படுத்
தினால் நீ நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவ
னாய் இராமல் அதற்கு நியாயாதிபதியாயிருப்
பாய்.—12 நியாயப்பிரமாணத்தைக் கட்டளையிடு
கிறவர் ஒருவரே; அவரே இரட்சிக்கவும் அழிக்
கவும் வல்லமையுள்ளவர்; மற்றொருவனைக் குற்ற
ப்படுத்துகிற நீ யாவன்?
13 மேலும் நாங்கள் இன்றைக்கு அல்லது
நாளைக்கு இன்ன இன்ன பட்டணத்திற்குப்
போய், அங்கே ஒருவருஷம் தங்கி வியாபாரம்
பண்ணி ஆதாயம் பெறுவோம் என்கிறவர்களே
கேளுங்கள். — 14 நாளைக்கு நடப்பதை அறியா
மல் இருக்கிறீர்களே; உங்கள் சீவன் எப்படிப்
பட்டது? கொஞ்சநேரம் தோன்றிப் பின்பு தோ
ன்றாமல்போகிற புகையைப்போல இருக்கிற
தே.—15 மேற்சொல்லியதற்குப் பதிலாக நீங்
கள், ஆண்டவருக்குச் சித்தமானால் நாங்களும்
உயிரோடிருந்தால் இப்படிச் செய்வோம் என்று
சொல்லவேண்டும்.—16 இப்பொழுது உங்கள்
வீம்பான பேச்சுகளில் மேன்மைபாராட்டுகிறீர்
கள்; இப்படிப்பட்ட மேன்மைபாராட்டல் யா
வும் பொல்லாங்காயிருக்கிறது. — 17 ஆனதால்
ஒருவன் நன்மைசெய்ய அறிந்திருந்தும் அப்ப
டிச் செய்யாவிட்டால் அவனுக்குப் பாவம் உண்
டாயிருக்கும்.

## ௫. அதிகாரம்.

பின்னும் ஐசுவரியவான்களே, கேளுங்கள்; உங்
கள்மேல் வருகிற உபத்திரவங்களின் நிமித்தம் அ
லறி அழுங்கள்.—2 உங்கள் ஐசுவரியம் அழிந்து,
உங்கள் வஸ்திரங்கள் பொட்டுப்பூச்சியினால்
தின்னப்பட்டுப்போயின.–3 உங்கள் பொன்னை
யும் வெள்ளியையும் பாசிபிடித்தது; அவைகளி
லுள்ள பாசி உங்களுக்கு விரோதமாகச் சாட்சி
யாய் இருந்து, அக்கினியைப்போல உங்கள் சரீ
ரங்களைத் தின்னும்; கடைசி நாள்களிலே பொக்
கிஷத்தைச் சேர்த்தீர்கள்.–4 பாருங்கள், உங்கள்
வயல்களை அறுத்த வேலைக்காரருடைய கூலி
உங்களால் அநியாயமாய் வைக்கப்பட்டுக் கூப்பி
டுகின்றது; அறுத்தவர்களுடைய கூக்குரலும் சே
னைகளுடைய கர்த்தாவின் செவிகளில் பட்டது.–
5 பூமியிலே நீங்கள் செல்வத்தோடும் சம்பிரமத்
தோடும் சீவனம்பண்ணினீர்கள்; சிறைப்புநா
ளுக்காகச் செய்கிறதுபோல உங்களைக் கொழுப்
பாக்கினீர்கள்.—6 உங்களுக்கு விரோதமாய் நில்
லாத நீதிமானை நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத்
தீர்த்துக் கொலைசெய்தீர்கள்.
7 இப்படியிருக்கச் (சகோதரரே), கர்த்தர்
வருமளவும் நீடிய பொறுமையாய் இருங்கள்; பா
ருங்கள், பூமியின் விலையேறப்பெற்ற கனியை

அடையவேண்டுமென்று இருக்கிற குடியான
வன் முன்மாரியும் பின்மாரியும் வருமளவும் நீடிய
பொறுமையாய்க் காத்திருக்கிறான்.—8 நீங்களும்
நீடிய பொறுமையாய் இருந்து, கர்த்தர் வருகை
சமீபமாயிருக்கிறபடியால் உங்கள் இருதயங்களை
ஸ்திரப்படுத்துவீர்களாக.
9 சகோதரரே, நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத்
தீர்க்கப்படாதபடிக்கு ஒருவருக்கு விரோதமாய்
ஒருவர் பெருமூச்சுவிடாதிருங்கள்; நியாயாதிபதி
கதவுக்குமுன் நிற்கிறாரே.—10 என் சகோதரரே,
கர்த்தருடைய நாமத்தினாலே பேசின தீர்க்கதரிசி
கள் துன்பப்பட்டு நீடிய பொறுமையாயிருந்தால்,
அவர்களை உங்களுக்கு மார்க்கத்தைக் காண்பிக்கி
றவர்கள் என்று ஏற்றுக்கொள்ளுங்கள்.—11 பொ
றுமையாய் இருக்கிறவர்களை நாம் பாக்கியவான்
கள் என்கிறோமே; யோபென்பவன் காண்பித்த
பொறுமையைக்குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்
கள்; கர்த்தர் மிகுந்த உருக்கமும் இரக்கமும் உள்
ளவராயிருக்கிறார் என்று கர்த்தர் செய்த முடிவி
னாலே அறிந்திருக்கிறீர்கள்.
12 பின்னும் என் சகோதரரே, எல்லாவற்றி
லும் எதை நீங்கள் செய்யவேண்டுமெனில், வா
னத்தின்மேலாகிலும், பூமியின்மேலாகிலும், வே
றொரு ஆணையினாலாகிலும் சத்தியம்பண்ணாதி
ருப்பீர்களாக; நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
கப்படாதபடிக்கு,உள்ளதை உள்ளதென்றும் இல்
லதை இல்லதென்றும் பேசக்கடவீர்கள்.
13 உங்களில் ஒருவன் துன்பப்பட்டால் செ
பம்பண்ணக்கடவன்; ஒருவன் மகிழ்ச்சியாயி
ருந்தால் சங்கீதங்களைப் பாடக்கடவன்.–14 உங்
களில் ஒருவன் வியாதிப்பட்டால் அவன் சபை
யின் மூப்பரை வரவழைப்பானாக; அவர்கள் கர்த்
தருடைய நாமத்தினாலே அவனிடத்தில் எண்
ணெயைப் பூசி, அவனுக்காக விண்ணப்பம்பண்
ணக்கடவர்கள்.–15 அப்பொழுது கர்த்தர் பிணி
யாளியை எழுப்புதற்கு விசுவாசமுள்ள விண்
ணப்பம் அவனை இரட்சிக்கும்; அவன் பாவங்
களைச் செய்தவனானால் அவை அவனுக்கு மன்
னிக்கப்படும்.— 16 நீங்கள் சொஸ்தமடையும்
படிக்கு உங்கள் அக்கிரமங்களை ஒருவருக்கொ
ருவர் அறிக்கையிட்டு, ஒருவருக்காக ஒருவர்
விண்ணப்பம்பண்ணுங்கள்; நீதிமான் உண்மை
யாய்ப் பண்ணுகிற விண்ணப்பம் மிகவும் பெல
னாயிருக்கின்றது.— 17 எலியா என்பவன் நம்
மைப்போலப் பாடுள்ள மனிதனாய் இருந்தும்
மழை பெய்யாதபடிக்கு உறுதியாய் விண்ணப்பம்
பண்ணினான்; அப்பொழுது மூன்று வருஷமும்
ஆறுமாதமும் பூமியின்மேல் மழை பெய்ய
வில்லை.—18 மறுபடியும் விண்ணப்பம்பண்ணி
னான், அப்பொழுது பூமி தன் பலனைக் கொடுக்
கத்தக்கதாக வானம் மழையைத் தந்தது.
19 சகோதரரே, உங்களில் ஒருவன் சத்தி
யத்தை விட்டு விலகித் தப்பிப்போகும்பொழுது,
மற்றொருவன் அவனைத் திருப்பினால்,–20 பாவி
யானவன் பிரவேசிக்கும் தப்பான மார்க்கத்தில்
நின்று அவனைத் திருப்புகிறவன் ஒரு ஆத்து
மாவை மரணத்திற்குத் தப்புவித்து மிகுந்த பாவங்
களை மறைப்பானென்று அறியக்கடவன்.

# அப்போஸ்தலனாகிய
# பேதுரு எழுதின பொதுவான
# முதலாம் நிருபம்.

## ௧. அதிகாரம்.

பிதாவாகிய பராபரன் முன் அறிந்தபடியே ஆவி
யானவர் பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்படிதலுக்
கும் இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்தம் தெ
ளிக்கப்படுகிறதற்கும் தெரிந்துகொள்ளப்பட்டு,–
2 பொந்து, கலாத்தியா, கப்பத்தோக்கியா, ஆசி
யா, பித்தினியா தேசங்களிலே சிதறிவந்திருக்கிற
அந்நிய நாட்டாருக்கு இயேசுக்கிறிஸ்துவின் அப்
போஸ்தலனாகிய பேதுரு எழுதுகிறதாவது: கிரு
பையும் சமாதானமும் உங்களுக்குச் சம்பூரண
மாய் உண்டாகக்கடவது.
3 இயேசுக்கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்
திருக்கிறதினாலே அழிவும் அசுத்தமும் குன்று
தலும் இல்லாத சுதந்தரத்திற்கு ஏதுவாக,—
4 உயிருள்ள நம்பிக்கை உண்டாகும்படிக்குத்
தமது மிகுந்த இரக்கத்தினாலே நம்மைப் புதி
தாய்ச் செனிப்பித்த நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவின் பிதாவாகிய பராபரனுக்குத்
தோத்திரம் உண்டாவதாக.—5 கடைசிக்காலத்
திலே வெளிப்பட எத்தனமாக்கப்பட்டிருக்கிற
இரட்சிப்புக்கு ஏதுவாக விசுவாசத்தைக்கொ
ண்டு பராபரனுடைய பலத்தினாலே காக்கப்படு
கிற உங்களுக்கு அந்தச் சுதந்தரம் பரமண்ட
லங்களில் வைத்திருக்கின்றது.— 6 இதற்காகத்
(துன்பங்கள்) வேண்டியபடியால்; இப்பொழுது

கொஞ்சக்காலமாய்ப் பலவிதமான துன்பங்களி
ஞலே துக்கப்படுகிற நீங்கள் மிகவும் சந்தோஷப்
படக்கடவீர்கள்.—7 அழிந்துபோகிற பொன் அக்
கினியினுலே சோதிக்கப்படுமே; அதிலும் உங்கள்
விசுவாசம் சோதிக்கப்பட்டு அதிக விலேயேறப்
பெற்றதாய் இயேசுக்கிறிஸ்து வெளிப்படும்பொ
ழுது உங்களுக்குப் புகழ்ச்சியும் கனமும் மகிமை
யும் உண்டாகக் காணப்படும்படிக்கு (அந்தத்
துன்பங்களைச் சகிக்கிறீர்கள்).—8 அவரை நீங்
கள் காணுமலிருந்தும், அவரிடத்தில் அன்பு
கூருகிறீர்கள்; இப்பொழுது அவரைத் தரிசியா
மல் இருந்தும், அவரிடத்தில் விசுவாசமா
யிருந்து, சொல்லமுடியாததுமாய் மகிமையால்
நிறைந்ததுமாயிருக்கிற சந்தோஷத்தோடே களி
கூர்ந்து,—9 உங்கள் விசுவாசத்திற்கு ஏற்ற பல
ஞகிய ஆத்தும இரட்சிப்பை அடைகிறீர்கள்.

10 உங்களுக்கு உண்டான இந்தக் கிருபை
யைக்குறித்து முன் பேசின தீர்க்கதரிசிகள் தங்
களிலுள்ள கிறிஸ்துவின்,—11 ஆவியானவர் கிறி
ஸ்துவின் பாடுகளையும் அவைகளின் பின்வரும்
மகிமைகளையும் முன் அறிவித்தபொழுது, எந்தக்
(காலத்தை) எப்படிப்பட்ட காலத்தைக் குறித்
திருக்கிருர் என்று சோதனைபண்ணி,—12 இப்
படி இந்த இரட்சிப்பைக்குறித்து மிகவும் ஆராய்
ந்துபார்த்தார்கள்; அவைகளை அவர்கள் தங்களைக்
குறித்து அல்ல, நம்மைக்குறித்தே தெரிவித்தார்
கள் என்று அவர்களுக்கு வெளியாக்கப்பட்டது;
வானத்திலிருந்து அனுப்பப்பட்ட பரிசுத்தஆவி
யைக்கொண்டு உங்களுக்குச் சுவிசேஷத்தைப்
பிரசங்கித்து வந்தவர்களாலே அவைகள் இப்
பொழுது உங்களுக்கு அறிவிக்கப்பட்டு வருகின்
றன; அவைகளுக்குள்ளே தேவதூதரும் உற்றுப்
பார்க்க ஆசையாய் இருக்கிருர்கள்.

13 ஆகையால், நீங்கள் உங்கள் மனதின் அ
ரைகளில் கச்சைகட்டிக்கொண்டு, தெளிந்த புத்
தியுள்ளவர்களாயிருந்து, இயேசுக்கிறிஸ்து வெ
ளிப்படும்பொழுது உங்களுக்குக் கொண்டுவரப்
படும் கிருபையின்மேல் இடைவிடாமல் நம்பிக்
கையை வைத்து,—14 கீழ்ப்படிகிற பிள்ளைகளைப்
போல நீங்கள் முற்காலத்திலே அறியாமையினு
லே கொண்ட இச்சைகளின்படி இனி நடவா
மல்,—15 உங்களை அழைத்தவர் பரிசுத்தராயிருக்
கிறதுபோல நீங்களும் சகலவிதத்திலேயும் பரி
சுத்தராய் நடப்பீர்களாக.—16 நான் பரிசுத்தன்,
ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருங்களென்று
எழுதியிருக்கிறதே.

17 அன்றியும் பட்சபாதம் இல்லாமல் அவ
னவனுடைய கிரியைகளின்படி நியாயத்தீர்ப்புக்
கொடுக்கும் பிதாவை நீங்கள் தொழுதுகொண்
டிருக்கிறதால் இவ்வுலகத்திலே தங்குமளவும்
பயத்துடனே நடந்துகொள்ளுங்கள்.—18 அழி
வுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினுலும் பொன்
னினுலும் அல்ல, குற்றமும் மாசும் இல்லாத
ஆட்டுக்குட்டியைப்போன்ற கிறிஸ்துவின் விலே
யேறப்பெற்ற இரத்தத்தினுலே, — 19 உங்
கள் முன்னேர்களால் பாரம்பரையாய்ப் பெற்ற
வீணுன நடத்தையினின்று மீட்கப்பட்டீர்கள்
என்று அறிந்திருக்கிறீர்களே. — 20 அவர் லோ
கத்தோற்றத்திற்கு முன்னே குறிக்கப்பட்டவராய்
இருந்து, தமது மூலமாய்ப் பராபரன்மேல் விசு
வாசமாயிருக்கிற உங்களுக்காக இந்தக் கடைசிக்
காலங்களில் வெளிப்பட்டார்.—21 உங்கள் விசு
வாசமும் நம்பிக்கையும் பராபரன்மேலே இருக்
கும்படிக்கு அவரை மரித்தோரிலிருந்து எழுப்பி,
அவருக்கு மகிமையைக் கொடுத்தார்.

22 (ஆகையால்,) நீங்கள் உண்மையான
சகோதரசிநேகத்திற்கு ஏதுவாக ஆவியினுலே சத்
தியத்திற்குக் கீழ்ப்படிந்து, இப்படி உங்கள் ஆத்
துமாக்களைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்கச் சுத்த
இருதயங்களோடே ஊக்கமாய் ஒருவரில் ஒருவர்
அன்பாயிருப்பீர்களாக. — 23 அழிவுள்ள வித்தி
னுலே அல்ல, என்றென்றைக்கும் நிற்கிற சீவ
னுள்ள தேவனுடைய வசனமாகிய அழிவில்லாத
வித்தினுலே மறுபடியும் செனிக்கப்பட்டிருக்கி
றீர்களே.—24 அந்தப்படி (சொல்லியிருக்கிற
தாவது): மாம்சதேகமெல்லாம் புல்லைப்போல
வும், மனிதருடைய மகிமையெல்லாம் புல்லின்
பூவைப்போலவும் இருக்கின்றன; புல்லானது
உலர்ந்துபோம்; அதின் பூவும் உதிர்ந்துபோம்.—
25 கர்த்தருடைய வசனமே என்றென்றைக்கும்
நிற்குமென்பதே; உங்களுக்குச் சுவிசேஷமாய்
அறிவிக்கப்பட்டுவருகிற வசனம் அதுவே.

## உ. அதிகாரம்.

இப்படியிருக்கக் கர்த்தர் தயையுள்ளவர் என்று
நீங்கள் ருசிபார்த்தபடியால் சகல துர்க்குணத்
தையும்,—2 சகல கபடத்தையும் வஞ்சகங்களை
யும் பொருமைகளையும் சகலவிதமான பொல்லாத
பேச்சுக்களையும் தள்ளிப்போட்டு,—3 நீங்கள்
இரட்சிப்புக்கு ஏதுவாக வளரும்படிக்கு இப்
பொழுது பிறந்த குழந்தைகளைப்போலத் (தேவ)
வசனமாகிய களங்கம் இல்லாத பாலின்மேலே
ஆசையாயிருப்பீர்களாக.

4 மனிதராலே தள்ளப்பட்டதாயும், பராபரனி
டத்திலே தெரிந்துகொள்ளப்பட்டதாயும், விலே
யேறப்பெற்றதாயும் இருக்கிற சீவனுள்ள கல்லா
கிய,—5 அவரிடத்தில் சேர்ந்தவர்களாகிய நீங்
களும் சீவனுள்ள கற்களைப்போல ஆவிக்கு ஏற்ற
மாளிகையாகவும் இயேசுக்கிறிஸ்து மூலமாய்ப்
பராபரனுக்குப் பிரியமான ஆவிக்கு ஏற்ற பலிக
ளைச் செலுத்தும்படி பரிசுத்த ஆசாரியக்கூட்டமா
கவும் கட்டப்படுங்கள்.—6 அந்தப்படி வேதத்
திலே சொல்லியிருக்கிறதாவது: இதோ தெரிந்து
கொள்ளப்பட்டதுமாய் விலேயேறப்பெற்றதுமாய்

இருக்கிற மூலைக்கல்லைச் சீயோனிலே வைக்கிறேன், அதின்மேல் விசுவாசமாயிருக்கிறவன் வெட்கப்பட்டுப்போவதில்லை என்பதே.—7 ஆகையால், விசுவாசிக்கிற உங்களுக்கு இந்தக் கனம் உண்டாயிருக்கிறது; கீழ்ப்படியாமலிருக்கிறவர்களுக்கு வீட்டைக் கட்டுகிறவர்களால் தள்ளப்பட்ட பிரதான மூலைக்கல்லாகிய இந்தக் கல்லே இடறுதற்கு ஏதுவான கல்லாயும், விழுதற்கு ஏதுவான கன்மலையாயும் இருக்கிறது.—8 அவர்கள் (தேவ) வசனத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்து இடறுகிறார்கள்; அதற்கு நியமிக்கப்பட்டவர்களாயும் இருக்கிறார்கள்.—9 நீங்கள் உங்களை அந்தகாரத்தினின்று தம்முடைய ஆச்சரியமான ஒளிக்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை அறிவிக்கும்படிக்குத் தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியாயும், இராசரீகமான ஆசாரியக் கூட்டமாயும், பரிசுத்தவான்களாயும், அவருக்குச் சொந்தமான சனமாயும் இருக்கிறீர்கள்.–10 முன்னே நீங்கள் பராபரனுடைய சனமாயிருக்கவில்லை; இப்பொழுது அவருடைய சனங்களாய் இருக்கிறீர்கள்; (முன்னே) நீங்கள் இரக்கம் பெறாதவர்கள்; இப்பொழுது இரக்கம்பெற்றவர்களாய் இருக்கிறீர்கள்.

11 பிரியமானவர்களே, வழிப்போக்கருமாய் அந்நியநாட்டாருமாய் இருக்கிற உங்களுக்கு நான் புத்திசொல்லுகிறது என்னவெனில், ஆத்துமாவுக்கு விரோதமாய்ப் போர்செய்கிற மாம்ச இச்சைகளுக்கு நீங்கள் இடங்கொடாமல்,—12 அஞ்ஞானிகள் உங்களை அக்கிரமக்காரரென்று விரோதமாய்ப் பேசும்பொழுது, உங்கள் நற்கிரியைகளைக்கண்டு கண்காணிப்பின் நாளிலே பராபரனுடைய மகிமை விளங்கப்பண்ணும்படிக்கு நல்ல நடக்கையோடே அவர்களுக்குள்ளே நடக்கக்கடவீர்கள்.

13 அந்தப்படியே நீங்கள் கர்த்தரின்நிமித்தம் மனிதருடைய கட்டளைகள் யாவற்றிற்கும் கீழ்ப்படுவீர்களாக. — 14 பிரதான அதிகாரமுள்ள இராசாவுக்காவது, தீமைசெய்கிறவர்களுக்கு ஆக்கினையையும் நன்மைசெய்கிறவர்களுக்குப் புகழ்ச்சியையும் கொடுக்கும்படி அவனால் அனுப்பப்பட்ட துரைகளுக்காவது (அப்படிச்செய்யுங்கள்).—15 புத்தியீன மனிதருடைய அறியாமையை நீங்கள் நன்மைசெய்கிறதினாலே அடக்கிப்போடவேண்டுமென்று பராபரனுடைய சித்தமாயிருக்கிறதே.—16 சுயாதீனமுள்ளவர்களாயிருந்தும் உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு மூடியாகச்சேர்த்துக்கொள்ளாமல் பராபரனுடைய அடிமைகளாய் நடப்பீர்களாக. — 17 எல்லாரையும் கனம்பண்ணுங்கள்; சகோதரரிடத்தில் அன்புகூருங்கள்; பராபரனுக்குப் பயந்திருங்கள், இராசாவைக் கனம்செய்யுங்கள்.

18 வீட்டு வேலைக்காரரே, மிகுந்த பயத்துடனே எசமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; நல்லவர்களுக்கும் இணக்கமுள்ளவர்களுக்கும்மாத்திரம் அல்ல, செம்மையில்லாதவர்களுக்கும் (அப்படிச் செய்யவேண்டும்).—19 என்னத்திற்காகவெனில், ஒருவன் அநியாயமாய்ப் பாடுபட்டுப் பராபரனுக்குமுன்பாக உண்மையாயிருக்கிற மனதின்நிமித்தம் துக்கங்களைப் பொறுமையாய்ச் சகித்தால் அதுவே மகிமையுள்ளது.—20 நீங்கள் குற்றம்செய்து அடிக்கப்படும்பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால், அது எப்படிப்பட்ட கீர்த்தியாயிருக்கும்? நீங்கள் நன்மை செய்து பாடுபடும்பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால் அதுவே பராபரனுக்கு முன்பாக மகிமையாய் இருக்கும்.—21 இதற்காக நீங்கள் அழைக்கப்பட்டும் இருக்கிறீர்கள்; எப்படியெனில் கிறிஸ்துவும் உங்களுக்காகப் பாடுபட்டு, நீங்கள் தம்முடைய காலடிகளைத் தொடர்ந்துவரும்படி உங்களுக்கு மார்க்கத்தைக் காட்டிப்போனார். — 22 அவர் பாவம்செய்யவில்லை; அவருடைய வாயிலே வஞ்சனை காணப்படவுமில்லை. — 23 அவர் வையப்பட்டபொழுது பதில் வையாமலும், பாடுபட்டபொழுது பயமுறுத்தாமலும், நியாயமாய்த் தீர்ப்புக்கொடுக்கிறவருக்கு அதை ஒப்புவித்தார். — 24 நாம் பாவங்களுக்கு விலகி நீதியுள்ளவர்களாய்ப் பிழைக்கும்படிக்கு அவர் தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைத் தாங்கிக்கொண்டு, அவைகளைச் சிலுவைமரத்திலே நிவிர்த்திசெய்தார்.—25 அவர் காயப்பட்டதினாலே குணமானீர்கள்; (முன்னே) நீங்கள் வழுவிப்போன ஆடுகளைப்போல இருந்தீர்கள்; இப்பொழுது உங்கள் ஆத்துமாக்களுக்கு மேய்ப்பரும் கண்காணியுமானவரிடத்தில் திருப்பப்பட்டு இருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

அந்தப்படி ஸ்திரிகளே, (புருஷர்களில்) சிலர் (தேவ) வசனத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்கிறபொழுது வசனமின்றி,–2 உங்கள் கற்பும் வணக்கமுமுள்ள நடக்கையை அவர்கள் பார்த்து, அப்படிப்பட்ட நடக்கையினாலே சம்பாதித்துக்கொள்ளப்படும்படிக்கு உங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழடங்குவீர்களாக.–3 நீங்கள் உங்கள் மயிரைப் பின்னிப் பொன்னாபரணங்களைத் தரித்து முக்கியமான வஸ்திரங்களை உடுத்தி,–4 இவ்விதமாய்ப் புறம்பே உங்களை அலங்கரியாமல் உள்ளாக மறைந்திருக்கிற இருதயமானது பராபரனுடைய திருப்பார்வையிலே மிகுந்த விலையேறப்பெற்றிருக்கிற சாந்தமும் அமைதலுமான ஆவியென்னும் அழியாமையுள்ள அலங்காரத்தை அடையும்படி செய்யுங்கள்.–5 இப்படியே பூர்வீகத்திலே பராபரன்மேல் நம்பிக்கையான பரிசுத்த ஸ்திரிகளும் தங்களை அலங்காரம்செய்து, தங்க

ளுடைய புருஷருக்குக் கீழ்ப்படிந்தார்கள். —
6 அந்தப்படி சாராள் ஆபிரகாமை எசமானென்
றழைத்து, அவனுக்குக் கீழ்ப்பட்டாள்; நீங்கள்
நன்மைசெய்து எவ்வளவான துன்பத்திற்கும்
பயப்படாதவர்களாய் அவளுக்குப் பிள்ளைகளா
னீர்கள்.
7 அன்றியும் புருஷரே, உங்கள் செபங்களுக்
குத் தடைவராதபடிக்கு மனைவியானவள் பல
ஈன பாத்திரமாய் இருக்கிறபடியினாலே, நீங்கள்
அறிவின்படி அவளுடனேகூட வாசம்பண்ண
வேண்டுவதுமல்லாமல் உங்களுடனேகூட அவ
ளும் நித்தியசீவனாகிய கிருபையைச் சுதந்தரித்
துக்கொள்ளுகிறவளானபடியினாலே அவளுக்குக்
கனம்செலுத்துவீர்களாக.
8 மேலும் நீங்கள் எல்லாரும் ஒருமனப்பட்
டவர்களாயும், பரிதாபமுள்ளவர்களாயும், சகோதர
சிநேகமுள்ளவர்களாயும், மன உருக்கமுள்ளவர்க
ளாயும், மனத்தாழ்மையுள்ளவர்களாயும்,–9 தீமைக்
குத் தீமையையும், உதாசினத்துக்கு உதாசினத்
தையும் பதில்செய்யாமல் ஆசீர்வாதத்தையே
பதில்செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக; உங்
களுக்குத் தெரிந்திருக்கிறபடி ஆசீர்வாதத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நீங்கள் இப்படி
யே செய்ய அழைக்கப்பட்டீர்கள். — 10 ஆன
படியினாலே சீவனை விரும்பிச் சவுக்கியநாள்களைக்
காணவேண்டுமென்று இருக்கிறவன் தன் நாவி
னால் பொல்லாங்கையும், தன் உதடுகளால் கப
டத்தையும் பேசாமல் இருக்கும்படி அமைந்து,–
11 பொல்லாங்கைவிட்டு விலகி, நன்மைசெய்
து, சமாதானத்தைத் தேடி, அதைப் பின்தொட
ரக்கடவன்.—12 ஏனென்றால் கர்த்தர் நீதிமான்
கள்மேலே கண்ணோட்டமாயிருந்து அவர்களு
டைய விண்ணப்பத்திற்குச் செவிகொடுக்கி
றார்.–13 கர்த்தருடைய முகம் பொல்லாங்கைச்
செய்கிறவர்களுக்கு விரோதமாயிருக்கின்றது; அந்
தப்படி நீங்கள் நன்மையைப் பின்பற்றுகிறவர்க
ளானால் உங்களுக்குப் பொல்லாங்கைச் செய்ப
வன் எவன்? — 14 நீதியின்நிமித்தமாக நீங்கள்
பாடனுபவித்தால் பாக்கியராயிருப்பீர்கள்; ஆன
தால் அவர்களுடைய பயங்கரத்திற்கு நீங்கள்
பயப்படாமலும் கலங்காமலும் இருந்து,–15 கர்த்
தராகிய பராபரனை உங்கள் இருதயங்களில் பரி
சுத்தமாய் வணங்கி, உங்களில் இருக்கிற நம்பிக்
கையைக்குறித்து உங்களை விசாரித்துக் கேட்கிற
யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்தோடும்
உத்தரவுசொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயி
ருந்து, — 16 கிறிஸ்துவுக்கு ஏற்ற உங்கள் நல்ல
நடக்கையைத் தூஷணிக்கிறவர்கள் உங்களைப்
பொல்லாங்குசெய்கிறவர்கள் என்று உங்களுக்கு
விரோதமாய்ச் சொல்லுகிறதினாலே வெட்கப்ப
டும்படிக்கு நல்மனச்சாட்சியைக் காத்துக்கொள்
வீர்களாக.—17 தீமைசெய்து பாடனுபவிக்கிறதி
லும் நன்மைசெய்து பராபரனுடைய சித்தப்படி
பாடனுபவிக்கிறது மேன்மையாயிருக்குமே.
18 ஆகையால் நீதியுள்ளவராகிய கிறிஸ்துவும்
நம்மைப் பராபரனிடத்திற்குச் சேர்த்துக்கொள்
ளும்படிக்கு அநீதியுள்ளவர்களுடைய பாவங்க
ளுக்காக ஒருதரம் பாடுபட்டார்; சரீரத்திலே அ
வர் கொலைசெய்யப்பட்டார்; ஆவியிலே அவர்
பிழைப்பிக்கப்பட்டார்.—19 அந்த ஆவியாகவே
அவர் காவலிலுள்ள ஆவிகளிடத்திற்குப் போய்ப்
பிரசங்கம்பண்ணினார்.—20 அந்த ஆவிகள் பூர்
வீகத்திலே நோவாவென்பவன் பேழையை எத்
தனமாக்கின நாள்களிலே பராபரன் நீடிய சாந்
தத்தோடே காத்திருந்தபொழுது கீழ்ப்படியாமற்
போனவைகள்; அந்தப் பேழையிலே எட்டுப்
பேராகிய சிலர்மாத்திரம் பிரவேசித்துச் சலத்தி
னாலே காக்கப்பட்டார்கள். — 21 அது ஞானஸ்
நானத்திற்கு முன் அடையாளமாய் இருந்தது;
சரீர அழுக்கை நீக்குகிறதற்கு அல்ல, பராபர
னுக்கு முன்பாக நல்மனச்சாட்சி பண்ணுகிற
உடம்படிக்கையைக் குறிக்கிற ஸ்நானத்திற்கே
அப்படி இருந்தது; இயேசுக்கிறிஸ்து உயிரோ
டெழுந்திருக்கிறதால் அந்த ஞானஸ்நானம் இப்
பொழுது நம்மையும் இரட்சிக்கின்றது.–22 அவர்
பரமண்டலத்திற்குப் போய்ப் பராபரனுடைய
வலதுபாரிசத்தில் இருக்கிறார்; தேவதூதர்கள் அல்
லாமல் அதிகாரங்களும் வல்லமைகளும் அவருக்
கே கீழ்ப்பட்டிருக்கின்றன.

## ௪. அதிகாரம்.

இப்படியிருக்கக் கிறிஸ்து நமக்காகத் (தமது)
சரீரத்திலே பாடுபட்டபடியால் நீங்களும் அப்ப
டிப்பட்ட சிந்தையை ஆயுதமாக அணிந்துகொள்
ளக்கடவீர்கள்.–2 சரீரத்தில் பாடுபட்டவன் பா
வங்களைவிட்டு ஓய்ந்திருப்பானே; (நீங்கள்) சரீ
ரத்தோடே இருக்கும் காலம்வரைக்கும் மனித
ருடைய இச்சைகளின்படி அல்ல, பராபரனு
டைய சித்தத்தின்படியே பிழைக்கிறதற்கு ஏது
வாக (அப்படிச் செய்யுங்கள்).–3 சென்ற வாழ்
நாட்காலத்திலே நாம் அஞ்ஞானிகளுடைய இஷ்
டத்தின்படி நடந்துகொண்டது போதுமே; அப்
பொழுது நாம் காமவிகாரத்தையும் துர்இச்சைக
ளையும் நடப்பித்துப் பழஇரசத்தை மிகவும் குடித்
துப் பெருந்தீனியைச் சாப்பிட்டு வெறிகொண்
டு, அருவருக்கப்படத்தக்க விக்கிரகஆராதனை
யைச் செய்துவந்தோம். — 4 (இப்பொழுது)
கெட்ட நடக்கையுள்ள அந்தத் துன்மார்க்கத்தி
லே அவர்களோடேகூட நீங்கள் ஓடாமல் இருக்
கிறதினாலே அவர்கள் ஆச்சரியப்பட்டு (உங்க
ளைத்) தூஷணிக்கிறார்கள்.—5 உயிரோடிருக்கிற
வர்களுக்கும் மரித்தோருக்கும் நியாயத்தீர்ப்புக்
கொடுக்க எத்தனமாயிருக்கிறவருக்கு அவர்கள்
கணக்கு ஒப்புவிப்பார்கள்.–6 இதற்காகவும் மரித்

தோர் சரீரத்திலே மனிதராலே ஆக்கினைக்குள்ளாக்கப்பட்டிருந்தும் ஆவியிலே பராபரனாலே பிழைக்கும்படியாக அவர்களுக்கும் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது.

7 அன்றியும் எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று; ஆகையால், நீங்கள் விவேகமாயிருந்து விண்ணப்பம்பண்ணுதற்குத் தெளிவுள்ளவர்களாய் இருக்கக்கடவீர்கள்.—8 எல்லாவற்றிற்கும் மேலாக ஒருவருக்கொருவர் மிகுந்த அன்புள்ளவர்களாய் இருங்கள்; அன்பானது திரளான பாவங்களை மூடுமே.—9 மொறுமொறுப்பில்லாமல் ஒருவரை ஒருவர் சேர்த்துக்கொள்ளுங்கள். —10 அவனவன் பெற்ற வரத்தின்படியே நீங்கள் பராபரனுடைய பலவித கிருபையுள்ள ஈவுகளையுடைய நல்ல உக்கிராணக்காரர்போல, ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்கள்.-11 போதிக்கிறவன் பராபரனுடைய வசனங்களின்படியே போதிக்கக்கடவன்; ஊழியம்செய்கிறவன் பராபரன் கொடுக்கிற பெலத்தாலே அப்படிச் செய்யக்கடவன்; சகலவிதத்திலேயும் பராபரன் இயேசுக்கிறிஸ்துமூலமாய்த் துதிக்கப்படும்படியே செய்வீர்களாக; அவருக்குத் துதியும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.—ஆமென்.

12 பிரியமானவர்களே, உங்களுக்குள்ளே இருக்கிற அக்கினி உங்களைச் சோதிக்கத்தக்கதாய் இருப்பதால் புதியது உங்களுக்குச் சம்பவித்ததாக அதைக்குறித்து ஆச்சரியப்படாமல், —13 கிறிஸ்துவின் பாடுகளுக்கு நீங்கள் ஐக்கமானதால் சந்தோஷப்படுங்கள்; அவருடைய மகிமை வெளிப்படும்பொழுது நீங்களும் களிகூர்ந்து சந்தோஷமாய் இருக்கும்படிக்கு (அப்படிச் செய்வீர்களாக).-14 நீங்கள் கிறிஸ்துவின் நாமத்தின்நிமித்தம் நிந்திக்கப்பட்டால் பாக்கியவான்கள்; பராபரனுடைய ஆவியாகிய மகிமையுள்ள ஆவி உங்களிடத்தில் தங்கியிருக்கிறாரே; அவர்களால் அவர் தூஷணிக்கப்படுகிறார்; உங்களாலே துதிக்கப்படுகிறார்.-15 ஆனதால் உங்களில் ஒருவனும் கொலைபாதகனாய், அல்லது திருடனாய், அல்லது பொல்லாங்குசெய்தவனாய், அல்லது அந்நியகாரியங்களில் தலையிட்டுக்கொண்டவனாய்ப் பாடுபடாதிருப்பானாக.—16 கிறிஸ்தவனாய்ப் பாடுபடுகிறவன் வெட்கமடையாமலிருந்து பராபரனை அதற்காகவே துதிசெய்யக்கடவன். —17 நியாயத்தீர்ப்பும் தேவாலயத்திலே ஆரம்பமாகிறதற்குக் காலம் வந்திருக்கிறதே; முதலாவது நம்மிடத்திலே அது ஆரம்பமானால், பராபரனுடைய சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுடைய முடிவு என்னமாய் இருக்கும்?—18 நீதிமானே இரட்சிக்கப்படுகிறது அரிதானால், துன்மார்க்கனும் பாவியும் எங்கே நிற்பான்?—19 ஆகையால் பராபரனுடைய சித்தத்தின்படி பாடுபடுகிறவர்கள் நன்மைசெய்கிறவர்களாய்த் தங்கள் ஆத்துமாக்களை உண்மையுள்ள சிருட்டிகராகிய அவருக்கு ஒப்புக்கொடுக்கக்கடவர்கள்.

## ரு. அதிகாரம்.

உங்களிலுள்ள மூப்பருக்கு உடன் மூப்பனுமாய், கிறிஸ்துவின் பாடுகளுக்குச் சாட்சிக்காரனுமாய், (இனி) வெளிப்படும் மகிமைக்குப் பங்காளியுமாய் இருக்கிற நான் புத்திசொல்லுகிறது என்னவென்றால்,—2 உங்களிடத்திலுள்ள பராபரனுடைய ஆட்டுக்கூட்டத்தை நீங்கள் மேய்த்துக் கட்டாயமாயல்ல மனப்பூர்வமாயும், அவலட்சணமான ஆதாயத்திற்காகவல்ல உச்சாக மனதோடும்,-3 சுதந்தரங்களை இறுமாப்பாய் ஆளுகிறவர்களாகவல்ல ஆட்டுக்கூட்டத்திற்குப் பாதையைக் காட்டுகிறவர்களாகவும் கண்காணிப்புச் செய்வீர்களாக. — 4 (அப்படிச் செய்தால்) பிரதான மேய்ப்பர் வெளிப்படும்பொழுது மகிமையுள்ள வாடாத முடியைப் பெறுவீர்கள்.

5 அல்லாமலும் வாலிபரே, மூப்பருக்குக் கீழ்ப்படியுங்கள்; நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்து மனத்தாழ்மையை அணிந்துகொள்வீர்களாக. அகந்தையுள்ளவர்களுக்குப் பராபரன் எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கே கிருபையை அளிக்கிறார்.—6 ஆகையால் ஏற்றகாலத்திலே பராபரன் உங்களை உயர்த்தும்படிக்கு அவருடைய பலத்த கைக்குள் அடங்குவீர்களாக. — 7 அவரே உங்களை விசாரித்துக்கொள்ளுகிறபடியால் உங்கள் கவலைகளை எல்லாம் அவர்மேல் வைத்துவிடுங்கள்.

8 தெளிந்த புத்தியுள்ளவர்களாய் இருங்கள், விழித்திருங்கள். என்னத்தினாலெனில், உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல எவனையும் விழுங்கவேண்டுமென்று வகைதேடித் திரிகிறான். — 9 உலகத்திலுள்ள உங்கள் சகோதரரிடத்திலே அப்படிப்பட்ட பாடுகளே நிறைவேறிவருகின்றன என்று அறிந்து, விசுவாசத்தில் உறுதியாய் அவனுக்கு எதிர்த்து நில்லுங்கள்.

10 சகலவித கிருபைக்கும் காரணருமாய், கொஞ்சக்காலம் பாடுபடுகிற நம்மைக் கிறிஸ்து இயேசுவினாலே தமது நித்திய மகிமைக்கு அழைத்தவருமாய் இருக்கிற பராபரன் தாமே உங்களை நிறைவுள்ளவர்களாக்கி ஸ்திரப்படுத்தித் திடப்படுத்தி அஸ்திபாரப்படுத்தக்கடவர்.—11 அவருக்கே துதியும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருக்கக்கட்வது.—ஆமென்.

12 (உங்களுக்குப்) புத்திசொல்லும்படிக்கும், நீங்கள் (அடைந்து) நிற்கிற கிருபை பராபரனுடைய மெய்யான கிருபைதான் என்று சாட்சிகொடுக்கும்படிக்கும் நான் சுருக்கமாய் உங்க

ளுக்கு எழுதி, எனக்குத் தோன்றுகிறபடி உண்
மையாய் இருக்கிற சகோதரனாகிய சில்வானு
வின் கையிலே (இதைக்) கொடுத்து அனுப்பி
னேன்.—13 உங்களுடனேகூடத் தெரிந்து
கொள்ளப்பட்டிருக்கிற பாபிலோனிலுள்ள சபை
யும் என் குமாரனாகிய மாற்கும் உங்களை வாழ்த்து
கிறார்கள்.—14 ஒருவரை ஒருவர் அன்பின் முத்
தத்தினால் வாழ்த்துதல்செய்வீர்களாக; கிறிஸ்து
இயேசுவைப் பற்றியிருக்கிற உங்கள் அனைவ
ருக்கும் சமாதானம் உண்டாவதாக.—ஆமென்.

## அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## இரண்டாம் நிருபம்.

### ௧. அதிகாரம்.

நம்முடைய பர்பரனுமாய் இரட்சகருமாய் இருக்
கிற இயேசுக்கிறிஸ்துவின் நீதியில் எங்களைப்
போல அருமையான விசுவாசத்தைப் பெற்றவர்
களுக்கு, இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரனும்
அப்போஸ்தலனுமாகிய சீமோன் பேதுரு எழுது
கிறதாவது:—2 பராபரனையும் நம்முடைய கர்த்த
ராகிய இயேசுவையும் அறிகிற அறிவினால் உங்க
ளுக்குக் கிருபையும் சமாதானமும் சம்பூரணமாய்
உண்டாகக்கடவது.

3 மகிமையாலும் புண்ணியத்தாலும் நம்மை
அழைத்தவரை அறிகிற அறிவினாலே சீவனுக்கும்
மெய்த்தேவபத்திக்கும் ஏற்ற யாவற்றையும் அவ
ருடைய திவ்விய வல்லமை நமக்குக் கொடுத்த
படியினாலும்,—4 நீங்கள் (தகாத) இச்சையால்
உலகத்திலுள்ள கேட்டுக்குத் தப்பித்துக்கொண்
டவர்களாய், திவ்விய குணத்திற்குப் பங்காளிக
ளாகத்தக்கதாக மிகவும் மேன்மையும் விலையேறப்
பெற்றதுமான வாக்குத்தத்தங்கள் அவராலே
நமக்கு அளிக்கப்பட்டபடியினாலும்,—5 நீங்கள்
மிகுந்த சாக்கிரதையைக்கொண்டு, உங்கள் விசு
வாசத்தோடே தயிரியத்தையும், தயிரியத்தோடே
அறிவையும்,—6 அறிவோடே இச்சை அடக்கத்
தையும், இச்சை அடக்கத்தோடே பொறுமையை
யும், பொறுமையோடே மெய்த்தேவபத்தியை
யும்,—7 மெய்த்தேவபத்தியோடே சகோதர
சிநேகத்தையும், சகோதர சிநேகத்தோடே அன்
பையும் கூட்டிக்கொள்வீர்களாக.—8 இவைகள்
உங்களுக்கு உண்டாயிருந்து பெருகினால், நீங்
கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வை அறிகிற அறிவிலே வீணராக அல்லது கனி
யற்றவர்களாக இருக்கமாட்டீர்களே.—9 அவை
கள் இல்லாதவன் எவனோ, அவன் தன் முந்தின
பாவங்கள் நீக்கப்பட்டதை மறந்து, குருடனாய்க்
கண்மூடியிருக்கிறான்.—10 ஆகையால் சகோத
ரரே, நீங்கள் அழைக்கப்பட்டும் தெரிந்துகொள்
ளப்பட்டும் இருக்கிறதை உறுதியாக்கும்படி அ
திக சாக்கிரதையாய் இருப்பீர்களாக; அப்படிச்
செய்தால் நீங்கள் ஒருக்காலும் வழுவுவதில்லை.—
11 மேலும் இப்படியே நம்முடைய கர்த்தரும்
இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் நித்திய
இராச்சியத்திற்குள் பிரவேசித்தல் பரிபூரணமாய்
உங்களுக்கு அளிக்கப்படும்.

12 ஆனபடியால் நீங்கள் இவைகளை அறிந்து,
இப்பொழுது உங்களுக்கு உண்டாயிருக்கிற சத்
தியத்தில் உறுதிப்பட்டிருந்தும், இவைகளை எப்
பொழுதும் நினைக்கும்படி செய்ய நான் அசதி
யாய் இருக்கமாட்டேன்.—13 அந்தப்படி நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் எனக்
குத் தெரிவித்தபடி நான் என் கூடாரத்தைச்
சீக்கிரமாய் விட்டுப்போகவேண்டுமென்று அறி
ந்து,—14 இந்தக் கூடாரத்தில் இருக்குமளவும்
ஞாபகப்படுத்துதலினாலே உங்களை எழுப்புகிறது
நியாயமென்று எண்ணுகிறேன்.—15 ஆகை
யால் நான் போனதற்குப்பின்பும், நீங்கள் இவை
களை எப்பொழுதும் நினைத்துக்கொள்ள உங்களுக்கு
ஏதுவுண்டாயிருக்கும்படி பிரயத்தனம்பண்ண
விரும்புகிறேன்.

16 என்னவெனில், நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவின் வல்லமையையும், வருகை
யையும், உங்களுக்கு அறிவித்தபொழுது நாங்கள்
தந்திரமாய் யோசிக்கப்பட்ட கட்டுக்கதைகளைப்
பின்பற்றவில்லை.—17 இவர் எனக்கு அன்பா
யிருக்கிற என்னுடைய குமாரன்; இவரிடத்தில்
பிரியமாய் இருக்கிறேன் என்று சொல்லுகிற
சத்தம் மகா மேன்மையான மகிமைத்தலத்தி
லிருந்து வந்ததினாலே பிதாவாகிய பராபரனால்
கனத்தையும் மகிமையையும் அவர் பெற்றபொ
ழுது, அவருடைய மகிமையை நாங்கள் கண்ணா
ரக்கண்டோம்.—18 அவரோடேகூட நாங்கள்
பரிசுத்த பர்வதத்தில் இருந்தபொழுது வானத்தி
லிருந்து வந்த அந்தச் சத்தத்தைக் கேட்டோம்.

19 தீர்க்கதரிசன வசனமும் நமக்கு அதிக

உறுதியாய் இருக்கின்றது; உங்கள் இருதயங்களில் வெள்ளி உதயமாகிப் பொழுது விடியுமளவும் நீங்கள் இருளுள்ள தலத்தில் பிரகாசிக்கிற விளக்கைப்போன்ற அவ்வசனத்திற்கு எச்சரிக்கையாய் இருந்தால் நன்மைசெய்வீர்கள். — 20 அதைக்குறித்து நீங்கள் பிரதானமாய் அறியவேண்டியது என்னவெனில், வேத எழுத்திலுள்ள எந்தத் தீர்க்கதரிசனமும் சொந்த விவரிப்பினாலே தோன்றமாட்டாது. — 21 தீர்க்கதரிசனமானது பூர்வத்திலே மனிதருடைய சித்தத்தினாலே வரவில்லையே, பராபரனுடைய பரிசுத்த மனிதர்கள் பரிசுத்தஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்களே.

## உ. அதிகாரம்.

கள்ளத்தீர்க்கதரிசிகளும் சனங்களுக்குள்ளே இருந்தார்கள்; அதுபோல உங்களுக்குள்ளும் கள்ளப்போதகர்கள் தோன்றுவார்கள்; அவர்கள் கேட்டுக்கு ஏதுவான பொய் உபதேசங்களைத் தந்திரமாய் நுழைத்துத் தங்களைக் கொண்ட ஆண்டவரை மறுதலித்து, இப்படித் தங்களுக்குத் தீவிரமான அழிவை வருவித்துக்கொள்வார்கள். — 2 அவர்களின்நிமித்தம் சத்தியமார்க்கம் தூஷணிக்கப்படும்; அவர்களுடைய கெட்ட மார்க்கங்களை அநேகர் பின்பற்றுவார்கள். — 3 பொருளாசை உள்ளவர்களாய் அவர்கள் தந்திரமான வார்த்தைகளால் உங்களை வாங்கிக்கொள்ளத் தேடுவார்கள்; அவர்களுக்குப் பூர்வத்தில் (தீர்மானித்திருக்கிற) ஆக்கினை தாமதமாயிராது; அவர்களுக்குத்தக்க அழிவு உறங்காது.

4 பாவம்செய்த தூதர்களைப் பராபரன் தப்பவிடாமல் அந்தகாரச் சங்கிலிகளினாலே கட்டிப் பாதாளத்திலே தள்ளி, நியாயத்தீர்ப்புப்பரியந்தம் காக்கப்படுவதற்கு ஒப்புக்கொடுத்திருக்க, — 5 பழைய உலகத்தையும் தப்பவிடாமல் நீதியைப் பிரசங்கித்தவனாகிய நோவாமுதலான எட்டுப்பேரைமாத்திரம் அவர் காப்பாற்றிப் பத்தியற்றவர்களுள்ள உலகத்தின்மேல் சலப்பிரளயத்தை வரப்பண்ணியிருக்க,—6 சோதோம் கொமோரா என்னும் பட்டணங்களையும் சாம்பலாக்கிக் கவிழ்த்துப்போட்டு, இப்படி ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, பிற்காலத்திலே அவபத்தியாய் நடப்பவர்களுக்கு அடையாளமாக வைத்திருக்க, (அவர்களை எப்படித் தப்பவிடுவார்?) — 7 அக்கிரமக்காரருடைய காமவிகார நடக்கையால் வருத்தப்பட்ட நீதிமானாகிய லோத் என்பவனைமாத்திரம் இரட்சித்துவிட்டார்.—8 அந்த நீதிமான் அவர்களுக்குள்ளே குடியிருக்கையில், நாள்தோறும் அவர்களுடைய அக்கிரமக் கிரியைகளைக் கண்டு கேட்டு, நீதியுள்ள தன்னுடைய இருதயத்திலே அவைகளாலே வேதனைப்பட்டான்.–9 கர்த்தரே தேவபத்தியுள்ளவர்களைத் துன்பத்தினின்று இரட்சிக்கவும், அக்கிரமக்காரரை நியாயத்தீர்ப்புநாளிலே ஆக்கினைக்கு உள்ளாகும்படிக்காகவும் அறிந்திருக்கிறார். — 10 பிரதானமாக அசுத்தத்தின் இச்சையோடே மாம்சத்திற்கு ஏற்றபடி நடந்து, துரைத்தனத்தை அசட்டைபண்ணுகிறவர்களையே அப்படிச் செய்வார்; அவர்கள் துணிவுக்காரர், அகங்காரிகள், மகிமையுடையவர்களைத் தூஷணிக்க நடுங்காதவர்கள்.

11 அதிக பலத்தையும் வல்லமையையும் உடைய தேவதூதரும் கர்த்தருக்குமுன்பாக அவர்களுக்கு விரோதமாய்த் தூஷணிப்பான தீர்ப்பைச் சொல்லமாட்டார்கள்.—12 இவர்கள்மாத்திரம் பிடியுண்டு அழிக்கப்படுவதற்கு உண்டான புத்தியற்ற மிருகசீவன்களைப்போலத் தங்களுக்குத் தெரியாதவைகளைத் தூஷணித்துத் தங்கள் கேட்டினாலே முழுவதும் அழிக்கப்பட்டு, — 13 அநியாயத்திற்கு ஏற்ற பலனை அடைவார்கள்; அவர்கள் பகற்காலத்திலே சம்பிரமமாயிருத்தலை இன்பமென்று எண்ணுகிறவர்கள், மாசுகளும் அவலட்சணங்களுமானவர்கள்; விருந்தாக உங்களோடேகூடச் சாப்பிடுகையில் தங்கள் வஞ்சனைகளினால் சம்பிரமமாய் வாழ்கிறவர்கள். — 14 விபசாரத்தால் நிறைந்தவைகளாயும், பாவத்தைவிட்டு ஓயாதவைகளாயும் இருக்கிற கண்களுள்ளவர்கள்; ஸ்திரமில்லாத ஆத்துமாக்களைத் தந்திரமாய்ப் பிடிக்கிறவர்கள்; பொருளாசைகளில் முயற்சியான இருதயத்தை உடையவர்கள், சபிக்கப்பட்ட பிள்ளைகள். — 15 செம்மையான மார்க்கத்தைவிட்டுத் தப்பி நடந்து, பேர்சோருடைய குமாரனாகிய பாலாமின் வழியைப் பின்பற்றுகிறவர்கள்; அவன் அநியாயத்தின் கூலியை விரும்பினான்.—16 பின்பு தன்னுடைய அக்கிரமத்திற்காகக் கடிந்துகொள்ளப்பட்டான்; பேசாத மிருகமே மனிதர் பாஷையைப் பேசி அந்தத் தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டுக்குத் தடைசெய்தது.—17 (மேலும்) அவர்களே தண்ணீரில்லாத கிணறுகள்; அவர்களே சுழல்காற்றினால் அடிக்கப்படுகிற மேகங்கள்; என்றென்றைக்கும் உள்ள காரிருளே அவர்களுக்கு வைத்திருக்கின்றது.

18 வஞ்சகமாய் நடக்கிறவர்களை விட்டுத் தப்பினவர்களுக்கு அவர்கள் மிகவும் அகந்தையான வீண்வார்த்தைகளைப் பேசி, சரீர இச்சைகளினாலும் காமவிகாரங்களினாலும் அவர்களைத் தந்திரமாய்ப் பிடிக்கிறார்கள்.–19 தாங்களே கேட்டுக்கு அடிமைகளாயிருந்தும் அவர்களுக்குச் சுயாதீனத்தை வாக்குத்தத்தம்பண்ணுகிறார்கள்; எவனும் எதினாலே செயிக்கப்பட்டிருக்கிறானோ அதற்கு அடிமையாக்கப்பட்டிருக்கிறானே. — 20 ஆகையால் கர்த்தருமாய், இரட்சகருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பின

வர்கள் மறுபடியும் அவைகளில் சிக்கிக்கொண்டு
செயிக்கப்பட்டால், அவர்களுடைய முன்னிலை
மையிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாய்
இருக்கும்.—21 அப்படிப்பட்டவர்கள் நீதியின்
மார்க்கத்தை அறிந்தபின் தங்களுக்கு ஒப்புவிக்
கப்பட்ட பரிசுத்த கற்பனைகளை விட்டு விலகுகிற
திலும் அதை அறிந்துகொள்ளாமல் இருக்கிறதே
அவர்களுக்கு நன்மையாய் இருக்கும்.—22 அப்
பொழுது நாய் தான் கக்கினதை மறுபடியும்
தின்னுகிறதென்றும், கழுவப்பட்ட பன்றி மறு
படியும் சேற்றிலே புரளுகிறதென்றும் சொல்
லுகிற மெய்யான பழமொழியின்படி அவர்களுக்
குச் சம்பவித்தது.

## ௩. அதிகாரம்.

பிரியமானவர்களே, இவ்விரண்டாம் நிருபத்தை
இப்பொழுது உங்களுக்கு எழுதுகிறேன்; பரி
சுத்த தீர்க்கதரிசிகளால்,—2 முன் சொல்லப்
பட்ட வார்த்தைகளையும், இரட்சகராயிருக்கிற
கர்த்தருடைய அப்போஸ்தலராகிய எங்களு
டைய கற்பனையையும் நீங்கள் நினைக்கும்படி
யாக, இவைகளால் உங்கள் உண்மையான மன
திற்கு ஞாபகப்படுத்தி எழுப்புகிறேன்.—3 முத
லாவது நீங்கள் அறியவேண்டியது என்னவெ
னில் கடைசிநாள்களில் பரியாசக்காரர் தோன்று
வார்கள்; அவர்கள் தங்கள் சுய இச்சைகளின்
படி நடந்துகொண்டு,—4 அவர் வருவாரென்று
சொல்லுகிற வாக்குத்தத்தம் எங்கே இருக்கிறது;
பிதாக்கள் நித்திரை அடைந்தபின்பு சகலமும்
சிருட்டிப்பின் தோற்றமுதல் இருந்தவிதமாய்
இருக்கிறதே என்று சொல்லுவார்கள்.

5 பூர்வகாலத்திலே பராபரனுடைய வார்த்தை
யினாலே வானங்களும், சலத்தினாலேயும் சலத்
திற்குள்ளேயும் நிலைகொண்ட பூமியும் இருந்
தும், அப்பொழுது இருந்த உலகம் அதினாலே
வெள்ளங்கொண்டு அழிந்துபோயிற்றே.—6 அது
போல இப்பொழுது இருக்கிற வானங்களும்
பூமியும் அந்த வார்த்தையாலே அக்கினிக்கு
இரையாக வைக்கப்பட்டுத் தேவபத்தியில்லாத
மனிதர்களுக்கு நியாயத்தீர்ப்பும், கேடும் உண்
டாகும் நாள்வரைக்கும் காக்கப்படுகின்றன.—
7 இதை அந்தப் பரியாசக்காரர் அறிந்தும் நினை
யாமல் இருக்கிறார்கள்.

8 பிரியமானவர்களே, நீங்கள் கர்த்தரிடத்தில்
ஒருநாள் ஆயிரம் வருஷங்களைப்போலவும், ஆயி
ரம்வருஷங்கள் ஒருநாளைப்போலவும் இருக்கின்ற
தென்று இருக்கிற இந்த ஒரே காரியத்தை
மறவாதிருப்பீர்களாக.—9 தாமதித்திருக்கிறார்
என்று சிலர் எண்ணுகிறபிரகாரமாய்க் கர்த்
தர் (தமது) வாக்குத்தத்தத்தைக்குறித்துத் தாமத
மாய் இராமல், ஒருவரும் கெட்டுப்போகாத
படிக்கு எல்லாரும் மனந்திரும்பவேண்டுமெ
ன்று விரும்பி, நமதுமேல் நீடிய சாந்தமுள்ளவரா
யிருக்கிறார்.—10 கர்த்தருடைய நாள் இரவிலே
திருடன்வருகிற விதமாய் வரும்; அப்பொழுது
வானங்கள் மடமடவென்று அகன்றுபோம்;
பூதங்கள் எரிந்து கரைந்துபோம், பூமியும் அதி
லுள்ள கிரியைகளும் வெந்துபோம்.

11 இப்படி இவையெல்லாம் கரைந்துபோ
கிறதாயிருக்க, நீங்கள் பரிசுத்த நடக்கையிலே
யும் தேவபத்தியிலேயும் எப்படிப்பட்டவர்களாய்
இருக்கவேண்டும்?—12 வானங்கள் வெந்து
கரைந்து, பூதங்கள் எரிந்து உருகிப்போகும்;
பராபரனுடைய நாள் வருதற்கு நீங்கள் மிகுந்த
ஆசையோடே காத்திருக்கிறீர்களே.—13 அவ
ருடைய வாக்குத்தத்தத்தின்படியே புதிய வானங்
களும், புதிய பூமியும் உண்டாகும் என்று காத்தி
ருக்கிறோம்; அவைகளிலே நீதி வாசமாயிருக்கும்.

14 ஆகையால் பிரியமானவர்களே, அவை
கள் வரக்காத்திருக்கிற நீங்கள் அவரால் மாசும்
குற்றமும் இல்லாதவர்களாய்ச் சமாதானத்தோ
டே காணப்படும்படிக்குச் சாக்கிரதையாய்
இருந்து,—15 நம்முடைய கர்த்தாவின் நீடிய
சாந்தம் இரட்சிப்புக்கு ஏதுவாயிருக்கிறதென்று
எண்ணிக்கொள்வீர்களாக; நமக்குப் பிரியமான
சகோதரனாகிய பவுலும் தனக்குக் கொடுக்கப்
பட்ட ஞானத்தினாலே அப்படியே உங்களுக்கு
எழுதியிருக்கிறான்.—16 எல்லா நிருபங்களிலே
யும் இவைகளைக்குறித்துப் பேசியிருக்கிறான்;
அவன் எழுதினவைகளில் சில (வாக்கியங்கள்)
அறிகிறதற்கு அரிதாயிருக்கின்றன; படியாதவர்க
ளும் ஸ்திரமில்லாதவர்களும் அப்படிப்பட்டவை
களையும் மற்ற வேதவாக்கியங்களையும் தங்களுக்
குக் கேடுவரத்தக்கதாகப் புரட்டுகிறார்கள்.

17 ஆதலால் பிரியமானவர்களே, நீங்கள்
இவைகளை முன் அறிந்தபடியால் (மற்றவர்களோ
டே) கூட அந்த அக்கிரமக்காரருடைய வஞ்ச
கத்தினாலே இழுத்துக்கொள்ளப்படாமலும் ஸ்தி
ரத்தைவிட்டு விழாமலும் இருக்கும்படிக்கு எச்
சரிக்கையாயிருந்து,—18 நம்முடைய கர்த்தரும்
இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை
யையும், அவரை அறிகிற அறிவையும் அதிகம்
அதிகமாய் அடைந்துகொள்வீர்களாக; அவருக்கு
இப்பொழுதும் (இனி) என்றென்றைக்கும் மகி
மை உண்டாவதாக.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

ஆதியில் இருந்ததுமாய், நாங்கள் கேட்டது
மாய், எங்கள் கண்களினாலே கண்டதுமாய், நாங்
கள் நோக்கிப்பார்த்ததுமாய், எங்கள் கைகளா
லே தொட்டதுமாய் இருக்கிற சீவனையுடைய
வார்த்தையைக்குறித்து (உங்களுக்கு அறிவிக்கி
றோம்). — 2 அந்தச் சீவன் வெளிப்பட்டது;
பிதாவினிடத்தில் இருந்ததுமாய், நமக்கு வெ
ளிப்பட்டதுமாய் இருக்கிற அந்த நித்தியசீவனை
யே நாங்கள் கண்டு, அதைக்குறித்துச் சாட்சி
கொடுத்து, அதையே உங்களுக்கு அறிவிக்கி
றோம்.—3 நீங்களும் எங்களோடேகூட ஐக்கி
யமுள்ளவர்களாகும்படிக்கு, நாங்கள் கண்டும்
கேட்டும் இருந்ததை உங்களுக்கு அறிவிக்கி
றோம்; நாங்களே பிதாவுடனேயும் அவருடைய
குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவுடனேயும் ஐக்க
முள்ளவர்களாய் இருக்கிறோம். — 4 உங்களுக்
குச் சந்தோஷம் நிறைந்ததாய் இருக்கும்படிக்கு,
இவைகளை உங்களுக்கு எழுதுகிறோம்.

5 மேலும் அவரிடத்தில் நாங்கள் கேட்டது
மாய் உங்களுக்கு அறிவிக்கிறதுமாயிருக்கிற விசே
ஷம் என்னவெனில், பராபரன் எவ்வளவாகி
லும் இருளில்லாமல் ஒளியாயிருக்கிறார்.—6 நாம்
இருளிலே நடந்து அவரோடே ஐக்கப்பட்டவர்
கள் என்று சொல்லிக்கொண்டால், நாம் சத்தி
யத்தை நடப்பியாமல் பொய்பேசுகிறவர்களாயி
ருப்போம்.—7 அவர் ஒளியில் இருக்கிறதுபோல
நாமும் ஒளியிலே நடந்தால், ஒருவரோடொரு
வர் ஐக்கப்பட்டிருப்போம்; அல்லாமலும், அவ
ருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவின்
இரத்தம் நம்முடைய பாவங்கள் எல்லாவற்றை
யும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும்.

8 நமக்குப் பாவமில்லை என்றோமானால் நம்
மை நாமே வஞ்சிக்கிறவர்களாவோம்; சத்தியம்
நமக்குள்ளே இராது.—9 நம்முடைய பாவங்களை
நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்
னித்து, எல்லா அநியாயமும் நம்மைவிட்டு நீங்க
நம்மைச் சுத்திகரிப்பதற்கு உண்மையும் நீதியும்
உள்ளவராய் இருக்கிறார்.—10 நாம் பாவம் செய்
யவில்லை என்றோமானால், நாம் அவரைப் பொய்
யனாக்குகிறதாக இருக்கும்; அவருடைய வார்த்
தையும் நமக்குள்ளே இராது.

### உ. அதிகாரம்.

என் பிள்ளைகளே, நீங்கள் பாவம்செய்யாதப
டிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன்;
ஒருவன் பாவம்செய்தாலும் நீதிஉள்ளவராயிருக்
கிற இயேசுக்கிறிஸ்து என்னும் காரியகர்த்தர் நமக்
காகப் பிதாவினிடத்தில் இருக்கிறார்.—2 அவர்
நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற பலி
யானவராயிருக்கிறார்; நம்முடைய பாவங்களுக்
காகமாத்திரமல்ல, சர்வலோகத்தினுடைய பாவங்
களுக்காகவும் (அப்படியே இருக்கிறார்).

3 அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொள்
ளுகிறவர்களானால், அவரை அறிந்துகொண்டி
ருக்கிறோம் என்று அதினாலே அறிவோம். —
4 அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல்
அவரை அறிந்துகொண்டேன் என்று சொல்லு
கிறவன் பொய்யனாய் இருக்கிறான்; சத்தியம்
அவனுக்குள்ளே இல்லை.—5 அவருடைய வச
னத்தைக் கைக்கொள்ளுகிறவனிடத்திலே பரா
பரனுடைய அன்பு மெய்யாக நிறைவேறியிருக்
கின்றது; நாம் அவருக்குள் இருக்கிறதை அதி
னாலே அறிந்திருக்கிறோம். — 6 அவரிடத்தில்
நிலைத்திருக்கிறேன் என்று சொல்லுகிறவன் அ
வர் நடந்தபடியே தானும் நடக்கவேண்டும்.

7 பிரியமானவர்களே, நான் உங்களுக்குப்
புதியகற்பனையை அல்ல, ஆதிமுதல் நீங்கள்
பெற்றிருக்கிற பழமையான கற்பனையையே எழு
துகிறேன்; அந்தப் பழமையான கற்பனை நீங்கள்
ஆதிமுதல் கேட்டுக்கொண்ட வசனமே. —
8 அன்றியும் நான் உங்களுக்குப் புதிய கற்பனை
யையும் எழுதுகிறேன்; இருள் நீங்கிப்போக
மெய்யான ஒளி இப்பொழுது பிரகாசிக்கிறபடி
யால், இது அவரைக்குறித்தும் உங்களைக்குறித்
தும் மெய்யாயிருக்கின்றது. — 9 தன் சகோதர
னைப் பகைத்து, அந்த ஒளியிலே இருக்கிறேன்
என்று சொல்லுகிறவன் இதுவரைக்குமே இரு
ளில் இருக்கிறான்.—10 தன் சகோதரனிடத்தில்
அன்புகூருகிறவன் ஒளியிலே நிலைகொண்டி
ருக்கிறான்; இடறல் அவனிடத்திலே இல்லை.—
11 தன் சகோதரனைப் பகைக்கிறவன் இருளி
லேயிருந்து இருளிலே நடந்து, இருளானது தன்
கண்களைக் குருடாக்கினபடியால், தான் நடக்கி
ற இடம் இன்னதென்று அறியாமல் இருக்கிறான்.

12 பிள்ளைகளே, அவருடைய நாமத்தின்
நிமித்தம் உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படுகிற
தால் உங்களுக்கு எழுதுகிறேன்.—13 பிதாக்க
ளே, ஆதிமுதலாய் இருக்கிறவரை நீங்கள் அறிந்
திருக்கிறதால் உங்களுக்கு எழுதுகிறேன்; வாலி
பரே, பொல்லாங்கனை நீங்கள் செயித்ததால் உங்
களுக்கு எழுதுகிறேன்; குழந்தைகளே, நீங்கள்
பிதாவை அறிந்திருக்கிறதால் உங்களுக்கு எழுது
கிறேன்.—14 பிதாக்களே, ஆதிமுதலாய் இருக்
கிறவரை நீங்கள் அறிந்திருக்கிறதால், உங்களு
க்கு எழுதினேன்; வாலிபரே, தேவவசனம் உங்
களிடத்தில் தரித்திருக்க, நீங்கள் பெலனுள்ள
வர்களாய்ப் பொல்லாங்கனைச் செயித்ததால் உங்
களுக்கு எழுதினேன்.

15 உலகத்திலேயும், உலகத்திலுள்ளவைக
ளிலேயும் அன்புகூராதிருப்பீர்களாக; உலகத்
தில் அன்புகூருகிறவன் பிதாவின்மேல் அன்
பில்லாதவனாய் இருக்கிறான்.—16 எப்படியெ
னில், மாம்சத்தின் இச்சையும் கண்களுடைய
இச்சையும் சீவனத்தின் பெருமையுமாகிய உல
கத்திலுள்ள இவையெல்லாம் பிதாவினால் உண்
டாயிராமல், உலகத்தினால் உண்டாயிருக்கின்
றன.—17 உலகமும் அதின் இச்சையும் ஒழிந்
துபோகும்; பராபரனுடைய சித்தத்தின்படிசெய்
கிறவனே என்றென்றைக்கும் நிலைநிற்பான்.

18 குழந்தைகளே, (இது) கடைசி நேர
மாய் இருக்கின்றது; கிறிஸ்துவின் எதிராளி வரு
கிறான் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறபடி,
இப்பொழுதே கிறிஸ்துவின் எதிராளிகள் அநே
கர் உண்டாயிருக்கிறார்கள்; அதினாலே இது
கடைசி நேரமாயிருக்கிறது என்று அறிகிறோம்.–
19 அவர்கள் நம்மிடத்திலிருந்து புறப்பட்டார்
கள்; ஆகிலும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்க
ளல்ல, நம்மைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்க
ளானால் நம்முடனே தரித்திருப்பார்களே; எல்
லாரும் நம்மைச் சேர்ந்தவர்களல்ல என்று வெளி
யாகும்படிக்கே (புறப்பட்டார்கள்). — 20 நீங்
கள் பரிசுத்தராலே அபிஷேகத்தைப் பெற்று, சக
லத்தையும் அறிந்திருக்கிறீர்கள். — 21 சத்தியத்
தை நீங்கள் அறியாததாகவல்ல, நீங்கள் அதை
யும் சத்தியத்தால் ஒரு பொய்யும் உண்டாயிரா
தென்பதையும் அறிந்திருக்கிறபடியால், உங்க
ளுக்கு எழுதினேன். — 22 இயேசு என்பவர்
கிறிஸ்துவல்ல என்று மறுதலிக்கிறவனேயன்றி
வேறு யார் பொய்யன்? பிதாவையும் குமாரனை
யும் மறுதலிக்கிறவனே கிறிஸ்துவுக்கு எதிராளி
யானவன். — 23 குமாரனை மறுதலிக்கிறவன்
பிதாவை உடையவன் அல்ல, குமாரனை அறிக்
கைபண்ணிக்கொள்ளுகிறவன் பிதாவையும் உ
டையவனாய் இருக்கிறான்.

24 ஆகையால், ஆதிமுதல் நீங்கள் கேள்விப்
பட்டது உங்களில் நிலைத்திருக்கக்கடவது; ஆதி
முதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்
திருந்தால், நீங்களும் குமாரனிலும் பிதாவிலும்
நிலைத்திருப்பீர்கள்.—25 அவர் நமக்கு வாக்குத்
தத்தம்பண்ணின பொருள் நித்திய சீவனே;
உங்களை வஞ்சிக்கத் தேடுகிறவர்களைக்குறித்து இ
வைகளை உங்களுக்கு எழுதினேன்.—26 அப்
படியிருந்தும், நீங்கள் அவராலே பெற்ற அபி
ஷேகம் உங்களில் நிலைகொண்டு இருக்கிறதால்
ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டுவ
தில்லை.—27 அந்த அபிஷேகம் சகல காரியங்
களையும் குறித்து உங்களுக்குப் போதிக்கிறதே
பொய்யில்லாமல் சத்தியமாயிருக்கின்றது; ஆகை
யால் அது உங்களுக்குப் போதித்தபடியே அவ
ரில் நிலைத்திருப்பீர்களாக.

28 இப்படியிருக்கப் பிள்ளைகளே, அவர் வெ
ளிப்பட்டுப் பிரசன்னமாய் வரும்பொழுது, நாம்
அவரால் வெட்கப்படுத்தப்படாமல் தயிரியமுள்
ளவர்களாய் இருக்கும்படிக்கு அவரில் நிலைத்
திருங்கள். — 29 அவர் நீதியுள்ளவராய் இருக்
கிறார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க,
நீதியைச்செய்கிறவன் எவனோ அவன் அவரில்
பிறந்தான் என்று அறிந்திருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

நாம் பராபரனுடைய பிள்ளைகள் என்று அழைக்
கப்படும்படி (செய்ததினாலே) பிதாவானவர்
நமக்குக் காண்பித்த மிகுந்த அன்பை நோக்கிப்
பாருங்கள்; உலகத்தார் அவரை அறியாதபடியி
னாலே நம்மை அறியாமல் இருக்கிறார்கள்.—
2 பிரியமானவர்களே, இப்பொழுது பராபரனு
டைய பிள்ளைகளாய் இருக்கிறோம்; (இனி
மேல்), இன்ன இன்னவிதமாய் இருப்போம்
என்று இன்னம் வெளியரங்கமாகவில்லை; (ஆகி
லும்), அவர் வெளிப்படும்பொழுது, அவர் இருக்
கிற தன்மையாய் நாம் (அவரைத் தரிசிப்பதால்),
அவருக்கு ஒப்பாயிருப்போம் என்று அறிந்திருக்
கிறோம்.

3 மேலும் இப்படி அவர்மேல் நம்பிக்கையா
யிருக்கிறவன் எவனோ அவன் அவர் சுத்தமுள்ள
வராய் இருக்கிறதுபோலத் தன்னையும் சுத்தி
கரித்துக்கொள்ளுகிறான். – 4 பாவம்செய்கிறவன்
எவனோ அவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோ
தம்செய்கிறான்; பாவமானது நியாயப்பிரமாணத்
திற்கு விரோதமாயே இருக்கின்றது. – 5 அன்றி
யும் நீங்கள் அறிந்துகொண்டபடி அவர் நம்மு
டைய பாவங்களை நீக்கும்படிக்கு வெளிப்பட்
டார்; அவரிடத்திலே பாவம் இல்லை. – 6 அவரி
டத்தில் நிலைத்திருக்கிறவன் எவனோ அவன் பா
வம்செய்கிறதில்லை, பாவம்செய்கிறவன் எவனோ
அவன் அவரைக் காணவும் இல்லை; அவரை அறி
யவும் இல்லை.

7 பிள்ளைகளே, நீங்கள் ஒருவராலும் வஞ்சிக்

கப்படாதிருப்பீர்களாக; நீதியைச் செய்கிறவன் அவர் நீதி உள்ளவராயிருக்கிறதுபோல நீதி உள்ளவனாயிருக்கிறான்.—8 பிசாசானவன் ஆதிமுதல் பாவம்செய்கிறான்; ஆகையால் பாவம்செய்கிறவன் பிசாசினால் உண்டாயிருக்கிறான்; அந்தப் பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்குப் பராபரனுடைய குமாரன் வெளிப்பட்டார்.—
9 பராபரனில் பிறந்தவன் எவனோ அவனுக்குள்ளே அவருடைய வித்து தரித்திருக்கிறதால் அவன் பாவம்செய்யான்; அவன் பராபரனிடத்திலே பிறந்தபடியால் பாவம்செய்யமாட்டான்.
10 இதினாலே பராபரனுடைய பிள்ளைகளும் பிசாசின் பிள்ளைகளும் வெளியரங்கமாகிறார்கள்; நீதியைச் செய்யாமலும் தன் சகோதரனிடத்தில் அன்புகூராமலும் இருக்கிறவன் எவனோ அவன் பராபரனால் உண்டானவன் அல்ல; என்னத்தினாலென்றால், — 11 நாம் ஒருவரில் ஒருவர் அன்புகூரவேண்டும் என்பது நீங்கள் ஆதிமுதல் அறிவிக்கக்கேட்ட விசேஷமாய் இருக்கின்றது. — 12 பொல்லாங்கனால் உண்டாயிருந்து, தன் சகோதரனைக் கொலைசெய்த காயீனைப் போல இருக்கக்கூடாது; அவன் எதின் நிமித்தம் அவனைக் கொலைசெய்தான்? தன் கிரியைகள் பொல்லாதவைகளுமாய்த் தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாய் இருந்ததின் நிமித்தமே அப்படிச் செய்தான். — 13 என் சகோதரரே, உலகத்தார் உங்களைப் பகைத்தால் ஆச்சரியப்படாதிருப்பீர்களாக.—14 நாம் சகோதரரிடத்தில் அன்புகூருகிறபடியால் மரணத்தை விட்டு நீங்கிச் சீவனுக்குட்பட்டிருக்கிறோம் என்று அறிந்திருக்கிறோம்; சகோதரனிடத்தில் அன்புகூராமல் இருக்கிறவன் மரணத்திலே நிலைகொண்டிருக்கிறான். — 15 தன் சகோதரனைப் பகைக்கிறவன் மனித கொலைபாதகனாய் இருக்கிறான்; மனித கொலைபாதகன் எவனோ அவனுக்குள்ளே நித்தியசீவன் நிலைத்திராது என்று அறிந்திருக்கிறீர்கள்.
16 அவர் தம்முடைய சீவனை நமக்காக விட்டுவிட்டதினாலே அன்பு இன்னதென்று அறிந்தோம்; நாமும் சகோதரருக்காக நமது சீவனை விட்டுவிடக் கடனாளிகளாய் இருக்கிறோம். —
17 ஒருவன் இவ்வுலக சீவனம் உடையவனாயிருந்து, தன் சகோதரனுக்குக் குறைச்சல் உண்டென்று கண்டு, தன் இருதயத்தை அவனுக்கு அடைத்துக்கொண்டால், அவனுக்குள்ளே பராபரனுடைய அன்பு எப்படி நிலையாயிருக்கும்?—
18 என் பிள்ளைகளே, வசனத்தினாலும் நாவினாலும் அல்ல, கிரியைகளினாலும் உண்மையினாலும் அன்புகூரக்கடவோம்.
19 அதினாலே நாம் சத்தியமுள்ளவர்கள் என்று அறிந்து, நமது இருதயத்தை அவருக்குமுன்பாக நிச்சயப்படுத்தலாம்.—20 நமது இருதயமே நம்மைக் குற்றவாளிகளாகத் தீர்க்குமானால், நம்முடைய இருதயத்திலும் பராபரன் பெரியவராய் இருக்கிறார் என்றும், சகலத்தையும் அறிந்திருக்கிறார் என்றும் (நினைப்போமாக).—21 பிரியமானவர்களே, நம்முடைய இருதயம் நம்மைக் குற்றவாளிகள் என்று தீர்ப்புச்சொல்லாதிருந்தால், நாம் பராபரனிடத்தில் தயிரியம்கொள்வோம்.—
22 மேலும் அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொண்டு, அவருக்குமுன்பாக பிரியமானவைகளைச் செய்கிறபடியினாலே, நாம் வேண்டிக்கொள்வது எதோ, அதை அவராலே பெற்றுக்கொள்வோம். — 23 நாம் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தின்மேல் விசுவாசமாயிருந்து, அவர் நமக்குக் கட்டளையிட்டபடி ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டுமென்ற இதுவே பராபரனுடைய கட்டளையாய் இருக்கின்றது.—24 அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறவன் அவரிடத்தில் நிலைத்திருக்கிறான்; அவரும் அவனிடத்தில் நிலைத்திருக்கிறார்; அவர் நம்மிடத்தில் நிலைத்திருக்கிறதை அவர் நமக்குத் தந்த ஆவியினாலே அறிந்திருக்கிறோம்.

## ச. அதிகாரம்.

பிரியமானவர்களே, உலகத்திலே அநேகம் கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றினபடியால், நீங்கள் எந்த ஆவியையும் நம்பாமல் அந்த ஆவிகள் பராபரனால் உண்டானவைகளோ என்று சோதித்து அறியுங்கள்.—2 பராபரனால் உண்டான ஆவியை நீங்கள் எதினாலே அறியலாமென்றால், இயேசுக்கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று அறிக்கை பண்ணுகிற ஆவி எதுவோ, அது பராபரனால் உண்டாயிருக்கின்றது. — 3 இயேசுக்கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று அறிக்கைபண்ணாத ஆவி எதுவோ, அது பராபரனால் உண்டாயிருக்கிறதல்ல; அதுவே கிறிஸ்துவுக்கு எதிராளியானவனுடைய ஆவி; அது வருகிறதென்று நீங்கள் கேள்விப்பட்டீர்கள்; அது இப்பொழுதே உலகத்தில் இருக்கின்றது.
4 பிள்ளைகளே, நீங்கள் பராபரனால் உண்டாயிருந்து, உலகத்தில் இருக்கிறவனிலும் உங்களில் இருக்கிறவர் பெரியவரானதால் அவர்களைச் செயித்தீர்கள்.—5 அவர்கள் உலகத்தாரின் தன்மையை உடையவர்கள்; ஆனபடியால் உலகத்தாரின் தன்மையாய்ப் பேசுகிறார்கள்; உலகத்தாரும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறார்கள். —
6 நாங்கள் பராபரனுடைய தன்மையை உடையவர்கள்; பராபரனை அறிந்துகொண்டவன் எங்களுக்குச் செவிகொடுக்கிறான்; பராபரனுடைய தன்மை இல்லாதவன்மாத்திரம் எங்களுக்குச் செவிகொடுக்கிறதில்லை; இதினாலே சத்திய ஆவியையும் வஞ்சக ஆவியையும் அறிந்திருக்கிறோம்.
7 பிரியமானவர்களே, அன்பு பராபரனால் உண்

டாயிருக்கிறபடியால் ஒருவரில் ஒருவர் அன்பா
யிருக்கக்கடவோம்; அன்புள்ள யாவரும் பராபர
னில் பிறந்து அவரை அறிந்திருக்கிறார்கள். —
8 பராபரன் அன்பாகவே இருக்கிறபடியால்,
அன்பில்லாதவன் பராபரனை அறியான்.—9 பரா
பரனுடைய ஒரேபேறான குமாரனாலே நாம்
பிழைக்கும்படிக்கு அவரை இவ்வுலகத்திலே
அனுப்பினதினாலே, பராபரன் நமதுமேல் வைத்த
அன்பு வெளிப்பட்டது.—10 நாம் பராபரனிடத்
தில் அன்புகூர்ந்ததினால் அல்ல, அவர் நம்மி
டத்தில் அன்புகூர்ந்து, நம்முடைய பாவங்களை
நீக்கும் கிருபை உண்டாகும்படி, தம்முடைய
குமாரனை அனுப்பினதினாலே அன்பு உண்டாயி
ருக்கின்றது.—11 பிரியமானவர்களே, பராபரன்
இவ்விதமாய் நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால்
நாமும் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரக் கட
னாளிகளாய் இருக்கிறோம்; பராபரனை ஒருவரும்
ஒருக்காலும் காணவில்லை. — 12 நாம் ஒருவரி
டத்தில் ஒருவர் அன்புகூர்ந்தால் பராபரன் நமக்
குள்ளே நிலைத்திருப்பார்; அவருடைய அன்பு
நம்மிடத்தில் நிறைவுள்ளதாயும் இருக்கும். —
13 அவர் தம்முடைய ஆவியில் நமக்குக் கொ
டுத்ததினாலே நாம் அவரிலும் அவர் நம்மிலும்
நிலைத்திருக்கிறதை அறிந்திருக்கிறோம்.

14 பிதாவானவர், குமாரனை உலக இரட்சக
ராக அனுப்பினதை நாங்கள் பார்த்திருந்து சாட்
சியிடுகிறோம். — 15 இயேசுவானவர் பராபரனு
டைய குமாரனென்று அறிக்கைபண்ணுகிறவன்
எவனோ, அவனிடத்தில் பராபரன் நிலைத்திருக்கி
றார்; பராபரனிடத்திலே அவனும் நிலைத்திருக்கி
றான்.—16 பராபரன் நமதுமேல் வைத்திருக்கிற
அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம்;
பராபரன் அன்பாகவே இருக்கிறார்; அன்பிலே
நிலைத்திருக்கிறவன் பராபரனிடத்தில் நிலைத்தி
ருக்கிறான்; பராபரனும் அவனிடத்திலே நிலைத்
திருக்கிறார்.–17 நியாயத்தீர்ப்பின் நாளிலே நமக்
குத் தயிரியம் உண்டாயிருக்கத்தக்கதாக, அன்பு
நம்மிடத்தில் நிறைவுள்ளதாயிற்று; ஆனதால் அ
வர் இருக்கிற பிரகாரமாக நாமும் இந்த உலகத்
தில் இருக்கிறோமே. — 18 அன்பிலே பயமில்
லை; நிறைந்த அன்பு பயத்தைப் புறம்பே தள்ளு
கின்றது; பயமானது வேதனையுள்ளதே.–19 பய
ப்படுகிறவன் நிறைந்த அன்புள்ளவன் அல்ல,
அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால்
நாமும் அவரிடத்தில் அன்புகூருகிறோம். —
20 ஒருவன் தன் சகோதரனைப் பகைத்து நான்
பராபரனிடத்தில் அன்புகூருகிறேன் என்று
சொன்னால், அவன் பொய்க்காரனாய் இருப்பான்;
எப்படியெனில், அவன் தான் கண்டிருக்கிற
சகோதரனிடத்தில் அன்புகூராமலிருக்க, தான்
காணாதிருக்கிற பராபரனிடத்திலே எப்படி அன்
பாயிருப்பான்? — 21 அன்றியும் பராபரனிடத்
தில் அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்தி
லும் அன்புகூரவேண்டுமென்ற இந்தக் கட்டளை
யை அவராலே பெற்றிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

இயேசு என்பவரே கிறிஸ்து என்று விசுவாசிக்
கிறவன் எவனோ, அவன் பராபரனில் பிறந்திருக்
கிறான்; அன்றியும் பிறப்பித்தவரிடத்தில் அன்பு
கூருகிற யாவரும் அவரில் பிறந்தவனிடத்திலும்
அன்புகூருகிறார்கள்.–2 நாம் பராபரனிடத்திலே
அன்புகூர்ந்து, அவருடைய கற்பனைகளைக் கைக்
கொண்டுவருகிறதினாலே நம்மைப் பராபரனு
டைய பிள்ளைகளிடத்தில் அன்புகூருகிறவர்க
ளென்று அறிந்துகொள்ளுகிறோம்.—3 நாம் பரா
பரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே
அவரிடத்தில் அன்புகூருகிறதாம்; இப்படி அவ
ருடைய கற்பனைகள் பாரமானவைகளும் அல்ல.–
4 எப்படியெனில், பராபரனில் பிறந்தவன் எவ
னோ, அவன் உலகத்தைச் செயிக்கிறான்; நம்மு
டைய விசுவாசமே உலகத்தைச் செயிக்கிற செ
யம்.— 5 இயேசுவானவர் பராபரனுடைய குமா
ரனென்று விசுவாசிக்கிறவனே அன்றி, வேறு
யாவன் உலகத்தைச் செயிக்கிறவன்?

6 இயேசுக்கிறிஸ்துவாகிய அவரே சலத்தினா
லும் இரத்தத்தினாலும் தோன்றிவந்தவர்; சலத்தி
னாலேமாத்திரமல்ல, சலத்தினாலும் இரத்தத்தினா
லுமே (வந்தார்); ஆவியானவர் சத்தியமாகை
யால் ஆவியானவரே சாட்சிகொடுக்கிறவர். —
7 ஆனதால் பரமண்டலத்திலே பிதா, வார்த்
தை, பரிசுத்தஆவி என்று இம்மூவரும் சாட்சியி
டுகிறார்கள்; அம்மூவரும் ஒன்றாய் இருக்கிறார்
கள்.–8 பூமியிலேயும் ஆவி, சலம், இரத்தமென்று
இம்மூன்றும் சாட்சியிடுகின்றன, அம்மூன்றும்
ஒன்றாகப் பொருந்துகின்றன.

9 நாம் ஏற்றுக்கொள்ளுகிற மனிதருடைய
சாட்சியிலும், பராபரனுடைய சாட்சி அதிகமாய்
இருக்கின்றது; பராபரன் தம்முடைய குமாரனைக்
குறித்துக் கொடுத்த சாட்சி அதுவே.—10 பரா
பரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கி
றவன் அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொ
ண்டிருக்கிறான்; பராபரனை விசுவாசியாதவன்
அவரைப் பொய்யன் என்கிறவனாய் இருக்கி
றான்; பராபரன் தம்முடைய குமாரனைக்குறித்துக்
கொடுத்த சாட்சியை விசுவாசிக்கவில்லையே. —
11 அந்தச் சாட்சி என்னவெனில், பராபரன்
நமக்கு நித்தியசீவனைக் கொடுத்திருக்கிறார்; அந்
தச் சீவன் அவருடைய குமாரனில் இருக்கிற
தென்பதே. — 12 குமாரனை உடையவன் அந்
தச் சீவனை உடையவனாய் இருக்கிறான்; பராபர
னுடைய குமாரனில்லாதவன் அந்தச் சீவன் இல்
லாதவனாய் இருக்கிறான்.

13 பராபரனுடைய குமாரனுடைய நாமத்

திலல் விசுவாசமாயிருக்கிற நீங்கள், நித்தியசீவனை
உடையவர்களென்று அறிந்து, பராபரனுடைய
குமாரனுடைய நாமத்தின்மேலே விசுவாசமாயி
ருக்கும்படிக்கு இவைகளை உங்களுக்கு எழுதி
னேன்.—14 நாம் எதையாகிலும் அவருடைய
சித்தத்தின்படியே கேட்டால், அவர் நமக்குச்
செவிகொடுப்பார் என்பதே அவரால் நமக்கு
உண்டாயிருக்கிற தயிரியம்.–15 அன்றியும் நாம்
எதைக்கேட்டாலும், அவர் நமக்குச் செவிகொ
டுப்பார் என்று நாம் அறிந்திருக்க, அவரிடத்தில்
நாம் பண்ணின விண்ணப்பங்களைப் பெற்றோ
மென்றும் அறிந்திருக்கிறோம்.

16 ஒருவன் மரணத்திற்கு ஏதுவல்லாத பா
வத்தைத் தன் சகோதரன் செய்யக்கண்டால்
(கர்த்தாவை நோக்கிச்)செபம்பண்ணக்கடவன்;
அப்பொழுது அவர் அவனுக்கு மரணத்திற்கு
ஏதுவல்லாத பாவத்தைச் செய்தவர்களுக்கு ஏற்ற
உயிரைக் கொடுப்பார்; மரணத்திற்கு ஏதுவான
பாவம் உண்டு; அதைக்குறித்துச் செபம்பண்
ணச் சொல்லமாட்டேன்.—17 அநியாயம் யா
வும் பாவம்தான்; மரணத்திற்கு ஏதுவல்லாத பா
வமும் உண்டு.

18 நாம் அறிந்துகொண்டபடி, பராபரனில்
பிறந்தவன் எவனோ அவன் பாவம்செய்யமாட்
டான்; பராபரனில் பிறந்தவன் தன்னைக் காக்கி
றான்; ஆகையால் பொல்லாங்கன் அவனைத் தொ
டான்.–19 மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி,
நாம் பராபரனால் உண்டாயிருக்கிறோம்; உலக
முழுவதும் பொல்லாங்கனுக்குள்ளே கிடக்கின்
றது.—20 மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி
நாம் மெய்யானவரை அறிந்துகொள்வதற்குப் பரா
பரனுடைய குமாரன் வந்து, நமக்குப் புத்தியைக்
கொடுத்தார்; அந்தப்படி நாம் அவருடைய குமார
னாகிய இயேசுக்கிறிஸ்துவிலுள்ள மெய்யானவ
ரைப் பற்றியிருக்கிறோம்; அவரே மெய்யான தே
வனுமாய் நித்தியசீவனுமாய் இருக்கிறார்.
21 பிள்ளைகளே, நீங்கள் விக்கிரகங்களுக்கு
விலகி உங்களைக்காத்துக்கொள்வீர்களாக.–ஆமென்.

## அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்.

நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய், என்றென்
றைக்கும் நம்மோடு இருப்பதுமாய் இருக்கிற சத்
தியத்தின்நிமித்தம் நான்மாத்திரமல்ல, சத்தியத்
தை அறிந்திருக்கிற மற்ற யாவரும் உண்மை
யாய்ச் சிநேகித்திருக்கிற—2 தெரிந்துகொள்ளப்
பட்ட அம்மாளுக்கும் அவளுடைய பிள்ளைகளுக்
கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது:—
3 பிதாவாகிய பராபரனாலும் பிதாவின் குமாரனா
கிய கர்த்தாவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினா
லும் கிருபையும், இரக்கமும், சமாதானமும், சத்
தியத்தோடும் அன்போடும்கூட உங்களுக்கு
உண்டாயிருக்கக்கடவது.

4 உம்முடைய பிள்ளைகளில் சிலர் பிதாவினால்
நாம் கற்பனை அடைந்தபடி சத்தியத்திலே நடக்
கிறவர்கள் என்று நான் கண்டு, மிகவும் சந்தோ
ஷப்பட்டேன். — 5 இப்பொழுது அம்மாளே,
நான் உமக்குப் புதிய கற்பனையாகவல்ல, ஆதி
முதல் நமக்கு உண்டாயிருக்கிற கற்பனையாக
எழுதி வேண்டிக்கொள்ளுகிறது என்னவெ
னில், நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூர
வேண்டும்.–6 நாம் அவருடைய கற்பனைகளின்
படி நடக்கிறதே அன்புகூருகிறதாம்; நீங்கள்
ஆதிமுதல் கேட்டிருக்கிறபடி, அதிலே நடந்
துகொள்ளவேண்டும் என்பதே அந்தக் கற்பனை
யாய் இருக்கின்றது.

7 அநேக வஞ்சனைக்காரர் உலகத்திலே
தோன்றியிருக்கிறார்கள்; இயேசுக்கிறிஸ்துவான
வர் மாம்சமானார் என்று அறிக்கைபண்ணாமல்
இருக்கிறார்கள்; இப்படிப்பட்டவனே வஞ்ச
னைக்காரனுமாய் கிறிஸ்துவுக்கு எதிராளியுமாய் இ
ருக்கிறான்.—8 நாம் நம்முடைய வேலைகளை இ
ழந்துபோகாமல் நிறைந்த பலனைப் பெறும்படி
க்கு எச்சரிக்கையாயிருங்கள். — 9 கிறிஸ்துவின்
உபதேசத்தில் நிலைநில்லாமல் மீறிநடக்கிற எவ
னும் பராபரனை அடையாதவனாய் இருக்கிறான்;
கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைநிற்கிறவனே
பிதாவையும் குமாரனையும் அடைந்திருக்கிறான்.–
10 ஒருவன் உங்களிடத்தில் வந்து இந்த உப

தேசத்தைக் கொண்டுவராமல் இருந்தால், அவனை நீங்கள் உங்கள் வீட்டிலே சேர்த்துக்கொள்ளவும், அவனுக்கு வாழ்த்துதல் சொல்லவும் கூடாது.—11 அவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்காளனாகிறானே.

12 நான் பின்னும் அநேகம் காரியங்களை உங்களுக்கு அறிவிக்கவேண்டும்; காகிதத்தினாலும் மையினாலும் அப்படிச் செய்ய மனதில்லை; நமக்குச் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கு உங்களிடத்தில் வந்து, முகமுகமாய்ப் பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.—13 தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.—ஆமன்.

---

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## மூன்றாம் நிருபம்.

மூப்பனாகிய நான் உண்மையாய் அன்புகூருகிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது: பிரியமானவனே,—2 உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்க வேண்டுகிறேன்.—3 சகோதரர் வந்து நீ சத்தியத்தில் நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்மையைக்குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மிகவும் சந்தோஷப்பட்டேன்.—4 என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படுகிறதினால் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான சந்தோஷம் எனக்கு இல்லை.—5 பிரியமானவனே, நீ சகோதரருக்கும் பரதேசிகளுக்கும் செய்கிற கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கிறாய்.—6 அவர்கள் உன்னுடைய அன்பைக்குறித்துச் சபைக்குமுன்பாகச் சாட்சி சொன்னார்கள்; அவர்களை நீ பராபரனுக்குமுன்பாகப் பாத்திரமானபடி வழிவிட்டு அனுப்பினால் நன்மைசெய்வாய்.—7 அவருடைய நாமத்தின் நிமித்தம் அவர்கள் அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்காமல் புறப்பட்டார்களே.—8 ஆகையால் நாம் சத்தியத்திற்கு உதவிசெய்கிறவர்களாய் இருக்கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக் கடனாளிகளாயிருக்கிறோம்; நான் சபைக்கு எழுதினேன்.

9 அப்படியிருந்தும், அவர்களுக்கு முதலாளியாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. — 10 ஆனபடியினாலே நான் வரும்பொழுது, அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாத வார்த்தைகளைப் பேசிச் செய்துவருகிற கிரியைகளை நினைத்துக்கொள்ளுவேன்; அவைகளும் அவனுக்குப் போதாது; அவன்தானே சகோதரரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ள மனதாயிருக்கிறவர்களையும் தடைசெய்து சபைக்குப் புறம்பே தள்ளுகிறான்.—11 பிரியமானவனே, நீ பொல்லாங்கானதை அல்ல நலமானதைப் பின்பற்றுவாயாக; நன்மைசெய்கிறவன் பராபரனால் உண்டாயிருக்கிறான்; பொல்லாங்கைச் செய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை.

12 தேமேத்திரி என்பவனுக்கு எல்லாராலும் சத்தியத்தாலும்தானே நற்சாட்சி உண்டாயிருக்கிறது; நாங்களும் சாட்சிகொடுக்கிறோம்; எங்கள் சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறீர்கள்.

13 நான் அநேகம் காரியங்களை உனக்கு எழுதவேண்டும்; அவைகளை மையினாலும் இறகினாலும் எழுத மனதில்லை.—14 நான் சீக்கிரமாய் உன்னைப் பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன்; அப்பொழுது முகமுகமாய்ப் பேசுவோம்; உனக்குச் சமாதானம் உண்டாயிருக்கக்கடவது. — 15 (எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை வாழ்த்துதல் செய்கிறார்கள்; உன்னிடத்திலுள்ள சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்த்துதல் செய்வாயாக.

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின

## நிருபம்.

இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனு
மாய், யாக்கோபினுடைய சகோதரனுமாய் இருக்
கிற யூதா என்பவன், பிதாவாகிய பராபரனாலே
பரிசுத்தமாக்கப்பட்டும் இயேசுக்கிறிஸ்துவினால்
காக்கப்பட்டும் அழைக்கப்பட்டும் இருக்கிறவர்க
ளுக்கு எழுதுகிறதாவது:—2 இரக்கமும், சமாதா
னமும், அன்பும் உங்களுக்குச் சம்பூரணமாய்
உண்டாகக்கடவது.

3 பிரியமானவர்களே, பொதுவான இரட்சிப்
பைக்குறித்து உங்களுக்கு எழுதவேண்டுமென்று
நான் மிகுந்த கருத்துள்ளவனாய் இருக்கையில்,
முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்புக்கொடுக்
கப்பட்டிருக்கிற விசுவாசத்திற்காக நீங்கள் கெட்
டியாய்ப் போராட்டம்பண்ணும்படிக்கு, உங்க
ளுக்குப் புத்தியை எழுதுகிறது எனக்கு அவசிய
மாய்த் தோன்றிற்று.—4 என்னத்தினாலெனில்,
நம்முடைய பராபரனுடைய கிருபையைக் காம
விகாரத்திற்கு ஏதுவாகப் புரட்டி, ஒன்றான சுயா
திபதியான பராபரனுமாய், நம்முடைய கர்த்தரு
மாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை மறுதலிக்கிற
துன்மார்க்கரான சில மனிதர்கள் பக்கவழியாய்
நுழைந்திருக்கிறார்கள்; அவர்கள் அடையும் ஆக்
கினையைக்குறித்துப் பூர்வீகத்திலே முன் எழுதி
யிருக்கின்றது.

5 அந்தப்படி நீங்கள் முன்னே அறிந்திருந்
தும் நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகி
றது என்னவெனில், கர்த்தர் எகிப்துதேசத்திலி
ருந்து சனத்தை இரட்சித்தபின்பு விசுவாசியாத
வர்களை அழித்தார்.—6 அன்றியும் தங்களுடைய
ஆதி நிலைமையைக் காவாமல், தங்களுக்கு ஏற்ற
இருப்பிடத்தை விட்டு விலகின தூதர்கள் பெரிய
நியாயத்தீர்ப்புநாள்வரைக்கும் நித்திய சங்கிலிக
ளினாலே (கட்டப்பட்டு) அந்தகாரத்தில் இருக்
கும்படி நியமித்தார்.—7 அப்படிப்போலச் சோ
தோம் கொமோரா பட்டணத்தார்களும் அவைக
ளைச் சூழ்ந்த பட்டணத்தார்களும் இவர்களு
டைய விதமாய் வேசித்தனத்தில் அமிழ்ந்து,
அந்நிய மாம்சத்தைச் சேர்ந்துபோனதினாலே நித்
திய அக்கினியை ஆக்கினையாக அடைந்து,
திருட்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

8 அப்படிப்போல இந்தச் சொப்பனக்காரர்
மாம்சத்தை அசுசிப்படுத்திக்கொண்டு, கர்த்தத்து
வத்தை அசட்டைபண்ணி, மகத்துவங்களைத்
தூஷணிக்கிறார்கள்.—9 பிரதான தூதனாகிய மிகா
வேலும் மோசேயினுடைய சரீரத்தைக்குறித்துப்
பிசாசானவனுடனே தருக்கித்துப் பேசினபொ
ழுது, தூஷணமுள்ள தீர்ப்பை அவனுக்குச்
சொல்லத் துணியாமல், கர்த்தர் உன்னைக் கடிந்து
கொள்வாராக என்று (மாத்திரம்) சொன்னான்.—
10 இவர்கள் தங்களுக்குத் தெரியாதவைகளைத்
தூஷணிக்கிறார்கள்; புத்தியில்லாத மிருகங்களைப்
போலச் சுபாவப்படி தங்களுக்குத் தெரிந்திருக்
கிறவைகளாலே தங்களைக் கெடுக்கிறார்கள்.—
11 ஐயோ, அவர்களுக்கு வேதனை உண்டா
கும், அவர்கள் காயீனுடைய வழியில் நடந்து,
பாலாம் கூலிக்காகச் செய்த வஞ்சகத்திலே
விரைந்து ஓடி, கோரா விரோதம் பேசினதினா
லே கெட்டுப்போனார்கள்.

12 இவர்கள் உங்கள் அன்பு விருந்துகளில்
மாசுகளாயிருந்து, பயமில்லாமல் விருந்துண்டு,
தங்களை மேய்க்கிறார்கள்; அவர்கள் காற்றுகளால்
அடிக்கப்பட்டு அலைகிற நீரில்லாத மேகங்களும்,
உலர்ந்து கனியற்று இரண்டுதரம் செத்து வேரற்
றுப்போன மரங்களும்,—13 தங்கள் சுயஇலச்சை
களை நுரைபோலக் கக்குகிற உக்கிரத்தையுடைய
கடலின் அலைகளும், மார்க்கம்தப்பிநடக்கிற நட்
சத்திரங்களுமாய் இருக்கிறார்கள்; என்றென்றைக்
கும் உள்ள காரிருளே அவர்களுககாக வைக்கப்
பட்டிருக்கின்றது.

14 ஆதாம் முதற்கொண்டு ஏழாம்தலைமுறை
யில் உண்டாயிருந்த ஏனோக்கு என்பவன் இவர்
களைக்குறித்தும் முன் அறிவித்தராவது: இதோ
கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடுக்
கும்படிக்கும், அவர்களில் தேவபத்தியில்லாத யா
வரும் துன்மார்க்கமாய்ச் செய்த சகல துன்மார்க்
கக் கிரியைகளின்நிமித்தமும் தமக்கு விரோத
மாய்,—15 தேவபத்தியில்லாத பாவிகள் பேசின
கடின வார்த்தைகள் எல்லாவற்றின் நிமித்தமும்;
அவர்களைக் கண்டிக்கும்படிக்கும் திரளான சே
னைகளாகிய தம்முடைய பரிசுத்தவான்களோடும்
கூட வருகிறார் என்று அறிவித்தான்.—16 இவர்
கள் முறுமுறுக்கிறவர்களுமாய், முறையிட்டுத்
திரிகிறவர்களுமாய், தங்கள் இச்சையின்படி நட
க்கிறவர்களுமாய் இருக்கிறார்கள்; இவர்கள் வாயி
னாலே மிகவும் இறுமாப்பானவைகளைப் பேசி,
பொழிவுக்காகப் பெரியோர்களைப் புகழுகிறார்கள்.

17 பிரியமானவர்களே, நீங்கள் நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தல
ரால், முன் சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்
துக்கொள்ளுங்கள். — 18 கடைசிக்காலத்திலே
தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்
கிற பரியாசக்காரர் தோன்றுவார்களென்று உங்க
ளுக்குச் சொன்னார்களே.-19 இவர்களே பிரிந்து
போகிறவர்களும் சென்மசுபாவத்தாரும் (தேவ)
ஆவி இல்லாதவர்களுமானவர்கள்.
20 பிரியமானவர்களே, நீங்கள் உங்களுக்கு
உண்டாயிருக்கிற மிகவும் பரிசுத்தமான விசுவாச
த்தின்மேலே உங்களைப் பொருந்தக் கட்டிக்
கொண்டு,-21 பரிசுத்தஆவியைக்கொண்டு செ
பமபண்ணி, பராபரனுடைய அன்பிலே உங்க
ளைக் காத்துக்கொண்டு, நித்திய சீவனுக்கு ஏது
வாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வினுடைய இரக்கம் வரப் பார்த்திருங்கள். —
22 அல்லாமலும், வகையறுக்கிறவர்களாய் நீங்
கள் சிலருக்கு இரங்கி, சிலரை அக்கினியிலி
ருந்து இழுத்துக்கொண்டு, பயத்தோடே இரட்
சித்து, மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்
கிற அங்கியையும் வெறுத்துப்போடுங்கள்.
23 நீங்கள் வழுவாதபடிக்கு உங்களைக் காத்
துக்கொள்ளுகிறதற்கும், மாசில்லாமல் மகிழ்ச்சி
யோடே உங்களைத் தமது மகிமையுள்ள சந்நிதா
னத்திலே நிறுத்துகிறதற்கும் வல்லமையுள்ளவரு
மாய், — 24 நம்முடைய இரட்சகரான ஞான
முள்ள ஒருவராகிய தேவனுமாய் இருக்கிறவரு
க்கு இப்பொழுதும் இனிமேல் இருக்கும் எல்
லாக் காலங்களிலேயும் புகழ்ச்சியும், மகத்துவ
மும், வல்லமையும், அதிகாரமும் உண்டாயிருக்
கக்கடவது.—ஆமன்.

## தெய்வவசன போதகராகிய

# யோவானுக்கு வெளிப்படுத்தின

## விசேஷம்.

### க. அதிகாரம்.

சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பரா
பரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்
கும்படிக்கு இயேசுக்கிறிஸ்துவுக்குக் கொடுத்த
தும் இவர் வெளிப்படுத்தினதுமான விசேஷம்;
அவர் தம்முடைய ஊழியக்காரனாகிய யோவானி
டத்திற்குத் தம்முடைய தூதனை அனுப்பி, அவ
னால் அவைகளைக் குறிப்பாகக் காட்டினார். —
2 அவன் பராபரனுடைய வசனமும் இயேசுக்கி
றிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமாகிய தான்
கண்ட யாவற்றையும் அறிவித்திருக்கிறான். —
3 காலம் சமீபமாயிருக்கிறது; ஆகையால் இந
தத் தீர்க்கதரிசனமான வசனங்களை வாசிக்கிறவ
னும் கேட்கிறவர்களும் இதில் எழுதியிருக்கிற
வைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கிய
வான்கள்.
4 யோவான் ஆசியாவிலுள்ள சபைகள் ஏழுக்
கும் எழுதுகிறதாவது: இருக்கிறவரும் இருந்தவ
ரும் வருகிறவருமானவராலும், அவருடைய ஆச
னத்திற்குமுன்பாக இருக்கிற ஏழு ஆவிகளாலும்,-
5 உண்மையுள்ள சாட்சியும் மரித்தோரிலிருந்து
முதல் பிறந்தவரும் பூமியின் இராசாக்களுக்கு
அதிபதியுமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்க
ளுக்குக் கிருபையும் சமாதானசவுக்கியமும் உண்
டாகக்கடவது; நம்மிடத்தில் அன்புகூர்ந்து, தம
து இரத்தத்தினாலே நம்முடைய பாவங்கள் அற
நம்மைக் கழுவி,-6 தம்முடைய பிதாவாகிய பரா
பரனுக்கு (முன்பாக) நம்மைத் தமது இராச்சியத்
தாராகவும் ஆசாரியராகவும் செய்திருக்கிற அவ
ருக்கு மகிமையும் வல்லமையும் என்றென்றைக்
கும் உண்டாயிருக்கக்கடவது.—ஆமன்.
7 அதோ மேகங்களுடனே வருகிறார்; கண்
கள் யாவும் அவரைக் குத்தினவர்களும் (அவரைக்
காண்பார்கள்); பூமியின் கோத்திரத்தார்கள் எல்
லாரும் அவரைக்குறித்துத் துக்கத்தோடே புலம்
புவார்கள்; மெய்யாய் அப்படி இருக்கும். —
ஆமன்.-8 இருக்கிறவரும் இருந்தவரும் வருகிற
வருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர் நான்
அல்பாவும் ஓமேகாவும், ஆதியும் அந்தமுமாய்
இருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.
9 உங்கள் சகோதரனுமாய், இயேசுக்கிறிஸ்து
வின்நிமித்தம் வருகிற உபத்திரவத்திற்கும், அவ
ருடைய இராச்சியத்திற்கும், பொறுமைக்கும்
உங்களுடனே பங்காளனுமாய் இருக்கிற யோவா
னாகிய நான், பராபரனுடைய வசனத்தின்நிமித்
தமும் இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சி
சொன்னதின்நிமித்தமும் பத்மு என்னப்பட்ட
தீவிலே இருந்தேன்.—10 (அங்கே) கர்த்தரு
டையநாளில் ஆவிக்குள்ளானேன்.-11 அப்பொ

ழுது நீ காண்கிறதை ஒரு புஸ்தகத்திலே எழு
தி, ஆசியாவில் இருக்கிற எபேசு, சிமிருனா, பெ
ருகமு, தியத்தைரா, சருதை பிலதெல்பியா, இல
வோதிக்கையா இவைகளில் உள்ள சபைகள்
ஏழுக்கும் அனுப்பு என்று எனக்குப் பின்னாலே
எக்காள சத்தம்போன்ற மிகுந்த சத்தத்தைக் கேட்
டேன்.
12 அப்பொழுது என்னுடனே சத்தமிட்டுப்
பேசினவரைப் பார்க்கத் திரும்பினேன். —
13 திரும்பினபொழுது ஏழு பொன்விளக்குத்
தண்டுகளையும் ஏழு விளக்குத்தண்டுகளின் மத்தி
யிலே நிலை அங்கியைத் தரித்து மார்பருகே
பொற்கச்சை கட்டியிருந்த மனிதகுமாரனுக்கு
ஒப்பானவரையும் கண்டேன்.–14 அவருடைய
சிரசும் மயிரும் வெண்மையான பஞ்சையும்
உறைந்த மழையையும்போல வெண்மையாய்
இருந்தன; அவருடைய கண்கள் அக்கினிச்சு
வாலையைப்போல இருந்தன.—15 அவருடைய
கால்கள் உலைக்களத்தில் காய்கிற பிரகாசமுள்ள
செம்பைப்போல இருந்தன; அவருடைய சத்
தம் பெருவெள்ள இரைச்சலைப்போல இருந்
தது. — 16 அல்லாமலும் அவர் வலதுகையிலே
ஏழு நட்சத்திரங்களை ஏந்திக்கொண்டிருந்தார்;
அவர் வாயிலிருந்து இருபுறமும் கருக்குள்ள
கட்கம் புறப்பட்டது; அவருடைய முகம் உச்
சிக்காலத்திலே வல்லமையாய்ப் பிரகாசிக்கிற
சூரியனைப்போல இருந்தது.—17 இப்படி அவ
ரைக் கண்டபொழுது செத்தவனைப்போல அவ
ருடைய பாதங்களிடத்தில் விழுந்தேன்; அப்
பொழுது அவர் தமது வலதுகரத்தை என்மேல்
வைத்து (என்னுடனே) சொன்னதாவது : நீ
பயப்படவேண்டுவதில்லை; நான் முந்தினவ
னும் பிந்தினவனும் உயிருள்ளவனுமானவன்.—
18 நான் மரித்தும், இதோ என்றென்றைக்கும்
உயிரோடிருந்து, மரணத்திற்கும் மரித்தோர் ஸ்த
லத்திற்கும் உரிய திறவுகோல்களை உடையவனாய்
இருக்கிறேன்.–19 ஆகையால் நீ கண்டவைகளை
யும், இருக்கிறவைகளையும் இவைகளுக்குப்பின்
நடப்பவைகளையும் எழுது. — 20 என்னுடைய
வலதுகரத்தில் நீ கண்ட நட்சத்திரங்கள் ஏழின்
இரகசியத்தையும் பொன் விளக்குத்தண்டுகள்
ஏழின் குறிப்பையுமே எழுது; இந்த நட்சத்திரங்
கள் ஏழும் சபைகள் ஏழினுடைய தூதர்களாய்
இருக்கின்றன; நீ கண்ட விளக்குத்தண்டுகள்
ஏழும் ஏழு சபைகளாய் இருக்கின்றன

## உ. அதிகாரம்.

ஏபேசு பட்டணத்திலுள்ள சபையின் தூதனு
க்கு எழுதவேண்டியதென்னவெனில், ஏழு நட்
சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில் ஏந்திக்
கொண்டு ஏழு பொன்விளக்குத்தண்டுகளின்
மத்தியிலே உலாவிக்கொண்டிருக்கிறவர் சொல்
லுகிறதாவது :—2 உன் கிரியைகளையும், உன் பிர
யாசத்தையும், உன் பொறுமையையும், நீ பொல்
லாதவர்களுக்கு இடங்கொடாமல் இருக்கிற
தையும், அப்போஸ்தலர் அல்லாதவர்கள் தங்களை
அப்போஸ்தலர் என்று சொல்லுகிறதை நீ சோ
தித்து அவர்களைப் பொய்யரென்று கண்டறிந்த
தையும்,--3 நீ பொறுமையைக் காத்துக்கொண்டு
வருகிறதையும், எனது நாமத்தினிமித்தம் இளை
ப்பை அடையாமல் பிரயாசப்பட்டதையும் அறிந்
திருக்கிறேன்.—4 ஆனாலும் நீ ஆதியில் காட்
டின அன்பை விட்டபடியால், உன்மேல் விசன
மாய் இருக்கிறேன்.—5 ஆகையால், நீ இப்ப
டிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்ததை நினைத்
து மனம்திருப்பி ஆதியில் செய்த கிரியைகளைச்
செய்வாயாக; நீ மனம்திருப்பாவிட்டால், நான்
சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, உன் விளக்
குத்தண்டை அதனிடத்தில்நின்று நீக்குவேன்.–
6 நிக்கோலாவின் மார்க்கத்தாரின் கிரியைகளைப்
பகைக்கிறாய்; இது உன்னிடத்தில் உண்டு;
அவைகளை நானும் பகைக்கிறேன்.
7 ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற
தைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்
கொள்ளுகிறவன் எவனோ, அவனுக்குப் பராபர
னுடைய பரதீசின் மத்தியில் இருக்கிற சீவவி
ருட்சத்தின் கனியைப் புசிக்கக் கொடுப்பேன்
என்கிறார் என்று எழுது.
8 சிமிருனா பட்டணத்திலுள்ள சபையின்
தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
மரித்து உயிரோடிருக்கிற முந்தினவரும் பிந்தின
வருமானவர் சொல்லுகிறதாவது:—9 உன் கிரி
யைகளையும், உபத்திரவத்தையும், ஐசுவரியமுள்ள
உனக்கிருக்கிற தரித்திரத்தையும், தங்களை யூத
ரென்று சொல்லியும் யூதராய் இராமல், சாத்தா
னுடைய ஆலயமாய் இருக்கிறவர்கள் செய்கிற
தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.—10 உன
க்கு வரும் துன்பங்களைக்குறித்து எவ்வளவாகி
லும் பயப்படாதிருப்பாயாக; கேள், நீங்கள் சோ
திக்கப்படும்பொருட்டாக பிசாசானவன் உங்க
ளில் சிலரைக் காவலில் போடுவான்; பத்துநாள்
உபத்திரவப்படுவீர்கள்; ஆகிலும் மரணபரியந்
தம் உண்மையாயிரு; அப்பொழுது சீவகிரீடத்
தை உனக்குத் தருவேன்.
11 ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற
தைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்
கொள்ளுகிறவன் இரண்டாம் மரணத்தால் சே
தப்படுவதில்லை என்கிறார் என்று எழுது.
12 பெருகமு பட்டணத்திலுள்ள சபையின்
தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெ
னில், இருபுறமும் கருக்குள்ள கட்கத்தையுடை
யவர் சொல்லுகிறதாவது :–13 உன் கிரியைகளை
யும், சாத்தானுடைய ஆசனம் இருக்கிற இடத்
தில் நீ குடியிருக்கிறதையும், சாத்தான் குடியிருக்

கிற உங்களிடத்திலே எனக்கு உண்மையுள்ள
சாட்சியாகிய அந்திப்பா என்பவன் கொல்லப்
பட்ட நாட்களிலேயும் என்னைப்பற்றும் விசுவா
சத்தை மறுதலியாமல், என்னுடைய நாமத்
தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்
கிறேன்.–14 ஆகிலும் சில காரியங்களைக்குறித்து
உன்மேல் விசனமாய் இருக்கிறேன்; விக்கிரகங்
களுக்குப் படைத்தவைகளைப் புசிப்பதற்கும் வே
சித்தனம்பண்ணுவதற்கும் ஏதுவான கேடுகளை
இஸ்ரவேல் புத்திரர்முன்பாகப் போடும்படிக்கு,
பாலாகென்பவனுக்குப் போதனைசெய்த பாலாமு
டைய போதகத்தைப் பிடித்திருக்கிறவர்கள்
உன்னிடத்தில் இருக்கிறார்கள்.—15 அல்லாம
லும் நிக்கோலாவின் மார்க்கத்தாருடைய போத
கத்தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களும் உன்னி
டத்தில் உண்டு.—16 ஆகையால் நீ மனம்திரும்
புவாயாக; இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய்
உன்னிடத்தில் வந்து, என் வாயின் கட்கத்தால்
அவர்களோடே யுத்தம்பண்ணுவேன்.

17 ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகி
றதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயம்
கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னா
வைப் புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்மை
யான கல்லையும், அந்தக் கல்லின்மேலே எழுதப்
பட்டதுமாய், பெறுகிறவனேயன்றி வேறொரு
வனும் அறியாததுமாய் இருக்கிற புதிய நாமத்
தையும் கட்டளையிடுவேன் என்கிறார் என்று
எழுது.

18 தியத்தைரா பட்டணத்திலுள்ள சபையின்
தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெ
னில், அக்கினிச் சுவாலையைப்போன்ற கண்க
ளும் உருக்கிய செம்பைப்போன்ற கால்களு
முள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது:—
19 உன் கிரியைகளையும், உன் அன்பையும்,
உன் ஊழியத்தையும், உன் விசுவாசத்தையும்,
உன் பொறுமையையும், நீ பின்பு செய்த கிரி
யைகள் முந்தின கிரியைகளிலும் அதிகமாய்
இருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.—20 ஆகி
லும் (ஒன்றைக்குறித்து) உன்மேல் விதனமாய்
இருக்கிறேன்; என்னவெனில், வேசித்தனம்
பண்ணும்படிக்கும், விக்கிரகங்களுக்குப் படைத்
தவைகளைப் புசிக்கும்படிக்கும், தன்னைத் தீர்க்க
தரிசி என்று சொல்லிக்கொள்ளுகிற இயேசெ
பலென்னும் ஸ்திரி என்னுடைய ஊழியக்கா
ருக்குப் போதித்து வஞ்சிக்கிறாள்; அவளுக்கு
நீ இடம்கொடுக்கிறாய்.—21 அவள் மனம்திரும்
பும்படியாய்க் காலத்தை அவளுக்குக் கொடுத்
தேன்; அவள் தன் வேசிமார்க்கத்தைவிட்டு
மனம்திரும்ப விருப்பமில்லை.–22 (ஆகையால்)
கேள், அவளும் அவளுடனேகூட விபசாரம்
செய்தவர்களும் தங்களுடைய கிரியைகளைவிட்டு
மனம்திரும்பாவிட்டால், நான் அவளை ஒரு கட்
டிலின்மேலும், இவர்களை மிகுந்த உபத்திரவத்தி
லேயும் போட்டு, அவளுடைய பிள்ளைகளைக்
கொலைசெய்வேன். — 23 அப்பொழுது நானே
உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும் ஆராய்
கிறவர் என்று எல்லாச் சபைகளும் அறிந்துகொ
ள்வார்கள்; அல்லாமலும், உங்களில் அவனவனு
டைய கிரியைகளின்படியே யாவருக்கும் பதில்
கொடுப்பேன்.—24 இந்தப் போதகத்தைப் பற்
றிக்கொள்ளாமலும், அவர்கள் சொல்லுகிறபடி
சாத்தானுடைய ஆழங்களை அறிந்துகொள்ளாம
லும் இருக்கிற தியத்தைராவிலுள்ள மற்றவர்களா
கிய உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது: உங்
கள்மேலே வேறொரு பாரத்தையும் போடமாட்
டேன்.—25 உங்களுக்கு உண்டானதை நான்
வருமளவும் பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்.

26 செயம்கொண்டு முடிவுபரியந்தம் என்
கிரியைகளைக் காத்துக்கொள்ளுகிறவன் எவனோ,
அவனுக்கு என்னுடைய பிதாவினிடத்தில் நான்
பெற்றதுபோல, சனக்கூட்டங்கள்மேல் அதிகா
ரத்தைக் கொடுப்பேன். — 27 அவன் இருப்புக்
கோலால் அவர்களை நடத்திக்கொள்வான்; அவர்
கள் மண்கலங்களைப்போல நொறுக்கப்படுவார்
கள். — 28 அல்லாமலும் விடிவெள்ளி நட்சத்தி
ரத்தை அவனுக்குக் கொடுப்பேன். — 29 ஆவி
யானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் கா
துள்ளவனே கேட்கக்கடவனென்று எழுது.

## ௩. அதிகாரம்.

சருதையூரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழு
தவேண்டியது என்னவெனில், பராபரனுடைய
ஏழு ஆவிகளையும் ஏழு நட்சத்திரங்களையும்
உடையவர் சொல்லுகிறதாவது: உன் கிரியை
களை அறிந்திருக்கிறேன்; நீ உயிருள்ளவன் என்று
பேர்கொண்டிருந்தும், செத்தவனாய் இருக்கி
றாய்.—2 உன் கிரியைகள் பராபரனுக்குமுன்பாக
நிறைந்தவைகள் அல்லவென்று கண்டிருக்கி
றேன்; ஆகையால் நீ விழித்துக்கொண்டு சாகிற
தற்கு ஏதுவான மற்றவர்களை ஸ்திரப்படுத்துவா
யாக.—3 மேலும் நீ கேட்டுப் பெற்றுக்கொண்ட
வகையை நினைத்துக் கைக்கொண்டு மனம்திரும்
புவாயாக; நீ விழித்துக்கொள்ளாவிட்டால் திரு
டனைப்போல உன்மேல் வருவேன்; நான் உன்
மேல் வரும் நேரத்தை அறியாதிருப்பாய்.—
4 தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத சில
பேர் சருதை ஊரிலே உன்னோடே உண்டு;
அவர்கள் பாத்திரவான்களானபடியால் என்னுட
னேகூட வெண்மையான உடைகளைத் தரித்து
நடப்பார்கள்.

5 செயம்கொள்ளுகிறவன் வெண்மையான
வஸ்திரங்களால் உடுத்தப்படுவான்; நான் சீவ
புத்தகத்தில் அவனுடைய நாமத்தைக் கிறுக்கிப்
போடாமல், அதை என் பிதாமுன்பாகவும் அவ

ருடைய தூதர் முன்பாகவும் அறிக்கைபண்ணு
வேன்.—6 ஆவியானவர் சபைகளுக்குச் சொல்
லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று
எழுது.

7 பிலதெல்பியா ஊரிலுள்ள சபையின் தூத
னுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
தாவீதின் திறவுகோலை உடையவருமாய், ஒரு
வரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறக்கிறவருமாய்,
ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டுகிற
வருமாய் இருக்கிற பரிசுத்தமும் சத்தியமும் உள்
ளவர் சொல்லுகிறதாவது:—8 உன் கிரியைகளை
அறிந்திருக்கிறேன், கொஞ்சப்பெலன் (மாத்தி
ரம்) உனக்கு இருந்தும் நீ என்னுடைய நாமத்
தை மறுதலியாமல் எனது வசனத்தைக் கைக்
கொண்டபடியினாலே, இதோ, உனக்குமுன்
பாகத் திறந்திருக்கிற வாசலைக் கொடுத்தேன்;
அதை ஒருவனும் பூட்டமாட்டான்.—9 கேள்,
யூதரல்லாதிருந்தும் தங்களை யூதரென்று பொய்
சொல்லுகிறவர்களாகிய சாத்தானுடைய ஆலயத்
தாரில் (சிலரை) உனக்குத் தருகிறேன்; கேள்,
அவர்கள் உன் பாதங்களுக்குமுன்பாக வந்து
பணிந்து; நான் உன்மேல் அன்பாய் இருக்கிறதை
அறிந்துகொள்ளும்படி செய்வேன்.—10 என்
னுடைய பொறுமையைக்குறித்துச் சொல்லுகிற
வசனத்தை நீ கைக்கொண்டபடியினாலே நா
னும் பூமியின்மேல் குடியிருக்கிறவர்களைச் சோ
திக்கும்படிக்கு, பூச்சக்கரத்தின்மேல் எங்கும்
வரும் சோதனைக்காலத்திற்குத் தப்பும்படி உன்
னைக் காப்பாற்றுவேன்.—11 சீக்கிரமாய் வரு
கிறேன்; ஒருவனும் உன் கிரீடத்தை எடுத்துக்
கொள்ளாதபடிக்கு உனக்கு உள்ளதைப் பத்திர
மாய்ப் பற்றிக்கொள்வாயாக.

12 செயங்கொள்ளுகிறவனை நான் என் தேவ
னுடைய ஆலயத்திலே ஸ்தம்பமாக்குவேன்,
அதில்நின்று அவன் ஒருக்காலும் நீங்கான்; மே
லும் என் தேவனுடைய நாமத்தையும் என் தேவ
னால் வானத்திலிருந்து இறங்குகிற புதிய எருச
லேமாகிய என் தேவனுடைய பட்டணத்தின்
நாமத்தையும், எனது புதிய நாமத்தையும் அவன்
மேலே எழுதுவேன்.—13 ஆவியானவர் சபை
களுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்
க்கடவன் என்று எழுது.

14 இலவோதிக்கையா ஊரிலுள்ள சபை
யின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெ
னில், உண்மையும் சத்தியமுமான சாட்சியுமாய்,
பராபரனுடைய சிருட்டிகளுக்கு ஆதியுமாய்
இருக்கிற ஆமென் என்பவர் சொல்லுகிறதாவது:—
15 உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன்; நீ
குளிர்ச்சியுள்ளவனுமல்ல, அனலுள்ளவனுமல்ல,
நீ குளிர்ச்சியையாவது அனலையாவது உள்ளவ
னானால் நலமாயிருக்கும்.—16 இப்படி நீ குளிர்
ச்சியும் அனலும் இல்லாமல் வெதுவெதுப்புள்
ளவனானபடியினாலே உன்னை என் வாயில்நின்
றும் வாந்திபண்ணுவேன்.—17 நீ நிர்ப்பாக்கிய
முள்ளவனும், பரதபிக்கப்படத்தக்கவனும், எளி
யவனும், குருடனும், நிருவாணியாயும் இருக்
கிறதை அறியாமல், நான் ஐசுவரியமுள்ளவன்
என்றும், அதிக திரவியத்தைச் சம்பாதித்தவன்
என்றும், எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லை
என்றும் சொல்லுகிறாய்.—18 ஆதலால் நான்
உனக்கு ஆலோசனையாய்ச் சொல்லுகிறதாவது:
நீ ஐசுவரியவானாகும்படிக்கு நெருப்பிலே புடமி
டப்பட்ட பொன்னையும், உன் நிருவாணமாகிய
அவலட்சணம் தோன்றாமல் இருக்கத்தக்கதாக
நீ உடுத்திக்கொள்ளும்படிக்கு வெண்மையான
வஸ்திரங்களையும் என்னிடத்திலே வாங்கிக்
கொள்ளவும், நீ பார்வை அடையும்படிக்கு உன்
கண்களுக்கு மாத்திரையைப் போடவும்வேண்டு
மென்று சொல்லுகிறேன்.—19 என்னால் சிநே
கிக்கப்படுகிறவர்கள் எவர்களோ, அவர்களைக்
கடிந்துகொண்டு தண்டிக்கிறேன், ஆகையால் நீ
சாக்கிரதையாயிருந்து மனந்திரும்பக்கடவாய்.—
20 இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகி
றேன்; ஒருவன் என் சத்தத்தைக் கேட்டுக் கத
வைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவே
சித்து அவனோடே இராப்போசனம்பண்ணு
வேன்; அவனும் என்னோடே இராப்போசனம்
பண்ணுவான்.

21 நான் செயங்கொண்டு என் பிதாவினு
டைய ஆசனத்திலே அவரோடேகூட உளுக்காந்
ததுபோல, செயங்கொள்ளுகிறவன் என்னுடைய
ஆசனத்திலே என்னோடேகூட உளுக்காரும்படி
அருள்செய்வேன்.—22 ஆவியானவர் சபை
களுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்
கக்கடவன் என்று எழுது என்றார்.

## ௪. அதிகாரம்.

இவற்றிற்குப்பின்பு, அதோ வானத்திலே ஒரு
வாசல் திறந்திருக்கக் கண்டேன்; அல்லாமலும்
முன்னே நான் கேட்கும்படி எக்காளம்போல
என்னுடனே பேசின சத்தம் என்னுடனே சொ
ன்னது: இங்கே ஏறிவா, இதற்குப்பின்பு சம்ப
விக்கத்தக்கவைகளை உனக்குக் காண்பிப்பேன்
என்றார்.

2 உடனே ஆவிக்குள்ளானேன்; அப்பொ
ழுது வானத்தில் ஒரு ஆசனம் வைக்கப்பட்டிருக்
கவும், அந்த ஆசனத்தின்மேல் ஒருவர் உளுக்
காந்திருக்கவும் கண்டேன்.—3 (அதில்) உளுக்
காந்திருந்தவர் பார்வைக்கு ரவாக்கல்லும் சிவப்
புக்கல்லும்போலத் தோன்றினார்; அந்த ஆசனத்
தைச் சுற்றி ஒரு வானவில் இருந்தது; அது பார்
வைக்கு மரகதம்போலத் தோன்றிற்று.—4 மே
லும் அந்த ஆசனத்தைச் சூழ இருபத்துநான்கு
ஆசனங்களும் இருந்தன; அந்த ஆசனங்களின்

மேலே வெண்மையான வஸ்திரங்கள் தரிப்பிக்
கப்பட்ட இருபத்துநான்கு மூப்பர்கள் உளுக்காந்
திருந்தார்கள்; அவர்கள் தங்கள் சிரசுகளின்மே
லே பொன்கிரீடங்களை உடையவர்களாய் இருந்
தார்கள்.—5 அன்றியும் அந்த ஆசனத்திலிருந்து
மின்னும், இடிமுழக்கங்களும், (மற்றச்) சத்தங்
களும் புறப்பட்டன; மேலும் பராபரனுடைய ஏழு
ஆவிகளாகிய ஏழு தீவட்டிகள் ஆசனத்திற்கு
முன்பாக எரிகிறவைகளாய் இருந்தன. — 6 மே
லும் அந்த ஆசனத்திற்குமுன்பாகப் பளிங்குக்
கண்ணாடியைப்போன்ற கடல் இருந்தது; அது
வுமல்லாமல் அந்த ஆசனத்தின் மத்தியிலும் ஆச
னத்தின் சுற்றிலும் நான்கு சீவன்கள் இருந்தன;
அவைகள் முன்புறமும் பின்புறமும் கண்களால்
நிறைந்தவைகளாய் இருந்தன. — 7 முதலாம்
சீவன் சிங்கத்திற்கு ஒப்பாகவும், இரண்டாம்
சீவன் கன்றுக்குட்டிக்கு ஒப்பாகவும், மூன்றும்
சீவன் மனிதனைப்போன்ற முகமுள்ளதாகவும்,
நான்காம் சீவன் பறக்கிற கழுகுக்கு ஒப்பாகவும்
இருந்தன. — 8 அந்த நான்கு சீவன்களிலும்
ஒவ்வொன்று அவ்வாறு சிறகுகள் உள்ளவைகளு
மாய், சுற்றிலும் உள்ளேயும் கண்களால் நிறைந்த
வைகளுமாய், இருந்தவரும் இருக்கிறவரும் வரு
கிறவருமாகிய சர்வவல்லமையுள்ள தேவனுயிருக்
கிற பராபரன் பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர்
என்று இரவும்பகலும் ஓய்வில்லாமல் சொல்லிக்
கொள்ளுகிறவைகளுமாய் இருந்தன.
9 மேலும் ஆசனத்தின்மேல் உளுக்காந்தி
ருந்து என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவ
ருக்கு அந்தச் சீவன்கள் துதியையும் கனத்தை
யும் தோத்திரத்தையும் செலுத்தும்பொழுது,—
10 இருபத்துநான்கு மூப்பர்களும், ஆசனத்தின்
மேல் உளுக்காந்தவருக்குமுன்பாக வணக்கமாய்
விழுந்து, என்றென்றைக்கும் உயிரோடிருக்கிற
வரைத் தொழுதுகொண்டு, தங்கள் கிரீடங்களை
ஆசனத்தின்முன்பாக வைத்து,—11 ஆண்ட
வரே, தேவரீர் சகலத்தையும் சிருட்டித்தீர், உம்
முடைய சித்தத்தினாலே அவைகள் உண்டா
யிருக்கிறவைகளும் சிருட்டிக்கப்பட்டவைகளு
மாய் இருக்கின்றன; ஆகையால், மகிமையையும்
கனத்தையும் வல்லமையையும் பெற்றுக்கொள்
ளுகிறதற்குப் பாத்திரமாயிருக்கிறீர் என்று புகழு
கிறார்கள்.

## ரு. அதிகாரம்.

அன்றியும் அந்த ஆசனத்திலே உளுக்காந்தவ
ருடைய வலதுகையிலே, உள்ளும்புறம்பும் எழு
தப்பட்டும், ஏழு முத்திரைகளாலே பத்திரப்படுத்
தப்பட்டும் இருந்த ஒரு புத்தகத்தைக் கண்
டேன். — 2 பலமுள்ள ஒரு தூதனையும் கண்
டேன்; அவன் இந்தப் புத்தகத்தைத் திறக்கிற
தற்கும் இதின் முத்திரைகளை உடைக்கிறதற்கும்
பாத்திரர் யாரென்று மிகுந்த சத்தத்தோடே கூப்
பிட்டான்.—3 வானத்திலாவது, பூமியின்மேலா
வது, பூமியின்கீழாவது ஒருவனும் அந்தப் புத்தகத்
தைத் திறக்கவும் அதிலே நோக்கிப்பார்க்கவும்
கூடாதிருந்தது.—4 ஒருவனும் அந்தப் புத்தகத்
தைத் திறந்து, அதில் நோக்கிப்பார்க்கிறதற்குப்
பாத்திரனாகக் காணப்படாததினாலே நான் மிக
வும் அழுதேன்.—5 அப்பொழுது மூப்பர்களில்
ஒருவன் என்னை நோக்கி, நீ அழவேண்டுவ
தில்லை; இந்தப் புத்தகத்தைத் திறந்து, இதின்
ஏழு முத்திரைகளையும் உடைக்கும்படிக்குத் தாவீ
தின் வேராகிய யூதாகோத்திரத்தில் தோன்றிய
சிங்கம் இதோ செயங்கொண்டிருக்கிறது என்
றான்.
6 அப்பொழுது நான் பார்த்து, ஆசனத்திற்
கும் நான்கு சீவன்களுக்கும் மூப்பர்களுக்கும்
மத்தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக் கண்
டேன்; அது அடிக்கப்பட்ட வண்ணமாகவும்,
ஏழு கொம்புகளையும் பூமி எங்கும் அனுப்பப்பட்ட
பராபரனுடைய ஏழாவிகளாகிய ஏழு கண்களை
யும் உடையதாகவும் இருந்தது.—7 மேலும் அது
வந்து ஆசனத்தின்மேல் உளுக்காந்தவருடைய
வலதுகரத்தில் இருந்த புத்தகத்தை வாங்கிற்று.
8 அந்தப் புத்தகத்தை அது வாங்கினபொ
ழுது, அந்த நான்கு சீவன்களும் இருபத்துநான்கு
மூப்பர்களும் தங்கள் சுரமண்டலங்களையும், பரி
சுத்தவான்களுடைய செபங்களாகிய தூபவருக்
கங்களால் நிறைந்த பொற்கலசங்களையும் பிடித்
துக்கொண்டு, ஆட்டுக்குட்டிக்குமுன்பாக வண
க்கமாய் விழுந்து, — 9 தேவரீர் அடிக்கப்பட்டு
உம்முடைய இரத்தத்தினாலே சகல கோத்திரங்
களிலும் பாஷைக்காரரிலும் தேசத்தாரிலும் (மற்
றச்) சனக்கூட்டங்களிலும் எங்களைப் பராபரனுக்
காக வாங்கிக்கொண்டு,—10 எங்கள் பராபரனுக்
குமுன்பாக எங்களை இராசாக்களும் ஆசாரியரும்
ஆக்கினீர்; நாங்கள் பூமியிலே ஆளுகைசெய்
வோம்; ஆகையால் நீர் இந்தப் புத்தகத்தை
வாங்கி இதின் முத்திரைகளை உடைக்கிறதற்குப்
பாத்திரராயிருக்கிறீர் என்று புதிய பாட்டைப்
பாடினார்கள்.— 11 பின்னும் நான் பார்த்தபொ
ழுது, அந்த ஆசனத்தையும் சீவன்களையும் மூப்
பர்களையும் சூழ்ந்திருந்த அநேகம் தூதர்களுடைய
சத்தத்தைக் கேட்டேன்; அவர்களுடைய இலக்
கம் பதினாயிரத்திற்குப் பதினாயிரமும், ஆயிரத்
திற்கு ஆயிரமுமாய் இருந்தது.—12 அவர்களும்,
அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்ல
மையையும், ஐசுவரியத்தையும், ஞானத்தையும்,
பலத்தையும், கனத்தையும், மகிமையையும்,
தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப்
பாத்திரராயிருக்கிறார் என்று மிகுந்த சத்தத்தோ
டே சொன்னார்கள்.—13 அல்லாமலும் வானத்
திலும் பூமியிலும் பூமியின்கீழும் இருக்கிற சிருட்

டிகள் யாவும் சமுத்திரத்தின்மேல் உள்ளவைக
ளும் இவற்றினுள் அடங்கிய வஸ்துக்கள் யாவும்
ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவருக்கும்
ஆட்டுக்குட்டியானவருக்கும் தோத்திரமும், கன
மும், மகிமையும், வல்லமையும், என்றென்றைக்
கும் உண்டாவதாக என்று சொல்லக் கேட்
டேன். — 14 அதற்கு நான்கு சீவன்களும்,
ஆமன் என்று சொல்லிற்று; மறுபடியும் அந்த
இருபத்துநான்கு மூப்பர்களும் (வணக்கமாய்)
விழுந்து என்றென்றைக்கும் உயிரோடிருக்கிற
வரைத் தொழுதுகொண்டார்கள்.

## சா. அதிகாரம்.

பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில்
ஒன்றைப் பேர்க்கக் கண்டேன்; அல்லாமலும்
நான்கு சீவன்களில் ஒன்று (என்னைநோக்கி),
நீ வந்து பார் என்று இடிமுழக்கம்போலச் சொல்
லக் கேட்டேன்.—2 அப்பொழுது நான் பார்க்
கையில், வெண்மையான குதிரையைக் கண்
டேன்; அதின்மேல் இருந்தவன் வில்லைப்பிடித்
திருந்தான்; அவனுக்கு ஒரு கிரீடம் கொடுக்கப்
பட்டது; அவன் செயமுள்ளவனுய்ச் செயிக்கும்
படிக்குப் புறப்பட்டான்.
3 பின்பு அவர் இரண்டாம் முத்திரையைப்
பேர்த்தபொழுது, இரண்டாம் சீவனானது, நீ
வந்து பார் என்று சொல்லக் கேட்டேன்.—4 உட
னே அக்கினி நிறமுள்ள வேறொரு குதிரை புறப்
பட்டது; அதின்மேல் இருந்தவன் பூமியில் உள்
ளவர்கள் ஒருவரை ஒருவர் கொலைசெய்யத்தக்க
தாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்து எடுத்துப்
போடுகிறதற்கு அதிகாரமும், ஒருபெரிய கட்க
மும் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.
5 பின்பு அவர் மூன்றும் முத்திரையைப் பேர்த்
தபொழுது, மூன்றும் சீவனானது, நீ வந்து பார்
என்று சொல்லக் கேட்டேன்; உடனே நான்
பார்க்கையில் ஒரு கறுப்புக் குதிரையைக் கண்
டேன்; அதின்மேல் இருந்தவன் ஒரு தராசைத்
தன் கையில் பிடித்திருந்தான்.—6 அப்போது,
உழக்குக் கோதுமைக்கு ஒரு தேநாரிப்பணம்,
மூவுழக்கு வாற்கோதுமைக்கு ஒரு தேநாரிப்பண
மென்றும், எண்ணெயையும் பழஇரசத்தையும்
சேதப்படுத்தாதிருப்பாயாக என்றும் நான்கு
சீவன்களின் மத்தியிலிருந்து உண்டான சத்தத்
தைக் கேட்டேன்.
7 பின்பு அவர் நான்காம் முத்திரையைப்
பேர்த்தபொழுது, நான்காம் சீவனானது, நீ வந்து
பார் என்று சொல்லக் கேட்டேன்.—8 உடனே
நான் பார்க்கையில் மங்கின நிறமுள்ள குதிரை
யைக் கண்டேன்; அதின்மேல் இருந்தவனுக்கு
மரணமென்று பேர்; மரித்தோர் ஸ்தலம் அவனு
டனேகூடச் சென்றது; கட்கத்தினாலும், பஞ்சத்
தினாலும், சாவினாலும், பூமியின் துஷ்டமிருகங்க
ளினாலும் பூமியின் சார்பங்கில் உள்ளவர்களைக்
கொலைசெய்யும்படிக்கு அதிகாரம் அவனுக்குக்
கொடுக்கப்பட்டது.
9 பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப் பேர்த்
தபொழுது, பராபரனுடைய வசனத்தின்நிமித்த
மும் தாங்கள் கொடுத்த சாட்சியின்நிமித்தமும்
கொல்லப்பட்டவர்களுடைய ஆத்துமாக்களைப்
பலிபீடத்தின்கீழே கண்டேன்.—10 அவர்கள்,
பரிசுத்தமும் சத்தியமுமுள்ள ஆண்டவரே, எது
வரைக்கும் தேவரீர் நியாயத்தீர்ப்புக்கொடாமலும்,
பூமியின்மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்
கள் இரத்தத்தைக்குறித்துப் பழிவாங்காமலும்
இருப்பீர் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்
டார்கள்.—11 அப்பொழுது அவர்களுக்கு வெ
ள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டதுமல்லாமல்,
அவர்கள் தங்களைப்போலக் கொலைசெய்யப்படுப
வர்களாகிய தங்கள் உடன் பணிவிடைக்காரரும்
தங்களுடைய சகோதரரும் வந்து நிறையுமளவும்,
பின்னும் கொஞ்சக்காலம் இளைப்பாறவேண்டும்
என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.
12 பின்பு அவர் ஆறும் முத்திரையைப் பேர்க்
கக் கண்டேன்; உடனே பூமி மிகவும் அதிர்ந்
தது; சூரியனும் கம்பிளியைப்போலக் கறுப்பா
யிற்று; சந்திரன் முழுவதும் இரத்தம்போல
ஆயிற்று. — 13 வானத்தின் நட்சத்திரங்களும்,
பெருங்காற்றினல் அசைக்கப்பட்ட அத்திமரம்
பருவமில்லாத தன் காய்களை உதிர்க்கிறதுபோலப்
பூமியிலே விழுந்தன.—14 வானமும் சுருட்டப்
பட்ட புத்தகம்போலாகி விலகிப்போயிற்று; மலை
கள், தீவுகள், யாவும் தங்கள் இடங்களைவிட்டு
விலக்கப்பட்டுப்போயின.—15 மேலும் பூமியின்
இராசாக்களும், பெரியோர்களும், சேனைத்தலை
வர்களும், ஐசுவரியவான்களும், பலவான்களும்,
அடிமைகள் யாவரும், சுயாதீனர் யாவரும் பர்வ
தங்களின் குகைகளிலும் கல்மலைகளுக்குள்ளும்
ஒளித்துக்கொண்டு, பர்வதங்களையும் கல்மலைக
ளையும் நோக்கி,—16 அவருடைய கோபாக்கினை
தோன்றுகிற பெரியநாள் வந்திருக்கின்றதே; நிலை
நிற்கத் திராணியுள்ளவன் யாவன்?—17 ஆகை
யால் நீங்கள் எங்கள்மேல் விழுந்து, ஆசனத்
தின்மேல் உளுக்காந்திருக்கிறவருடைய முகத்
திற்கும், ஆட்டுக்குட்டியின் கோபத்திற்கும் எங்
களை மறைத்து அடக்குங்கள் என்று கூப்பிட்
டார்கள்.

## எ. அதிகாரம்.

அவற்றிற்குப்பின்பு பூமியின் நான்கு திசைகளி
டத்திலும் நான்கு தூதர்கள் நின்று, ஒரு காற்றாகி
லும் பூமியின்மேலாவது சமுத்திரத்தின்மேலாவது
ஒரு மரத்தின்மேலாவது அடியாதபடிக்கு, பூமி
யின் நான்கு காற்றுக்களையும் பிடித்திருக்கக் கண்
டேன்.

2 மேலும் சீவனுள்ள பராபரனுடைய முத்தி
ரைக்கோலையுடைய வேறொரு தூதனைச் சூரி
யன் உதிக்கும் திசையிலிருந்து ஏறிவரக் கண்
டேன்; அவன் பூமியையும் சமுத்திரத்தையும்
சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த
நான்கு தூதரையும் நோக்கி,—3 நாம் நம்மு
டைய பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்றிக
ளில் முத்திரைபோட்டுத் தீருமளவும், பூமியை
யும் சமுத்திரத்தையும் மரங்களையும் சேதப்படுத்
தாதிருங்கள் என்று மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்
டான்.
4 மேலும் முத்திரைபோடப்பட்டவர்களின்
தொகையைக் கேட்டேன்; இஸ்ரவேல் சந்ததி
யாராகிய சகல கோத்திரங்களிலும் முத்திரைபோ
டப்பட்டவர்கள் ௱௪௪௲-பேர்.—5 அதற்கு
வகை, யூதா கோத்திரத்தில் முத்திரைபோடப்
பட்டவர்கள் ௰௨௲-பேர்; ரூபன் கோத்திரத்தில்
முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; காத்
கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள்
௰௨௲-பேர்.—6 அசேர் கோத்திரத்தில் முத்தி
ரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; நவ்தலி
கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள்
௰௨௲-பேர்; மனாசே கோத்திரத்தில் முத்திரை
போடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.—7 சிமே
யோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்ட
வர்கள் ௰௨௲-பேர்; லேவி கோத்திரத்தில் முத்
திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; ஈசஷார்
கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள்
௰௨௲-பேர்.—8 செபுலோன் கோத்திரத்தில்
முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்;யோ
சேப்புக் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்ட
வர்கள் ௰௨௲-பேர்; பென்யமீன் கோத்திரத்தில்
முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.
9 இவற்றிற்குப்பின்பு நான் பார்த்து, சகல
தேசத்தாரிலும், கோத்திரங்களிலும், (மற்றச்)
சனக்கூட்டங்களிலும், பாஷைக்காரரிலுமிருந்து
வந்ததுமாய், ஒருவனும் எண்ணக்கூடாததுமாய்
இருந்த திரளான கூட்டமாகிய சனங்கள் வெள்
ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில் குருத்
தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்கு
முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்குமுன்பாகவும் நிற்
கக் கண்டேன்.—10 மேலும் அவர்கள் இரட்சிப்
பின் (கனம்) ஆசனத்தின்மேல் உளுக்காருகிற
எங்கள் பராபரனுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்
கும் செலுத்தப்படக்கடவதென்று மிகவும் சத்த
மிட்டுக் கூப்பிட்டார்கள்.—11 அல்லாமலும் தூதர்
கள் யாவரும் ஆசனத்தையும் மூப்பரையும் நான்கு
சீவன்களையும் சூழ நின்று, ஆசனத்திற்குமுன்பா
கச் சாஷ்டாங்கமாய் விழுந்து, பராபரனைத் தொ
ழுதுகொண்டு,—12 ஆமென், எங்கள் பராபரனுக்
குத் துதியும், மகிமையும், ஞானமும், தோத்திர
மும், கனமும், வல்லமையும், பெலனும் என்
றென்றைக்கும் உண்டாகக்கடவது, ஆமென் என்
றார்கள்.
13 அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்
னை நோக்கி, வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற
இவர்கள் யார், எங்கேயிருந்து வந்தார்கள் என்று
கேட்டான்.—14 அதற்கு நான் என் ஆண்டவ
னே, அது உமக்குத் தெரியும் என்றேன்; அப்
பொழுது அவன் சொன்னதாவது: இவர்கள்
மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள்; இ
வர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவ
ருடைய இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்
கள்.—15 ஆனபடியால் இவர்கள் பராபரனுடைய
ஆசனத்திற்குமுன்பாக இருந்து, இரவும்பகலும்
அவருடைய ஆலயத்திலே அவருக்குப் பணி
விடைசெய்வார்கள்; ஆசனத்தின்மேல் உளுக்
காந்திருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயி
ருப்பார்.—16 இனி இவர்கள் பசியடைவது
மில்லை; தாகம் அடைவதுமில்லை; வெயிலாவது
மற்றெந்த உஷ்ணமாவது அவர்கள்மேல் படுவது
மில்லை.—17 ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்
டுக்குட்டியானவரே அவர்களை மேய்த்து, அவர்க
ளைச் சீவதண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு
நடத்துவார்; இவர்களுடைய கண்ணீர் யாவை
யும் பராபரன் துடைப்பார் என்றான்.

## ௮. அதிகாரம்.

பின்பு அவர் ஏழாம் முத்திரையைப் பேர்த்த
பொழுது பரமண்டலத்திலே ஏறக்குறைய அரை
மணி நேரமளவும் அமைதல் உண்டாயிற்று.
2 மேலும், பராபரனுக்குமுன்பாக நின்ற ஏழு
தூதர்களையும் கண்டேன்; அவர்களுக்கு ஏழு எக்
காளங்கள் கொடுக்கப்பட்டன.—3 வேறொரு
தூதனும் தூபம்காட்டும் பொற்கலசத்தைப் பிடித்
துவந்து பலிபீடப்படியிலே நின்றான்; அல்லாம
லும், ஆசனத்திற்குமுன்பாக இருந்த பொற்பீ
டத்தின்மேலே பரிசுத்தவான்கள் எல்லாருடைய
செபங்களுடனேயும்கூடக் கொடுக்கும்படிக்கு,
அநேக சுகந்தவருக்கங்கள் அவனுக்குக் கொடுக்
கப்பட்டன.—4 அப்படியே பரிசுத்தவான்க
ளுடைய செபங்களுடனேகூடச் சுகந்தவருக்
கங்களின் புகை தூதனுடைய கையிலிருந்து பரா
பரனுக்குமுன்பாக எழும்பிற்று.—5 பின்பு அந்
தத் தூதன் தூபகலசத்தை எடுத்துக்கொண்டு,
அதைப் பலிபீடத்திலுள்ள நெருப்பினால் நிரப்பி,
பூமியில் கொட்டினான்; உடனே சத்தங்களும்,
இடிமுழக்கங்களும், மின்னல்களும், பூமி அதிர்
தலும் உண்டாயின.
6 பின்பு ஏழு எக்காளங்களை உடைய ஏழு
தூதர்கள் எக்காளத்தை ஊதுகிறதற்கு எத்தனம்
பண்ணினார்கள்.
7 முதலாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்
பொழுது இரத்தம் கலந்த கல்மழையும் அக்கினி

யும் உண்டாகித் தரையிலே கொட்டப்பட்டன;
அதினாலே மரங்களில் மூன்றில் ஒருபங்கு வெந்
துபோயிற்று; பசும்புல் எல்லாம் எரிந்துபோ
யிற்று.
8 இரண்டாம் தூதன் எக்காளம் ஊதினான்;
அப்பொழுது அக்கினியால் வேகிற ஒரு பெரிய
பர்வதம்போலானது சமுத்திரத்திலே போடப்
பட்டது; அதினாலே சமுத்திரத்தின் மூன்றில்
ஒருபங்கு இரத்தமாயிற்று.—9 சமுத்திரத்தில் இ
ருந்த சீவனுள்ள சிருட்டிகளில் மூன்றில் ஒரு
பங்கு செத்துப்போயிற்று; கப்பல்களில் மூன்றத்
தொருபங்கு அழிந்தது.
10 மூன்றாம் தூதன் எக்காளம் ஊதினான்;
அப்பொழுது ஒரு பெரிய நட்சத்திரம் தீவட்
டியைப்போல எரிந்து வானத்திலிருந்து விழுந்
தது; அது ஆறுகளில் மூன்றத்தொருபங்கின்மே
லும் நீரூற்றுகள்மேலும் விழுந்தது. — 11 அந்த
நட்சத்திரத்திற்கு எட்டி என்று பேர்; அதினாலே
தண்ணீரில் மூன்றத்தொருபங்கு எட்டியைப்
போலக் கசப்பாயிற்று; இப்படிக் கசப்பான தண்
ணீரினாலே மனிதரில் அநேகர் செத்தார்கள்.
12 நான்காம் தூதன் எக்காளம் ஊதினான்;
அப்பொழுது சூரியனில் மூன்றத்தொருபங்கும்,
சந்திரனில் மூன்றத்தொருபங்கும், நட்சத்திரங்
களில் மூன்றத்தொருபங்கும் சேதப்படுத்தப்பட்
டன; அதினாலே அவற்றவற்றின் மூன்றில் ஒரு
பங்கு இருள் அடைந்தது; பகலிலும் மூன்றில்
ஒருபங்கு பிரகாசமில்லாமல் இருந்தது; இரவி
லும் அப்படியே ஆயிற்று.
13 பின்பு ஒரு தூதன் வானத்தின் மத்தியி
லே பறந்துவரக் கண்டேன்; அவன் இனிமேல்
எக்காளம் ஊதவேண்டிய மற்ற மூன்று தூதரு
டைய எக்காள சத்தங்களால் பூமியில் குடியி
ருக்கிறவர்களுக்கு ஐயோ, ஐயோ, ஐயோ, வே
தனைவரும் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்
பிடக் கேட்டேன்.

## ௯. அதிகாரம்.

ஐந்தாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொ
ழுது வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்த
நட்சத்திரத்தைக் கண்டேன்; அதற்குப் பாதா
ளமாகிய குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்
டது. — 2 அது பாதாளக்குழியைத் திறந்தது;
உடனே பெருஞ்சூளையின் புகையைப்போல,
அந்தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று; அந்தக்
குழியின் புகையினாலே சூரியனும் ஆகாயமும்
அந்தகாரப்பட்டன. — 3 அல்லாமலும் அந்தப்
புகையிலிருந்து வெட்டுக்கிளிகள் புறப்பட்டுப்
பூமியின்மேல் வந்தன; அவைகளுக்குப் பூமியின்
தேள்களுக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்திற்கு
ஒப்பான அதிகாரம் கொடுக்கப்பட்டது. —
4 மேலும் அவைகள் பராபரனுடைய முத்திரை
யை நெற்றிகளில் தரியாத மனிதரைமாத்திரமே
அன்றி, பூமியின் புல்லையும் பசுமையான எந்தப்
பூண்டையும் எந்த மரத்தையும் சேதப்படுத்தாத
படிக்கு அவைகளுக்கு உத்தரவு கொடுக்கப்பட்
டது.—5 மேலும் அவர்களைக் கொலைசெய்யும்
படிக்கு அல்ல, ஐந்துமாதமளவும் அவர்களை வே
தனைப்படுத்தும்படிக்கே அதிகாரம் அவைகளுக்
குக் கொடுக்கப்பட்டது; அவைகள் செய்யும்
வேதனை தேளானது மனிதரைக் கொட்டும்பொ
ழுது உண்டாகும் வேதனையைப்போல இருக்கி
றது.—6 அந்நாள்களில் மனிதர்கள் மரணத்தைத்
தேடி, அதைக் காணாதிருப்பார்கள்; மரிக்க ஆ
சைப்படுவார்கள்; மரணம் அவர்களுக்கு விலகி
ஓடிப்போம்.—7 மேலும் அந்த வெட்டுக்கிளிக
ளின் உருவம் யுத்தத்திற்கு எத்தனமாக்கப்பட்ட
குதிரைகளுக்கு ஒப்பாயிருந்தது; அவைகளின்
தலைகள்மேலே பொற்கிரீடங்களைப்போன்றவை
கள் இருந்தன; அவைகளின் முகங்கள் மனித
ருடைய முகங்களைப்போல இருந்தன. அவை
களின் மயிர் ஸ்திரிகளுடைய மயிர்போல இருந்
தது.—8 அவைகளின் பற்கள் சிங்கங்களின் பற்க
ளைப்போல இருந்தன.—9 அல்லாமலும் மார்பில்
இருப்புக்கவசங்களைப்போல, கவசங்கள் அவை
களுக்கு இருந்தன; அவைகள் சிறகுகளினால்
செய்த இரைச்சல் யுத்தத்திற்குச் செல்லுகிற
அநேகம் குதிரைகள் பூண்ட இரதங்களின் இ
ரைச்சலைப்போல இருந்தது.–10 மேலும் அவை
கள் தேள்களின் வால்களுக்கு ஒப்பான வால்க
ளையும், அந்த வால்களில் கொடுக்குகளையும் உ
டையவைகளாய் இருந்தன; இப்படி அவைகள்
ஐந்துமாதமளவும் மனிதரைச் சேதப்படுத்துவதற்
கு அதிகாரத்தை உடையவைகளாய் இருந்தன.–
11 அன்றியும் பாதாளத்தின் தூதன் அவைக
ளுக்கு இராசனாயிருக்கிறான்; அவனுக்கு எபிரேயு
பாஷையிலே அப்தோன் என்றும் கிரேக்கை பா
ஷையிலே அப்பொல்லியோன் என்றும் பே
ருண்டாயிருக்கின்றன.
12 முதல்வேதனை போயிற்று; இதற்குப்பின்பு
வேறிரண்டு வேதனைகள் அதோ வருகின்றன.
13 ஆறாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்
பொழுது பராபரனுக்குமுன்பாக இருந்த பொற்
பீடத்தின் நான்கு கொம்புகளிலுமிருந்து ஒரு
வன் எக்காளத்தைப் பிடித்திருந்த ஆறாம் தூதனை
நோக்கி,—14 நீ ஐபிராத்தென்னும் பெரிய ஆற்
றினிடத்திலே கட்டப்பட்டிருக்கிற நான்கு தூத
ரை அவிழ்த்துவிடு என்று சத்தமிட்டுச் சொல்
லக் கேட்டேன்.—15 உடனே அந்த நாலு தூதர்
களும் அவிழ்த்துவிடப்பட்டார்கள்; அவர்கள்
மனிதர்களில் மூன்றத்தொருபங்கைக் கொலை
செய்யும்படிக்கு ஒருமணி நேரத்திற்கும், ஒரு நா
ளுக்கும், ஒரு மாதத்திற்கும், ஒரு வருஷத்திற்
கும் எத்தனமாக்கப்பட்டு இருந்தவர்கள். —

16 குதிரைச் சேனைகளான இராணுவங்களின்
தொகை இருபதுகோடியாய் இருந்தது; அவை
களின் தொகையைக் கேட்டேன்.—17 தரிசனை
யிலே குதிரைகளையும் அவைகளின்மேல் இருந்
தவர்களையும் எப்படிக் கண்டேன் என்றால், அ
வர்கள் அக்கினி நிறமும் பதுமராக நிறமும் கந்தக
நிறமுமான மார்பின் கவசங்களை உடையவர்கள்;
குதிரைகளுடைய தலைகள் சிங்கங்களுடைய
தலைகளைப்போல இருந்தன; அவைகளுடைய
வாய்களிலிருந்து அக்கினியும், புகையும், கந்தக
மும் புறப்பட்டன.—18 அவைகளுடைய வாய்
களிலிருந்து புறப்பட்ட அக்கினி, புகை, கந்தகம்
என்ற இம்மூன்றினாலும் மனிதரில் மூன்றத்தொ
ருபங்கு கொலைசெய்யப்பட்டார்கள்.—19 அந்
தக் குதிரைகளுடைய வல்லமை அவைகளு
டைய வாயிலேயும் வால்களிலேயும் இருக்கின
றது; எப்படியெனில், அவைகளுடைய வால்கள்
பாம்புகளுகக்கு ஒப்பானவைகளாயும், தலைகள்
உள்ளவைகளாயும் இருக்கின்றன; அவைகளா
லே சேதம்செய்கின்றன.–20 அப்படியிருந்தும்,
அந்த வாதைகளால் கொலையுண்ணாத மற்ற மனி
தர்கள் தங்கள் கைகளின் கிரியைகளைவிட்டுக்
குணப்படவில்லை; அவர்கள் பின்னும் பேய்களை
யும், பொன், வெள்ளி, செம்பு, கல், மரத்தால்
செய்யப்பட்டவைகளாயும், காணவும் கேட்கவும்
நடக்கவும்மாட்டாதவைகளாயும் இருக்கிற விக்கி
ரகங்களையும் தொழுதுகொண்டுவந்தார்கள். —
21 அல்லாமலும் அவர்கள் தங்கள் கொலைபாத
கங்களையும், தங்கள் சூனியங்களையும், தங்கள் வே
சித்தனங்களையும், தங்கள் களவுகளையும்விட்டுக்
குணப்படவில்லை.

## ௰. அதிகாரம்.

பின்பு பலமுள்ள வேறொரு தூதன் இறங்கக்
கண்டேன்; மேகம் அவனைச் சூழ்ந்திருந்தது;
அவனுடைய சிரசின்மேல் வானவில் இருந்தது;
அவனுடைய முகம் சூரியனைப்போலவும், அவனு
டைய கால்கள் அக்கினித் தூண்களைப்போலவும்
இருந்தன.—2 மேலும் விரிக்கப்பட்ட ஒரு சிறிய
புத்தகத்தை அவன் தன் கையில் பிடித்துக்
கொண்டு, தன்னுடைய வலதுபாதத்தைச் சமுத்
திரத்தின்மேலும் இடதுபாதத்தைத் தரையின்மே
லும் வைத்து, — 3 சிங்கம் முழங்குகிறதுபோல
மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்டான்; அவன் கூப்
பிட்டபொழுது, ஏழு இடிகளும் தங்கள் சத்தங்
களை முழக்கின.–4 அவ்வேழு இடிகளும் தங்கள்
சத்தங்களை முழக்கினபொழுது, நான் (அதை)
எழுதவேண்டுமென்று இருந்தேன்; அப்பொ
ழுது ஏழு இடிமுழக்கங்கள் சொன்னவைகளை நீ
எழுதாமல் முத்திரைப்படுத்து என்று வானத்திலி
ருந்து ஒரு சத்தம் உண்டாகக் கேட்டேன்.—
5 அன்றியும் நான் சமுத்திரத்தின்மேலும் தரை
யின்மேலும் நிற்கக் கண்ட தூதன் தன்னுடைய
கையை வானத்திற்கு நேராக உயர்த்தி, இன்
னம் காலம் வர (இல்லை).—6 பராபரன் தம்மு
டைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளுக்குச்
சுவிசேஷமாய் அறிவித்தபடி ஏழாம் தூதன் எக்
காளத்தை ஊதும் சத்தத்தின் நாட்களிலே அவரு
டைய இரகசியம் நிறைவேறும் என்று,—7 வா
னத்தையும் அதிலுள்ளவைகளையும், பூமியையும்
அதிலுள்ளவைகளையும், சமுத்திரத்தையும் அதி
லுள்ளவைகளையும் சிருட்டித்தவராயும் என்றென்
றைக்கும் பிழைக்கிறவராயும் இருக்கிறவர்மே
லே ஆணையிட்டுக் (கூப்பிட்டான்).
8 பின்பு நான் கேட்கும்படி, வானத்திலி
ருந்து சத்தமிட்டவன் மறுபடியும் என்னுடனே
சொன்னது: சமுத்திரத்தின்மேலும் தரையின்மே
லும் நிற்கிற தூதனுடைய கையிலிருக்கிற விரிக்
கப்பட்ட சிறிய புத்தகத்தை நீ போய் வாங்கிக்
கொள் என்றான்.–9 அந்தப்படி நான் தூதனிடத்
தில் போய், இந்தச் சிறிய புத்தகத்தை எனக்குக்
கொடுக்கவேண்டும் என்றேன்; அப்பொழுது
அவன் என்னை நோக்கி, நீ இதை எடுத்து விழு
ங்கு; உன் வயிற்றிற்கு இது கசக்கப்பண்ணும்;
ஆகிலும் உன் வாய்க்கு இது தேனைப்போல மது
ரமாயிருக்கும் என்றான்.—10 அப்படி நான் அந்
தச் சிறிய புத்தகத்தைத் தூதனுடைய கையில்
வாங்கி, அதை விழுங்கினேன்; என் வாய்க்கு
அது தேனைப்போல மதுரமாய் இருந்தது; நான்
அதை விழுங்கினபின்பு என் வயிறு மிகுந்த
நோய்பட்டது.—11 அப்பொழுது அவன் என்
னுடனே சொன்னது: நீ மறுபடியும் அநேக சனக்
கூட்டங்களையும், தேசத்தாரையும், பாஷைக்கார
ரையும், இராசாக்களையும் குறித்துத் தீர்க்கதரிசனம்
சொல்லவேண்டும் என்றான்.

## ௰௧. அதிகாரம்.

பின்பு ஒரு தடிக்கு ஒப்பான அளவுகோலை
(ஒருவன்) எனக்குக் கொடுத்துச் சொன்னதா
வது: நீ எழுந்து, பராபரனுடைய ஆலயத்தை
யும் பலிபீடத்தையும், அதிலே தொழுதுகொள்
ளுகிறவர்களையும் அளந்து பார்த்துக்கொள். —
2 ஆலயத்திற்குப் புறம்பே இருக்கிற பிரகாரம்
புறத்தேசத்தாருக்குக் கொடுக்கப்பட்டபடியால்,
அதை அளவாமல் தள்ளுவாயாக; பரிசுத்தபட்ட
ணத்தை அவர்கள் நாற்பத்திரண்டு மாதமளவும்
மிதிப்பார்கள்.
3 ஆகிலும் என்னுடைய இரண்டு சாட்சிக
ளும் இரட்டுச்சேலை உடுத்திக்கொண்டிருக்கிற
வர்களாய், ஆயிரத்து இருநூற்று அறுபதுநாளளவும்
தீர்க்கதரிசனம் சொல்லும்படிக்கு, அவர்களுக்கு
அதிகாரத்தைக் கொடுப்பேன். —4 அவர்களே
பூமியின் ஆண்டவருக்குமுன்பாக நிற்கிற இர
ண்டு ஒலிவமரங்களும், இரண்டு விளக்குத்தண்

டுகளும் ஆனவர்கள்.—5 ஒருவன் அவர்களைச்
சேதப்படுத்த விரும்பினால், அவர்களுடைய வா
யிலிருந்து அக்கினி புறப்பட்டு, அவர்களுடைய
சத்துருக்களைப் பட்சிக்கும்; அவர்களைச் சேதப்ப
டுத்த விரும்புகிறவன் எவனோ அவன் அப்படி
யே சாகவேண்டும்.—6 அவர்கள் தீர்க்கதரிசனம்
சொல்லிவருகிற நாட்களிலே மழைபெய்யாதப
டிக்கு வானத்தை அடைக்கிறதற்கு அதிகாரம்
உடையவர்கள்; மேலும் அவர்கள் தண்ணீர்களை
இரத்தமாக மாற்றுகிறதற்கும், எக்காலத்திலேயும்
தங்கள் இஷ்டப்படி பூமியைச் சகலவித வாதை
களாலும் அடிக்கிறதற்கும் அதிகாரம் உடையவர்
கள்.

7 மேலும் அவர்கள் தங்கள் சாட்சியை முடி
க்கும்பொழுது, பாதாளத்திலிருந்து ஏறுகிற மிரு
கம் அவர்களோடே யுத்தம்பண்ணி, அவர்களைச்
செயித்து, அவர்களைக் கொலைசெய்யும்.—8 அவர்
களுடைய உடல்கள் பெரிய பட்டணத்தின் பெ
ரிய வீதியிலே கிடக்கும்; அந்தப் பட்டணம்
சோதோமென்றும் எகிப்தென்றும் ஞான அருத்த
மாய்ச் சொல்லப்படும்; அதிலே அவர்களுடைய
கர்த்தாவும் சிலுவையிலே அறையப்பட்டார்.

9 சனக்கூட்டங்களிலும், கோத்திரங்களிலும்,
பாஷைக்காரரிலும், புறத்தேசத்தார்களிலும் (அ
நேகர்) அவர்களுடைய உடல்களை மூன்றரை
நாள்வரைக்கும் பார்த்துக்கொண்டுவந்ததமல்லா
மல், அவைகளைக் கல்லறைகளில் வைக்கிறதற்கு
இடம்கொடுக்கவும் இல்லை.—10 அவ்விரண்டு
தீர்க்கதரிசிகளும் பூமியின் குடிகளுக்கு வேதனை
செய்தபடியினாலே அவர்கள் (போனதற்காகப்)
பூமியில் குடியிருக்கிறவர்கள் சந்தோஷப்பட்டுக்
களிகூர்ந்து, ஒருவருக்கு ஒருவர் காணிக்கைகளை
அனுப்புவார்கள்.

11 மூன்றரைநாளுக்குப்பின்பு பராபரனிடத்தி
லிருந்து சீவ ஆவி அவர்களுக்குள் பிரவேசித்தது;
அவர்கள் தங்கள் கால்களை ஊன்றி நின்றார்கள்;
அப்பொழுது அவர்களைப் பார்த்தவர்களுக்கு மிகு
ந்த பயம் உண்டாயிற்று.—12 பின்பு இங்கே
ஏறிவாருங்கள் என்று வானத்திலிருந்து தங்க
ளுக்கு உண்டான பெரிய சத்தத்தை அவர்கள்
கேட்டு, ஒரு மேகத்தில் ஏறி வானத்திற்குப் போ
னார்கள்; அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை
நோக்கிப்பார்த்தார்கள்.—13 அந்நேரத்திலே பூமி
மிகவும் அதிர்ந்தது; உடனே அந்தப் பட்டணத்
தில் பத்தில் ஒருபங்கு விழுந்துபோயிற்று; மனி
தர் ஏழாயிரம்பேரும் பூமி அதிர்தலால் அழிந்தார்
கள்; மீதியானவர்கள் பயமடைந்து பரமண்டலத்
தின் பராபரனுக்குத் துதியைச் செலுத்தினார்கள்.

14 இரண்டாம் வேதனை போயிற்று; இதோ
மூன்றாம் வேதனை சீக்கிரமாய் வருகின்றது.

15 அப்பொழுது ஏழாம் தூதன் எக்காளம் ஊ
தினான்; உடனே உலகத்தின் இராச்சியங்கள்
நம்முடைய கர்த்தரையும் அவருடைய கிறிஸ்து
வையும் சேர்ந்தன என்றும், அவர் என்றென்
றைக்கும் இராசரீகம்பண்ணுவார் என்றும், மிகு
ந்த சத்தங்கள் பரமண்டலத்தில் உண்டாயின.

16 அப்பொழுது பராபரனுக்குமுன்பாகத் தங்
கள் ஆசனங்கள்மேல் உளுக்காந்த அவ்விருபத்து
நான்கு மூப்பர்களும் சாஷ்டாங்கமாய் விழுந்
து,—17 இருக்கிறவரும் இருந்தவருமாகிய சர்
வவல்லமையுடைய தேவனாகிய பராபரனே, தே
வரீர் உமது பலத்த வல்லமையை எடுத்துக்
கொண்டு இராசரீகம்பண்ணுகிறீர். — 18 புறத்
தேசத்தார் கோபமாய் இருந்தார்கள், அப்பொ
ழுது உமது கோபம் தோன்றிற்று. மரித்தோர் நியா
யத்தீர்ப்பு அடைகிறதற்கும், தீர்க்கதரிசிகளாகிய
உம்முடைய ஊழியக்காரருக்கும் பரிசுத்தவான்க
ளுக்கும் உமது நாமத்தின்மேல் பயபத்தியாய்
இருந்த சிறியோருக்கும் பெரியோருக்கும் பலன்
அளிக்கிறதற்கும், பூமியைக் கெடுத்தவர்களைக்
கெடுக்கிறதற்குக் காலமும் வந்தது; ஆகையால்
உம்மைத் தோத்திரம் செய்கிறோம் என்று பரா
பரனைத் தொழுதுகொண்டார்கள்.

19 பின்பு பரமண்டலத்திலே பராபரனுடைய
ஆலயம் திறக்கப்பட்டது; அவருடைய ஆலயத்
திலே அவருடைய உடம்படிக்கையின் பெட்டி
காணப்பட்டது; மேலும் மின்னல்களும், சத்தங்
களும், இடிமுழக்கங்களும், பூமியதிர்தலும், பெ
ருங் கல்மழையும் உண்டாயின.

## ௰௨. அதிகாரம்.

அன்றியும் ஒரு பெரிய அடையாளம் வானத்
திலே காணப்பட்டது; (என்னவெனில்,) ஒரு
ஸ்திரி சூரியனை அணியப்பட்டு, தன்னுடைய
பாதங்களின்கீழே சந்திரனையும், தன்னுடைய
சிரசின்மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள
கிரீடத்தையும் உடையவளாய், — 2 கருப்பத்தி
னாலே வருத்தமடைந்து, பிள்ளைபெறும்படி வேத
னைப்பட்டு, அலறிக்கொண்டிருந்தாள்.

3 அன்றியும் வேறொரு அடையாளம் வானத்
திலே காணப்பட்டது; (என்னவென்றால்,)
ஏழுதலைகளையும், பத்துக்கொம்புகளையும், தன் தலை
களின்மேல் ஏழு முடிகளையுமுடைய சிவப்பான
பெரிய வல்ல சர்ப்பம் இருந்தது. — 4 அதின்
வால் வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றத்
தொருபங்கை இழுத்து, அவைகளைப் பூமியின்
மேல் தள்ளிற்று; அல்லாமலும் பிள்ளைபெறுகிற
வளாகிய அந்த ஸ்திரி பிள்ளை பெற்றவுடனே
அவளுடைய பிள்ளையைப் பட்சித்துப்போடும்
படிக்கு, அந்த வல்ல சர்ப்பம் அவளுக்கு முன்
பாக நின்றது.—5 அவள் சனக்கூட்டங்கள் எல்
லாவற்றையும் இருப்புக்கோலால் ஆளுகைசெய்
யும்படிக்கான ஆண்பிள்ளையைப் பெற்றாள்;
உடனே அவளுடைய பிள்ளை பராபரனிடத்திற்

கும் அவருடைய ஆசனத்திற்கும் எடுத்துக்
கொள்ளப்பட்டது.—6 ஸ்திரியானவளும் வனாந்
தரத்திற்கு ஓடிப்போனாள்; அங்கே ஆயிரத்திரு
நூற்றறுபதுநாள் அளவும் அவளைப் போஷிப்பதற்
காகப் பராபரனால் எத்தனமாக்கப்பட்ட இடம்
அவளுக்கு உண்டாயிருக்கிறது.

7 அன்றியும் பரமண்டலத்திலே யுத்தம் உண்
டாயிற்று; மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதரும்
அந்த வல்ல சர்ப்பத்தோடே யுத்தம்பண்ணினார்
கள்; வல்ல சர்ப்பமும் அதைச் சேர்ந்த தூதரும்
யுத்தம்பண்ணியும் செயம் அடையவில்லை. —
8 பின்னே பரமண்டலத்திலே அவர்களுக்கு ஓரி
டம் அகப்படவும் இல்லை.—9 உலகம் யாவையும்
வஞ்சித்துவருகிற பிசாசென்றும் சாத்தானென்
றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய பெரிய
வல்ல சர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே
தள்ளப்பட்டது; அதினோடேகூட அதைச் சேர்
ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள். — 10 அப்பொ
ழுது நம்முடைய சகோதரர்மேல் குற்றஞ்சாற்றுகி
றவன் தாழத் தள்ளப்பட்டிருக்கிறதால், இப்பொ
ழுது இரட்சிப்பும் வல்லமையும் ஆளுகையும்
நம்முடைய பராபரனுக்கும், அதிகாரம் அவரு
டைய கிறிஸ்துவுக்கும் உண்டாயிருக்கின்றன;
இரவும் பகலும் அவன் பராபரனுக்கு முன்பாக
அவர்கள்மேல் குற்றஞ்சாற்றினான். — 11 அவர்
கள் மரணபரியந்தமும் தங்கள் சீவனைச் சிநேகி
யாமல், ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும்,
தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் அவனைச்
செயித்தார்கள்.—12 ஆகையால் பரமண்டலங்
களே, அவைகளில் வாசமாயிருக்கிறவர்களே,
களிகூருங்கள்; பூமியிலும் சமுத்திரத்திலும் குடி
யிருக்கிறவர்களே, உங்களிடத்திலே பிசாசு இற
ங்கி, தனக்குக் கொஞ்சக்காலம் உண்டென்று
அறிந்து, மிகுந்த கோபங்கொண்டிருக்கிறபடி
யால், ஐயோ, உங்களுக்கு வேதனை உண்டாயி
ருக்குமென்று பரமண்டலத்திலே பெரும் சத்தத்
தைக் கேட்டேன்.

13 அந்தப்படி வல்ல சர்ப்பமானவன் தான்
பூமியிலே தள்ளப்பட்டதை அறிந்து, அந்த ஆண்
பிள்ளையைப் பெற்ற ஸ்திரிக்குப் பின்தொடர்ந்தா
ன். — 14 அந்த ஸ்திரி அந்தப் பாம்பின் முகத்
திற்கு விலகி, ஒருகாலமும் காலங்களும் அரைக்
காலமுமாகப் போஷிக்கப்படத்தக்க வனாந்தரத்தி
லுள்ள தன் இடத்திற்குப் பறந்துபோகும்படி
யாய்ப் பெருங்கழுகின் இரண்டு சிறகுகளும் அ
வளுக்குக் கொடுக்கப்பட்டன. — 15 அப்பொ
ழுது சர்ப்பமானவன் ஸ்திரியை வெள்ளம் கொ
ண்டுபோகும்படிக்கு, தன் வாயிலிருந்து ஒரு
நதியத்தனை சலத்தை அவளுக்குப் பின்னாகக்
கொப்பளித்தான்.—16 பூமி ஸ்திரிக்கு உதவியா
கத் தன் வாயைத் திறந்து, வல்ல சர்ப்பம் தன்
வாயிலிருந்து கொப்பளித்த நதியை விழுங்
கிற்று.—17 அப்பொழுது வல்ல சர்ப்பமானவன்
ஸ்திரியின்மேல் கோபமாயிருந்து, பராபரனுடைய
கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் இயே
சுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியை உடைய
வர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்
களுடனே யுத்தம்பண்ணப்போனான்.

## ௧௩. அதிகாரம்.

பின்பு நான் கடலோரத்தின் மணலின்மேல்
நிறுத்தப்பட்டேன்; அப்பொழுது சமுத்திரத்தி
லிருந்து, ஒரு துஷ்டமிருகம் எழும்பிவரக் கண்
டேன்; அதற்குப் பத்துக் கொம்புகளும் ஏழு
தலைகளும் இருந்தன; அதின் கொம்புகள்மே
லே பத்து முடிகளும் அதின் தலைகளின்மே
லே தூஷணமான நாமங்களும் இருந்தன. —
2 மேலும் நான் கண்ட மிருகம் புலியைப்போல
இருந்தது; அதின் கால்கள் கரடியின் கால்களைப்
போலவும், அதின் வாய் சிங்கத்தின் வாயைப்
போலவும் இருந்தன; மேலும் வல்ல சர்ப்பமான
வன் தன் வல்லமையையும், தன் ஆசனத்தையும்
மிகுந்த அதிகாரத்தையும் அதற்குக் கொடுத்
தான்.—3 பின்பு அதின் தலைகளில் ஒன்று சாவு
க்கு ஏதுவாய்க் காயப்படுத்தப்பட்டதாகக் கண்
டேன்; பின்பு சாவுக்கு ஏதுவான காயம் சொஸ்
தமாக்கப்பட்டது; மேலும் பூமியிலுள்ள யாவரும்
ஆச்சரியத்தோடே அந்தத் துஷ்டமிருகத்தைப்
பின்பற்றி,—4 அம்மிருகத்திற்கு அப்படிப்பட்ட
அதிகாரத்தைக் கொடுத்தபடியினாலே வல்ல சர்ப்
பத்தைத் தொழுதுகொண்டார்கள்; அல்லாம
லும் மிருகத்திற்கு ஒப்பானவன் யாவன்; அதி
னுடனே யுத்தம்பண்ணத்தக்கவன் யாவன் என்று
மிருகத்தையும் தொழுதுகொண்டார்கள்.—5 மே
லும் பெருமையானவைகளையும் தூஷணங்களை
யும் பேசுதற்கான வாய் அதற்குக் கொடுக்கப்
பட்டது; அல்லாமலும் நாற்பத்திரண்டுமாதம்
நடந்துகொள்ளுகிறதற்கு அதிகாரம் அதற்கு அ
ளிக்கப்பட்டது. — 6 அந்தப்படி அது பராபரனு
டைய நாமத்தையும், அவருடைய கூடாரத்தை
யும், பரமண்டலத்தில் வாசமாயிருக்கிறவர்களையும்
தூஷணிக்கிறதற்குத் தன் வாயைத் தூஷணமாகத்
திறந்தது. — 7 மேலும் பரிசுத்தவான்களோடே
யுத்தம்பண்ணி அவர்களைச் செயிக்கும்படிக்கு,
அதற்கு (இடம்) கொடுக்கப்பட்டது; எந்தக்
கோத்திரத்தின்மேலும் சனக்கூட்டத்தின்மே
லும் பாஷைக்காரர்மேலும் தேசத்தார்மேலும் அ
தற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. — 8 ஆத
லால் உலகமுண்டானதுமுதல் (பலியாக) அடிக்
கப்படும்படி (நியமிக்கப்பட்ட) ஆட்டுக்குட்டி
யினுடைய சீவபுத்தகத்திலே பேரெழுதப்படாத
பூமியின் குடிகள் யாவரும் அதை நமஸ்காரம்பண்
ணுவார்கள் —9 யாவனொருவன் காதுள்ளவனாய்
இருந்தால் கேட்கக்கடவன். — 10 சிறையாகப்

பிடித்துக்கொண்டுபோகிறவன் சிறையாகக் கொ
ண்டுபோகப்படுவான்; கட்கத்தினாலே கொலை
செய்கிறவன் கட்கத்தினாலே கொலைசெய்யப்
படவேண்டும்; இங்கே பரிசுத்தவான்களுடைய
பொறுமையும் விசுவாசமும் விளங்கும்.
11 அன்றியும் வேறொரு மிருகத்தைத் தரையி
லிருந்து எழும்பக் கண்டேன்: அது ஓர் ஆட்டுக்
குட்டிக்கு ஒப்பாய் இரண்டு கொம்புகளை உடை
யதாய் வல்ல சர்ப்பத்தைப்போல வசனித்தது.-
12 அல்லாமலும் அது முந்தின மிருகத்தின் அதி
காரம் யாவையும் அதின் முன்பாக நடப்பித்து,
சாவுக்கு ஏதுவான காயம் ஆறச் சொஸ்தமடைந்த
முந்தின மிருகத்தைப் பூமியும் அதின் குடிக
ளும் நமஸ்காரம்பண்ணும்படி செய்ததமன்றி,—
13 மனிதருக்குமுன்பாக வானத்திலிருந்து அக்
கினியையும் பூமியின்மேல் இறங்கப்பண்ணத்
தக்கதாகப் பெரிய அடையாளங்களைச் செய்து,—
14 மிருகத்தின்முன்பாகச் செய்யும்படி தனக்கு
அளிக்கப்பட்ட அடையாளங்களினாலே பூமியின்
குடிகளை வஞ்சித்துக் கட்கத்தினாலே காயப்
பட்டு, பின்பு பிழைத்த மிருகத்திற்கு ஒரு சொ
ரூபம் பண்ணவேண்டும் என்று பூமியின் குடிக
ளுக்குச் சொல்லுகின்றது.—15 மேலும் அம்மி
ருகத்தின் சொரூபம் பேசத்தக்கதாகவும், அம்மி
ருகத்தின் சொரூபத்தை நமஸ்காரம்பண்ணாதே
யாவரையும் கொலைசெய்யப்பண்ணத்தக்கதாக
வும் அம்மிருகத்தின் சொரூபத்திற்கு ஆவியைக்
கொடுக்கும்படி அதற்குத் திராணி அளிக்கப்பட்
டது.—16 அந்தப்படி அது சிறியோர், பெரி
யோர், ஐசுவரியவான்கள், தரித்திரர், சுயாதீனர்,
அடிமைகள் இவர்கள் யாவரும் தங்கள் தங்கள்
வலதுகைகளிலே, அல்லது தங்கள் நெற்றிகளி
லே ஒரு அடையாளத்தைப் பெறும்படிக்கும்,—
17 அம்மிருகத்தின் அடையாளமாகிய அந்த
நாமத்தையாவது அதினுடைய நாமத்தின் இலக்
கத்தையாவது தரித்துக்கொள்ளுகிறவனைத்தவிர
வேறொருவனும் கொள்ளவும் விற்கவும் கூடாத
படிக்கும் செய்கின்றது.—18 இங்கே ஞானம்
விளங்கும்; மிருகத்தின் இலக்கம் ஒரு மனிதனு
டைய இலக்கமாய் இருக்கிறபடியால், புத்தி
உடையவன் அந்த இலக்கத்தைக் கணக்குப்
பார்க்கக்கடவன்; அதினுடைய இலக்கம் ௬௱௬௰௬.

## ௰௪. அதிகாரம்.

பின்பு நான் பார்க்கையில் சீயோன் பர்வதத்
தின்மேலே ஆட்டுக்குட்டியையும், அதினோடே
கூட அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்
றிகளில் எழுதப்பட்டிருந்த நூற்றுநாற்பத்துநாலா
யிரம்பேரையும் நிற்கக் கண்டேன்.—2 அல்லாம
லும், பெருவெள்ள இரைச்சலைப்போலவும் பெ
ரிய இடிமுழக்கம்போலவும் ஒரு சத்தம் பரமண்
டலத்திலிருந்து உண்டாகக் கேட்டேன்; மே
லும் நான் கேட்ட சத்தம் தங்கள் சுரமண்டலங்
களை வாசிக்கிற சுரமண்டலக்காரருடைய ஓசை
யைப்போல இருந்தது.—3 அவர்கள் அந்த ஆச
னத்திற்கு முன்பாகவும், நான்கு சீவன்களுக்கும்
மூப்பருக்கும் முன்பாகவும் புதிய பாட்டைப் பாடி
னார்கள்; அந்தப் பாட்டைப் பூமியிலிருந்து மீட்
டுகொள்ளப்பட்ட அந்த நூற்றுநாற்பத்துநாலா
யிரம்பேரே அல்லாமல், வேறொருவரும் கற்றுக்
கொள்ளக்கூடாததாய் இருந்தது.—4 அவர்களே
கற்புடையவர்களாய் ஸ்திரீகளால் தங்களை அசு
சிப்படுத்தாதவர்கள்; அவர்களே ஆட்டுக்குட்டி
எங்கே போனாலும் அதைப் பின்பற்றுகிறவர்கள்;
அவர்களே மனிதரிலிருந்து பராபரனுக்கும் ஆட்
டுக்குட்டிக்கும் முதல்வினைவாக மீட்டுக்கொள்
ளப்பட்டவர்கள்.—5 அவர்கள் மாசில்லாதவர்க
ளானபடியால், அவர்களுடைய வாயிலே கபடம்
அகப்படவில்லை.
6 அன்றியும் வேறொரு தூதன் பூமியின் குடி
களுக்கும் சகல தேசத்தாருக்கும் கோத்திரத்தா
ருக்கும் பாஷைக்காரருக்கும் சனக்கூட்டத்தாருக்
கும் அறிவிக்கத்தக்கதாக நித்திய சுவிசேஷத்தை
உடையவனாய், வானத்தின் மத்தியிலே பறக்கக்
கண்டேன்.—7 அவன் மிகுந்த சத்தத்தோடே
கூப்பிட்டதாவது: பராபரன் நியாயத்தீர்ப்பைக்
கொடுக்கும் நேரம் வந்தபடியால், அவருக்குப்
பயந்து, அவருடைய மகிமையைப் பாராட்டுங்
கள்; வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தை
யும் நீரூற்றுகளையும் உண்டாக்கினவரையே தொ
ழுதுகொள்ளுங்கள் என்று கூப்பிட்டான்.
8 வேறொரு தூதன் பின்சென்று பெரிய பட்
டணமாகிய பாபிலோன் விழுந்துபோயிற்று;
விழுந்துபோயிற்று; அவள் தன் வேசித்தனமா
கிய உக்கிர இரசத்தைச் சகல தேசத்தாரும்
குடிக்கப்பண்ணினாளே என்றான்.
9 அவர்களுக்குப் பின்னே மூன்றாம் தூதன்
வந்து மிகுந்த சத்தத்தோடே சொன்னதாவது:
மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் நமஸ்கா
ரம்பண்ணி, தன் நெற்றியிலாவது தன் கையிலா
வது அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவன்
எவனோ,—10 அவன் பராபரனுடைய கோபாக்
கினையாகிய பாத்திரத்திலே கலப்பில்லாமல் வார்
க்கப்பட்ட அவருடைய உக்கிர இரசத்தைக்
குடித்துப் பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும்
ஆட்டுக்குட்டிக்குமுன்பாகவும் அக்கினியாலும்
கந்தகத்தாலும் வாதிக்கப்படுவான்.-11 அவர்கள்
படும் வாதையின் புகை என்றென்றைக்கும்
எழும்பும்; இப்படி மிருகத்தையும் அதின் சொ
ரூபத்தையும் நமஸ்காரம்பண்ணுகிறவர்களுக்கும்,
அதினுடைய நாமத்தின் அடையாளத்தைத் தரித்
துக்கொள்ளுகிறவனுக்கும் இரவும்பகலும் இளைப்
பாறுதல் இராது.
12 இங்கே பராபரனுடைய கற்பனைகளையும்

இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தையும் காத்துக்
கொள்ளுகிறவர்களாகிய பரிசுத்தவான்களுடைய
பொறுமை விளங்கும்.—13 பின்னும் இதுமுதல்
கர்த்தருக்குட்பட்டு மரிக்கிறவர்கள் பாக்கியவான்
களென்று எழுது என்று பரமண்டலத்திலிருந்து
சத்தம் உண்டாகக் கேட்டேன்; மெய்யாய்
அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டு ஒழிந்து
இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய கிரியைகள்
அவர்களுடனேகூடப் போகின்றன என்று, ஆவி
யானவரும் திருவுளம்பற்றுகிறார்.

14 பின்பு நான் பார்த்து, வெண்மையான
மேகத்தையும், அந்த மேகத்தின்மேலே மனித
குமாரனுக்கு ஒப்பானவனைத் தன்னுடைய சிர
சின்மேல் பொற்கிரீடத்தையும், தனது கையிலே
கருக்குள்ள அரிவாளையுமுடைய ஒருவன் உளுக்
காந்திருக்கிறதையும் கண்டேன்.—15 அப்பொ
ழுது வேறொரு தூதன் தேவாலயத்திலிருந்து
புறப்பட்டு, மேகத்தின்மேல் உளுக்காந்திருக்கி
றவனை நோக்கி, பூமியின் பயிர் பருவமானபடி
யால் அறுக்கிறதற்குக் காலம் வந்தது; ஆகையால்,
உம்முடைய அரிவாளை நீட்டி அறுத்துப்போடும்
என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.—
16 உடனே மேகத்தின்மேல் உளுக்காந்தவன்
தன்னுடைய அரிவாளைப் பூமியின்மேல் போட்
டான், பூமி அறுக்கப்பட்டது.

17 பின்பு வேறொரு தூதன் தானும் கருக்
குள்ள அரிவாளைப் பிடித்து, பரமண்டலத்திலுள்ள
தேவாலயத்திலிருந்து புறப்பட்டுவந்தான். —
18 பின்பு அக்கினியின்மேல் அதிகாரமுள்ள வே
றொரு தூதனும் பலிபீடத்திலிருந்து புறப்பட்டு
வந்து, கருக்குள்ள அரிவாளைப் பிடித்திருக்கிற
வனை நோக்கி, பூமியின் திராட்சங்கள் பழுத்தி
ருக்கிறபடியால் கருக்குள்ள உமது அரிவாளை
நீட்டி, அதின் குலைகளை அறுத்துப்போடும் என்று
மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.—19 அந்
தப்படி அந்தத் தூதன் தன் அரிவாளைப் பூமியிலே
போட்டு, பூமியின் திராட்சங்களை அறுத்து, பரா
பரனுடைய கோபத்தின் பெரிய திராட்சத் தொட்
டியிலே போட்டான். — 20 பட்டணத்திற்குப்
புறம்பே உள்ள அந்தத் திராட்சத்தொட்டியி
லே மிதிக்கப்பட்டது; அந்தத் திராட்சத்தொட்
டியிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதி தூரத்திற்கு
இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்
கள்மட்டும் வந்தது.

## ௰௫. அதிகாரம்.

பின்பு வானத்திலே பெரிதும் ஆச்சரியமு
மான வேறொரு அடையாளமாகிய ஏழு கடைசி
வாதைகளையுடைய ஏழு தூதரைக் கண்டேன்;
அவைகளால் பராபரனுடைய கோபம் முடிகிற
படியால் (அவைகளே கடைசி வாதைகள்).

2 அன்றியும், அக்கினி கலந்த பளிங்கான கட
லுக்கு ஒப்பானதையும், மிருகத்திற்கும் அதின்
சொரூபத்திற்கும் அதின் அடையாளத்திற்கும்
அதின் நாமத்தின் இலக்கத்திற்கும் உள்ளாகா
மல் செயங்கொண்டவர்கள் தேவ சுரமண்டலங்
களைப் பிடித்துக்கொண்டு பளிங்கான கடற்கரை
யிலே நிற்கிறதையும் கண்டேன்.—3 அவர்கள்
பராபரனுடைய ஊழியக்காரனாகிய மோசேயின்
பாட்டையும் ஆட்டுக்குட்டியின் பாட்டையும்
பாடுகிறார்கள்; எப்படியெனில், சருவவல்லமை
யுள்ள தேவனாகிய பராபரனே, தேவரீருடைய
கிரியைகள் பெருமையும் ஆச்சரியமுமானவை
கள்; உலகத்தாரின் இராசாவே, தேவரீருடைய
வழிகள் நீதியும், சத்தியமுமானவைகள்.—4 கர்த்
தாவே, யார் உமக்குப் பயப்படாமலும் உமது
நாமத்தைத் துதியாமலும் இருக்கலாம்; என்னத்
தினாலெனில், நீர் ஒருவரே பரிசுத்தமுள்ளவர்;
உலகத்தார் எல்லாரும் வந்து உமக்குமுன்பாக
நமஸ்காரம் செய்வார்கள்; உம்முடைய நியாயத்
தீர்ப்புகள் வெளியரங்கமாயின என்றார்கள்.

5 இவைகளுக்குப்பின்பு நான் கண்டதாவது:
பரமண்டலத்திலே சாட்சியையுடைய கூடார
மாகிய ஆலயம் திறக்கப்பட்டது.—6 அந்த ஆல
யத்திலிருந்து ஏழு வாதைகளுடைய அவ்வே
ழு தூதர்கள் சுத்தமும் பிரகாசமுமான புடவை
யைத் தரித்து, மார்புகளின் அருகே பொற்கச்சை
களைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். —
7 அல்லாமலும் அந்த நான்கு சீவன்களில் ஒன்று
என்றென்றைக்கும் பிழைக்கிற பராபரனுடைய
கோபாக்கினையால் நிறைந்த பொற்கலயங்கள்
ஏழையும் அவ்வேழு தூதர்களுக்கும் கொடுத்
தது.—8 அப்பொழுது தேவாலயமானது பராபர
னுடைய மகிமையாலும் அவருடைய வல்லமை
யாலும் பிறந்த புகையினாலே நிரப்பப்பட்டது;
(ஆதலால்,) ஏழு தூதர்களும் செய்யும் ஏழு வா
தைகளும் முடியும்வரைக்கும் ஒருவரும் தேவால
யத்திற்குள் பிரவேசிக்கக்கூடாததாய் இருந்தது.

## ௰௬. அதிகாரம்.

அப்பொழுது தேவாலயத்திலிருந்து உண்டா
ன பெரிய சத்தம் அந்த ஏழு தூதருடனே, நீங்
கள் போய், பராபரனுடைய கோபாக்கினையுள்ள
கலயங்களைப் பூமியின்மேல் ஊற்றுங்கள் என்று
சொல்லக் கேட்டேன்.

2 அந்தப்படி முதலாம் (தூதன்) போய், தன்
கலயத்திலுள்ளதைத் தரையின்மேல் ஊற்றினான்;
உடனே மிருகத்தின் அடையாளத்தை உடைய
வர்களும் அதின் சொரூபத்தைத் தொழுதுகொள்
ளுகிறவர்களுமாகிய மனிதர்களில் பொல்லாத
கொடிய பரு உண்டாயிற்று.

3 பின்பு இரண்டாம் தூதன் தன் கலயத்தி
லுள்ளதைச் சமுத்திரத்திலே ஊற்றினான்; உட
னே அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்

று; சமுத்திரத்திலுள்ள பிராணிகள் யாவும் செத்
துப்போயின.
4 பின்பு மூன்றும் தூதன் தன் கலயத்திலுள்
ளதை ஆறுகளிலும் நீரூற்றுக்களிலும் ஊற்றினன்;
உடனே அவைகள் இரத்தமாயின.—5 அப்பொ
ழுது சலங்களின் தூதனானவன், இருக்கிறவரும்
இருந்தவருமாகிய பரிசுத்தரே, தேவரீர் இப்படி
நியாயந்தீர்த்தால் நீதியுள்ளவராய் இருக்கிறீர்.—
6 அவர்கள் பரிசுத்தவான்களுடைய இரத்தத்தை
யும் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தையும் சிந்தி
னபடியினலே, இரத்தத்தையே அவர்களுக்குக்
குடிக்கக் கொடுத்தீர்; (அதற்குப்) பாத்திரராய்
இருக்கிறார்கள் என்று சொல்லக் கேட்டேன்.—
7 வேறொருவனும், சர்வவல்லமையுள்ள தேவ
னாகிய பராபரனே, மெய்யாய் உம்முடைய
நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமானவை
கள் என்று பலிபீடத்திலிருந்து சொல்லக் கேட்
டேன்.
8 பின்பு நான்காம் தூதன் தன் கலயத்திலுள்
ளதைச் சூரியன்மேலே ஊற்றினன்; தீயினல்
மனிதரைச் சுடும்படியாய் அவனுக்கு அதிகாரம்
அளிக்கப்பட்டது.—9 அந்தப்படியே மனிதர்கள்
மிகுந்த உஷ்ணத்தினலே சுடப்பட்டார்கள்;
(அப்படி இருந்தும்) பராபரனுடைய மகிமை
யைப் பாராட்ட, அவர்கள் மனந்திருப்பாமல்
அந்த வாதைகளைச் செய்ய அதிகாரமுள்ள அவரு
டைய நாமத்தைத் தூஷணித்தார்கள்.
10 பின்பு ஐந்தாம் தூதன் தன் கலயத்தி
லுள்ளதை மிருகத்தினுடைய ஆசனத்தின்மேல்
ஊற்றினன்; உடனே அதின் இராச்சியம் இருள்
அடைந்தது; அப்படியிருந்தும், அவர்கள் தங்கள்
கிரியைகளைவிட்டு மனந்திருப்பாமல் வருத்தத்தி
னலே தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டு,—
11 தங்கள் வருத்தங்களாலும் தங்கள் பருக்களா
லும் பரமண்டலத்தின் பராபரனைத் தூஷணித்
தார்கள்.
12 பின்பு ஆறும் தூதன் தன் கலயத்திலுள்
ளதை ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றின்மேல்
ஊற்றினன்; உடனே சூரிய உதயத் திக்கிலி
ருந்து வரும் இராசாக்களுக்கு வழி எத்தனமா
கும்படிக்கு, அந்த ஆற்றின் தண்ணீர் வற்றிப்
போயிற்று. — 13 அல்லாமலும் வல்ல சர்ப்பத்
தின் வாயிலும், மிருகத்தின் வாயிலும், கள்ளத்
தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளைகளுக்கு
ஒப்பான மூன்று அசுத்த ஆவிகள் புறப்படக்
கண்டேன்.—14 அவைகள் அடையாளங்களைச்
செய்கிற பிசாசுகளின் ஆவிகளாய் இருக்கின்றன;
பூமியில் எங்குமுள்ள இராசாக்களைச் சர்வவல்ல
மையுள்ள பராபரனுடைய பெரிதான நாளிலிருக்
கும் யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படிக்கு
அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப்போகின்றன.—
15 கேளுங்கள், நான் திருடனைப்போல வரு
கிறேன்; விழித்துக்கொண்டு தன் அவலட்ச
ணத்தை அவர்கள் காணத்தக்கதாக நிருவாண
மாய் நடவாதபடிக்கு, தன் வஸ்திரங்களைக் காக்
கிறவன் பாக்கியவான். — 16 எபிரேயு பாஷை
யிலே அருமகெத்தோன் என்னப்பட்ட இடத்
திலே அவர்களைக் கூட்டிக்கொண்டுபோனன்.
17 ஏழாம் தூதன் கலயத்திலுள்ளதை ஆகா
சத்தின்மேல் ஊற்றினன்; அப்பொழுது பரமண்
டலத்துத் தேவாலயத்திலுள்ள ஆசனத்திலிருந்து,
ஆயிற்று என்று சொன்ன பெரிய சத்தம் புறப்பட்
டது. — 18 அல்லாமலும் சத்தங்களும் இடிமு
ழக்கங்களும் மின்னல்களும் உண்டாயின; பூமி
மிகவும் அதிர்ந்தது; பூமியின்மேல் மனிதர்கள்
உண்டான நாள்முதற்கொண்டு தோன்றாத பெ
ரிய அதிர்தல் உண்டாயிருந்தது.—19 அப்பொ
ழுது மகா பட்டணம் மூன்று பங்காகப் பிரிக்கப்
பட்டது; உலகத்தாருடைய பட்டணங்கள்
விழுந்தன; பெரிய பாபிலோனுக்குப் பராபர
னுடைய உக்கிரமான கோபாக்கினியாகிய இரச
முள்ள பாத்திரத்தைக் கொடுக்கும்படிக்கு, அது
அவருக்குமுன்பாக நினைக்கப்பட்டது.—20 தீவு
யாவும் அகன்றுபோயின; பர்வதங்கள் காணப்
படாமல்போயின. — 21 தாலந்து நிறையான
பெரிய கல்மழையும் வானத்திலிருந்து மனிதர்
மேல் இறங்கிற்று; அப்படியிருந்தும் அந்தக் கல்
மழையினல் உண்டான வாதை மிகவும் கொ
டிதானபடியால், மனிதர்கள் அந்த வாதையின்
நிமித்தம் பராபரனைத் தூஷணித்தார்கள்

## ௧௭. அதிகாரம்.

பின்பு ஏழு கலயங்களுடைய அந்த ஏழு தூத
ரில் ஒருவன் வந்து என்னை நோக்கி, நீ வா, திர
ளான தண்ணீர்கள்மேல் உளுக்காந்தவளோடே,
பூமியின் இராசாக்கள் வேசித்தனம்பண்ணினர்
களே, அவளுடைய வேசித்தனமாகிய இரசத்
தால் பூமியின் குடிகளும் வெறியடைந்தார்க
ளே. — 2 அந்த மகா வேசிக்கு வருகிற ஆக்
கினையை உனக்குக் காண்பிக்கிறேன் என்று
சொல்லி, — 3 ஆவியில் என்னை வனந்தரத்திற்
குக் கொண்டுபோனன்; அப்பொழுது, தூஷண
மான நாமங்களால் நிறைந்த ஏழு தலைகளையும்
பத்துக் கொம்புகளையுமுடைய சிவப்புநிறமுள்ள
மிருகத்தின்மேல் ஒரு ஸ்திரி ஏறி இருக்கக் கண்
டேன்.—4 அந்த ஸ்திரி இரத்தாம்பரமும சிவப்
பான ஆடையும் தரித்து, பொன்னினலும் இரத்தி
னத்தாலும் முத்தக்களாலும் அலங்கரிக்கப்பட்டு,
தன் வேசித்தனமாகிய அருவருப்புகளாலும் அசுத்
தத்தாலும் நிறைந்த பொற்பாத்திரத்தைத் தன்
கையிலே பிடித்திருந்தாள். — 5 மேலும் இரக
சியம் என்றும், பூமியிலுள்ள அருவருப்புகளுக்
கும் வேசிகளுக்கும் தாயாகிய மகா பாபிலோன்
என்றும், அவளுடைய நெற்றியிலே நாமம் எழுதி

யிருந்தது.—6 மேலும் அந்த ஸ்திரி பரிசுத்தவான்
களின் இரத்தத்தாலும் இயேசுவினுடைய சாட்சி
களின் இரத்தத்தாலும் வெறிகொண்டிருக்கிற
தைக் கண்டேன்; அவளை நான் கண்டு மிகவும்
ஆச்சரியப்பட்டேன்.
7 அப்பொழுது தூதனானவன் என்னை நோ
க்கி, என்னத்தினாலே ஆச்சரியப்படுகிறாய்; இந்த
ஸ்திரியின் இரகசியத்தையும் இவளைச் சுமக்கிற
ஏழு தலைகளையும் பத்துக் கொம்புகளையுமுடைய
மிருகத்தின் இரகசியத்தையும் உனக்குச் சொல்
லுகிறேன்.
8 நீ கண்ட மிருகம் (முன்னே) இருந்தது;
(இப்பொழுது) அது இல்லை; (இனிமேல்) அது
பாதாளத்திலிருந்து திரும்ப ஏறிவந்து அழிவுக்குப்
போம்; அன்றியும் லோகத்தோற்றமுதல் சீவ
புத்தகத்திலே பேர் எழுதப்படாத பூமியின் குடி
கள், முன்னிருந்ததுமாய் (இப்பொழுது) இரா
ததுமாய் (இனி) இருப்பதுமாயிருக்கிற மிருகத்
தைப்பார்த்து ஆச்சரியப்படுவார்கள்; ஞானமுள்ள
புத்தி இங்கே விளங்கும்.
9 அந்த ஏழுதலைகளும் ஏழுமலைகளே; அவை
களின்மேல் ஸ்திரி உளுக்காந்திருக்கிறாள். —
10 அவைகள் ஏழு இராசாக்களாயும் இருக்கின்
றன; (இவர்களில் ஐந்துபேர் விழுந்தார்கள்;)
ஒருவன் இருக்கிறான்; மற்றவன் இதுவரைக்கும்
வரவில்லை; வரும்பொழுது அவன் கொஞ்சக்
காலம் தரித்திருக்கவேண்டும்.—11 இருந்ததும்,
(இப்பொழுது) இராததுமாகிய மிருகமே எட்
டாவதுமாய், அவ்வேழில் ஒன்றுமாய் இருந்து,
அழிவுக்குப் போகின்றது.
12 அன்றியும், நீ கண்ட பத்துக்கொம்புக
ளும் பத்து இராசாக்களே; அவர்கள் இதுவரை
யிலும் இராசரீகம் பெறவில்லை, அவர்கள் மிருகத்
துடனேகூட ஒருமணிநேரமளவும் இராசாக்கள்
போல அதிகாரம் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.
13 அவர்கள் ஏக யோசனையையுடையவர்
கள்; மேலும் அவர்கள் தங்கள் வல்லமையையும்
அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுக்கிறார்
கள். — 14 அவர்களே ஆட்டுக்குட்டியுடனே
யுத்தம்பண்ணுவார்கள்; ஆட்டுக்குட்டி கர்த்தாதி
கர்த்தாவுமாய் இராசாதி இராசாவுமாய் இருக்கிற
படியால் அவர்களைச் செயிக்கும்; அதினோடே
கூட இருக்கிறவர்களாகிய அழைக்கப்பட்டவர்
களுமாய்த் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுமாய்
உண்மையுள்ளவர்களுமாய் இருக்கிறவர்களும்
(அவர்களைச் செயிப்பார்கள்) என்றான்.
15 பின்னும் அவன் என்னுடனே சொன்ன
தாவது: அந்த வேசி உளுக்காந்திருக்கிற தண்
ணீர்களைக் கண்டாயே; அவைகள் சனங்களையும்,
கூட்டங்களையும், தேசத்தாரையும், பாஷைக்கார
ரையும் குறிக்கின்றன.—16 அன்றியும் நீ கண்ட
பத்துக்கொம்புகளும் அந்த மிருகமுமானவர்கள்,
அந்த வேசியைப் பகைத்து, அவளைப் பாழும்
நிருவாணமுமாக்கி, அவளுடைய மாம்சத்தைத்
தின்று அவளை நெருப்பினால் சுட்டெரித்துப்
போடுவார்கள். — 17 என்னத்தினாலெனில்,
பராபரன் தமது யோசனையை அவர்கள் செய்
கிறதற்கும், ஏக யோசனையாய்ச் செய்கிறதற்கும்,
பராபரனுடைய வார்த்தைகள் நிறைவேறுமளவும்
தங்கள் இராசரீகத்தை மிருகத்திற்குக் கொடுக்கி
றதற்கும் அவருடைய இருதயங்களில் (யோசனை
யைக்) கொடுத்தார்.
18 அன்றியும் நீ கண்ட ஸ்திரியானவள் பூமி
யின் இராசாக்களின்மேல் இராசரீகத்தைச் செலுத்
துகிற மகா பட்டணமேயாம் என்றான்.

## ௧௮. அதிகாரம்.

இவைகளுக்குப்பின்பு மிகுந்த அதிகாரமுள்ள
வேறொரு தூதனை வானத்திலிருந்து இறங்கக்
கண்டேன்; அவனுடைய மகிமையினாலே பூமி
பிரகாசமாக்கப்பட்டது. — 2 அவன் பலத்த சத்
தத்தோடே கூப்பிட்டதாவது: மகா பாபிலோன்
விழுந்தது, விழுந்தது; அது பிசாசுகளின் குடி
யிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளுடைய கா
வலும், அசுத்தமும் அருவருப்புமுள்ள சகலவித
பறவைகளுடைய காவலும் ஆயிற்று.—3 அதினு
டைய வேசித்தனத்தின் உக்கிரமான இரசத்தை
எல்லாத் தேசத்தாரும் குடித்தும், பூமியின் இரா
சாக்கள் அதினோடே வேசித்தனம்பண்ணியும்,
பூமியின் வியாபாரிகள் அதினுடைய மோகவிகா
ரத்தின் வலுமையினால் ஐசுவரியவான்களாகியும்
இருக்கிறபடியினாலே அப்படி ஆயிற்று என்
றான்.
4 பின்பு வேறொரு சத்தம் வானத்திலிருந்து
உண்டாகக் கேட்டேன்; அதென்னவென்றால்,
என்னுடைய சனங்களே, அவளுடைய பாவங்
கள் வானபரியந்தம் தொடர்ந்தபடியினாலும், அவ
ளுடைய அநியாயங்களைப் பராபரன் நினைத்துக்
கொண்டிருக்கிறபடியினாலும்,-5 நீங்கள் அவளு
டைய பாவங்களுக்கு ஐக்கமாகாமலும் அவளு
டைய வாதைகளில் பங்குபெறாமலும் இருக்கும்
படிக்கு, அவளிடத்திலிருந்து புறப்படுங்கள்.—
6 அவள் உங்களுக்குப் பதில்செய்ததுபோல,
நீங்களும் அவளுக்குப் பதில்செய்து, அவளு
டைய கிரியைகளின்படி அவளுக்கு இரட்டிப்
பாகக் கொடுத்துத் தீருங்கள்; அவள் கலந்து
கொடுத்த பாத்திரத்திலே இரட்டிப்பாக அவ
ளுக்குக் கலந்துகொடுங்கள்.—7 அவள் தன்னை
மகிமைப்படுத்தி மோகவிகாரங்கொண்டது எவ்
வளவோ அவ்வளவாய் வாதையையும் துக்கத்
தையும் அவளுக்கு இடுங்கள்; தான் இராசஸ்தி
ரியாய் உளுக்காந்திருக்கிறவள் என்றும் தான்
கைம்பெண் அல்லவென்றும் தான் துக்கத்தைக்
காண்பதில்லை என்றும் அவள் தன் இருதயத்தி

லே எண்ணிக்கொள்ளுகிறபடியால்,—8 ஒரே
நாளிலே அவளுக்கு வாதைகளாகிய சாவும் துக்
கமும் பஞ்சமும் வரும்; அவள் அக்கினியினாலே
சுட்டெரிக்கப்படுவாள்; அவளுக்கு நியாயத்தீர்ப்
புக்கொடுக்கும் தேவனாகிய பராபரன் பலமுள்ள
வராய் இருக்கிறாரே.
9 அவளுடனே வேசித்தனம்பண்ணி மோக
விகாரத்தோடே வாழ்ந்த பூமியின் இராசாக்க
ளும், அவள் வேகிறதினால் உண்டான புகை
யைக் காணும்பொழுது,—10 அவளுக்கு உண்
டான வாதையினாலே பயந்து தூரத்திலே நின்று,
ஐயையோ, மகா பட்டணமாகிய பாபிலோனே,
வல்ல பட்டணமே, ஒரே மணிநேரத்தில்
உனக்கு ஆக்கினை வந்ததே என்று அவளைக்கு
றித்து அழுது புலம்புவார்கள்.
11 பூமியின் வியாபாரிகளும் தங்கள் வியாபார
பதார்த்தங்களாகிய பொன்னையும், வெள்ளியை
யும், இரத்தினங்களையும், முத்துக்களையும், மெல்
லிதான புடவையையும், இரத்தாம்பரத்தையும்,
பட்டையும், சிவப்பாடையையும்; — 12 சகல
வித வாசனைக்கட்டைகளையும், தந்தத்தினால் செய்
திருக்கிற சகலவித பதார்த்தங்களையும், விலை
உயர்ந்த மரத்தாலும் வெண்கலத்தாலும் இரும்பி
னாலும் வெண்கற்களாலும் செய்திருக்கிற சகல
வித பதார்த்தங்களையும்,—13 இலவங்கப்பட்டை
யையும், கந்தவருக்கங்களையும், தைலத்தையும்,
தூபவருக்கத்தையும், திராட்ச இரசத்தையும்,
எண்ணெயையும், மெல்லிய மாவையும், கோது
மையையும், சுமை சுமக்கிற மிருகங்களையும், ஆடு
களையும், குதிரைகளையும், இரதங்களையும், மனிதரு
டைய ஆத்துமாக்களையும், சரீரங்களையும், இனிக்
கொள்வார் இல்லாதபடியால், அவளைக்குறித்து
அழுதுகொண்டு புலம்புவார்கள்.—14 உன் ஆத்
துமா இச்சித்த மாரிகாலத்தின் பலன்கள் உன்னை
விட்டு நீங்கிப்போயின; சுவைக்கு இனிமையா
னவைகள், சிறப்பானவைகள், இவை எல்லாம்
உன்னைவிட்டுப்போயின; நீ அவைகளை இனிக்
காண்பதில்லை. — 15 இப்படிப்பட்டவைகளை
வியாபாரம்பண்ணி இவளால் ஐசுவரியவான்க
ளானவர்கள் தூரமாய் நின்று, அவளுக்கு வந்த
வாதையினாலே பயந்து,—16 ஐயையோ, மெல்
லிய புடவையும் இரத்தாம்பரமும் சிவப்பாடை
யும் தரித்து, பொன்னினாலும் இரத்தினத்தினா
லும் முத்துக்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்த
மகா பட்டணமே, ஒரே மணிநேரத்தில் இவ்வ
ளவு ஐசுவரியமும் அழிந்துபோயிற்றே என்று
அழுது துக்கிப்பார்கள்.
17 மாலுமிகள் யாவரும் கப்பல்கள்மேல்
ஏறிப்போகிற யாவரும், கப்பலாட்களும், சமுத்தி
ரத்திலே தொழில் செய்கிற யாவரும் தூரத்தி
லே நின்று, — 18 அவள் வேகிறதினால் உண்
டான புகையைப் பார்த்து, இந்த மகா பட்ட
ணத்திற்கு ஒப்பாயிருந்த பட்டணம் எது என்று
சத்தமிட்டு, — 19 தங்கள் தலைகள்மேல் புழுதி
யைப் போட்டுக்கொண்டு, ஐயையோ, மகா
பட்டணமே, சமுத்திரத்திலே கப்பல்களையு
டைய அனைவரும் இதின் உச்சிதமான சம்பூர
ணத்தினாலே ஐசுவரியவான்களானார்கள்; ஒரே
மணிநேரத்தில் இது பாழாய்ப்போயிற்றே என்று
அழுது துக்கித்துக் கூப்பிட்டார்கள்.
20 வானமே, பரிசுத்தவான்களே, அப்போஸ்
தலரே, தீர்க்கதரிசிகளே, உங்களுக்காகப் பரா
பரன் அவளிடத்தில் நியாயாக்கினையைச் செ
லுத்தினபடியினாலே, அவளைக்குறித்துக் களிகூ
ருங்கள் என்றான்.
21 அப்பொழுது பலமுள்ள தூதன் ஒருவன்
பெரிய எந்திரக்கல்லைப்போலொத்த ஒரு கல்லை
எடுத்துச் சமுத்திரத்திலே எறிந்து சொன்னதா
வது: இப்படியே மகா பட்டணமாகிய பாபி
லோன் வேகமாய்த் தள்ளுண்டு, இனிக் காணப
படாமல் போம். — 22 சுரமண்டலக்காரரும்,
கீதவாத்தியக்காரரும், நாகசுரக்காரரும், எக்கா
ளக்காரருமானவர்களுடைய சத்தம் இனி உன்னி
டத்திலே கேட்கப்படுவதுமில்லை; எந்தத் தொ
ழிலாளியும் இனி உன்னிடத்தில் காணப்படுவது
மில்லை, எந்திரத்தின் சத்தம் இனி உன்னிடத்
தில் கேட்கப்படுவதுமில்லை.—23 விளக்கு வெ
ளிச்சம் இனி உன்னிடத்தில் பிரகாசிப்பது
மில்லை; மணவாளனும் மனையாட்டியுமானவர்க
ளுடைய சத்தம் இனி உன்னிடத்திலே கேட்
கப்படுவதுமில்லை; உன் வியாபாரிகள் பூமியில்
பெரியோர்களானபடியினாலும் உன் சூனியத்தால்
எல்லாத் தேசத்தாரும் வஞ்சிக்கப்பட்டபடியினா
லும் (அப்படியே ஆம்). — 24 தீர்க்கதரிசிகளு
டைய இரத்தமும் பரிசுத்தவான்களுடைய இரத்
தமும் பூமியின்மேல் கொல்லப்பட்ட அனைவரு
டைய இரத்தமும் அதினிடத்திலே காணப்பட்
டது என்றான்.

## ௰௯. அதிகாரம்.

இவைகளுக்குப்பின்பு, பரமண்டலத்திலே திர
ளான கூட்டம் இடுகிற சத்தம்போன்ற ஒரு
சத்தத்தைக் கேட்டேன்; என்னவென்றால்,—
2 தன் வேசித்தனத்தினாலே பூமியைக் கெடுத்த
பெரிய வேசிக்கு நம்முடைய பராபரன் நியாயத்
தீர்ப்புக்கொடுத்து, தம்முடைய ஊழியக்காரரின்
இரத்தத்திற்காக அவளிடத்தில் பழியை வாங்கின
தினாலே அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்திய
மும் நீதியுமுள்ளவைகளாகையால், அல்லேலூ
யா, இரட்சண்ணியமும் மகிமையும் கனமும்
வல்லமையும் அவருக்கு உண்டாயிருக்கின்றன
என்பதே.—3 மறுபடியும் அல்லேலூயா, அவளு
டைய புகை என்றென்றைக்கும் எழும்பும் என்
றார்கள்.—4 அல்லாமலும் இருபத்துநான்கு மூப்

பரும் நான்கு ஜீவன்களும் (வணக்கமாய்) விழுந்
து, ஆமென் அல்லேலூயா என்று சொல்லி, ஆச
னத்தின்மேல் உளுக்காந்த பராபரனைத் தொழுது
கொண்டார்கள்.—5 மேலும் நம்முடைய பரா
பரனுடைய ஊழியக்காரரே, அவருக்குப் பயப்
படுகிற சிறியோரும் பெரியோருமானவர்களே,
நீங்கள் யாவரும் அவரைத் துதியுங்கள் என்று
ஒரு சத்தம் ஆசனத்திலிருந்து புறப்பட்டது.
6 அப்பொழுது திரளான சனங்களுடைய
சத்தம்போலவும், பெருவெள்ள இரைச்சல்போல
வும், பலத்த இடிமுழக்கம்போலவும் ஒரு சத்தம்
உண்டாகக் கேட்டேன்; என்னவென்றால், சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய பராபரன் இராசரீ
கம்பண்ணுகிறார்; ஆகையால் அல்லேலூயா.—
7 ஆட்டுக்குட்டியினுடைய கலியாணம் வந்தது;
அவருடைய மனைவி தன்னை எத்தனம்பண்ணி
னாள்; சுத்தமும் பிரகாசமுமான மெல்லிய புட
வையைத் தரித்துக்கொள்ளும்படி அவளுக்கு
அளிக்கப்பட்டது, ஆகையால், நாம் சந்தோஷப்
பட்டுக் களிகூர்ந்து, அவருக்குத் துதியைச் செ
லுத்தக்கடவோம் என்பதே.—8 மெல்லிய புட
வை பரிசுத்தவான்களுடைய நீதிகளே.—9 பின்
னும் அவன் என்னுடனே சொன்னது: ஆட்டுக்
குட்டியின் கலியாண விருந்துக்கு அழைக்கப்
பட்டவர்கள் பாக்கியவான்கள் என்று எழுதென்
றான்; பின்னும் இவைகள் பராபரனுடைய சத்தி
யமான வார்த்தைகளாய் இருக்கின்றன என்று
என்னுடனே சொன்னான். — 10 அப்பொழுது
அவனைத் தொழுதுகொள்ளும்படி அவனுடைய
பாதங்கள் முன்பாக விழுந்தேன்; அவன் என்னு
டனே சொன்னது: இப்படிச் செய்யாதபடிக்குப்
பார்; நான் உன்னோடும் இயேசுவின் சாட்சியை
யுடைய உன் சகோதரரோடுங்கூட ஊழியக்கார
னாய் இருக்கிறேன்; பராபரனைத் தொழுதுகொள்,
இயேசுவின் சாட்சி தீர்க்கதரிசனத்தின் ஆவி
யாய் இருக்கிறதே என்றான்.
11 பின்பு நான் வானம் திறந்திருக்கக் கண்
டேன்; உடனே இதோ, ஒரு வெண்குதிரை
தோன்றிற்று. அதின்மேல் இருந்தவர் உண்மை
யும் சத்தியமுமுள்ளவர் என்னப்பட்டிருக்கிறார்;
அவர் நீதியாய்த் தீர்ப்புக்கொடுத்து, யுத்தம்பண்
ணுகிறார்.—12 அவருடைய கண்கள் அக்கினிச்
சுவாலையைப்போல இருந்தன; அவருடைய சிர
சின்மேல் அநேக முடிகளும் இருந்தன; அவ
ருக்கேயன்றி வேறொருவனுக்கும் தெரியாத ஒரு
நாமம் எழுதியிருந்தது.–13 இரத்தத்தில் தோய்க்
கப்பட்ட வஸ்திரத்தை உடுத்தியிருந்தார்; அவரு
டைய நாமமே பராபரனுடைய வார்த்தை என்
னப்பட்டது.—14 பரமண்டலத்திலுள்ள சேனை
கள் வெண்மையும் சுத்தமுமான மெல்லிய புட
வையைத் தரித்துக்கொண்டவர்களாய் வெண்கு
திரைகள்மேலிருந்து அவருக்குப் பின்சென்றார்
கள்.—15 உலகத்தாரை வெட்டும்படிக்கு, அவ
ருடைய வாயிலிருந்து கூர்மையான கட்கம் புறப்
படுகின்றது; இருப்புகோலால் அவர்களை ஆளு
கைசெய்வார்; அவர் சர்வவல்லமையுள்ள பரா
பரனுடைய உக்கிர கோபமாகிய இரசமுள்ள
திராட்சத்தொட்டியில் மிதிக்கிறார்.— 16 இரா
சாதி இராசாவும், கர்த்தாதி கர்த்தாவுமானவர் என்
னும் நாமம் அவருடைய வஸ்திரத்தின்மேலும்
தொடையின்மேலும் எழுதப்பட்டிருந்தது.
17 பின்பு சூரியனிடத்தில் ஒரு தூதன் நிற்
கக் கண்டேன்; அவன் வானத்தின் மத்தியில்
பறக்கிற சகல பறவைகளையும் நோக்கி,–18 நீங்
கள் இராசாக்களுடைய மாம்சத்தையும், சேனைத்
தலைவருடைய மாம்சத்தையும், பலவான்களுடை
ய மாம்சத்தையும், குதிரைகளுடைய மாம்சத்தை
யும், அவைகளின்மேல் இருக்கிறவர்களுடைய
மாம்சத்தையும், சுயாதீனர் அடிமைகள் சிறியோர்
பெரியோர் இவர்கள் எல்லாருடைய மாம்சத்தை
யும் தின்னும்படிக்கு மகா பராபரனுடைய விருந்
திற்குக் கூடிவாருங்கள் என்று மிகுந்த சத்தத்
தோடே கூப்பிட்டான்.
19 பின்பு அம்மிருகமும் பூமியின் இராசாக்க
ளும், அவர்களுடைய சேனைகளும், அந்தக் குதி
ரையின்மேல் இருக்கிறவரோடும் அவருடைய
சேனையோடும் யுத்தம்பண்ணும்படிக்குக் கூடிக்
கொண்டிருக்கக் கண்டேன்.–20 அப்பொழுது
அம்மிருகமும், அதின்முன்பாகச் செய்த அடை
யாளங்களால் மிருகத்தின் அடையாளத்தைத்
தரித்தவர்களையும் அதின் சொரூபத்தைத் தொழு
துகொண்டவர்களையும் வஞ்சித்த கள்ளத்தீர்க்க
தரிசியுங்கூடப் பிடிக்கப்பட்டு, இருவரும் உயி
ரோடே கந்தகம் எரிகிற அக்கினிக்கடலிலே
தள்ளப்பட்டார்கள். – 21 மற்றவர்களும் குதிரை
யின்மேல் இருக்கிறவருடைய வாயிலிருந்து புறப்
படுகிற கட்கத்தால் கொலைசெய்யப்பட்டார்கள்;
பறவைகள் யாவும் அவர்களுடைய மாம்சத்தினா
லே திருத்தி அடைந்தன.

## ௨௰. அதிகாரம்.

அன்றியும், ஒரு தூதன் பாதாளத்தின் திறவு
கோலையும், பெரிய சங்கிலியையும் தன் கையி
லே பிடித்துக்கொண்டு வானத்திலிருந்து இறங்
கக் கண்டேன்.—2 அவன் பிசாசென்றும் சாத்தா
னென்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய
வல்ல சருப்பத்தைப் பிடித்து, அதை ஆயிரம்
வருஷமளவும் கட்டி, பாதாளத்திலே தள்ளி அ
டைத்து, அதின்மேல் முத்திரைபோட்டான்.–
3 அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்வரைக்
கும் அது உலகத்தாரை வஞ்சனைசெய்யாதபடிக்
கே (அப்படிச் செய்தான்); அவற்றிற்குப்பின்பு
அது கொஞ்சக்காலம் விடுதலையாகவேண்டும்.
4 அன்றியும் நான் ஆசனங்களைக் கண்டேன்;

அவைகளின்மேல் உளுக்காந்தார்கள்; நியாயத்
தீர்ப்புக் கொடுக்கும்படி அவர்களுக்கு அளிக்கப்
பட்டது; இயேசுவினுடைய சாட்சியின்நிமித்த
மும், பராபரனுடைய வசனத்தின்நிமித்தமும் சி
ரச்சேதம்பண்ணப்பட்டவர்களுடைய ஆத்து
மாக்களையும் மிருகத்தையாவது அதின் சொரூபத்
தையாவது தொழுதுகொள்ளாமலும், தங்கள்
நெற்றியிலும், தங்கள் கையிலும் அதின் அடை
யாளத்தைத் தரித்துக்கொள்ளாமலும் இருந்தவர்
களையும் (கண்டேன்); அவர்கள் உயிரடைந்து
கிறிஸ்துவுடனேகூட ஆயிரம்வருஷம் இராச
ரீகம் பண்ணினார்கள். — 5 மரித்த மற்றவர்கள்
ஆயிரம் வருஷம் நிறைவேறுமளவும் உயிரடைய
வில்லை; இது முதலாவது உயிரோடெழுந்திருக்
குதல். — 6 முதலாவது உயிரோடெழுந்திருக்
குதலுக்குப் பங்குள்ளவன் பாக்கியவானுமாய்ப்
பரிசுத்தனுமாய் இருக்கிறான்; அவர்கள்மேல்
இரண்டாம் மரணம் அதிகாரத்தை உடைய
தல்ல; அவர்கள் பராபரனுக்கும் கிறிஸ்துவுக்கும்
முன்பாக ஆசாரியராயிருந்து, அவரோடேகூட
ஆயிரம்வருஷம் இராசரீகம்பண்ணுவார்கள்.

7 அந்த ஆயிரம்வருஷம் நிறைவேறும்பொ
ழுது, சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலை
யாகி, — 8 பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள
தேசத்தாராகிய கோகையும் மாகோகையும் வஞ்
சிக்கும்படியாகவும், அவர்களை யுத்தத்திற்குக்
கூட்டிக்கொள்ளும்படியாகவும் புறப்படுவான்;
அவர்களுடைய இலக்கம் கடற்கரை மணல்
அவ்வளவாய் இருக்கும். — 9 அவர்கள் பூமியி
னுடைய விசாலத்தின்மேல் ஏறிவந்து, பரிசுத்த
வான்களுடைய பாளயத்தையும் பிரியமான பட்
டணத்தையும் வளைந்துகொண்டார்கள்; அப்
பொழுது பராபரனால் வானத்திலிருந்து அக்
கினி இறங்கி, அவர்களைப் பட்சித்துவிட்டது.—
10 மேலும் அவர்களை வஞ்சித்த பிசாசானவன்
மிருகமும் கள்ளத்தீர்க்கதரிசியும் இருக்கிற அக்கி
னியும் கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்டான்;
(அங்கே) அவர்கள் என்றென்றைக்கும் இரவும்
பகலும் வாதிக்கப்படுவார்கள்.

11 பின்பு நான் பெரிய வெள்ளை ஆசனத்தை
யும் அதின்மேல் உளுக்காந்தவரையும் கண்
டேன்; அவருடைய சமுகப்பார்வையால் பூமி
யும் வானமும் விலகி ஓடிப்போயின; அவைக
ளுக்கு இடம் காணப்படவில்லை.–12 அன்றியும்
மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும்
ஆசனத்திற்குமுன்பாக நிற்கக் கண்டேன்; அப்
பொழுது புத்தகங்கள் விரிக்கப்பட்டன, சீவனுக்கு
ஏதுவான வேறொரு புத்தகமும் விரிக்கப்பட்டது;
அப்பொழுது மரித்தோர்கள் தங்கள் தங்கள் கிரி
யைகளுக்குத்தக்கவிதமாகப் புத்தகங்களில் எழுத
ப்பட்டவைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடை
ந்தார்கள்.–13 சமுத்திரம் தன்னிலுள்ள மரித்தோ
ரைத் தந்தது; மரணமும் மரித்தோர் ஸ்தலமும்
தங்களிலுள்ள மரித்தோரைத் தந்தன; யாவரும்
தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்
ப்பு அடைந்தார்கள். — 14 பின்பு மரணமும்
மரித்தோர் ஸ்தலமும் அக்கினிக்கடலிலே தள்
ளப்பட்டன; அதுவே இரண்டாம் மரணமாம்.–
15 சீவனுக்கு ஏதுவான புத்தகத்திலே எழுதப்
பட்டவனாகக் காணப்படாதவன் அக்கினிக்கட
லிலே தள்ளப்பட்டான்.

## ௨௧. அதிகாரம்.

அன்றியும், முந்தின வானமும் முந்தின பூமியும்
ஒழிந்துபோயிற்றே; சமுத்திரமும் இல்லாமல்
போயிற்றே; பின்பு நான் புதிய வானத்தையும்
புதிய பூமியையும் கண்டேன்.—2 அல்லாமலும்
புதிய எருசலேமாகிய பரிசுத்த பட்டணத்தைப்
பராபரனால் பரமண்டலத்திலிருந்து இறங்கக்
கண்டேன்; அது தன் புருஷனுக்காக அலங்கார
மாக்கப்பட்ட மணவாட்டியைப்போல எத்தன
மாக்கப்பட்டிருந்தது.—3 மேலும் பரமண்டலத்
திலிருந்து உண்டான ஒரு பெரிய சத்தத்தைக்
கேட்டேன்; அது என்னவென்றால், பாருங்கள்,
மனிதர்களிடத்திலே பராபரனுடைய கூடாரம்
இருக்கிறது. அவர்களிடத்திலே அவர் வாசமாய்
இருப்பார்; அவர்களும் அவருடைய சனங்களாய்
இருப்பார்கள்; பராபரன்தாமே அவர்களோடே
கூட இருந்து அவர்களுக்குத் தேவனாயிருப்பார்.–
4 அவர்களுடைய கண்ணீர் யாவையும் பராபரன்
துடைப்பார்; முந்தினவைகள் போனபடியினா
லே இனி மரணமுமில்லை; துக்கமுமில்லை; அல
றுதலுமில்லை; வருத்தமுமில்லை என்பதே.

5 அன்றியும் ஆசனத்தின்மேல் உளுக்காந்த
வர் சொன்னது: பாருங்கள், நான் சகலத்தையும்
புதிதாக்குகிறேன் என்றார்; பின்னும் அவர் என்
னுடனே சொன்னது: இந்த வசனங்கள் சத்திய
மும் உண்மையுமானவைகள்; ஆகையால், (அ
வைகளை) எழுது என்றார்.–6 பின்னும் அவர் என்
னுடனே சொன்னதாவது: ஆயிற்று, நான் அல்பா
வும் ஓமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் இருக்
கிறேன்; தாகமாயிருக்கிறவனுக்கு நான் சீவநீரூற்
றில் (தண்ணீரைக்) கைமாறில்லாமல் கொடுப்
பேன்.—7 செயங்கொள்ளுகிறவன் இவைகளைச்
சுதந்தரித்துக்கொள்வான்; நான் அவனுக்குத் தே
வனாயிருப்பேன்.—8 அவன் எனக்குக் குமாரனா
யிருப்பான்; பயப்படுகிறவர்களும் அவிசுவாசிக
ளும், அருவருக்கப்படத்தக்கவர்களும், கொலைபா
தகரும், வேசிமார்க்கரும், சூனியக்காரரும், விக்
கிரக ஆராதனைக்காரரும், சகலவிதமான பொய்ய
ருமானவர்கள் இரண்டாம் மரணமாகிய அக்கி
னியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கை அ
டைவார்கள் என்றார்.

9 பின்பு ஏழு கடைசிவாதைகளால் நிறைந்த

ஏழு கலயங்களையுடைய அந்த ஏழு தூதரில் ஒரு
வன் என்னிடத்தில் வந்து, ஆட்டுக்குட்டியினு
டைய மனையாட்டியாகிய ஸ்திரீயை உனக்குக்
காண்பிக்கிறேன் வாவென்று என்னுடனே
சொல்லி,—10 பெரிதும் உயரமுமான ஒரு பர்
வதத்தின்மேல் என்னை ஆவிக்குள் கொண்டு
போய்ப் பராபரனால் பரமண்டலத்திலிருந்து
இறங்கினதும், பராபரனுடைய மகிமையை
அடைந்திருக்கிறதுமான எருசலேம் என்னும் பரி
சுத்தபட்டணத்தை எனக்குக் காண்பித்தான்.—
11 அதின் ஒளி அருமையான இரத்தினக்கல்
லைப்போலவும் பளிங்கொளியுள்ள ரவாக்கல்லைப்
போலவும் இருந்தது.—12 அது பெரிதும், உயர
முமான மதிலையும், பன்னிரண்டு வாசல்களையும்,
அந்த வாசல்கள்மேலே பன்னிரண்டு தூதரையும்
உடையதாய் இருந்தது; (அவைகளின்மேலே)
இஸ்ரவேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்
திரத்தாருடைய நாமங்கள் எழுதப்பட்டிருந்
தன.—13 கிழக்கே மூன்று வாசல்களும், வடக்
கே மூன்று வாசல்களும், தெற்கே மூன்று வாசல்
களும், மேற்கே மூன்று வாசல்களும் உண்டாயி
ருந்தன.—14 அன்றியும் பட்டணத்தின் மதில்
பன்னிரண்டு அஸ்திபாரங்களும் உடையதாய்
இருந்தது; அவைகளில் ஆட்டுக்குட்டியின் பன்
னிரண்டு அப்போஸ்தலருடைய பன்னிரண்டு
நாமங்களும் இருந்தன.—15 அல்லாமலும், என்
னுடனே பேசினவன் பட்டணத்தையும், அதின்
வாசல்களையும், அதின் மதிலையும், அளக்கிறதற்
குப் பொன் கோலைப் பிடித்திருந்தான்.—
16 மேலும் அந்தப் பட்டணம் சதுரமாய் இருக்
கின்றது; அதின் அகலம் எவ்வளவோ அவ்வள
வாய் நீளமும் இருக்கிறது; அவன் அந்தக் கோ
லினாலே பட்டணத்தை அளந்தான்; பன்னீரா
யிரம் ஸ்தாதியாய் இருந்தது; அதின் நீளமும்
அகலமும் உயரமும் சமமாயிருக்கின்றன.—
17 தூதனுக்கு இருந்த மனித அளவின்படியே
அவன் அதின் மதிலை அளந்தபொழுது, நூற்று
நாற்பத்துநான்கு முழமாயிருந்தது.—18 மேலும்
அதின் மதில் ரவாக்கல்லால் கட்டப்பட்டிருந்
தது; பட்டணம் சுத்தப் பளிங்குக்கு ஒப்பாகிய
சுத்தப் பொன்னாயிருந்தது.—19 அன்றியும் பட்
டண மதில்களின் அஸ்திபாரங்கள் சகலவித
இரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்
தன; (அவையாவன:) முதலாம் அஸ்திபாரக்கல்
ரவாக்கல், இரண்டாவது நீலக்கல், மூன்றாவது
வயிரம், நான்காவது மரகதம்,—20 ஐந்தாவது
கோமேதகம், ஆறாவது சிவப்பு, ஏழாவது அக்
கிக்கல், எட்டாவது படிகப்பச்சை, ஒன்பதாவது
புட்பராகம், பத்தாவது வயிரேயம், பதினோரா
வது பதுமராகம், பன்னிரண்டாவது சுகந்திக்கல்
இவைகளே.—21 மேலும் பன்னிரண்டு வாசல்
களும் பன்னிரண்டு முத்துக்களாயிருந்தன; வா
சல்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு முத்தாயிருந்
தது. மேலும் பட்டணத்தின் வீதி தெளிவுள்ள
கண்ணாடியைப்போலச் சுத்தப் பொன்னாயிருந்
தது.—22 தேவாலயத்தை நான் அதிலே காண
வில்லை; சர்வவல்லமையுள்ள தேவனாகிய பரா
பரனும் ஆட்டுக்குட்டியுமே அதின் ஆலயம்.—
23 பட்டணத்தைப் பிரகாசிப்பிக்கும்படிக்குச்
சூரியனும் சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை;
பராபரனுடைய மகிமையே அதை வெளிச்சமாக்
கிற்று; ஆட்டுக்குட்டியே அதின் விளக்கு.—
24 உலகத்தார்கள் அதின் ஒளியிலே நடப்பார்
கள்; பூமியின் இராசாக்கள் தங்கள் மகிமையை
யும் கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவரு
வார்கள்.—25 அங்கே இராக்காலம் இல்லாதப
டியால், அதின் வாசல்கள் ஒருக்காலும் பூட்டப்
படாதிருக்கும் —26 உலகத்தார்களுடைய மகி
மையையும் கனத்தையும் அதற்குள்ளே கொண்
டுவருவார்கள்.—27 அசுசிப்படுத்துகிறதும் அரு
வருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய
ஒன்றும் அதில் பிரவேசியாது; ஆட்டுக்குட்டி
யின் ஜீவபுத்தகத்தில் எழுதப்பட்டவர்கள்மாத்தி
ரம் (அதில் பிரவேசிப்பார்கள்).

## ௨௨. அதிகாரம்.

அன்றியும், பராபரனும் ஆட்டுக்குட்டியும்
இருக்கிற ஆசனத்திலிருந்து புறப்பட்டுவந்து,
பளிங்கைப்போல தெளிவான ஜீவதண்ணீருள்ள
நதியை எனக்குக் காண்பித்தான்.—2 பட்டணத்
தின் நடு வீதியிலும் நதியின் இருகரையிலும்
பன்னிரண்டுவிதமான கனிகளைச் சுமந்து மாதந்
தோறும் தன் கனியைக் கொடுக்கிற ஜீவவிருட்
சம் இருந்தது; அந்த விருட்சத்தின் இலைகள்
உலகத்தார்கள் ஆரோக்கியம் அடைகிறதற்கு
ஏதுவானவைகள்; இனிமேல் சாபமில்லை.—
3 பராபரனும் ஆட்டுக்குட்டியும் இருக்கிற ஆச
னமே அதில் இருக்கும்.—4 அவருடைய ஊழி
யக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து, அவரு
டைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; அவரு
டைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில் இருக்
கும்.—5 அங்கே இரவில்லை; ஒரு விளக்கும்
சூரியனுடைய ஒளியும், அவர்களுக்கு வேண்டு
வதில்லை. தேவனாகிய பராபரனே அவர்களுக்கு
ஒளியைக் கொடுப்பார்; அவர்கள் என்றென்
றைக்கும் இராசரீகம்பண்ணுவார்கள்.

6 பின்பு அவர் என்னுடனே சொன்னதா
வது: இந்த வசனங்கள் உண்மையும் சத்தியமு
மானவைகள்; சீக்கிரமாய்ச் சம்பவிக்கவேண்டிய
வைகளைத் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்
பிப்பதற்குத் தீர்க்கதரிசிகளின் ஆவிகளுடைய
தேவனாகிய பராபரன் தம்முடைய தூதனை அனுப்
பினார்.—7 சேளுங்கள், சீக்கிரமாய் வருகிறேன்;
இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வார்த்தை

களைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கியவான் என்
றார்.
8 யோவானாகிய நானே இவைகளைக் கண்டு
கேட்டேன்; நான் கேட்டுக் கண்டபொழுது,
இவைகளை எனக்குக் காண்பித்த தூதனுடைய
பாதங்களின்முன்பாகத் தொழுதுகொள்ள விழுந்
தேன்.—9 அவன் என்னை நோக்கி, நீ இப்படிச்
செய்யாதபடிக்குப் பார்; உன்னோடும், உன்
சகோதரராகிய தீர்க்கதரிசிகளோடும் இந்தப் புத்
தகத்தின் வசனங்களைக் கைக்கொள்ளுகிறவர்க
ளோடும்கூட நானும் ஊழியக்காரனாய் இருக்கி
றேன்; பராபரனைத் தொழுதுகொள் என்றான்.
10 மேலும் அவர் என்னுடனே சொன்னதா
வது: காலம் சமீபமானபடியினாலே இந்தப் புத்த
கத்திலுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகளை முத்தி
ரைபோடாதிருப்பாயாக.—11 அக்கிரமக்காரன்
பின்னும் அக்கிரமம் செய்யட்டும்; அழுக்காயி
ருக்கிறவன் பின்னும் அழுக்காயிருக்கட்டும், நீதி
யுள்ளவனும் பின்னும் நீதிசெய்யட்டும்; பரிசுத்த
முள்ளவனும் பின்னும் பரிசுத்தமாகட்டும். —
12 கேளுங்கள், சீக்கிரமாய் வருகிறேன், அவன
வனுடைய கிரியைக்குத்தக்கதாய் அவனவனுக்
குப் பதில் அளிக்கும்படிக்கு என் பலன் என்
னோடேகூட வருகிறது.—13 நான் அல்பாவும்
ஓமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் முந்தின
வரும் பிந்தினவருமாய் இருக்கிறேன்.—14 சீவ
விருட்சத்தின்மேல் அதிகாரமுள்ளவர்களாகும்
படிக்கும், வாசல்களால் பட்டணத்திற்குள் பிர
வேசிக்கும்படிக்கும் அவருடைய கற்பனைகளின்
படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.—15 நாய்
களும், சூனியக்காரரும், வேசிமார்க்கரும், கொ
லைபாதகரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்
யை விரும்பி நடப்பிக்கிற யாவரும் புறம்பே
இருப்பார்கள்.—16 சபைகளுக்காக இவைகளை
உங்களுக்கு அறிவிக்கும்படிக்கு, இயேசுவாகிய
நான் என்னுடைய தூதனை அனுப்பினேன்;
நான் தாவீதின் வேருமாய்ச் சந்ததியுமாய் பிரகா
சமுள்ள விடிவெள்ளி நட்சத்திரமுமாய் இருக்கி
றேன் என்றார்.
17 ஆவியும் மணவாட்டியும் வா என்கிறார்
கள்; (இவைகளைக்) கேட்கிறவனும் வா என்பா
னாக. தாகமாயிருக்கிறவன் வரக்கடவன்; விருப்
பமுள்ளவன் சீவதண்ணீரைக் கைமாறில்லாமல்
வாங்கக்கடவன்.
18 மேலும் இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரி
சன வார்த்தைகளைக் கேட்கிற யாவருக்கும் நான்
அறிவிக்கிறதாவது: ஒருவன் இவைகளோடே
(எதையாகிலும்) கூட்டினால், இந்தப் புத்தகத்
தில் எழுதியிருக்கிற வாதைகளைப் பராபரன்
அவன்மேலே கூட்டுவார். — 19 ஒருவன் இந்
தத் தீர்க்கதரிசன புத்தகத்தின் வார்த்தைகளில்
(எதையாகிலும்) எடுத்துப்போட்டால், இந்தப்
புத்தகத்தில் எழுதப்பட்டவைகளாகிய சீவவி
ருட்சத்திலும் பரிசுத்த பட்டணத்திலுமுள்ள பங்
கைப் பராபரன் அவனிடத்திலிருந்து எடுத்துப்
போடுவார்.
20 இவைகளை அறிவிக்கிறவர் மெய்யாய் நான்
சீக்கிரமாய் வருகிறேன் என்கிறார். — ஆமென்.
கர்த்தராகிய இயேசுவே வாரும். — 21 நம்மு
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிரு
பை உங்கள் அனைவரோடும்கூட இருப்பதாக.—
ஆமென்.

முற்றிற்று.

92-911343 3
LC-T-A5

Bible. N.T. Tamil. 1868.

Ulaka iraṭcakarākiya Iyēcukkir̲istunātar aruḷicceyta Putiya Ēr̲pāṭu : ihtu mūlavākkiyam m Irēn̲iyucaiyarāl Kirēkka pāṣaiyiliruntu Tamil̲ilē ilē tiruppappaṭṭum Cen̲n̲aippaṭṭaṇattiluḷḷa Cattiya a Vēta Caṅkattārāl paricōtittu Iṅkiliṣ ottuvākkiya Paipilin̲paṭi ēr̲paṭuttappaṭṭumirukkir̲atu = The Pocket Tamil 1 Testament. -- [Madras] : Madras Auxiliary Bible ble Society, [1868?]

312 p. ; 17 cm.

In Tamil.

fa 3/16/93 00 knr TAM

Bible. N.T. Tamil. 1868.
Ulaka iraṭcakarākiya Iyēcukkiṟistunātar aruḷicceyta Putiya Ēṟpāṭu : ihtu mūlavākkiyam Irēṉiyucaiyarāl Kirēkka pāṣaiyiliruntu Tamiḻilē tiruppappaṭṭum Ceṉṉaippaṭṭaṇattiluḷḷa Cattiya Vēta Caṅkattārāl paricōtittu Iṅkiliṣ ottuvākkiya Paipiliṉpaṭi ēṟpaṭuttappaṭṭumirukkiṟatu = The Pocket Tamil Testament. -- [Madras] : Madras Auxiliary Bible Society, [1868?]
312 p. ; 17 cm.